அனைத்திந்திய நூல் வரிசை

# கதா பாரதி

# இந்திச் சிறுகதைகள்

தொகுப்பாசிரியர் :

டா. நாம்வர் சிங்

மொழிபெயர்ப்பு :

சரஸ்வதி ராம்நாத்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புது தில்லி

# முகவுரை

பாரதம் ஒரு பரந்த நாடு. பண்பாட்டைப் பொறுத்தவரையில் இதனை ஒற்றுமையின் தளைகளால் இன்னும் இறுகப் பிணைக்கவேண்டும். அப்போதுதான் இது சக்திமிகுந்த முன்னேற்ற மடைந்த நாடாக ஆகமுடியும்.

நம் பாரதம் ஒரு 'பல மொழி நாடு'. நம் நாட்டில் உள்ளது போல், உலகத்தில் எந்த பாகத்திலும் இத்தனை மொழிகள் கொண்ட ஒரு நாடு இல்லை. ஆனால் துரதிருஷ்டவசமாக நம் அக்கம் பக்கத்துப் பிரதேச மொழிகளையோ அவற்றிலுள்ள இலக்கியங்களையோ பற்றி நாம் அதிக அக்கறை கொள்வதில்லை. அவற்றின் பண்பாடு, இலக்கியச் செல்வம் இவை பற்றிய அறிவும் நமக்கு மிகமிகக் குறைவு. ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் போன்ற ஐரோப்பிய நாட்டு மொழிகளின் இலக்கியம், சமுதாயம் பற்றி நமக்கு உள்ள அறிவு நம் சொந்த நாட்டு மொழிகளின் இலக்கியங்களைப் பற்றிக் கிடையாது.

நாட்டின் உணர்ச்சியிலும், பண்பாட்டிலும் ஒற்றுமை காண விரும்பினால் நம் நாட்டு மக்கள், நாட்டின் பல்வேறு மொழிகளின் சிறந்த இலக்கியங்களை நன்கு படித்தறிந்திருக்கவேண்டும். அவற்றின் வாயிலாகப் பல்வேறு பிரதேசங்களின் வாழ்க்கை முறை நடை-உடை-பாவனைகள், பண்பாடுகள் முதலியவற்றைப் பற்றிப் புரிந்து கொள்ளவேண்டும்.

மேற்கே எத்தனையோ நாடுகள் உள்ளன. சுதந்திரமான அந்நாடுகளின் மொழிகள் தனித்தனி. அப்படியிருந்தும் அங்கு வாழும் மக்கள் தங்கள் இலக்கியம், சிந்தனை இவற்றைச் சூட்சுமமாகவும் நன்றாகவும் அறிந்திருக்கிறார்கள். நம் மொழிகளைப் பற்றிய அத்தகைய அறிவு நம்மிடம் கிடையாது. ஐரோப்பாவைச் சேர்ந்த எந்த ஒரு மொழியின் எந்தச் சிறந்த நூலையும் எல்லா மொழிகளிலும் உடனடியாக மொழிபெயர்த்து விடுகிறார்கள்.

பாரதம் ஒரே நாடுதான். அப்படியிருந்தும் நம் அண்டை மொழிகளில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று அறியும் விசேஷ ஆர்வம் நம்மிடையே இல்லை. இந்நிலை மாறிக் கொண்டுதான் வருகிறது. ஆனால் மிகவும் மெதுவாக.

இந் நிலையைக் கருத்தில் கொண்டு பாரத அரசாங்கம் ஒவ்வொரு இந்திய மொழியின் தற்கால இலக்கியத்தினின்று சில பிரதிநிதித்வதன்மையுள்ள புத்தகங்களைத் தெரிந்தெடுத்து அவற்றை மற்ற எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கத் திட்டம் வகுத்துள்ளது. சாதாரண வாசகருக்கு மிகவும் பிடித்திருக்கும் நூல்கள்—அதாவது கதைகள், புதினங்கள், மனதிற்குப் பிடிக்கும் பயண இலக்கியங்கள், சுய சரிதைகள் முதலியவை—இடம் பெறுகின்றன. இந்த வரிசையில் புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கும் போது அவை மிகச் சிறந்தவையாகவும் எல்லோராலும் விரும்பத் தக்கவையாகவும், அதில் சித்திரிக்கப்பட்டுள்ள சமுதாயத்தின் நடை — உடை — பாவனைகள், ஆசைகள், கனவுகள் யாவும் பிரதிபலிக்கும் வகையில் உள்ளனவாகவும் இருக்கவேண்டும் என்று கருதப் படுகிறது.

பல்வேறு மொழிகளுக்கிடையே ஒருவரையொருவர் அறிந்து கொள்ளும் வகையில், ஒருமைப் பாட்டுணர்ச்சியை ஏற்படுத்தும் துறையில் இந்தத் திட்டம் வெகுவாக உதவும் என்று நம்பப் படுகிறது.

பாரதத்துப் பல்வேறு மொழிகளின் முக்கியமான நூல்களைத் தேர்ந்தெடுப்பதும், அவற்றை மொழி பெயர்ப்பதும் சுலபமான காரியமல்ல. இத்துறையில் நமக்குத் தம் கருத்துக்களை நல்கும் நிபுணர் குழுக்களுக்கும் மொழி பெயர்ப்பாளர்களுக்கும் நாம் பெரிதும் கடமைப் பட்டுள்ளோம். அவர்களுடைய ஒத்துழைப்பும் ஆதரவும் இல்லாவிடில் இத்தகைய திட்டத்தை வெற்றிகரமாகச் செயல் படுத்துவது இயலாத காரியமாகும்.

—பாலகிருஷ்ண கேஸ்கர்

# முன்னுரை

1915ம் ஆண்டு "சரஸ்வதி"யில் சந்திரதர் சர்மா "குலேரி"யின் சிறுகதையான "உஸ்னே கஹாதா" (அவள் சொன்னாள்) வெளியாகியபொழுது இச் சிறுகதை பின்னொரு காலத்தில் இந்திச் சிறுகதை இலக்கியத்தில் கோகோலின் "ஓவர்கோட்டு" போன்றதொரு இலக்கிய மதிப்பைப் பெறும் என எவரும் எண்ணவில்லை. "உஸ்னே கஹாதா" இந்தியின் முதல் சிறுகதையல்ல. முதல் சிறுகதை கிஷோரிலால் கோஸ்வாமியின் "இந்துமதி" (1900)யாக இருக்கக் கூடும். அல்லது இதே ஆசிரியரால் எழுதப்பட்ட வேறொரு சிறுகதையாகவும் இருக்கலாம். "உஸ்னே கஹாதா"விற்கு முன்னரே இந்தியில் வங்க மகிளா எழுதிய "துலாயி வாலி" (1907), பிருந்தாவன்லால் வர்மாவின் "ராகி பந்த் பாயி" (1909), ஜயசங்கர் பிரசாத்தின் 'கிராமம்' (1911) ராஜா ராதிகா ராமண பிரதாத் சிங்கின் "கானோம் மேம் கங்கனா" (1913), விஷ்வம்பர்நாத் கௌஷிக்கின் "ரக்ஷாபந்தன்" (1913) போன்ற பல சிறுகதைகள் வெளியாகி இருந்தன என்பதும் உண்மை. ஆனால் துவக்க காலத்தில் எழுதப்பட்ட இச் சிறுகதைகள் யாவுமே வரலாற்றுப் பட்டியலில் இடம் பெற்றதுடன் நின்றுவிட்டன. "உஸ்னே கஹாதா" மட்டும் இந்தி இலக்கியத்தின் நினைவில் அழியா இடம் பெற்றுவிட்டதுமன்றி அதை எழுதிய 'குலேரி'யும் தன்னுடைய இந்த ஒரு சிறுகதையினால் அழியாப் புகழ் பெற்றுவிட்டார். அதிலும் இச் சிறுகதையைத் தற்செயலாக அவர் எழுத நேரிட்டது எனவும் கொள்ளலாம். ஏனெனில் அவர் சமஸ்கிருத பண்டிதர். மொழி இயல், புதைபொருள் ஆராய்ச்சி, இவ்விரண்டு துறையில்தான் அவருக்கு ஆழ்ந்த ஈடுபாடும் பற்றும் இருந்தது. இதைத் தவிர அவர் இன்னும் இரண்டு சிறுகதைகள் எழுதியுள்ளார் அவை யாவன "புத்தூகா கான்டா" (1911), "சுக மய ஜீவன்" (1911 லிருந்து 1915க்குள்). அவரைப் பொறுத்த வரையில் சிறுகதைகள் ஏதோ பொழுது போக்கான எழுத்து என்று தோன்றுகிறது. 1920ல் தனது 37 வயதில் அவர் இறைவனடி சேர்ந்தார். இவற்றையெல்லாம் பார்க்கும்பொழுது "உஸ்னே கஹாதா"வின் படைப்பு இந்திச் சிறுகதை இலக்கியத்திற்குத் தற்செயலாய்க் கிடைத்த ஒரு நல்ல வாய்ப்பு என்பதைத் தவிர வேறு என்ன கூறமுடியும்?

இருப்பினும் "உஸ்னே கஹாதா" முற்றிலும் எதிர்பாராததோ, தற்செயலாய் எழுதப்பட்டதோ அன்று. இச் சிறுகதையில் அந்த யுகத்திற்கு முற்றிலும் பொருத்தமுள்ள கதை அம்சமான காதலில் தியாகம் என்பதை அடிப்படையாகக் கொண்டதாகும். முதலில் இந்த மகத்தான லட்சியத்திற்காகவே இக்கதை பாராட்டப் பட்டது. ஆனால் இத்துடன் கூடவே கலைத் தன்மையுடன் கூடிய கட்டுக்கோப்பும், யதார்த்த சூழ்நிலையின் திறமையான வர்ணனையும் கவனிக்கப்பட்டது என்பது அக்காலத்து விமர்சகரான ராமச்சந்திர சுக்லாவின் இக்கூற்றைத் தெளிவாக்குகிறது: "இக்கதையில் யதார்த்த சூழலினிடையே, தேர்ந்த ரசனையுடன் மரியாதையின் எல்லைக்குட்பட்டு, உணர்ச்சியின் உச்சகட்டம் மிகத் திறமையுடன் பின்னப்பட்டிருக்கிறது. வழக்கமான சம்பவங்கள்தான் எனினும் இதனூடே தெய்வீகக் காதலின் ஒரு தோற்றம் பளிச்சிடுகிறது. அடக்கமின்றிக் கூச்சலிட்டோ, புலம்பவோ இல்லை மெல்ல தலை தூக்கி நிற்கிறது, அவ்வளவுதான். கதை நெடுகிலும்கூட அளவிற்கு அதிகமாகக் காதலின் வருணனையோ. வேதனையின் அவலமான முடிவோ இல்லை. மிக மென்மையான நல்லியல்புகள் கதை நெடு கிலும் பாதிக்கப்படாமல் இருக்கின்றன. பாத்திரங்கள் பேசவேண் டிய அவசியமேயில்லை. சம்பவங்கள் பேசுகின்றன." லட்சிய வாதத்திலும் மேம்பட்டதொரு மகத்தான லட்சியத்தை இக்கதை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பது வெளிப்படை. அந்த மகத்தான லட்சியத்தை வெளிப்படுத்துவதில் கதாசிரியரின் கலை நோக்குடன் கூடிய படைப்பாற்றல், அக்காலத்தில் எழுதப்பட்ட ஏனைய கதைகளைப் பார்க்கும்பொழுது முற்றும் எதிர்பாராததுதான் எனக் கூறவேண்டும். கட்டுப்பாடுடன் கையாண்ட கலைத் தன் மைக்கு ஆதாரம், வாழ்வின் யதார்த்தமான நிலைகளாகும். இது வாழ்வின் பல்வேறு நுட்பமான நிலைகளை மெருகுடன் உயிர் துடிப் புடன் சித்திரிப்பதிலிருந்து தெரிகின்றது. கதையில் வட்டாரச் சூழலின் நிறத்தை ஏற்றும் உத்தி "உஸ்னே கஹாதா"விலிருந்து துவங்கி, பின்னர் இந்திச் சிறுகதைகளின் தனிச் சிறப்பாகியது. ஆரவாரமும், சந்தடியும் மிகுந்த அமிருதசரஸின் கடைத்தெரு, ஜெர்மன் நாட்டின் போர்களத்தில் சிக்கிய ஜவான்கள் பாடும் நாட்டுப் பாடல், மரணத் தருவாயில் வீட்டின் நினைவுகளே சூழ்ந்திருக்கும் லக்னு சிங்கின் பிதற்றல், என யாவுமே கதையின் சிறப்பிற்குக் காரணமாய் அமைந்தன. இது மட்டுமல்ல. இச் சிறுகதைதான் திடுக்கிடத் தக்க, பரபரப்பூட்டும் கதை அம்சத்திலிருந்து இந்திச்

சிறுகதைகளை மீட்டு, உயிர்த் துடிப்புள்ள, உண்மை வாழ்வின் நிலைகளை நோக்கித் திருப்பிவிட்டது எனலாம். இவை யாவற்றையும் விட இச் சிறுகதை, மொழி நடைத் துறையில் மிகச் சிறந்த பணியாற்றியுள்ளது. இச் சிறுகதையின் மூலமாகத்தான் இந்திச் சிறுகதை உயிரோட்டமுள்ள மொழி நடையைப் பெற்றது எனலாம். ஏனெனில் இத்தகைய நடை இல்லாத காரணத்தினுல் இந்திச் சிறுகதையின் வளர்ச்சி இதுவரை தடைபட்டிருந்தது. மேலும் இக் கதை 25 வருடகால சம்பவங்களை, நிலைக்களனுகக் கொண்டிருந்தும், "பிளாஷ் பேக்" உத்தி அதில் மிகத் திறமையுடன் கையாளப்பட்டிருப்பது அக்காலத்தில் இத்தகைய கலை நுட்பத்தைச் சாதித்த எழுத்தாளரின் மகத்தான சாதனையாகும். இத்தகைய சந்தர்ப்பத்தில் சொல்லவேண்டிய விஷயம் இன்னென்றும் உள்ளது. முதலாவது உலகப்போர் 1914ல் துவங்கியது. இக்கதை 1915ல் எழுதப்பட்டிருக்கிறது. போர்க்களத்தில் கதைக்கு நிலைக்களன் அமைத்த "குலேரி" சம காலத்து உணர்வை தனது படைப்பில் பிரதிபலித்துள்ளது இந்திச் சிறுகதை வரலாற்றிலேயே ஒருக்கால் இணையற்றதாகவும் இருக்கலாம். இந்திச் சிறுகதையின் துவக்கமே இப்படியொரு மகத்தான படைப்புடன் துவங்கியிருப்பது பெரும் பாக்கியமாம்

இதைவிடப் பெரும் அதிர்ஷ்டம், இந்த மலர்ச்சியை மேலும் மலர்விக்க, உடனுக்குடன் பிரேம் சந்த் (1880–1936) போன்ற சிறந்த படைப்பாளி இக்கால கட்டத்தில் தோன்றியதுதான். 1915ல் "சரஸ்வதி"யில் "உஸ்னே கஹாதா" வெளி வந்தது என்ருல் 1916ல் "சரஸ்வதி"யில் பிரேம் சந்தின் "பஞ்ச பரமேஸ்வர்" வெளியாயிற்று. "உஸ்னே கஹாதா"வின் வட்டாரச் குழலைவிட ஒரு அடி முன்னே சென்று கிராமீயச் சூழலுடன் இது பிணைந்துகொண்டது. கர்ணபரம்பரையாகச் சொல்லப்பட்டு வரும் நாடோடிக் கதையின் இந்த இலக்கிய வடிவம் எளிமையாகவும், உயிரோட்டமுள்ளதாகவும் அமைந்ததால் மேலை நாட்டின் "ஷார்ட் ஸ்டோரி" வங்க மொழியின் 'கல்ப'த்துடன் இந்திச் சிறுகதைக்குத் தொடர்பைக் கற்பித்தவர்களின் கற்பனை அளப்புகளை ஒரேயடியாய்த் தகர்ந்து விட்டன. இதே ரீதியில் பிரேம் சந்த் அநேக கதைகளை எழுதினுர். அவற்றில் கிராமியக் கதைகளின் ரசமும், நடையும் அப்படியே எடுத்தாளப் பட்டன. "ஒரு கிராமத்தில் சங்கர் என்ற பெயருடைய ஒரு குர்மி குடியானவன் வசித்து வந்தான். அவன் மிகவும் நல்லவன். கபடமற்றவன். தன் வேலையுண்டு, தானுண்டு என்றிருப்பான்...

ஒரு நாள் அந்தி வேளையில் ஒரு சாது வந்து அவன் வீட்டுத் திண்ணையில் டேரா போட்டு விட்டார் ("சவா சேர் கேஹூம்"). இப்படி மிக மிக எளிய முறையில் அவரது எத்தனையோ கதைகள் துவங்கும். கதை சொல்லும் இந்தக் கிராமீயப் பாணி பாரத நாட்டின் ஒவ்வொரு கிராமத்திலும் கதை சொல்பவனும் கேட்பவனும் அறிந்ததுதான் என்பதைக் கூறவேண்டிய அவசியமில்லை. இத்தகையதொரு மொழி நடையைக் கையாண்ட பிரேம் சந்த் சிறு கதை படிப்பதற்கு மட்டுமன்றி, கேட்பதற்கும் உரியதொன்று என ஆக்கிவிட்டார்.

பிரேம் சந்த் கதை சொல்லும் இந்த உத்தியையேதான் பின் பற்றினர் என்பதில்லை. "சிறு கதை என்பது இதய உணர்வுகளைப் பொறுத்த விஷயம். நியமத்திற்குட்பட்டது அல்ல. நியமங்கள் உள்ளன. அவை உபயோகத்திற்காக ஏற்பட்டவைதான். ஆனல் இதயத்து உணர்வுகளை வெளியிட அவை பயனற்றுப் போகும்போது அவை புறக்கணிக்கப் படவேண்டியவைதான்" என்று ஓரிடத்தில் அவர் கூறியுள்ளார் இதுபோல் அவர் தேவைக்கேற்ப பல் வேறு நடைகளையும் கையாண்டுள்ளார். கதைக் கருவைப்போலவே நடையிலும் அவரது சிறு கதைகளில் ஒரு மகத்தான கலைஞனின் வளமையும் பல்வேறு தன்மைகளும் உள்ளன. "சத்ரஞ்ச்கே கிலாடி"யின் மிர்ஜா மீர்ரிலிருந்து, "தோ பைலோங்கி கதா" வரை அவரது பாத்திரப் படைப்புகளில் பலதரப்பட்ட வாழ்க்கை நிலைகளும், தன்மைகளும் மட்டுமன்றி வாழ்க்கையில் அவருக்கிருந்த விரிவான அனுபவமும் நம்மை வியப்பிலாழ்த்துகிறது. பிரேம் சந்த மொத்தம் 225 சிறு கதைகள் எழுதியுள்ளார். 20 ஆண்டு காலத்தில் அவர் லட்சியவாத நோக்குடைய யதார்த்தவாதத்திலிருந்து, விமர்சன ரீதியான யதார்த்தவாதம் வரை நீண்ட யாத்திரை செய்துள்ளார். இக்கால கட்டத்தில் கதை சொல்லும் கலைத்திறனும் இயல்பாகவே வளர்ச்சி பெற்றது. கலைத்தன்மையில் சிறப்பு பெற்றது என்ற நோக்குடன் பார்க்கையில் அவர் தமது கடைசிநாட்களில் எழுதிய "பூஸ் கி ராத்" (1930) "கஃபன்" (1936) போன்ற படைப்புகள் விசேஷமாகக் குறிப்பிடத்தக்கவை. அச்சமயத்தில் பிரேம் சந்த் தனது குறிப்பேட்டில் ஓரிடத்தில்... "துயரமிகுந்த கதை ருசிகரமாக இருந்தது" எனக் குறிப்பிட்டிருக்கிறர். "பூஸ்கி ராத்"... "கஃபன்" இவ்விரண்டு கதைக்கும் இது ஒரு ஆதாரம். இக் கதைகளில் கொஞ்சம் இலேசாக 'செகாவ்' உடைய சாயல் தெரிகிறது. இம் முறையில் பிரேம் சந்த இந்திச் சிறு கதைக்கு

ஒரு குறிப்பிட்ட தனித்தன்மையை அளித்ததன் கூடவே அதை ஒரு பரிபக்குவமான நிலையை அடையும் படியும் செய்துள்ளார்.

ஜய சங்கர் பிரசாத் (1889-1937)ல் சிறு கதை உலகத்திற்குக் கிட்டத்தட்ட பிரேம் சந்துடனேயே வந்தார். தனது கவிப் புலமை நாடகம் எழுதும் ஆற்றலின் மூலமாக அவர் இந்திச் சிறுகதைக்கு வளம் கூட்டினார்.

வாழ்க்கையைப் பற்றிய அவரது நோக்கு அதீத கற்பனையாக (ரொமாண்டிக்)வும் கலை ரசனை, கவித்வம் உள்ளதாகவுமிருந்தது. இதனால் அவர் படைத்த சிறு கதைகள் அதீத கற்பனை செறிந்த கவித்வ நடையுள்ள அச்சிலே வார்த்தெடுக்கப்பட்டன. அவர் பெரும்பாலும் 'ரொமாண்டிக்' காதலைத்தான் கதைக் கருவாகத் தேர்ந்தெடுத்தார். மேலும் கதையில் இதற்கேற்ற 'ரொமாண்டிக்' சூழலைத் தோற்றுவிப்பதில் அதிக கவனமும் செலுத்தினார். அவரது கதைகளிலே இயற்கையின் ரமணீயகரமான காட்சிகளைப் பற்றிய கவித்வம் நிறைந்த வருணனைகள் இருக்கும். சில இடங்களில் கடந்த காலத்தைப் பற்றிய உள்ளத்தை அள்ளும் வண்ணக் காட்சிகளையும் காண முடியும். கதா பாத்திரங்கள் கூட பெரும்பாலும் இடைக்காலத்திய வீரத்தின் உருவகங்களாக உள்ளனர். அவர்களது செயல்களும் தனித்தன்மையும் மயிர் கூச்செடுக்கச் செய்யும். பிரசாத் படைத்து உலவ விடும் பாத்திரங்களின் உரையாடல்களில் நாடகத்தன்மை மிகுந்து காணப்படுகிறது. நற்பண்புகளும், சீலமும், கவிதைக்குரிய உணர்ச்சிச் செறிவும் உரையாடல்களிலே நிறைந்து நிற்கிறது. கதை என்பது, யதார்த்தத்தைவிட கற்பனைச் செறிவு மிக்கதென பிரசாத் கருதினார். இதனால் தனது கதைகளின்மூலம் இந்திர ஜாலங்கள் நிறைந்ததொரு உலகத்தையே படைத்துள்ளார். ரம்மியமான, அற்புதமான அழகு உலகம் அது. அவரது கதைத்தொகுதிகளின் 'சாயா', 'இந்திரஜால்' 'ஆகாச தீபம்' என்ற தலைப்புகள் அவரது நோக்கத்தை ஓரளவு தெளிவுபடுத்தும். இவையெல்லாம் இருந்தும் கூட பிரசாதின் அதீத கற்பனைக் கதைகளினூடே இங்கு மங்கும் அந்தந்த மண்ணின் வாடை, இடத்தின் சாயல் ஆகியவற்றின் சுவடுகள் காணப்படுகினறன என்பதை மறுப்பதற்கில்லை. இந் நோக்கில் பார்க்கும் பொழுது 'குண்டா' (சோதா) வாரணஸி வாசியான பிரசாதிற்கு பிரதிநிதித்துவம் அளிக்கும் படைப்பாகும்

பிரேம் சந்த், பிரசாத் இருவரும் ஒரே ஊரில் அதாவது வாரணஸியில் வாழ்ந்தவர்கள். ஆனால் சம காலத்தவர்களான இவ்வெழுத்

தாளர்கள்போல் வேற்றுமையுள்ளவர்கள் வேறு எங்கும் இருந்திருப்பார்களோ என்னவோ! இவ் வேற்றுமையைக் கருத்தில் கொண்டு, ஒரு காலத்தில் இந்திச் சிறு கதையில் இரு பிரிவுகள் அறிவிக்கப் பட்டிருந்தன. பிரேம் சந்த் பரம்பரை, பிரசாத் பரம்பரை, என இவ்விரு பிரிவின்படி அக்காலத்துப் படைப்பாளிகளும் இரு பிரிவாக்கப்பட்டிருந்தனர். இன்னும் கூட சிலர் இந்திக் கதை இலக்கியம் முழுவதுமே அடிப்படையில் பிரேம் சந்த், பிரசாத் என மாறுபட்ட இரு பரம்பரையின் வளர்ச்சியாகும் எனக் கூறிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஆனால் இம்மாதிரி மேலோட்டமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்துக்களுக்கு விஞ்ஞான ரீதியான ஆதாரம் எதுவுமில்லை. அதிக பட்சமாகச் சொல்லப்போனால் இந்திச் சிறு கதையின் இரண்டாவது மறு மலர்ச்சி காலத்தில் பிரேம் சந்த் சிறு கதையை யதார்த்த முனைப்புடையதாகச் செய்ய முயன்ற பொழுது பிரசாத் உணர்வு பூர்வமான உருவம் தந்தார். அக்கால கட்டத்தில் சுதர்சன், விஷ்வம்பர் நாத் சர்மா, கௌசிக், பாண்டேய், பேசன் சர்மா 'உக்ர', சதுர்சேன் சாஸ்திரி, பகவதி பிரசாத் வாஜ் பேயி, போன்ற குறிப்பிடத்தக்க பல எழுத்தாளர்கள் தோன்றினர். இவர்களிடம் கதை சொல்லும் பாணியும், தனித்தன்மையும் ஆற்றலும் இருந்தன.

பிரேம்சந்தின் நிழலில் 1905ல் இன்னுமொரு ஆற்றல் மிக்க படைப்பாளியான ஜைனேந்திரகுமார் தோன்றினார். பிரேம்சந்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டவராக இருந்தும் அவரிடமிருந்து முற்றிலும் வேறுபட்டவராய் இருப்பதால் இத்தொடர்பைப் பற்றிக் கற்பனைசெய்து பார்ப்பதுகூடக் கடினமாகத் தோன்றுகிறது. எளிய முறையில் கதை சொல்லும் ஆற்றலை ஜைனேந்திரர், பிரேம் சந்திடமிருந்து ஏற்றுக் கொண்டிருக்கிறார். எனினும் அந்தச் சரளமான எளிமைக்கு மெருகிட்டு, செதுக்கி, அழகுறச் சமைத்து, கலை வடிவம் தந்திருக்கிறார். இக்கலைப் படைப்பைக் காணும்போழுது ஜைனேந்திரரின் கைவண்ணத்தில் இந்திச் சிறுகதையானது முதன் முறையாகக் கலை உருவம் பெற்றது எனக் கூறவேண்டியிருக்கிறது. அனாயாசமாக, தனக்குரிய தனித் தன்மையுடன் கதை சொல்லும் இவரது ஆற்றலை வேறிடத்தில் காண்பது அரிது. எந்த ஒரு விஷயமும் சம்பவமும் இவரது பேனாவில் கதை உருவம் பெற்றுவிட முடியும் எனத் தோன்றுகிறது. வாழ்க்கையின் மாபெரும் பிரச்சினைகளின் சுழல்களிலிருந்து கதையை விடுவித்து இவர் அன்றாட வாழ்வின் சின்னஞ்சிறு விஷயங்கள், சிக்கல்களின்பால் கதையைத்

திருப்பிவிட்டார். இம்முறையில் மனவியல் அடிப்படையில் எழுதும் மனோதத்வ ஆராய்ச்சியாளர் என ஜைனேந்திரர் புகழ்பெற்றார் என்பது சற்று வரம்புக்கு மீறியதுதான் என்பது தெளிவு.

சிறுகதையைப் புற நிகழ்ச்சிகள், மிகுதியான சம்பவச் செறிவு, ஆகியவற்றிலிருந்து விடுவித்து, அக வயமாக்கி, மனித உள்ளத்தின் உணர்ச்சிகளின்பால் இவர் திருப்பினார் என்பது சரியாகும். உள்ளத்திலே எழும் சலனங்களை, இலேசான எழுச்சி அலைகளைக்கூட மிக நுட்பமாக ஆய்ந்தறிந்து சித்திரித்துக்காட்ட முயன்றார் என்பதால் மட்டும் ஒரு படைப்பாளி, மனவியல் அடிப்படையை ஆராய்ந்து எழுதும் ஆராய்ச்சியாளர் ஆகிவிடமுடிவதில்லை. இவருடைய பெரும்பாலான படைப்புகள் அகவயப்பட்ட ஒரு சிந்தனையாளரின் சத்யவேட்கையின் நகல்கள். இவற்றின் வலிமை, காந்தீய இலக்கியத்தின் பகுத்தறிந்து உணர்ந்த உண்மை, எளிமை ஆடம்பர மற்ற தன்மையில் அடங்கியுள்ளது. பிரேம்சந்தின் பேனா முனையில் சமூகத் தீமைகளை எதிர்த்துப் போராடும் ஆயுதமாக விளங்கிய சிறுகதை, ஜைனேந்திரரின் கரத்தில் ஒழுக்கம் பற்றிய தர்க்க வாதத்தை வெளிப்படுத்தும் சூட்சமமான சாதனம் ஆயிற்று. ஜைனேந்திரர் சுமார் 100 சிறுகதைகளுக்குமேல் எழுதியிருப்பார். அவற்றில் குறைந்த பட்சம் ஒரு பன்னிரண்டு கதைகளாவது நுட்பமான கலைத் திறமையுடன் வடிக்கப்பட்ட சிறுகதைகள் என்ற முறையில் என்றும் நினைவிலிருக்கக் கூடியவையாகும்.

ஜைனேந்திரருக்குப் பின் இரண்டு புதிய எழுத்தாளர்கள் சிறுகதை இலக்கியத்திற்கு அறிமுகமாயினர். யஷ்பால் (1903), அக்ஞேய் (1911) இந்த இரட்டையர்களின் ஜோடி, மீண்டும் பிரேம்சந்த், பிரசாத் ஜோடியை நினைவு படுத்தியது. யஷ்பாலும், அக்ஞேயும், நான்காவது 'தஷக்' (தஷக் என்பது 10 ஆண்டு கால கட்டம்) கின் முடிவில் எழுதத் துவங்கினர். பாரதத்தினரின் சிந்தனைப் போக்கும் மன இயல்பும் நெருக்கடியான கட்டத்தைக் கடந்து கொண்டிருந்த காலம் அது. காந்தீய லட்சியங்களில் அதிருப்தியுள்ள புதிய தலைமுறை மார்க்ஸ், ஃபிராய்ட், ஆகியோரின் கோட்பாடுகளில் உண்மையைத் தேட முற்பட்டது. இக்கருத்து மோதல்கள் சிறுகதைகளில் பிரதி பலித்தன. வாழ்க்கையின் அவல நிலைக்கு, பொருளாதார ஏற்றத் தாழ்வுகள்தான் காரணமென யஷ்பாலுக்குத் தோன்றியதென்றால் இந்த அவலத்தின் மூல ஊற்று உள் மனத்தில் புதைந்திருக்கும் இச்சைகள், சிக்கல்கள் எனக் கருதினார் அக்ஞேய். வழிகள் இரண்டாக இருப்பினும் இரண்டு எழுத்தாளர்

களுமே கடந்த யுகத்தின் லட்சிய வாத, ரொமாண்டிக் தளைகளி லிருந்து தங்களை விடுவித்துக்கொள்ள முழு முயற்சியும் செய்து கொண்டிருந்தனர். இருவருடைய கண்ணோட்டமும், விமர்சன பூர்வமான யதார்த்தவாதத்தின் பாலிருந்தது. 'பிஞ்சரே கி உடான்' (1938) என்ற யஷ்பாலின் சிறு கதைத்தொகுதியும் அக்ஞேயின் முதற் கதைத்தொகுதியான 'த்ரிபத்கா' (1937)வும் குறுகிய இடை வெளிக்குள் கிட்டத்தட்ட ஒரே சமயத்தில் வெளிவந்தன. இத் தொகுதிகள் இவ்விரு எழுத்தாளர்களின் கண்ணோட்டத்திலுள்ள வேறு பாட்டைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. துவக்கத்தில் அக்ஞேயின் எழுத்தில் உணர்ச்சிச் செறிவு அதிகமாக இருந்தது. உரை நடை கூட கவித்வம் மிகுதியினால் கனம் மிகுந்ததாகி விட்டது. ஆனால் மெல்ல மெல்ல இக்குறைகளெல்லாம் அகன்று "ரோஜ்" போன்ற சிறு கதைகள் வெளி வந்தன. இதுவே பின்னால் "கேங்ரீன்" என்ற தலைப்புடன் மீண்டும் பிரசுரமாகியது. ரோஜ் (கேங்ரீன்) கதையின் முதல் வாக்கியம்—

"நண்பகலில் வெறிச்சோடி நின்ற அந்த முற்றத்திற்குள் காலடி எடுத்து வைத்ததுமே ஏதோ ஒரு சாபத்தின் நிழல் அங்கு படர்ந் திருப்பதுபோல் தோன்றியது. அந்தச் சூழலில் அப்படியொரு விவரிக்க முடியாத உணர்வுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டதொரு கனம், உள்ளத்தைச் சிலிக்கவைக்கும் வெறுமை, இருண்ட மேகம் போல் கவிந்து கிடந்தது." இந்திச் சிறுகதைக்குச் சூழ்நிலையைச் சித்திரித்துக் காட்டும் இந்த நடை மட்டும் புதிதல்ல. சொற்களின் மூலம் படம் பிடித்துக் காட்டும், வாசகர் முன்னே கொணர்ந்து வைக்கப்படும் இந்த சூழல் கூட புதிதாகத்தானிருந்தது. அக்ஞே யுடன் இந்திச் சிறுகதை உலகத்திற்குப் புதியதொரு இலக்கிய பிரக்ஞையும் அனுபூதியும் அறிமுகமாகியது.

யஷ்பாலின் சிறுகதையான் "துக் கா அதிகார்" (கான் தான்) என்பதை எடுத்துக் கொண்டு பார்த்தோமானால் அவரது கதை யிலிருக்கும் அந்த நையாண்டி, வெகுண்டெழச் செய்யும் அந்தக் கிண்டலும் கூட இந்திச் சிறுகதையில் ஏற்பட்ட புதிய சமுதாயப் பிரக்ஞையின் விழிப்பை உணர்த்துவதாக இருப்பதைக் காண்கி றோம். ஒரு பக்கம் கறிகாய் விற்கும் ஏழைப் பெண்மணி கட்டிளங் காளையான தன் மகன் இறந்துவிட்டது குறித்து அழுவதற்கும் உரிமையற்று நிற்கிறாள் மறுபுறம், ஒரு பணக்காரப் பெண்மணி சோகம் கொண்டாடுவது பற்றி நகரம் முழுவதும் ஒரே பேச்சாக இருக்கிறது. யஷ்பால் இக்கதையில், சுகத்தை அனுபவிப்பதற்கு

மட்டும் உரிமை வேண்டும் என்பதில்லை—துன்பத்தை, துயரத்தைக் கொண்டாடுவதற்கும் உரிமை வேண்டியிருக்கிறது. ஏழைகளாக இருப்பவர்களுக்குத் துயரப்படுவதற்குக் கூட உரிமையில்லை, அருகதையில்லை—என்பதை மிக மிக நுட்பமான உள்ளத்தைத் தொடும் வகையில் சித்திரித்துள்ளார். பெரும்பாலும் இப்படிப்பட்ட சிறிய உபமானங்கள், சம்பவங்கள் மூலம், யஷ்பால் கிண்டல் நிறைந்த சொடுக்குடன் முனைப்பான கதைகள் பல எழுதியுள்ளார். முதலில் ஒரு மையக் கருத்து, அதற்குரிய தெளிவான அறிகுறிகள். பின்னர் இதற்கேற்ப அமைக்கப்பட்ட கதை அம்சத்துடன் சற்று அப்படியும் இப்படியும் போக்குக் காட்டி வாசகர்களைக் களிப்பித்தவாறே முடிவில் அவரது கூரிய பேனாமுனை சடாலென்று ஒரு சவுக்கடி கொடுக்கும். இது யஷ்பாலின் தனித் திறமையாகும். யஷ்பால், பிரேம் சந்த் போன்ற ஒரு லட்சியத்துடன் ஒருமுனைப்பான வேகத்தின் உந்துதலுடன் கூடிய படைப்பாளி ஆவார். அவரது ஒவ்வொரு சிறுகதையும் முடிவில் ஒரே இடத்தில் அழுத்தமாக அடிகொடுக்கும். அதுதான் வர்க்க வேறுபாடுகள். வர்க்க ரீதியான சமுதாயத்தின் போலித்திரையைக் கிழித்தெறிவதில் யஷ்பால் தனது பேனாவைக் கூரிய ஆயுதமாகக் கொண்டிருந்தார். இதற்கொரு உதாரணம். "ஃபூலோம் கா குர்த்தா" என்ற சிறுகதையாகும். அக்ஞேயின் எழுத்தின் மூலமாக இந்திச் சிறுகதை ஒருங்கிணைந்த உணர்ச்சிகளின் ஓவியக் காட்சி சாலையாகியது என்றால், யஷ்பாலின் மூலம் வாழ்வின் யதார்த்த நிலையை வெளிக்காட்டும் திறமையைப் பெற்றது.

இதே கால கட்டத்தில் பகவதி சரண் வர்மாவும் உபேந்திரநாத் "அஷ்க்"கும் சிறு கதை எழுதினார்கள். "அஷ்க்" பிரேம் சந்தின் யதார்த்தவாதப் பரம்பரையின் வாரிசாகக் கருதப்படுகிறார். பகவதி சரண்வர்மாவோ, தனது உல்லாசமான, மேலெழுந்தவாரியான போக்கின் மூலம் "ஃபசானே-ஏ-ஆஜாத்" எழுதிய எழுத்தாளர் சர்ஷாரை நினைவூட்டுகிறார். இது அவரது பிரசித்திபெற்ற சிறு கதையான "தோ பாங்கே"யில் நிதரிசனமாகத் தெரிகின்றது. இந்த சந்தர்ப்பத்தில் சிறிய விருவிருப்பான சிறு கதைகளை எழுதிய ராதாகிருஷ்ண குறிப்பிடத்தக்கவர். நிராலா கூட தனது இணையற்ற திறமையினால் கதை உலகில் தனக்கென்று ஒரு இடம் தேடிக் கொண்டு விட்டார்.

இதே ரீதியில் சில வருடங்கள் கழிந்த பின் இந்திச் சிறுகதை வரலாற்றில் புதியதொரு எழுச்சி, நாடு விடுதலை பெற்ற பின்

அதாவது ஆருவது தஷக்கின் துவக்கத்தில், தென்படலாயிற்று. உள்ளுணர்வின் விழிப்புடன் இது "புதுக்கவிதை" என்பதைப் பின பற்றி "புதுக்கதை" என்ற கோஷத்தை எழுப்பியது. விடுதலைக்குப் பின் புதிய படைப்பாற்றலின் மலர்ச்சி இயல்பானதுதான். தவிர்க்க இயலாத இந்த உத்வேகத்தின் பலனுன 'புதுக்கதை' முற்றிலும் புதிதான தொன்ருக இல்லாவிடினும் இக்கால கட்டத்தில் விழுமிய உணர்ச்சி கொண்ட புதிய தலைமுறை எழுத்தாளர் நிறைய எண்ணிக் கையில் கதை எழுதுவதில் ஈடுபட்டனர் என்பது உண்மை. இவர் களில் 'ராங்கேய ராகவ்', 'பணீஷ்வர் நாத்' 'ரேணு,' 'திவேஜேந்திர நாத் மிஷர் நிர்குண்', 'பீஷ்ம் சஹானி', 'கிருஷ்ணு சோப்தி', கிருஷ்ண பல்தேவ் வைத். ராம்குமார், கமல் ஜோதி. லக்ஷ்மிநாரா யண் லால், ஹரிசங்கர் பர்சாயி, மோகன் ராகேஷ், அமர்காந்த், உஷா பிரியம்வதா, மன்னு பண்டாரி, நிர்மல்வர்மா, மார்கண்டேய், ராஜேந்திரயாதவ், கமலேஷ்வர், சேகர் ஜோஷி, சிவ பிரசாத் சிங், தர்மவீர் பாரதி, ரகுவீர் சஹாய், மனோகர் சியாம் ஜோஷி, ஷைலேஷ் மடியானி, முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களுடைய படைப்பாற்றல் ஒருமுகமாகச் சிறுகதையின் பால் செலுத்தப் பட்டது இந்தி இலக்கியத்தின் ஒரு மகத்தான சம்பவமாகும். பைரவபிரசாத் குப்த் அவர்களின் மேற்பார்வையின் கீழ் வெளியாகும் 'கஹானி', பின்னர் 'நயி கஹானி' பத்திரிகைகள் இந்த எழுத்தாளர் களுக்கு விசாலமான களம் அமைத்துக் கொடுத்தது. இந்தலை முறையின் சில எழுத்தாளர்கள், வட்டார மணத்துடன் கூடிய அபூர்வமான படைப்புக்களை, குணசித்திரங்களைப் படைத்ததின் மூலம் இந்திச் சிறு கதை உலகத்தை வளமுள்ளதாக்கினர் என்ருல், ஒரு சிலர் நகர் புறத்தில், மத்தியதர வர்க்கத்தினரின் வாழ்க்கைப் போராட்டத்தைப் பற்றிய அற்புதமான உள்ளத்தைத் தொடும் படைப்புகள் மூலம் கதை சொல்லும் கலைக்குப் பின்னும் பெரு கூட்டினர். இந்த கால கட்டத்தில் சிறு கதை எழுதுவதை ஒரு குறிப்பிட்ட வரையறைக்குட்பட்டதாக்கி அதை ஓர் இயக்கிய மாக்கிவிட நடந்த பெரும் முயற்சிகளுக்குப் பின்னும் இந்திச் சிறு கதைகள் பரவலான கதைக் கருவும், செறிவும் கொண்டதாக இருப்பது இப் புதுக்கதை மறுமலர்ச்சியின் ஒரு விசேஷமாகும்.

பீஷ்ம் சஹானியின் எளிமையும் சரளமும், ராம்குமாரின் ஆழ்ந்த மனித நேயம், நிர்மல் வர்மாவின் எழுத்துக்களில் இதய பூர்வமான உணர்ச்சிச் செறிவு, அமர்காந்தின் நையாண்டி, ரகுவீர சஹாயின் அகவயப்பட்ட உள்ளுணர்வின் விழிப்பு, ராஜேந்திரயாதவின்

கதைக்குக் கலை வடிவம் கொடுக்கும் சிறப்பு, ரேணுவின் வட்டார மணம், மார்க்கண்டேயின் கிராமீய எளிமை, பர்சாயின் தீவிரமான சமுதாயப் பார்வை, இக்கால கட்டத்தின் பல்வேறு தன்மைகளாகும். இக்காலகட்டத்தில் பல்வேறு எழுத்தாளர்களும் பெரும்பாலும், சிறுகதை எழுதுவதை ஒரு மகத்தான கலையின் வடிவமாக, சாதனமாக ஏற்றுக்கொண்டிருந்தனர் என்பது நிச்சயம். கதை சொல்லும் கலைக்குப் பழைய பாணிகளையே பின்பற்றிக் கொண்டிருப்பதைத் தவிர்த்து, பழமையை அடியொற்றிச் செல்லாமல் வாழ்க்கையை அப்படியே நேரிடையாகச் சித்திரித்துக் காட்டுவதென்ற சங்கல்பத்துடன் இருந்தனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. வாழ்க்கைப் பற்றிய கற்பனைக் கதை அளப்புகளிலிருந்து வாசகர்களின் பார்வையை அகற்றி 'அத்தாட்சி பூர்வமான அனுபூதி,' 'அனுபவித்த யதார்த்தம்' எனக் கூறப்பட்டவை சாமான்ய சித்தாந்தங்கள் என்ற முறையில் புதியவைகளாக இல்லாவிடினும் வரலாற்று முக்கியத்வம் பெற்ற இவ்விசேஷ கால கட்டத்தில் புரட்சிகரமானதாகவும், படைப்பாற்றல் மிகுந்த படைப்புகளாகவும் கருதப்பட்டன. மொத்தமாகப் பார்க்கும்போது இக்கால கட்டத்தில் எழுதப்பட்ட கதைகளில் சுமார் 20, 25 சிறுகதைகள் மிகக் கடுமையான அளவுகோல்களினால் மதிப்பீடு செய்தாலும் சிறந்த கதைகளின் முன் வரிசையில் இடம் பெறக்கூடியவையாகும்.

ஏழாவது 'தஷக்'கில் புதிய எழுத்தாளர் பரம்பரையொன்று தலை தூக்கியது: இவர்களுடைய கூரிய யதார்த்த நோக்கில், கடந்த 6-வது 'தஷக்' எழுத்தாளர்களின் 'அனுபவித்த யதார்த்தம்' போலியாகவும், அவர்களது வாழ்க்கை நோக்கு வெறும் கற்பனாவாதமாகவும் பட்டது. சந்தர்ப்ப சூழல்களும் இதற்கேற்ப அமைந்தன. மாறி வந்த சூழல்களுக்கு ஏற்ப தங்களை மாற்றிக்கொள்ள இயலாத காரணத்தினால் ஆறுவது 'தஷக்' எழுத்தாளர்கள் மௌனமாகி விட்டனரோ என்னவோ! மேலும் தங்களுக்கு முன்னரே பரிச்சயமாகியிருந்த உலகத்தில் தங்களை மறைத்துக்கொள்ளவும் அவர்கள் முயன்றனர். 7-வது தஷக்கின் படைப்பிலக்கியக் கர்த்தாக்கள் கதை சொல்லும் பரம்பரை வழிவந்த யதார்த்தத்தைப் புறக்கணித்து விட்டு, சாதாரண மனிதனின், சராசரி வாழ்வில் விரவி நின்ற, முகமறியாத் தன்மை, ஆன்ம மறுப்பு, அமானுஷத்தன்மை, அச்சமூட்டும் திகிலின் அதல பாதாளத்தில், ஆழங்களில், இதுவரை பார்க்கப் படாமல் தவிர்க்கப்பட்டுவந்த ஆழங்களைத் துருவிப் பார்க்கலாயினர்.

இத் தலைமுறையில் தோன்றிய எழுத்தாளர்களுக்கு, கஜானன்

மாதவ் முக்திபோத்தின் 'கிளாட் ஈதர்லி', 'விபாத்ர' போன்ற கதைகள் தங்களுடன் நெருங்கிய தொடர்புடையதாகப் பட்டது. இந்த எதிர் விளைவுடன் கூடவே சம கால உலகத்தின் பயங்கரத்தின் புனைவுகளை மிகைப்படுத்திய கற்பனவாதமாகச் சித்திரிக்கவும் முயன்றனர். இக் நோக்கில் பார்க்கும்பொழுது, ஏழாவது தஷக்கின் எழுத்தாளர்களில் ஸ்ரீகாந்த்வர்மா, மகேந்திர பல்லா, ஞானரஞ்சன், காசிநாத் சிங், தூத்நாத் சிங், ரவீந்திர காலிலா, காம்தா நாத், சுதா அரோடா, ரமேஷ் பக்ஷி. பிரபோத் குமார், விஜய் சௌஹான் முதலியவர்களின் பெயர் விசேஷமாகக் குறிப்பிடத்தக்கவை, இவர்களில் பெரும்பாலோரின் சிறு கதைத்தொகுதிகள் ஓரிரண்டு அண்மையில் வெளி வந்துள்ளன. பல இளம் எழுத்தாளர்கள் இப்போழுதே தான் சொன்னதையே மீண்டும் திரும்பிச் சொல்ல ஆரம்பித்துவிட்டனர் என்பதும் உண்மைதான். இருப்பினும் இந்த மாற்றத்தினால், இந்திச் சிறுகதை உலகில் புதிய படைப்பாற்றலுக்கு வாயில் திறந்து விட்டிருக்கிறது என்பதில் ஐயமில்லை.

கடந்த 70 ஆண்டுகளில் இந்திச் சிறுகதையின் வளர்ச்சியானது பல படிகளை விரைவாகத் தாண்டி முன்னேறி வந்திருக்கிறது. பிறமொழிக் கதைகளுக்கு இந்த நிலையை அடைய இரட்டிப்பு அவகாசம் வேண்டியிருந்தது என்பதைக் கவனிக்கவேண்டும். இந்தியில் சிறுகதை சற்றே காலம் தாழ்த்தித்தான் அரும்பியது என்பதில் சந்தேகமில்லை. இந்தி மக்களின் கவனமும், கதையைவிட, கவிதைத் துறையிலும் நாவலிலும் அதிகமிருந்திருக்கக்கூடும். இருப்பினும், இந்தக் குறுகிய கால கட்டத்திற்குள் இந்திச் சிறு கதையானது, குறிப்பிட்ட ஒரு தனித்தன்மையை, தன்னிடம் தோற்றுவித்துக் கொள்ளுவதில் வெற்றியடைந்துள்ளது. இதன் மூலம் அது இந்திய இலக்கியங்களில் மட்டுமன்றி உலகச் சிறுகதை இலக்கியத்தில் தனக்குரிய தனி இடத்தைக் கோரமுடியும். இக்கதைத் தொகுதி இந்திச் சிறுகதையின் இன உறுதியைச் சற்று எடுத்துக்காட்ட முடியும் என நம்புகிறேன்.

முடிவில் இத்தொகுதி பற்றி இரண்டொரு வார்த்தைகள். இத்தொகுதி இந்திச் சிறுகதை இலக்கியத்தின் முழுமையான பிரதிநிதித்துவம் பெற்றது அல்ல. இதில் சில புகழ் மிக்க எழுத்தாளர்கள் இடம் பெறமல் விடப்பட்டிருக்கின்றனர். கலை அம்ச நோக்கில் புதுமையான உத்தியைக் கையாளுவதிலுள்ள வேறுபட்ட தன்மைகளைக் காட்டமுடியவில்லை ஒரு சில கதைப் போக்குகள் விடப்பட்டும் இருக்கலாம். இதற்கெல்லாம் ஒரு காரணம் இத்தொகுதியின்

அமைப்பு பற்றிய குறிப்பிட்ட எல்லையாகும். மற்றொன்று இத் தொகுப்பாசிரியரின் தனிப்பட்ட கண்ணோட்டமாகும். சாதாரண மாக இக்கண்ணோட்டத்திற்குச் சமுதாய யதார்த்த நோக்கு என்ற அடைமொழி தரப்படும். ஆனால் தொகுக்கப்பட்ட கதைகளைப் படிப்பதிலிருந்துதான் இதைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும். இத்தொகுப்பின் மூலம் இந்திச் சிறுகதையின் முக்கியமான பரம் பரையை எடுத்துக் காட்டி, உங்கள் முன் வைக்க விரும்பினேன். ஆனால் எந்தத் தொகுப்பையும்போல இதுவும் ஓர் எல்லைவரை எனது தனிப்பட்ட நோக்குடையது என்பதை ஏற்றுக்கொள்வதிலும் எனக் குத் தயக்கமில்லை அக்ஞேயின் சிறுகதையான 'கேங்ரின்' ஆசிரிய ரின் அனுமதி கிடைக்காத காரணத்தினால் இத்தொகுதியில் சேர்க் கப்பட முடியவில்லை என்பதற்கு வருந்துகிறேன். இத்தொகுதி எப்படி அமைந்திருந்தாலும், அதன் சிறப்பும் பெருமையும் தங்களது பூரண ஒத்துழைப்புடன், இதை வெற்றிகரமாக்கியுள்ள இக்கதை களின் ஆசிரியர்களைச் சாரும்.

புது தில்லி,<br>6-10-1970

நாம்வர் சிங்

# பொருளடக்கம்


| | | | பக்கம் |
|---|---|---|---|
| | முகவுரை | ... | iii |
| | முன்னுரை | ... | v |
| 1. | அவள் சொன்னாள் — சந்திரதர் சர்மா 'குலேரி' | ... | 1 |
| 2 | சவக்கோடி — பிரேம்சந்த் | ... | 23 |
| 3. | சோதா — ஜயசங்கர்பிரசாத் | ... | 39 |
| 4. | கொலுசு — ஜைனேந்திரகுமார் | ... | 61 |
| 5. | பிறர் சுகம் — யஷ்பால் | ... | 86 |
| 6. | காதலின் தியாகம் — ராங்கேய் ராகவ் | ... | 114 |
| 7. | மூன்றாவது சபதம் — பணீஷ்வர்நாத் ரேணு | ... | 143 |
| 8. | லண்டனில் ஓரிரவு — நிர்மல்வர்மா | ... | 207 |
| 9. | மணங்கள் — ராஜேந்திரயாதவ் | ... | 261 |
| 10. | ரொட்டி — மோகன் ராகேஷ் | ... | 299 |
| 11. | கோடைகாலம் — கமலேஷ்வர் | ... | 322 |
| 12. | சவயாத்திரை — ஸ்ரீகாந்த்வர்மா | ... | 338 |
| 13. | பகலுணவு — அமர்காந்த் | ... | 354 |
| 14. | வேலிக்கு இருபுறமும் — ஞானரஞ்சன் | ... | 367 |
| 15. | சுகம் — காசிநாத்சிங் | ... | 382 |

## அவள் சொன்னாள்

### 1

பெரிய பெரிய பட்டினங்களில் எக்கா வண்டிக்காரர்களின் சொல்லம்புகள் உங்கள் முதுகைப் பதம் பார்த்திருந்தாலோ, காதுகளைச் செவிடாக்கியிருந்தாலோ உங்களிடம் நான் தாழ்மையாகக் கேட்டுக்கொள்வது இதுதான் — தயவு செய்து அமிருதசரஸின் சாரட்டு வண்டிக்காரர்களின் தீஞ்சுவைச் சொற்கள் என்ற களிம்பைத் தடவிக்கொள்ளுங்கள்.

பெரிய நகரங்களின் அகன்ற பாட்டைகளில் போய்க் கொண்டிருக்கும் இந்த எக்கா வண்டிக்காரர்கள் குதிரையைச் சவுக்கினால் விளாசியவாறே அதன் அத்தைப் பாட்டியுடன் நெருங்கிய உறவு கொண்டாடத் துவங்கி விடுவார்கள். அது மட்டுமா? பாதையோடு போகிறவர்களுக்குக் கண்ணில்லையே என்று இரங்கற் பா பாடுவதும் உண்டு. சில சமயம் பாதசாரிகளின் கால் விரல்களைப் பதம் பார்த்துவிட்டு, அவர்களால் தாங்கள் பெருந்துன்பப் படுவதுபோல் காட்டிக்கொண்டு நிராசையும், கழிவிரக்கமும், வருத்தமும் உடையவர்கள் போல் திரும்பிக் கூடப் பாராமல் போய்விடுவார்கள்.

அமிருதசரஸ் நகரத்தில் உள்ள இவர்களின் அண்ணன் தம்பிகள் எல்லோருமே இப்படித்தான். குறுகிய நீண்ட சந்து பொந்துகள்—மூலை முடுக்குகளில் எல்லாம் சவாரிக்காக வண்டியை நிறுத்திவிட்டு கடல் பொங்குவது போல் பேரிரைச்சல் போடுவார்கள். 'தள்ளுங்கள் கால்சாஜீ', 'ஒதுங்கப்பா தம்பி', 'ஏய் நில்லு,' 'லாலாஜீ வாங்க இப்படி' — என்று கூவியவாறே, தலைப்பாகைகாரர்கள், கழுதைகள், வாத்துக் கூட்டம், பாரவண்டிகள், மிட்டாய் வண்டிக்காரர்கள், கரும்புக் குவியல்கள் என்ற அடர்ந்த

காட்டினிடையே புகுந்து வழி விலக்கிக்கொண்டு போய் விடும் அளவுக்கு அவர்கள் சமர்த்தர்கள்.

'ஐயா, சாகாப்' என்ற இவர்களின் அடைமொழியைக் கேளாமல், யாரேனும் பாதையை விட்டு நகர்ந்துவிட முடியுமா என்ன? இவர்கள் நாவடக்கம் உள்ளவர்கள் என்பது பொருளல்ல. நாவினால் சுடுவதில் வல்லவர்கள். இனிக்க இனிக்கப் பேசி, சொல்லென்னும் கூர்வேலைப் பாய்ச்சி விடுவார்கள்; எத்தனை கூறினும் காதில் போட்டுக்கொள்ளாமல் ஒரு கிழவி தன் பாட்டில் போய்க் கொண்டிருக்கிறாள் என வைத்துக்கொள்வோம். அவர் களின் சொல்மாரிக்கு இதோ ஓர் உதாரணம்: 'நீ நெடுங் காலம் வாழ வேண்டியவள், நீ பாக்கியம் செய்தவள், உன் பிள்ளைக்கும் பிரியமானவள். நீண்ட காலம் உன் முன்னே காத்திருக்கும்போது என் வண்டியின் சக்கரத் தில் வந்து ஏன் விழப் பார்க்கிறாய்? நகர்ந்து போ!'— என்பதுதான்.

இத்தகைய சாரட்டு வண்டிகளிடையே புகுந்து வெளி வந்த ஒரு சிறுவனும் சிறுமியும் கடைத்தெருவில் உள்ள ஒரு கடைக்கு வந்து சேர்ந்தனர். அவர்களது கேசத்தி லிருந்தும், தொள தொள வென்று அணிந்திருந்த பைஜாமாவிலிருந்தும் அவர்கள் சீக்கியர்கள் என்பது புலனாயிற்று. சிறுவன் தன் மாமாவிற்குத் தலையில் தேய்த் துக்கொள்ளத் தயிர் வாங்க வந்திருந்தாள். சிறுமி சமை யலுக்கு வடகம் வாங்க வந்திருந்தாள். கடைக்காரன் இவர்கள் பக்கம் திரும்பவேயில்லை, ஒரு சேர் ஈர அப்ப ளத்தை நிறுத்து வாங்கிவிட்டு, அதை எண்ணிப் பார்க் காமல் அங்கிருந்து நகர மாட்டேன் என்று அடம்பிடித்த வெளியூர்க்காரனிடம் அவன் வாதாடிக்கொண்டிருந்தான்.

இதற்குள் சிறுவர்களிடையே —

'உன் வீடு எங்கேயிருக்கிறது?'

'மகராவில். உன் வீடு?'

'மாஞ்சாரில்.'

'இங்கே எங்கு தங்கியிருக்கிறாய்?'

'அதர்சிங் வீட்டில்... அவர் என் மாமா.'

'நான் கூட மாமா வீட்டில் தான் இருக்கிறேன். குரு பாஜாரில் அவர் வீடு இருக்கிறது!

ஒரு வழியாகக் கடைக்காரன் தன் வாதத்தை முடித்துக் கொண்டு இவர்கள் பக்கம் திரும்பினான். சாமான்களை வாங்கிக்கொண்ட இருவரும் ஒன்றாக வீடு திரும்பினர். சற்று தூரம் வந்ததும், சிறுவன் புன்சிரிப்புடன் சிறுமியை நோக்கி, 'உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா?' எனக் கேட்டான். இதைக் கேட்ட சிறுமி புருவங்களை உயர்த்தியவள், 'தூ!' எனக் கூறி வீட்டுச் சிட்டாகப் பறந்து விட்டாள். அவளைப் பார்த்தபடியே சிறுவன் நின்றான்.

அடுத்தடுத்து இரண்டு மூன்று நாட்கள் — காய்கறிக் கடை, தயிர்க்கடை, பால்காரன் வீடு என எதிர்பாராமலேயே அவர்கள் சந்தித்துக்கொண்டனர். கிட்டத்தட்ட ஒரு மாதம் இத்தகைய சந்திப்புகள் நீடித்தன. நடுவே இரண்டொரு முறை சிறுவன் அச் சிறுமியிடம் 'உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா?' — எனக் கேட்டான். மீண்டும் 'தூ!' என்ற பதில் தான் கிட்டியது. இதன்பின் ஒரு நாள், அவளைச் சீண்டும் நோக்கத்துடன் சிறுவன் அதே கேள்வியைக் கேட்டதும், அவன் எதிர்பார்த்ததற்கு முற்றிலும் விரோதமாய் 'ஆமாம்' என்று பதிலளித்தாள் சிறுமி.

'எப்பொழுது?'

'நேற்றுத்தான்! என் சிவப்பு மேலாடையை நீ பார்க்கவில்லையா?' — சிறுமி ஓடிவிட்டாள். சிறுவன் வீட்டுக்குப் புறப்பட்டான். வழியில் எதிர்ப்பட்ட ஒரு சிறுவனைச் சாக்கடையில் தள்ளி, மிட்டாய்க்காரனின் ஒரு நாள் சம்பாத்தியத்தைக் கொட்டிக் கவிழ்த்து, ஒரு நாயைக் கல்லால் ஓங்கி அடித்து, காய்கறிக்காரன்

வண்டியில் பாலைக் கவிழ்த்து, குளித்துவிட்டு வந்த ஒரு பரமவைஷ்ணவியின் மீது மோதிக் 'கபோதி!' என்ற பட்டத்தையும் வாங்கிக்கொண்டபின் தான், அவனால் வீடு போய்ச் சேர முடிந்தது.

2

ராம், ராம், இதுவா போர்க்களம்! நாள் முழுவதும் இந்தக் குழியில் உட்கார்ந்து, உட்கார்ந்து எலும்பெல்லாம் கூட விறைந்துக்கொண்டுவிட்டது. லூதியானாவைவிடப் பத்து மடங்குக் குளிர், மழை-மூட்டம். போதாத குறைக்குப் பனி வேறு பெய்கிறது. முழங்கால்வரை சேற்றிலே புதைந்து போகிறது. எதிரி கண்ணில் பட்டால்தானே! ஒரு மணி, இரண்டு மணிக்கொருமுறை காதைப் பிளக்கும் பலத்த சத்தத்துடன் இந்தக் குழியெல்லாம் கூட அதிர்கிறது. நூறு கஜத்திற்குத் தரையைப் பிய்த்துக் கொண்டு போகிறது. இதுதான் யுத்தம், கண்ணுக்குப் புலப்படாத இந்தக் குண்டிலிருந்து தப்பினால் அல்லவா சண்டை போடலாம். நகர்கோட் பூகம்பத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். இங்கே தினமும் இருபது இருபத்தைந்து பூகம்பங்கள் அல்லவா அதிர்கின்றன! குழிக்கு வெளியே தலையோ — தலைப்பாகையோ, முழங்கையோ கொஞ்சம் தெரிந்தால் போதும். விர்ரென்று குண்டுகள் பாய்ந்து வருகின்றன. பாழாய்போனவர்கள் எங்கே மறைந்துகொண்டிருக்கிறார்களோ, தெரியவில்லை; மண்ணோடு மண்ணாக ஒட்டிக்கொண்டிருக்கிறார்களோ? அல்லது புல்லிலும் புதரிலும் ஒளிந்துகொண்டிருக்கிறார்களோ— யாருக்குத் தெரியும்?

'லக்னா சிங், இன்னும் மூன்று நாட்கள்தான். நாலு நாட்கள் தான். நாலு நாட்களை இக்குழிக்குள் எப்படியோ தள்ளிவிட்டோம். நாளைக் கழித்து மறுநாள் 'ரிலீப்' வந்துவிடும். அப்புறம் ஒரு வாரம் ஓய்வுதான். நம் கையால் ஆட்டை வெட்டி, வயிறு நிரம்பச் சாப்பிட்டு

விட்டுத் தூங்கலாம். அந்த மேம் சாகிபா இருக்கிறாளே, அவள் வீட்டுப் புல்வெளி மகமல் மாதிரி ஜோராக இருக்கிறது. அவள் தான் பாலாகவும் பழமாகவும் பொழிந்து தள்ளுகிறாளே! எத்தனை சொன்னாலும் ஒன்றுக்கும் காசு வாங்கிக் கொள்வதில்லை. வற்புறுத்தினால் "நீ என் ராஜா. எங்கள் நாட்டைக் காப்பாற்ற வந்திருப்பவன்" எனக் கூறிவிடுகிறாள்.

'நாலு நாட்களாகக் கண்ணை மூடவில்லை. சவாரிக்குப் போகாத குதிரையும், சண்டைக்குப் போகாத சிப்பாயும் குட்டிச்சுவர் தான்! துப்பாக்கிச் சனியனை எடுத்துக் கொண்டு 'மார்ச் ஆன்' செய்ய உத்தரவு கொடுத்தால் போதும். ஏழு ஜெர்மானியனைச் சுட்டு வீழ்த்தாமல் நான் திரும்பினால் தர்பார் சாகப்பின் முன் குனிந்து வணங்கும் பாக்கியம் எனக்குக் கிட்டாமல் போகட்டும். உதவாக்கரைப் பயல்கள்! எல்லாம் வெறும் யந்திரங்கள், துப்பாக்கிச் சனியனைத் தூக்கிப் பிடித்தால் வாயைப் பிளக்கிறான்; காலைப் பிடிக்கிறான், இப்பொழுது இருட்டிலே இருபது, முப்பது மணங்குக் குண்டுகளை வீசி வீசி எறிகிறான். நாம் எதிர்த்துத் தாக்கினோமே. அன்று சுற்று முற்றும் நாலு மைலுக்கு ஒரு ஜெர்மானியப் பயல் தப்ப முடிந்ததா? இல்லையே! ஜெனரல் சாகப் பின்வாங்கும் படி உத்தரவு போட்டுவிட்டார். இல்லாவிட்டால்...!'

'இல்லாவிட்டால் நேரே பெர்லினுக்கே போயிருப்பாய்! அப்படித்தானே?' சுபேதார் ஹசாரா சிங் புன்னகையுடன் மேலே தொடர்ந்தார்— 'யுத்தத்தைப் பற்றிய விஷயங்கள் ஜமேதாரோ நாயக்கோ முடிவு செய்து நடப்பதில்லை. உயர் அதிகாரிகள், வரப்போவதை முன் கூட்டியே யோசிப்பார்கள். முந்நூறு மைல் தூர அணியாயிற்றே, ஒரு பக்கம் மட்டும் முன்னேறிச் சென்றால் என்ன ஆவது?'

'உண்மைதான் சுபேதார் ஜீ!' என்றான் லக்னா சிங்.

'ஆனால் என்ன செய்ய? பனி எலும்பைக்கூட உறைய வைத்துவிடும் போலிருக்கிறதே! சூரியனைக் கண்ணிலேயே காணோம்! குழியின் இரு பக்கச் சுவரிலிருந்தும் இறவைக் கிணறுபோல் நீர் ஊற்றாக வடிந்துகொண்டிருக்கிறது. எதிர்த்து ஒரு தாக்கு தாக்கினாலாவது உடம்பில் சூடு பிறக்கும்.'

'ஊதம் சிங் எழுந்திரு. கணப்புக்குக் கரியை அள்ளிப் போடு. வஜீரா, நீங்கள் நாலுபேர் வாளியை எடுத்து, குழிக்குள் இருக்கும் தண்ணீரை யெல்லாம் இறைத்துக் கொட்டுங்கள். லக்னா சிங், சந்தியா காலமாகிவிட்டது, அரணின் வாசலில் உள்ள காவலை மாற்று'—என்று உத்தரவுகள் இட்டவாறே சுபேதார் சுற்றும் முற்றும் பார்வையிடலானார்.

வஜீரா சிங் தான் இந்த ரெஜிமண்டின் விதூஷகன், வாளியில் சேற்று நீரை நிரப்பி நிரம்பி வெளியே கொட்டியவாறே, 'நான் தான் புரோகிதன்: ஜெர்மனி பாதுஷாவிற்குத் தர்ப்பணம் செய்யுங்கள் எல்லாரும்!' என்றான் உரக்க. இதைக் கேட்ட யாவரும் சிரிக்கவே—சூழ்ந்திருந்த துயர மேகங்கள் சற்றே விலகியது போலிருந்தது.

இன்னொரு வாளியை நிரப்பி அவன் கரத்தில் கொடுத்த லக்னா, 'இந்தா, உன் தருபூசணி நிலத்திற்குத் தண்ணீர்ப் பாய்ச்சு. இம்மாதிரி எருவும் உரமும் கலந்த தண்ணீர் பஞ்சாப் முழுவதும் தேடினாலும் கிடைக்காது,' என்றான்.

'ஆமாம் இது என்ன சாமானிய தேசமா? இது சொர்கமப்பா சொக்கம்! சண்டை நடந்த பிறகு சர்க்காரிடம் இங்கேதான் பத்து ஏக்கரா நிலம் கேட்டு வாங்கப் போகிறேன். பழத்தோட்டம் போட்டு விடுவேன்.'

'ஊம், பெண்டாட்டியை இங்கே அழைத்து வருவாயா? அல்லது பால் தருகிறாளே அந்த மேம் சாகிபா...'

'சே! வாயை மூடு. இங்குள்ள பெண்களுக்கு நாணமே இல்லை.'

'அது அவர்கள் நாட்டுப்பழக்கம், சீக்கியர்கள் சிகரெட் குடிக்கமாட்டார்கள் என்ற விஷயத்தை இன்னும் என்னுல் அவளுக்குப் புரியவைக்க முடியவில்லை. சிகரெட் தருவேன் என்று ஒத்தைக் காலில் நிற்கிருள், உதட்டில் கொண்டு வந்து வைக்கிருள். நகர்ந்து கொண்டால், ''ராஜா கோபித்துக் கொண்டுவிட்டார். இனி என் நாட்டுக்காகச் சண்டை போடமாட்டார்'' என்று நினைத்துக் கொண்டு விடுகிருள்.

'ஆமாம், போதாவிற்கு எப்படி இருக்கிறது?'

'பரவாயில்லை.'

'எனக்கொன்றும் தெரியாது என்று நினைத்துக் கொள்ளாதே, உன் இரண்டு கம்பளியையும் அவனுக்குப் போர்த்திவிட்டு இரவு முழுவதும் கணப்படியிலேயே படுத்துக் கிடந்தாயே! தெரியாதென்று நினைத்தாய்? அவனுடைய பாரவேலையை நீ தானே பார்த்துவிட்டு வந்தாய்! உன் மரப்பலகையில் அவனைப் படுக்கவைத்து விட்டு ஈரத்திலும், உளையிலும் படுக்கிருயே! எங்கேயாவது நீ நோயில் விழுந்துவிடாதே! பனி என்ன பனி தெரியுமா? மரணம்தான். நிமோனியா வந்து செத்தால் சர்க்கார் நிலம்கூடக் கிடைக்காது!'

'என்னைப்பற்றி பயப்படாதே, நான் என் ஊரில் புலேலின் கரையிலே போய்த்தான் உயிரைவிடுவேன். தம்பி கீர்த்தி சிங்கின் மடிமீது என் தலை இருக்கும். முற்றத்தில் என் கையால் நட்ட மாமரத்தின் நிழல் என்மீது படிந்திருக்கும்'—என்ருன் லகிஜு புருவங்கள் நெரிய.

'இதென்ன சாவு—கீவு என்ற பேச்சு! இந்த ஜெர்மனிக்காரனும், துருக்கனும் சாகட்டுமே!'—என்ருன் வஜீரா எரிச்சலுடன்.

'சரி சரி—சகோதரர்களே ஏதாவது பாடுங்கள்.'

தாடி வைத்திருக்கும் குடும்பஸ்தர்களான இந்த சீக்கிய சிப்பாய்கள், சோதாக்களைப் போல் ஆபாசமான பாடல்களைப் பாடுவார்கள் என யாருக்குத் தெரியும்? பாதுகாப்புக் குழியெங்கும் அப்பாடல்கள் எதிரொலித்தன. நான்கு நாட்களாக நன்றாக உறங்கி ஆனந்தமாக நேரத்தைக் கழித்தவர்கள் போல சிப்பாய்கள் புத்துணர்வும் புது மலர்ச்சியும் பெற்றனர்.

3

இரவு இரண்டு ஜாமம் கழிந்துவிட்டது. எங்கும் இருளும் அமைதியும் வியாபித்து நின்றது. காலியாகக் கிடந்த இரண்டு மூன்று பிஸ்கட் டின்களின் மீது தன் இரண்டு கம்பளிகளையும் விரித்து, லக்ஹுவின் இரு கம்பளிகளையும், இரு கோட்டுகளையும் போர்த்திக்கொண்டு போதா சிங் உறங்கிக்கொண்டிருந்தான். லக்ஹுதான் பாராவில் நின்றான். அவனது ஒரு கண் குழியின் வாயிலிலும், மற்றொரு கண் போதா சிங்கின் துர்பலமான உடலின் மீதும் இருந்தன. போதா சிங் முனகினான்.

'போதா, என்னப்பா வேண்டும்?'

'தண்ணீர்.'

லக்ஹு குவளையை எடுத்து அவன் வாயில் வைத்தான். 'எப்படியிருக்கிறது சொல்லு?'

நீரை ஒரு மிடறு விழுங்கிவிட்டு போதா சிங் கூறினான். 'ரொம்பக் குளிருகிறது. ஒவ்வொரு மயிர்க்காலும் சுண்டியிழுக்கிறது, பற்கள் கிட்டி போடுகின்றன.'

'சரி, என் ஜர்சியைப் போட்டுக்கொள்.'

'உனக்கு?'

'எனக்கு அருகில் கணப்பு இருக்கிறது. எனக்குக் குளிரவில்லை, வியர்த்துக் கொட்டுகிறது.'

'வேண்டாம். நான் அணிந்து கொள்ளமாட்டேன். நாலு நாட்களாக எனக்காக...'

'இப்பொழுதுதான் எனக்கு நினைவு வந்தது. என்னிடம் இன்னொரு ஜர்சி இருக்கிறது. இன்று காலையில் தான் கிடைத்தது. மேல் நாட்டு மேம் சாகிப்பாக்கள் இருக்கிறார்களே, பின்னிப் பின்னி அனுப்பிவைக்கிறார்கள்: குருஜி அவர்களுக்கு நன்மை புரிவாராக!' என்று கூறிய லக்னா தன் கோட்டைக் கழற்றி உள்ளிருந்த ஜர்சியை அவிழ்த்தான்.

'நீ சொல்வது உண்மைதானா?'

'பின் என்ன பொய்யா?'—வேண்டாமென மறுத்த போதாவிற்கு வலுக்கட்டாயமாகத் தன் ஜர்சியை அணிவித்த லக்னா சிங், காக்கிக் கோட்டும் முரட்டுத் துணியிலான சட்டையும் அணிந்துகொண்டு மீண்டும் வாசல் முகப்பில் வந்து நின்றான். மேம் சாகிப்பாக்கள் அனுப்பிய ஜர்சி··· வெறும் கதை—உண்மையல்ல,

அரைமணி நேரம் கழிந்திருக்கும். இதற்குள் குழியின் வாயிலிலிருந்து குரல் கேட்டது—'சுபேதார் ஹஜாரா சிங்!'

'உத்தரவு லெப்டினெண்ட் சாகப்.' சுபேதார் விறைத்தாற்போல் நிமிர்ந்து நின்று சலாம் செய்தார்.

'இந்த நிமிடமே எதிரியைத் தாக்க உடனே புறப்பட வேண்டும். ஒரு மைல் தூரத்தில் கிழக்கு மூலையில் ஜெர்மானியப் பாதுகாப்புக் குழியொன்று இருக்கிறது ஐம்பது ஜெர்மானியர்கள் அதில் இருப்பார்கள். இம்மரங்களுக்கு அப்பால் இரண்டு வயலைத் தாண்டி வழி இருக்கிறது. மூன்று நான்கு திருப்பங்கள் திரும்பவேண்டியிருக்கும்: திருப்பத்தின் முனையில் பதினைந்து வீரர்களை நிறுத்தி வைத்துவிட்டு வந்திருக்கிறேன். நீ பத்து ஜவான்களை இங்கே நிறுத்திவிட்டு, மற்றவர்களை அழைத்துக் கொண்டு அவர்களுடன் போய்ச் சேர்ந்துகொள். அந்த இடத்தை கைப்பற்றிக்கொண்டு மறு உத்தரவு வரும்

வரையில் அங்கேயே இரு. நான் இங்கே இருப்பேன்.'

'உத்தரவு'

சத்தமிடாமல் யாவரும் தயாராகிவிட்டனர். போதா கூட கம்பளியை விலக்கிவிட்டுப் புறப்படத் தயாராகி விட்டான். லக்ஞு சிங் தான் அவனைத் தடுத்து நிறுத்தினுன். ஆனுல் லக்ஞு சிங், தான் வலிய முன் வந்து நின்றவன், போதாவின் தந்தை சுபேதார் விரலால் போதாவைச் சுட்டிக் காட்டியதும், அதைப் புரிந்து கொண்டு மௌனமாக நின்றுவிட்டான். இங்கு யார் பத்து பேர் தங்குவது என்பது பிரசினையாகத்தான் இருந்தது. ஏனெனில் ஒவ்வொருவனும் சுபேதாருடன் செல்ல விரும்பினுன்; சுபேதார் ஜவான்களுடன் புறப்பட்டுப் போய்விட்டார்.

லக்ஞு சிங்கின் கணப்பருகே லெப்டினெண்ட் சாகப் நின்ருர். முகத்தை மறுபக்கம் திருப்பிக்கொண்டு நின்றவர் பாக்கெட்டிலிருந்து சிகரெட்டை எடுத்துப் புகை பிடிக்க ஆரம்பித்தார். பத்து நிமிடங்களுக்குப் பிறகு அவரது கரம் லக்ஞு சிங்கின் பக்கம் நீண்டது. 'இந்தா, நீயும் குடி' என்ருர் லெப்டினெண்ட்.

பொறி தட்டியதுபோலிருந்தது. லக்ஞு சிங்கிற்கு. முகத்தில் எவ்வித சலனத்தையும் காட்டாமல், 'கொடுங்கள் சாகப்' என்று கரத்தை நீட்டியவன, இமைப் பொழுதில் கணப்பின் மங்கலான ஒளியில் லெப்டினெண்டின் முகம், கேசம் யாவற்றையும் கவனித்துவிட்டான். சந்தேகம் தட்டிவிட்டது. லெப்டினெண்டின் நீளமான, ஆனுல் ஒழுங்காகக் கத்தரித்துவிடப்பட்ட கிராப்பு ஒரே நாளில் எங்கே போய்விட்டது? கைதிகள் போல் வெட்டப்பட்ட மயிர் எங்கிருந்து வந்தது?

ஒருகால் சாகப் போதையில் இருக்கிருரோ? மயிர் வெட்டிக்கொள்ள அவருக்கு அவகாசம் கிடைத்ததோ என்னவோ? லக்ஞு சிங் உண்மையைக் கண்டறிய

விரும்பினான். லெப்டினெண்ட் சாகப் கடந்த ஐந்து வருடங்களாக அவனது ரெஜிமெண்டில் இருப்ப வராயிற்றே.

'சாகப்! நாம் எல்லோரும் எப்போது இந்தியாவிற்குத் திரும்புவோம்?' என்று வினவினான் லக்னு சிங்.

'சண்டை முடிந்த பிறகு. ஏன், இந்தத் தேசம் பிடிக்க வில்லையா?'

'இல்லை சாகப், அங்கே வேட்டையாடுகிற ஆனந்தம் இங்கே ஏது? சென்ற வருஷம் நானும் நீங்களும் ஜகாதரி ஜில்லாவில் வேட்டைக்குச் சென்றோம் அல்லவா?'

'ஆம், ஆம்.'

'சாகப், நீங்கள் கழுதையின் மீது சவாரி செய்து கொண்டு வந்தீர்கள், உங்கள் கான்சாமா (சமையற் காரன்) வழியிலே ஒரு கோவிலைக் கண்டதும் பூசை செய்ய நின்றுவிட்டான்.'

'ஆமாம், அயோக்கிய பயல்.'

'நம் எதிரே ஒரு பெரிய மான் வந்தது. அத்தனை பெரிய மானை நான் பார்த்ததேயில்லை. உங்கள் குண்டு அதன் தோளிலே பாய்ந்து காலின் வழியே வெளிவந்து விட்டது. உங்களைப் போன்றவர்களோடு வேட்டைக்குப் போனால் ஆனந்தமாக இருக்கும். சாகப், அந்த மானின் தலையைப் பதப்படுத்தும்படிச் சிம்லாவுக்கு அனுப்பியிருந் தீர்களே, அது வந்துவிட்டதா? ரெஜிமெண்ட் மெஸ்ஸில் வைக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தீர்களே.'

'ஓகோ. அப்படியா? ஆனால் நான் அதை ஊருக்கு அனுப்பிவிட்டேன்.'

'அதற்குத் தான் எவ்வளவு பெரிய பெரிய கொம்புகள்! இரண்டடி நீளம் இருக்குமா சாகப்?'

'இரண்டடி நாலு அங்குலம் இருந்தது, லக்னு சிங், ஆமாம். நீ இன்னும் சிகரெட்டைக் குடிக்கவில்லையா?'

'இதோ குடிக்கிறேன். தீப்பெட்டியை எடுத்துக்

கொண்டு வருகிறேன்.' என்று கூறியவாறே பாதுகாப்புக் குழிக்குள் வந்தான் லக்ஞ, அவனது சந்தேகம் முற்றிலும் நீங்கிவிட்டது. இனி மேலே செய்யவேண்டியதைப் பற்றியும் அவன் முடிவு செய்துவிட்டான்.

இருட்டில் கீழே படுத்திருந்தவன் மீது கால் இடறியது.

'யாரது? வஜீரா-சிங்கா ?'

'ஆமாம், லக்ஞ. என்ன பிரளயமா வந்து விட்டது? கொஞ்சம் கண்ணயர விடமாட்டாயா?'

'ஏய், விழித்துக்கொள்! பிரளயம்தான் வந்து விட்டது. அதுவும் லெப்டினெண்ட் சாகப்பின் யூனிபாரத்தில் வந்து இங்கே நிற்கிறது.'

'என்ன!'

'லெப்டினெண்ட் சாகப் ஒன்று, கொல்லப்பட்டிருக்க வேண்டும். அல்லது கைதியாகியிருக்கவேண்டும். அவருடைய யூனிபாரத்தைப் போட்டுக்கொண்டு ஒரு ஜெர்மானியன் வந்திருக்கிறுன். சுபேதார் அவன் முகத்தைப் பார்க்கவில்லை. நான் பார்த்தேன்! பேசினேன். அயோக்கியப் பயல்! நல்ல பக்கா உருது பேசுகிறுன். ஆனல் எல்லாம் புத்தக பாஷை, எனக்குக் குடிப்பதற்கு சிகரெட் தந்திருக்கிறுன்.'

'அப்படியென்ருல்?'

'நாம் தொலைந்தோம், ஏமாந்துவிட்டோம். சுபேதார் பாவம், சேற்றிலே மாட்டிக்கொண்டு சுற்றி அலைந்து கொண்டிருப்பார். இங்கே பாதுகாப்பு அரணைத் தாக்க ஆரம்பிப்பார்கள். அங்கே திறந்த மைதானத்தில் அவர்களைத் தாக்குவார்கள், எழுந்திரு. சீக்கிரம்! ஒரு காரியம் செய், நம் படை போயிருக்கும் காலடியைப் பார்த்துக் கொண்டு அந்தத் திசையிலேயே ஓடு. அவர்கள் வெகு தூரம் போயிருக்கமாட்டார்கள். உடனே திரும்பச் சொல்லி சுபேதாரிடம் சொல்லு. அங்கே அரண் இருப்பதாகச் சொன்னதெல்லாம் பொய். ஊம், புறப்படு, பின்

வழியாகச் செல். இலைகூட அசங்கக்கூடாது—ஜாக்கிரதை! புறப்படு, நேரமாக்காதே',

'இங்கேயே இருக்கும்படி தானே உத்தரவு?'

'உத்தரவு இருக்கட்டும். இது ஜமேதார் லக்னசிங்கின் உத்தரவு. நான்தான் தற்சமயம் இங்கிருப்பவர்களின் உயர் அதிகாரி. புறப்படு. நான் இங்கு லெப்டினெண்டை ஒரு கை பார்க்கிறேன்.'

'நீங்கள் இங்கு எட்டுப் பேர்தானே இருக்கிறீர்கள்?'

'எட்டு அல்ல—பத்து லக்ஷம். ஒவ்வொரு அகாலியா சீக்கியனும் $1\frac{1}{4}$ லக்ஷம் வீரர்களுக்குச் சமம். புறப்படு, நேரமாகிறது.'

திரும்பி வந்த லக்ன குழியின் முகப்பில் சுவரோடு சுவராக ஒட்டிக்கொண்டு நின்றான், லெப்டினெண்ட் சாகப் பையிலிருந்து இலந்தைப் பழம் மாதிரி மூன்று குண்டுகளை எடுத்தார். அம்மூன்றையும் ஆங்காங்கே அரணின் சுவற்றில் புதைத்தார். அம்மூன்றையும் மெல்லிய கம்பியால் இணைத்தார். அக் கம்பியின் நுனியில் நூல் திரி போன்ற ஒரு வஸ்து இருந்தது. அதைக் கணப்பின் அருகே வைத்தார். வெளியே சென்று தீக் குச்சியைக் கிழித்து அதன்மீது வைக்கக் குனியும் முன்...

மின்னலைப் போன்று பாய்ந்த லக்ன சிங் இரண்டு கரங்களாலும் துப்பாக்கியைத் திரும்பப் பிடித்துக்கொண்டு லெப்டினெண்ட் சாகப்பின் முழங்கையின் மீது பலம் கொண்ட மட்டும் ஓங்கி அடித்தான். 'தடால்' என்ற சத்தத்துடன் சாகப் கீழே விழுந்தான். தீக்குச்சி சிதறி விழுந்தது. அவனுடைய பிடரியில் ஓங்கி இன்னோர் அடி கொடுத்தான். 'ஓ மை காட்' என்று அலறிக்கொண்டு மூர்ச்சையுற்றான் லெப்டினெண்ட். லக்ன சிங் அவசர அவசரமாக அம்மூன்று குண்டுகளையும் பெயர்த்தெடுத்துக் குழிக்கு வெளியே வீசினான். பிறகு சாகப்பை இழுத்துவந்து கணப்பின் அருகே படுக்க வைத்தான்.

அவன் பைகளைச் சோதனை செய்தான். மூன்று நான்கு கவர்களும் ஒரு டயரியும் இருந்தன. அவற்றை எடுத்துத் தன் பையில் பத்திரப்படுத்திக்கொண்டான்.

சற்று நேரத்தில் சாகப்பின் மூர்ச்சை தெளிந்தது. லக்ஷ்மு சிங் சிரித்தான் — 'என்ன லெப்டினெண்ட் சாகப், உடம்பு எப்படி இருக்கிறது? இன்று உங்களிடமிருந்து எவ்வளவு விஷயங்களை அறிந்துகொண்டேன் தெரியுமா? முதலாவது, சீக்கியர்கள் சிகரெட் பிடிப்பார்கள் என்று தெரிந்துகொண்டேன். இரண்டாவது, ஜகதாரி ஜில்லா வில் மான்கள் உள்ளன என்றும் அவற்றுக்கு இரண்டடி நான்கு அங்குல நீளமுள்ள கொம்புகள் உண்டு என்று மறிந்தேன். முசல்மான் கான்சாமா கோயிலுக்குப் பூசை செய்யப்போவான் என்ற விஷயத்தையும் அறிந்து கொண்டேன். ஆமாம் சாகப், இவ்வளவு நன்றாக உருது பேச எங்கே கற்றுக்கொண்டீர்கள்? எங்கள் லெப்டி னெண்டிற்கு நாலு வார்த்தைக்கொரு முறை 'டாம்' செய்யாமல் பேச்சு வராதே!'

லக்ஷ்மு பாண்டின் பாக்கெட்டுகளைச் சோதிக்காமல் விட்டுவிட்டான், குளிருக்கு இதமாக இருக்கட்டுமென்றே என்னவோ, சாகப் இரண்டு கரங்களையும் பாண்டின் பாக் கெட்டில் நுழைத்துக்கொண்டான்.

லக்ஷ்மு தன்பாட்டில் பேசிக்கொண்டே போனான், 'நீ ரொம்பத் தந்திரக்காரன்தான். ஆனால் லக்ஷ்மு சிங் இத்தனை வருடமாக லெப்டினெண்டின் கூடவே இருந்த வனாயிற்றே! அவனை ஏமாற்ற முடியுமா? அதற்கு நாலு கண் வேண்டுமே! இரண்டு போதுமா? மூன்று மாதங் களுக்குமுன் ஒரு துருக்கி மௌல்வி எங்கள் கிராமத்திற்கு வந்திருந்தான், குழந்தைப் பேறு இல்லாத பெண்களுக் குத் தாயத்துக் கொடுத்தான். குழந்தைகளுக்கும் மருந்து கொடுத்தான். சௌத்திரியினுடைய ஆலமரத்தின் அடி யிலேயே கட்டிலைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்து

ஹுக்கா குடித்த வண்ணம் ஜெர்மானியர்கள் மாபெரும் அறிவாளிகள் பண்டிதர்கள் என்று சொல்லிக்கொண்டிருந்தான்: "வேதங்களைப் படித்துப் படித்து அதிலிருந்து விமானம் கட்டும் வித்தையை அறிந்து கொண்டிருக்கிறார்கள். பசுவதை செய்வதில்லை — இந்தியாவுக்கு வந்தால் பசுவதையை முற்றிலும் தடைசெய்துவிடுவார்கள்" — என்றெல்லாம் மக்களிடம் கூறிக்கொண்டிருந்தான். கடையிலிருக்கும் வியாபாரிகளிடம் — "போஸ்டாபீஸில் போட்டு வைத்திருக்கும் பணத்தையெல்லாம் எடுத்துவிடுங்கள். சர்க்கார் கவிழப்போகிறது" என்றான். போஸ்ட்மாஸ்டர் போலராம் கூட நடுங்கிவிட்டார். நான் என்ன செய்தேன் தெரியுமா? முல்லாஜியின் தாடியைச் சிரைத்து கிராமத்தை விட்டே துரத்திவிட்டேன் — "இனிமேல் நீ இந்த ஊரில் காலடி எடுத்து வைத்தால் பார்!" என்று...'

தடார்...! சாகப்பின் பாக்கெட்டிலிருந்து பிஸ்டல் இயங்கியது. குண்டு லக்னுவின் தொடையில் பாய்ந்தது. இதற்குள் லக்னுவின் இரண்டு குண்டுகளும் சாகப்பின் உயிரைக் குடித்து விட்டன. சத்தம் கேட்டு யாவரும் ஓடி வந்தனர்.

'என்ன இது?' என்று கூவினான் போதா சிங்.

'ஒன்றுமில்லை ஒரு வெறிநாய் வந்தது, சுட்டுத் தள்ளி விட்டேன். நீ படுத்துக்கொள்' — என்று அவனைச் சமாதானப்படுத்தி மீண்டும் படுக்கவைத்தான் லக்னு சிங்.

மற்றவர்களிடம் நடந்தவற்றை விளக்கினான். துப்பாக்கியை எடுத்துக்கொண்டு யாவரும் தயாராகிவிட்டனர். லக்னு தலைப்பாகையைக் கிழித்துக் காயத்தின் இருபுறமும் அழுத்திக் கட்டுப் போட்டுக்கொண்டான். குண்டு சதையில்தான் பாய்ந்திருந்தது. இறுக்கமாகத் துணியைக் கட்டியதும் இரத்தப் பெருக்கம் சற்று நின்றது.

இதற்குள் ஜெர்மானியர்கள் கூச்சலிட்டவாறே அரணிற்குள் நுழைந்தனர், சீக்கியர்களின் துப்பாக்கிப் பிரயோகம் முதல் பாய்ச்சலைத் தடுத்துவிட்டது. இரண்டாம் முறையும் ஓரளவு வெற்றி கண்டது. ஆனால் அச்சமயம் பாதுகாப்புக் குழியில் இருந்தவர்கள் எட்டே பேர்கள் தான். லக்னு சிங் குறிபார்த்து அடித்து விழ்த்திய வண்ணமிருந்தான். நின்றுகொண்டும், தரையிலே படுத்தக்கொண்டும் அவன் இடைவிடாமல் சுட்டுத் தள்ளிக்கொண்டேயிருந்தான். ஆனால் எதிரிகள் எழுபத்தேழு பேர்களாயிற்றே. தங்கள் சகோதர வீரர்களின் பிணங்களை மிதித்துக்கொண்டு அவர்கள் முன்னேறி வந்துகொண்டிருந்தார்கள். இன்னும் சில நிமிடங்களில்...

திடீரென்று ஒரு குரல் ஒலித்தது. 'வாஹ் குருஜீ தீப்தக்', 'வாஹ் குருஜீ! கால்சா.'

சரமாரியாகக் குண்டுகள் ஜெர்மானியர்கள் முதுகுகளில் பாய்ந்தன. சரியான சமயந்தான். ஜெர்மானியர்கள் யந்திரத்தின் இரு சக்கரங்களுக்கிடையே சிக்கிவிட்டார்கள். பின்னலிருந்து சுபேதார் ஹசாரா சிங்கின் வீரர்கள் நெருப்பு மழை பொழிந்துகொண்டிருந்தனர். எதிரே லக்னுவும் அவன் தோழர்களும் துப்பாக்கிப் பிரயோகம் செய்து கொண்டிருந்தனர். நெருங்கி வந்ததும் பின்னல் நின்றவர்களும் துப்பாக்கியை எடுத்தனர்.

'அகால் சிக்காம் தீ வௌஜ் ஆயி.' 'வஹ் குருஜீ தீப்தக்.' 'வாஹ் குருஜிதா கால்சா', 'சத்தகிரி அகால் புருஷ்.' ஒரே மகிழ்ச்சி ஆரவாரம் தான். சண்டை முடிந்துவிட்டது.

அறுபத்திமூன்று ஜெர்மானியர் மண்ணிலே புரண்டுகொண்டிருந்தனர், செத்துக்கொண்டிருந்தனர், சீக்கியர்களில் பதினைந்து பேர் வீரகதி அடைந்திருந்தனர். ஒரு குண்டு சுபேதாரின் தோள் பட்டையை ஊடுருவிச் சென்றிருந்தது. லக்னுவின் விலாவிலும் ஒரு குண்டு

பாய்ந்திருந்தது. குழியின் ஈரமண்ணை எடுத்துக் காயத்தின் மீது வைத்து, மீதியிருந்தத் தலைப்பாகைத் துணியைக் கிழித்துக் கச்சைபோல் இடுப்பைச் சுற்றி இறுகக் கட்டிவிட்டான். லக்னாவிற்கு இரண்டாம் முறையாகப் பலத்த காயம் பட்டிருப்பது ஒருவருக்குமே தெரியாது.

சண்டை நடந்துகொண்டிருக்கும் போதே வானத்தில் சந்திரன் உதயமானான். சம்ஸ்கிருத கவிஞர்கள் 'க்ஷயி' (தேய்வை உடையவன்) என்று கொடுத்திருந்த அடைமொழிக்கு இலக்கணமாக இருந்தது அதன் ஒளி. வீசிய காற்றோ, பாணபட்டனின் பாஷையில் பற்களெனும் வீணை தந்திகளை மீட்டுவதுபோல் இருந்தது.

சுபேதாரைத் தேடி ஓடியபோது பிரான்ஸ் நாட்டு மண், மணுக்கணக்காய்த் தன் பூட்ஸ்களில் எப்படி அப்பிக்கொண்டது, தான் எப்படி ஓடினேன் என்பதை வஜீராசிங் விவரித்துக் கொண்டிருந்தான். லக்னா சிங்கிடம் நடந்த விவரங்கள் யாவற்றையும் கேட்டறிந்த சுபேதார், அவன் எடுத்துவைத்திருந்த குறிப்புகளைக் கண்டு மகிழ்ந்தவராய், விரைந்து செயலாற்றிய அவனது புத்தியைப் புகழ்ந்து பாராட்டினார். 'நீ மட்டும் இல்லாமலிருந்தால் நாம் யாவரும் கூண்டோடு மடிந்திருப்போம்' என்று கூறினார்.

இங்கே நடந்த சண்டையின் துப்பாக்கி வெடி ஓசை இடப் புறத்தில் மூன்று மைலுக்கு அப்பாலிருந்த இன்னொரு ரெஜிமெண்டாருக்குக் கேட்டது. அவர்கள் டெலிபோன் செய்தார்கள். அங்கிருந்து உடனுக்குடன் டாக்டர்கள், காயம் பட்டவர்களை எடுத்துச் செல்ல ஆம்புலன்ஸ் யாவும் இரண்டொரு மணி நேரத்துக்குள் வந்து சேர்ந்துவிட்டன.

பீல்டு ஹாஸ்பிடல் அருகில் தான் இருந்தது. விடிவதற்குள் அங்கே போய்ச் சேர்ந்துவிடலாம். இதனால் காயமுற்றோருக்கு முதல் சிகிச்சை அளித்துக் கட்டுகள்

போட்டு ஒரு வண்டியில் படுக்க வைத்தனர். மற்ருெரு வண்டியில் இறந்தவர்களின் சடலங்கள் ஏற்றப்பட்டன. சுபேதார், லக்ஞவின் தொடையில் பட்டிருந்த காயத்துக்கு மருந்து வைத்துக் கட்ட விரும்பினுர். ஆனால் லக்ஞ லேசான காயம் பட்டிருப்பதாகவும் காலையில் பார்த்துக்கொள்ளலாம் என்றும் கூறித் தட்டிக் கழித்து விட்டான். போதா சிங்கிற்குக் கடும் சுரம். அவன் பிதற்றிக் கொண்டிருந்தான். அவனை வண்டியில் ஏற்றினுர்கள். சுபேதார் தன்னைவிட்டுச் செல்ல விரும்பவில்லை என்பதை அறிந்த லக்ஞ, 'போதாவின் மீது ஆணை. இந்த வண்டியில் நீங்கள் ஏறிக்கொள்ளுங்கள்' என்ருன் உறுதியுடன்.

'நீ?'

'அங்கே போய்ச் சேர்ந்தபின் எனக்கு வண்டியை அனுப்புங்கள். ஜெர்மானியர்களின் சடலங்களை எடுத்துச் செல்ல வண்டி வரும் அல்லவா? என் நிலைமை அப்படிக் கவலைக்கிடமாக ஒன்றுமில்லை. பார்க்கிறீர்களே, நான் நின்றுகொண்டுதானே இருக்கிறேன். வஜிரா என்னுடன் இருக்கிருனே' என்ருன் லக்ஞ.

'ஆனுல்...?'

'போதா வண்டியில் ஏறிவிட்டானு? நல்லது. சுபேதார்ஜீ, நீங்களும் ஏறிக்கொள்ளுங்கள். சுபேதாரிணி ஹோரானுக்குக் கடிதம் எழுதுங்கள். என் வணக்கத்தைத் தெரிவியுங்கள். நீங்கள் வீட்டுக்குப் போகும்போது சுபேதாரிணியிடம், "என்னிடம் அவள் கூறியதை நான் செய்து முடித்துவிட்டேன்" என்றுமட்டும் மறக்காமல் கூறிவிடுங்கள்.'

வண்டிகள் புறப்பட்டன, வண்டியில் ஏறுவதற்கு முன் சுபேதார் லக்ஞவின் கரத்தைப் பற்றிக்கொண்டார்— 'நீதான் என்னுயிரையும், போதாவின் உயிரையும் காப்பாற்றி இருக்கிருய், கடிதம் எழுதுவதாவது, சொல்வ

தாவது? நாம் எல்லோரும் ஒன்றாக ஊர் திரும்பலாம். நீயே உன் சுபேதாரிணியிடம் சொல்லிவிடு. ஆமாம், அவள் என்ன சொல்லியிருந்தாள்?' என்று வினவினார்.

'நீங்கள் முதலில் வண்டியில் ஏறிக்கொள்ளுங்கள். நேரமாகிவிட்டது, நான் சொன்னபடி எழுதிவிடுங்கள். ஆமாம், சொல்லியும் விடுங்கள்.'

வண்டிகள் புறப்பட்டுச் சென்றதுமே லக்னு கீழே படுத்துவிட்டான்.

'வஜீரா, தண்ணீர் கொடு. இந்தா, என் பெல்டைச் சற்று அவிழ்த்து விடு. நனைந்துவிட்டது.'

மரணத்துக்குச் சற்று முன் நினைவுகள் மிகத் தெளிவாகிவிடும். வாழ்வு முழுவதிலும் நடந்த சம்பவங்கள் ஒவ்வொன்றாய்க் கண்முன்னே வரும். யாவுமே தெளிவாகப் பளிச்செனப் புலனாகும். காலமெனும் இருள் திரை அவற்றின் மீதிருந்து அகன்றுவிடுகிறது போலும்.

லக்னுவிற்குப் பன்னிரண்டு பிராயமிருக்கும். தன் மாமா வீட்டிற்கு, அமிருதசரஸிற்கு வந்திருக்கிறான். தயிர்க்காரன் கடையிலும், காய்கறிக் கடையிலும் — எங்குமே — எட்டு வயதுடைய ஒரு சிறுமியை அவன் சந்திக்கிறான். 'உனக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறதா?' என்று அவன் கேட்டவுடன் அவள் 'தூ!' எனச் சொல்லி ஓடிவிடுகிறாள். ஒரு நாள் அவன் அக் கேள்வியைக் கேட்கும்போது — 'ஆமாம். நேற்றுதான் ஆயிற்று. என்னுடைய சிவப்பு மேலாடையை நீ பார்க்கவில்லையா?' என்று கூறுகிறாள். இதைக் கேட்டதுமே லக்னுவிற்கு துக்கம் தொண்டையை அடைத்தது. கோபமும் ஆத்திரமுமாய் வந்தது. ஏன் அப்படி வந்தது?

'வஜீரா, தண்ணீர் கொடு.'

இருபத்தைந்து வருடங்கள் கழிந்துவிட்டன. இப்போது லக்னு சிங் நம்பர் எழுபத்தேழு ரைபிள்ஸில் ஜமேதார். அந்த எட்டு வயதுச் சிறுமியின் நினைவு மங்கி

விட்டது. அப்படி ஒரு பெண்ணைச் சந்தித்திருந்தேனு, இல்லையா என்ற நினைவுகூட இல்லை. ஒரு முறை ஏழு நாட்கள் லீவு எடுத்துக் கொண்டு, தன் நிலத்தைப் பற்றிய வழக்கு சம்பந்தமாக அப்பீல் செய்ய ஊருக்கு வந்திருந்தான். அங்கே போனதும் ரெஜிமெண்ட் ஆபிஸரின் கடிதம் காத்திருந்தது. 'படைகள் யுத்த களத்திற்கு புறப்படவேண்டும். உடனே புறப்படவும்'—என்று உத்தரவிடப்பட்டிருந்தது. கூடவே சுபேதார் ஹசாரா சிங்கின் கடிதமும் வந்திருந்தது. 'நானும் போதாவும் கூட யுத்த களத்திற்குப் போகிறோம். நீ வரும்போது எங்கள் வீட்டுக்கு வந்துவிடு. நாங்களும் உடன் வருகிறோம்' என எழுதியிருந்தார். சுபேதாரின் கிராமம் போகும் வழியில்தான் இருந்தது. மேலும், அவருக்கு அவனிடத்தில் மிகுந்த அன்பு — பாசம். ஆகவே லகன் அவர் வீட்டிற்குச் செய்வதென முடிவெடுத்து அதை அடைந்தான்.

புறப்படும் தருணத்தில் படுதா மறைப்பிற்குள்ளேயிருந்து வெளிவந்த சுபேதார் அவனை நோக்கி, 'லக்னு, சுபேதாரிணிக்கு உன்னைத் தெரியுமாம். கூப்பிடுகிறாள். போய்ப் பார்த்துவிட்டு வா' என்றார். லக்னு உள்ளே நுழைந்தான். 'சுபேதாரிணிக்கு என்னைத் தெரியுமா? எப்படி? ரெஜிமெண்டு குவார்ட்டர்ஸ்களில் சுபேதாரின் குடும்பத்தினர் இருந்ததே இல்லையே'—என்ற சிந்தனை வயப்பட்டு கதவருகே வந்து நின்று, 'வணக்கம்' என்றான். ஆசி கூறுவது காதில் விழுந்தது. லக்னு மௌனமாக நின்றான்.

'என்னைத் தெரிந்ததா?'

'இல்லையே!'

'உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? சீ... தூ... நேற்றுதான் ஆயிற்று. என் சிவப்பு பட்டாடையை பார்க்கவில்லையா நீ அமிருதசரஸில்?'

உணர்ச்சிக் கொந்தளிப்பில் மூர்ச்சை தெளிந்தது. லக்னு புரண்டு படுத்தான். விலாவிருந்து உதிரம் பெருகியது.

'வஜீரா, தண்ணீா கொடு!'

சுபேதாரிணி தொடர்ந்து பேசினாள் — 'நீங்கள் வந்ததுமே அடையாளம் தெரிந்துகொண்டு விட்டேன். என்ன சொல்லட்டும்? சர்க்கார், பகதூர் என்ற பட்டம் கொடுத்திருக்கிறது. லாயல்பூரில் நிலம் கொடுத்திருக்கிறது. இன்று ராஜ விசுவாசத்தைக் காட்டவேண்டிய தருணம் வந்துவிட்டதே. என் அதிருஷ்டம்! சர்ககார் சேலை கட்டிய பெண்களின் படை ஒன்று ஏன் வைக்கவில்லையோ தெரியவில்லை. அது இருத்தால் நானும் சுபேதாருடன் வருவேன் அல்லவா? இருப்பது ஒரே மகன். அவனும் ராணுவத்தில் சேர்ந்து ஒரு வருடமாகிவிட்டது. அவனுக்குப் பிறகு நான்கு பிறந்தன. ஒன்று கூட தங்கவில்லை.' சுபேதாரிணி கண்ணீர் பெருக்கலானாள். 'இப்பொழுதோ இவர்கள் இருவருமே புறப்பட்டுப் போகிறார்கள். என் அதிருஷ்டம் எப்படி இருக்குமோ? உங்களுக்கு நினைவிருக்கிறதா? ஒரு நாள் தயிர்க் கடை அருகில், தாங்காவின் குதிரை மிரண்டுவிட்டது. நீங்கள் தான் அன்று என் உயிரைக் காப்பற்றினீர்கள். குதிரையின் காலடியில் நீங்கள் இருந்துகொண்டு, என்னைத் தூக்கிக் கடைப் பலகையின் மீது நிறுத்திவிட்டீர்கள். அன்று போலவே இவர்கள் இருவரையும் காப்பாற்றி விடுங்கள். இது தான் நான் கேட்கும் பிச்சை. உங்களின் முன் கைகுவித்து இதைத் தான் வேண்டுகிறேன்.'

அழுதுகொண்டே சுபேதாரிணி உள்ளே போய்விட்டாள். லக்னுவும் கண்களைத் துடைத்துக்கொண்டு வெளியே வந்தான்.

'வஜிரா சிங், தண்ணீர் கொடுக்கிறாயா?'

லக்னுவின் தலையைத் தன் மடிமீது இருத்திக் கொண்டு வஜீரா அமர்ந்திருந்தான். அவன் கேட்கும்பொழுதெல்லாம் தண்ணீரை வாயில் விட்டுக்கொண்டிருந்தான். லக்னு அரை மணி நேரம் ஒன்றுமே பேசாமல் மௌனமாகக் கிடந்தான். பின்னர்...

'யாரது கீர்த்தி சிங்கா!' என மெல்ல வினவினான்.

வஜீரா ஏதோ எண்ணியவனாய் — 'ஆமாம்' என்றான்.

'சரி — சரி, தண்ணீர் கொடுக்கிறாயா?'

'இந்த ஆவணியில் இம் மாமரம் நன்றாய்க் காய்க்கும். சிற்றப்பனும் மகனுமாய் இங்கேயே உட்கார்ந்து மாம்பழம் சாப்பிடுங்கள். மகனுக்கு எத்தனை வயதோ, அத்தனை வயதுதான் இந்த மரத்திற்கும். அவன் பிறந்த மாதத்தில்தான் நான் இதை நட்டேன்.'

வஜீராவின் கண்களிலிருந்து கண்ணீர் பொல பொலவென்று உதிர்ந்தது...

சில நாட்களுக்குப் பின் பத்திரிகையில் வெளியான இக் குறிப்பை மக்கள் படித்தனர்.

"பிரான்ஸ், பெல்ஜியம் — 68 அறிக்கை. போர்க்களத்தில் மரணமடைந்தவர்களைப் பற்றிய குறிப்பு: நெம்பர் 77 சீக்கிய ரைபிள்ஸ் ஜமேதார் லக்னு சிங் வீர மரணமடைந்தார்."

## சவக்கோடி

### 1

குடிசைக்கு வெளியே தந்தையும் மகனும் அணைந்து போன கணப்புக்கு எதிரில் மௌனமாய் அமர்ந்திருந்தனர். குடிசைக்குள்ளே மகனின் இளைய மனைவி புதியா பிரசவ வேதனை அநுபவித்துக் கொண்டிருந்தாள். இடையிடையே வேதனை தாங்காமல் அவள் கூச்சலிடும் போதெல்லாம் இருவரும் திகில் அடைந்தனர். அவர்களின் இதயத் துடிப்பே நின்றுவிடும் போலிருந்தது. இரவு வேளை. கூதிர் காலம். இயற்கை மோன அமைதியில் அமிழ்ந்து கிடந்தது. கிராமமே இருளில் கிடந்தது.

'இவள் இன்று பிழைக்கமாட்டாள் போலிருக்கிறது. நாமும் இன்று நாள் முழுவதும் ஓடியாடிப் பார்த்தாயிற்று. போ, போய்ப் பார் அவளை!' என்றான் கீசு.

'சாகிறதாக இருந்தால் சீக்கிரம் சாவதுதானே! நான் போய்ப் பார்த்து என்ன செய்ய?' என்று எரிச்சலுடன் பதில் கூறினான் மாதவன்.

'இரக்கமற்றவனடா நீ! முழுவதும் இன்பம் அனுபவித்தாயே, அவளிடமா இந்த நன்றி கெட்டத் தனம்?'

'அவள் துடிப்பதையும் கையையும் காலையும் உதைத்துக் கொள்வதையும் என்னால் பார்க்க முடியவில்லை' என்றான் மாதவன்.

அந்தக் கிராமத்திலேயே மோசமானவர்கள் என்று பெயரெடுத்த சக்கிலியக் குடும்பம் அது. கீசு ஒரு நாள் வேலை செய்தால், மூன்று நாள் எழுந்திருக்கமாட்டான். மாதவன் அதைவிடச் சோம்பேறி. அரைமணி நேரம் வேலை செய்தால் ஒரு மணி நேரம் புகை பிடிப்பான். இதனால்

இருவருக்கும் எங்கும் வேலை கிடைக்காது. வீட்டில் ஒரு பிடி தானியம் இருந்துவிட்டால் இருவரும் வேலைக்குப் போகமாட்டார்கள். இரண்டொரு நாட்கள் பட்டினியில் கழியும். பிறகு கீசோ மரத்திலேறி ஒடித்துப் போடு வான். மாதவன் அதைக் கடைத் தெருவில் விற்று வருவான். அந்தக் காசு கையில் இருக்கும் வரை இரு வரும் ஊரைச் சுற்றி வருவார்கள். மீண்டும் பசி பட்டினி வந்ததும் விறகு ஒடிப்பார்கள். அல்லது கூலி வேலை தேடுவார்கள்.

கிராமத்திலே வேலைக்குக் குறைவில்லை. குடியான வர்கள் நிறைந்த கிராமம். உழைப்பவர்களுக்கு எத்த னையோ வேலைகள் இருந்தன. வேறு வழியில்லாமல் போகும்போதும், ஒருவன் பார்க்கும் வேலையை இருவர் செய்யட்டும் என்று நினைக்கும்போதும்தான் இவர்களை வேலைக்குக் கூப்பிடுவார்கள். தந்தை மகன் இருவருமே துறவு பூண்டிருந்தால், கிடைத்தது போதும் என்ற திருப் திக்கும் சகிப்புத் தன்மைக்கும் தங்களைப் பழக்கிக் கொள் ளவோ, கட்டுப்படுத்திக் கொள்ளவோ சிரமப்படவேண் டிய அவசியம் நேர்த்திராது. இந்த குணங்கள் இவர் களிடம் இயல்பாகவே அமைந்திருந்தன.

விசித்திரமான வாழ்க்கை அது. உடைமைகள் என்று சொல்லிக்கொள்ள மண் பாண்டங்களைத் தவிர வேறு எதுவுமில்லை. கிழிந்த கந்தைகள் உடலை மறைத்தன. ஒருபுறம் கடன் சுமை ஏறியிருந்தது. ஊராரின் ஏச்சுக் கும் பேச்சுக்கும் அடி உதைகளுக்கும் இவர்கள் ஆளாவ துண்டு. ஆனால் அதைப் பற்றிய கவலையோ துயரமோ அவர்களுக்கு இருக்கவில்லை. பரம தரித்திரமான இவர் களின் நிலையைக் கண்டு, திரும்பிவராது என்று தெரிந் தும் சிலர் அவ்வப்போது கடன் கொடுத்தனர். பட் டாணி, உருளைக்கிழங்கு பயிராகும் பருவத்தில் பிற நிலங் களிலிருந்து பறித்து வந்துவிடுவார்கள். அதைத் தண

யில் வாட்டியோ, வேகவைத்தோ தின்று வயிறை நிரப்பி விடுவார்கள். அல்லது ஐந்தாறு கரும்புகளைப் பிடுங்கிக் கொண்டு வருவார்கள். இரவில் அதைக் கடித்துத் தின்று பசியாறுவதும் உண்டு.

உழைக்காமலேயே பிழைத்துக் கீசு அறுபது வருஷ காலத்தை ஓட்டிவிட்டான். மாதவனும் நல்ல பிள்ளை யாகத் தந்தையின் அடிச்சுவட்டைப் பின்பற்றிக் கொண் டிருந்தான். இது மட்டும் அல்ல. தந்தையின் பெருமை யையும் இன்னும் பிரகாசிக்கச் செய்தான்.

எவர் நிலத்திலிருந்தோ தோண்டி எடுத்து வந்த உருளைக்கிழங்கை தான் இருவரும் கணப்பின் தீயிலே சுட்டுக் கொண்டிருந்தனர். கீசோவின் மனைவி காலமாகி எத்தனையோ வருடங்கள் ஆகிவிட்டன. சென்ற ஆண்டு தான் மாதவனுக்குத் திருமணமாயிற்று. மருமகள் வந்த பின்தான் குடும்பத்தில் ஓரளவு ஒழுங்கு ஏற்பட்டது. புதியா உழைப்பாளி, மாவு அரைத்தோ, புல் அறுத்தோ அவள் உணவுக்கு வழி தேடினாள். வெட்கங்கெட்ட இவ் விரண்டு சோம்பேறிகளின் வயிற்றை அவள் நிரப்பி வந்தாள். மருமகள் வந்தபின் தந்தையும் மகனும் இன் னும் சுகவாசிகளாக, சோம்பேறிகளாக மாறிவிட்டனர். இது மட்டுமல்ல, கொஞ்சம் திமிராகவும் நடந்துகொள்ள ஆரம்பித்தனர். யாரேனும் வேலைக்குக் கூப்பிட்டால் கூசாமல் இரு மடங்குக் கூலி கேட்டனர். இன்று அந்தப் பெண்தான் குடிசைக்குள்ளே பிரசவ வேதனையில் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறாள். வெளியே தந்தையும் மகனும் அவள் ஒருவழியாக இறந்துவிட்டால் நிம்மதியாகத் தூங்கலாம் என்று நினைப்பவர்கள் போல உட்கார்ந்திருந்தனர்.

கீசு ஒரு கிழங்கை எடுத்து உரித்தவாறே, 'ஏய், போய்த்தான் பாரேன். எப்படியிருக்கிறாள் பார், ஏதா வது பேய் பிசாசுதான் பிடித்துக் கொண்டிருக்கும். வேறு

என்ன? மந்திரவாதியைக் கூப்பிட்டால் கூட ஒரு ரூபாய் கேட்பானே?' என்ருன்.

தான் எழுந்து உள்ளே போனல் கிழங்கின் பெரும் பகுதி கீசுவின் வயிற்றுக்குப் போய்விடுமோ, என்று மாத வனுக்குப் பயம்.

'எனக்கு அங்கே போகவே பயமாய் இருக்கிறது' என்ருன்.

'என்ன பயம்? நான்தான் இங்கே இருக்கிறேனே!'

'நீதான் போய்ப் பாரேன்.'

'டேய், என் பெண்டாட்டி செத்த போது மூன்று நாள் அவள் பக்கத்திலிருந்து நான் அசையவில்லையடா. நான் போனல் மருமகளுக்கு வெட்கமாக இருக்காதா? இன்று வரை அவள் முகத்தைக் கூட நான் பார்த்ததில்லை. இன்று போயா பார்க்கவேண்டும்? நினைவு இல்லாமல் கிடக்கிறவள் என்னைப் பார்த்தால் கையைக் காலை எப்படியடா அசைப்பாள்?'

'குழந்தை கிழந்தை பிறந்துவிட்டால் என்ன செய்வது என்றுதான் யோசிக்கிறேன். வீட்டில் இஞ்சி, வெல்லம், எண்ணெய் ஒன்றுமில்லையே?'

'எல்லாம் வந்துவிடும் பார். கடவுள் கொடுப்பார். இன்றுவரை ஒரு காசு கூடக் கொடுக்காதவர்கள் நாளை நம்மைக் கூப்பிட்டுக் கொடுப்பார்கள். எனக்கு ஒன்பது குழந்தைகள் பிறந்தன. வீட்டில் எப்போது என்ன இருந்தது? ஆண்டவன் எப்படியோ கரையேற்றிவிட்டார்' என்ருன் கீசோ.

இரவும் பகலும் உழைத்துப் பாடுபடுபவர்களின் வாழ்க்கைத் தரம், இத்தகைய சோம்பேறிகளின் நிலையைவிட உயர்ந்ததாக இல்லாமலிருக்கும்போது, பாடுபட்டு உழைக்கும் குடியானவர்களின் பலவீனத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்தவர்கள் வசதியாக, செழிப்பாக வாழும் நிலை ஏற்பட்டுள்ள சமூகத்தில், இத்தகைய

மனப்பான்மை ஏற்பட்டு விடுவதில் வியப்பு என்ன? உண்மையாகப் பார்க்கப் போனால், கீசுவே குடியானவர்களைவிட மேம்பட்டவனாக, சிந்திக்கத் தெரிந்தவனாக இருந்தான். சிந்தனா சக்தியே வரண்டு கிடந்த குடியானவர்களின் கும்பலில் தானும் ஒருவனாகச் சேராமல், வெறுக்கத் தக்கவர்களான சோம்பேறிகள் குழுவில் போய் உட்கார்ந்தான். ஆனால் இத்தகைய அரட்டைக் குழுவினரின் சட்ட திட்டங்களைக் கடைபிடித்தொழுகும் நிலையில் அவன் இருக்கவில்லை. இந்தக் கும்பலைச் சேர்ந்த ஒரு சிலர் கிராமத் தலைவர்களாகவோ நாட்டாண்மைக்காரர்களாகவோ இருந்தனர். ஆனால் அவன் மட்டும் கிராமத்தார் யாவரும் இழிந்துரைக்கும் நிலையில் இருந்தான். இந்த நிலையிலும் கீசுவுக்கு ஒரு ஆறுதல், குடியானவர்களைப் போல உயிரைக் கொடுத்து அவன் பாடுபடவில்லையே! அவனது அறியாமையையும், எளிய சுபாவத்தையும் பிறர் பயன்படுத்திக் கொண்டு லாபம் அடையவில்லையே! அது போதும் என்று நினைத்தான் அவன்.

உருளைக் கிழங்குகளை எடுத்து இருவரும் சூடாகவே வாயில் போட்டுக்கொள்ளத் தொடங்கினர். நேற்றிலிருந்து அவர்கள் பட்டினி. ஒன்றும் சாப்பிடவில்லை. அதனால் உருளைக்கிழங்குகள் ஆறும் வரைக் காத்திருக்க அவர்களுக்குப் பொறுமை இல்லை. பல தடவை இருவரும் நாக்கைச் சுட்டுக்கொண்டனர். உரித்தபோது கிழங்கின் மேல்பகுதி சூடாகத் தோன்றவில்லை. ஆனால் வாயில் போட்டுக் கொண்டபின் நாக்கு, மேல்வாய், தொண்டை எல்லாம் தவித்தது. கிழங்கின் சூடான உட்பகுதி சுட்டது. வாயில் வைத்துக்கொண்டிருப்பதைவிட விழுங்கிவிடலாம் என்று தோன்றவே இருவரும் அவசர அவசரமாக விழுங்கலானார்கள். போகட்டும், வயிற்றுக்குள் போனால் அவற்றைக் குளிரவைக்க எத்தனையோ சாதனங்கள் இருக்கும். தந்தையும் மகனும்

கிழங்குகளை விழுங்கிய வேகத்தில் கண்களில் கண்ணீர் கூட வந்துவிட்டது.

கீசுவிற்கு திடீரென இருபது வருடங்களுக்குமுன் டாகுரின் விவாகத்தின்போது சம்பந்தி விருந்து சாப்பிட்ட நினைவு வந்தது. அன்று அவனுக்கு ஏற்பட்ட திருப்தி, அவன் வாழ்நாளிலேயே மறக்கமுடியாததொரு சம்பவமாகும், அந்த நினைவு இன்றும் பசுமையாக இருந்தது. 'அப்பப்பா! அந்த விருந்தை மறக்கவே முடியாது' என்று ஆரம்பித்தான் கீசே. 'அதற்குப் பின் அத்தகைய விருந்து வயிறு நிறையக் கிடைக்கவே இல்லை. பெண்வீட்டார் எல்லாருக்கும் வயிறு நிறைய பூரி பொரித்துப் போட்டார்கள். ஆமாம், எல்லாருக்கும் தான். ஏழை பணக்காரர்கள் எல்லாருமே பூரி தின்றார்கள். அதுவும் அசல் நெய்யில் பொரித்த பூரி, சட்னி, பச்சடி, மூன்றுவிதக் காய்கறி, தயிர், கூட்டு, இனிப்பு பக்ஷணம் எல்லாம் கிடைத்தன. அந்த விருந்தின் சுவையை எப்படித் தான் வருணிப்பது? கட்டுப்பாடு, கண்காணிப்பு எதுவும் கிடையாது. எத்தனை வேண்டுமானாலும் சாப்பிடலாம். எது வேண்டுமானாலும் கேட்கலாம். எல்லாரும் வயிறு நிரம்பச் சாப்பிட்டோம், ஒருத்தனாலும் தண்ணீர் கூடக் குடிக்க முடியவில்லை. அப்படிச் சாப்பிட்டுவிட்டோம். பரிமாறினார்களே அவர்கள் எப்படி என்கிறாய்? சுடச் சுட 'கட்சோடி'யைப் போட்டுக் கொண்டே இருந்தார்கள். என்ன வாசனை? வேண்டாம் என்றால் கேட்டால்தானே? கையை நீட்டி மறுத்தாலும் விடவில்லை. போட்டுவிட்டார்கள். சாப்பிட்டு கை கழுவியதும் வெற்றிலை பாக்குத் தந்தார்கள். வெற்றிலை போடுகிற நிலையிலா நான் இருந்தேன்! என்னால் நிற்கக்கூட முடியவில்லை எனறால் பார்த்துக்கொள். அப்படியே படுத்துவிட்டேன். ஹூம், அந்த டாகுருக்குந் தான் என்ன நல்ல மனசு!'

விருந்தின் சுவையான பண்டங்களை மனதில் சுவைத்த வாறே, 'நமக்கெல்லாம் இப்போது யார் அப்படி விருந்து போடுகிறார்கள்!' என்றான் மாதவன்.

'யார் போடுகிறார்கள்? அந்தக் காலமே வேறு. இப்போது தான் எல்லாருக்கும் சிக்கன புத்தி தோன்றிவிட்டதே, கல்யாணத்தில் செலவு வேண்டாம். கருமாதியில் செலவு செய்யாதே என்கிறார்கள். ஏழைகளைச் சுரண்டிச் சுரண் டிச் சேர்க்கிறார்களே, அதையெல்லாம் எங்கே கொண்டு போய்ச் சேர்த்து வைக்கிறார்கள் என்று கேள். சுரண்டு வதிலென்னமோ குறைச்சலில்லை. செலவு செய்வதில் தான் சிக்கனம் வந்துவிடுகிறது.'

'நீ ஒரு இருபது பூரி தின்றிருப்பாயா?'

'அதைவிட அதிகமாக இருக்கும்.'

'நானாக இருந்தால் ஐம்பது தின்றிருப்பேன்!'

'நானும் ஐம்பதுக்குக் குறையாமல் தின்றிருப்பேன். நல்ல வயசு எனக்கு. பயில்வான் மாதிரி இருப்பேன். நீ என்னிலே பாதிகூட இல்லையே!' என்றான் கீசு.

கிழங்குகள் முழுவதையும் தின்று தீர்த்தபின் இருவரும் தண்ணீர் குடித்தனர். பின்னர் தங்கள் தங்கள் வேட் டியை பிரித்துப் போர்த்திக்கொண்டு, குளிருக்கு இதமாகக் கால்களை மடித்து வயிற்றோடு சேர்த்து மடக்கிய நிலையில், இருவரும் கணப்பின் அருகே படுத்துக்கொண்டனர். இரை உண்ட மலைப்பாம்புகள் சுருண்டு கிடப்பது போலிருந்தது அக் காட்சி.

உள்ளே புதியா இன்னும் முனகிக் கொண்டுதானிருந் தாள்.

2

பொழுதுவிடிந்ததும் மாதவன் குடிசைக்குள் சென்று பார்த்தான். புதியா விரைத்துக் கிடந்தாள். முகத்தில்

ஈக்கள் மொய்த்தன, நிலை குத்திப்போன கண்கள் மேலே செருகிக் கொண்டிருந்தன, உடல் முழுவதும் தூசி படிந்து கிடந்தது. சிசு வயிற்றிலேயே இறந்துவிட்டது போலும்.

மாதவன் கீசுவிடம் வந்தான். இருவரும் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு ஓவென்று அலறினர். இவர்களது கூச்சலைக் கேட்ட அக்கம்பக்கத்தவர்கள் ஓடி வந்தனர். வழக்கமான சம்பிரதாயப்படி இருவருக்கும் ஆறுதல் கூறவாரம்பித்தனர்.

அழுது புலம்புவதற்கு நேரம் ஏது? பிணத்துக்குப் போட, கோடியும் எரிக்க விறகும் தேடவேண்டுமே! வீட்டிலே காசு ஏது? பருந்தின் கூட்டிலே மாமிசம் இருக்குமா என்ன?

அழுது புலம்பிக்கொண்டே இருவரும் கிராமத்து ஜமீன் தாரிடம் சென்றனர். ஜமீன்தாருக்கு இவர்களைக் கண் டாலே பிடிக்காது. திருடியதற்காகவும் சொன்னபடி வேலை செய்யாததற்காகவும் தம் கையால் பலமுறை அடித்திருக்கிறார். இவர்களைக் கண்டதுமே— 'ஏய், கீசுவா? ஏண்டா அழுகிறாய்? எங்கே கண்ணிலேயே காணோம். இந்த ஊரிலே இருக்கவேண்டாம் என நினைக்கிறாயா?' என்றார்.

கீசோ மண்ணில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்தான். கண்களில் நீர் ததும்ப, 'எஜமான், மாதவன் பெண் டாட்டி நேற்றிரவு செத்துவிட்டாள், எஜமான்' என்றான். 'பெருத்த கஷ்டம் வந்துவிட்டது எஜமான். நேற்று ராவெல்லாம் அவள் கஷ்டப்பட்டாள்—துடிதுடித்தாள். இரவு முழுவதும் அவள் தலைமாட்டிலேயே உட்கார்ந்து கொண்டிருந்தோம். முடிந்தவரை மருந்து மாயம் எல் லாம் செய்தோம். ஆனால், எங்களை ஏமாற்றிவிட்டுப் போய்விட்டாளே! இனி எங்களுக்கு ஒரு ரொட்டித் துண்டு கொடுக்க யார் இருக்கிறார்கள்? எங்கள் குடி மூழ்கி

விட்டது. நாங்கள் நாசமாகிவிட்டோம். உங்கள் அடிமைகள் எஜமான், தங்களைத் தவிர வேறு யார் அவளைக் கரை சேர்க்க முடியும்? கையில் இருந்ததையெல்லாம் வைத்தியத்திற்குச் செலவழித்துவிட்டேன். தங்கள் தயவு இருந்தால்தான் அவள் காரியங்கள் நடக்கும். உங்களை விட்டு வேறு யாரிடம் போய் நிற்கட்டும்?'

ஜமீன்தார் இரக்கம் மிக்கவர். ஆனாலும் கீசுவுக்கு இரக்கம் காட்டுவது நாய் வாலை நிமிர்த்துவது போன்றதுதான் என்பதை அவர் நன்கு அறிவார்.

'போடா வெளியே. நான் கூப்பிடும்போது வருவதில்லை. உனக்குத் தேவையாக இருந்தால் வந்து துதி பாடுகிறாயா? அயோக்கியப் பயலே' என்று கூறிவிடத்தான் நினைத்தார். ஆனால் கோபிப்பதற்கோ கண்டிப்பதற்கோ இது சமயம் அல்லவே. மனதுக்குள் பொருமியவாறே இரண்டு ரூபாய்களைத் தூக்கி எறிந்தார். ஆறுதலாக ஒரு வார்த்தை கூட அவர் சொல்லவில்லை. அவர்களை நிமிர்ந்துகூட பார்க்காமல், பெரிய பளுவைத் தலையிலிருந்து இறக்கிவிட்டவர் போல உள்ளே போய்விட்டார்.

ஜமீன்தார் இரண்டு ரூபாய். வியாபாரிகளும், கடைக்காரர்களும் மறுப்பது எப்படி? கீசுவிற்கு ஜமீன்தாரின் பெயரைப் பயன்படுத்திக்கொள்ளத் தெரியாதா என்ன? ஒருவன் இரண்டணா கொடுத்தான்; இன்னொருவன் நாலணா கொடுத்தான். ஒரு மணி நேரத்திற்குள் கீசுவிடம் ஐந்து ரூபாய் சேர்ந்துவிட்டது. யாரோ தானியங்களைக் கொடுத்தார்கள். எங்கிருந்தோ விறகும் வந்துவிட்டது.

நடுப்பகல் ஆனதும் கீசுவும் மாதவனும் பிணத்துக்குப் போட கோடித் துணி வாங்கக் கடைத்தெருவிற்குப் புறப்பட்டனர். வந்திருந்தவர்கள் மூங்கில்களை வெட்டிச் சீவ ஆரம்பித்தார்கள்.

இளகிய மனம் படைத்த கிராமப்பெண்கள் பிணத்தைப் பார்க்க வந்துகொண்டிருந்தனர். அந்த அபாக்கியவதிக்காக இரண்டு சொட்டுக் கண்ணீரும் வடித்துச் சென்றனர்.

3

இருவரும் கடைத்தெருவை அடைந்தனர்.

'மாதவா, அவளை எரிக்க விறகு வந்து விட்டது இல்லையா?' என்று பேச்சைத் துவக்கினான் கீசோ.

'வேண்டியது வந்துவிட்டது. மேலே போடச் சவக்கோடிதான் வாங்கவேண்டும்.'

'சரி நட. மலிவாக ஏதாவது பார்க்கலாம்.'

'ஆமாம், பிணத்தை எடுப்பதற்குள் இருட்டிவிடும். இருட்டில் கோடியை யார் பார்க்கப்போகிறார்கள்?'

'ரொம்ப மோசமான வழக்கம்' என்றான் கீசு. 'உயிருடன் இருக்கும்போது மானத்தை மறைக்க ஒரு கந்தைக்கு வழியில்லை. செத்தபின் கோடித்துணி போடவேண்டுமாம்.'

'பிணத்துடன் கோடியும் எரிந்துதானே போகப் போகிறது?'

'வேறு என்ன? அப்படியேவா இருக்கும்? இந்த ஐந்து ரூபாய் முன்பே கிடைத்திருந்தால், மருந்தாவது வாங்கித் தந்திருக்கலாம்.'

தந்தையும் மகனும் ஒருவரை ஒருவர் ஆழம் பார்த்துக் கொண்டிருந்தனர். கடைத் தெருவெல்லாம் சுற்றினர். ஒவ்வொரு கடையாக ஏறி, இறங்கினர். பருத்தி, பட்டு இன்னும் விதவிதமான துணி ரகங்களைப் பார்த்தனர். ஆனால் எதுவுமே அவர்களுக்குப் பிடிக்கவில்லை, இதற்குள் மாலையாகிவிட்டது.

தெய்வமே உந்தித் தள்ளுவதுபோல, ஒரு சாராயக் கடை வாசலுக்கு வந்ததும் இருவரும் நின்றுவிட்டனர்.

முன்னரே தீர்மானம் செய்தவர்கள் போல இருவரும், ஒன்ருக உள்ளே நுழைந்தனர். உள்ளே சென்றபின் கணநேரம் ஏனே தயங்கினர்.

கீசோதான் முதலில் கடைக்காரனை நெருங்கினுன். 'சாஹீஜி, எங்களுக்கு ஒரு புட்டி கொடுங்கள்' என்ருன். இதன் பின் மீன் வறுவல் வந்தது. அதன் பின் ஏதோ வந்தது. இருவரும் வராந்தாவில் அமர்ந்து நிம்மதியாகக் குடிக்க ஆரம்பித்தனர். அவசர அவசரமாக பல குவளைகளைக் காலி செய்தனர், இருவருக்கும் நல்ல போதை ஏறிற்று.

'பிணத்தின் மேலே கோடி போடுவதால் என்ன பயன்? அதுவும் எரிந்துதானே போகிறது? அவளுடன் போகப் போவதில்லையே?' என்ருன் கீசு.

தான் பாப எண்ணம் அற்றவன், என்பதற்குத் தேவதைகளின் சாட்சி கோருவது போல் மாதவன் வானத்தை அண்ணுந்து நோக்கியவாறே பேசினுன். 'இதுதான் உலக வழக்கு. இல்லாவிட்டால் பிராமணர்களுக்கு ஆயிரம் ஆயிரமாக ஏதற்காகக் கொடுக்கிருர்கள்? சொர்க்கத்தில் உள்ளவர்களுக்கு அது கிடைக்கிறதோ, இல்லையோ யார் கண்டது?'

'பணக்காரர்களிடம் பணம் இருக்கிறது. வாரி இறைக்கிருர்கள். நம்மிடம் என்ன இருக்கிறது?'

'கேட்பவர்களுக்கு என்ன பதில் சொல்வாய்? கோடித் துணி எங்கே என்று கேட்கமாட்டார்களா?'

கீசு சிரித்தான்: 'இடுப்பிலிருந்து நழுவி எங்கோ விழுந்துவிட்டது என்றுதான் கூறவேண்டும், தேடித் தேடிப் பார்த்தேன். கிடைக்கவில்லை என்பேன், ஒருவரும் இதை நம்பமாட்டார்கள், ஆனல் மீண்டும் அவர்களே பணம் தருவார்கள்.'

இதைக் கேட்ட மாதவனும் சிரித்தான். எதிர்பாராமல் கிடைத்த அதிருஷ்டத்தினல் மகிழ்ந்தவனய், 'பாவம்,

அவள் மிக நல்லவள். இறந்து போனாலும் நமக்கு நல்ல விருந்துதான் படைத்திருக்கிறாள்' என்றான்.

புட்டியில் பாதிக்கு மேல் காலியாகிவிட்டது. கீசோ இரண்டு சேர் பூரி வாங்கினான். அத்துடன் சட்னி, ஊறுகாய், ஈரல் கறி எல்லாம் வந்தது. சாராயக் கடைக்கு எதிரிலேயே மாமிசக் கடையும் இருந்தது. மாதவன் ஓடிப்போய் இரண்டு தொன்னைகளில் எல்லாம் வாங்கி வந்தான். இதற்கு ஒன்றரை ரூபாய் செலவாகிவிட்டது. இப்போது அவர்களிடம் சில தம்பிடிகள் தான் மிச்சம்.

சிங்கம், காட்டில் தான் அடித்த இரையைத் தின்பது போல் இருவரும் சாவகாசமாய்ப் பூரிகளைத் தின்று கொண்டிருந்தனர், கேட்பவர்களுக்கு என்ன பதில் சொல்வது என்ற அச்சமோ, கெட்ட பெயர் வந்துவிடுமே என்ற பயமோ அவர்களுக்கு இருக்கவில்லை. இந்த எண்ணங்களையெல்லாம் விட்டொழித்துப் பல ஆண்டுகள் ஆகி விட்டதே; இனி என்ன?

'நம் ஆத்மா திருப்தியடைந்தது, இதில் அவளுக்குப் புண்ணியம் கிட்டாதா?' கீசோ தத்துவ விசாரணை செய்ய ஆரம்பித்தான்.

மாதவன் பக்தியுடன் தலைகுனிந்து வணங்கினான். 'கட்டாயம், கட்டாயம் கிடைக்கும். ஆண்டவனே! நீ எங்கும் நிறைந்தவன். அவளை வைகுண்டத்திற்கு அழைத்துக்கொள். நாங்கள் இருவரும் அவளை மனமார வாழ்த்துகிறோம். இன்று எங்கள் வயிறு நிரம்பியது போல் எங்கள் ஆயுளிலே என்றும் நிரம்பியதில்லை' என்றான் மாதவன்.

இரண்டொரு விநாடிகளுக்குப் பின்னர் அவன் மனத்தில் மெல்ல ஒரு சந்தேகம் தலை தூக்கியது. 'அப்பா, நாமும் ஒரு நாள் அங்கேதானே போவோம்?' என்று வினவினான்.

மகனின் அறியாத்தனமான இந்தக் கேள்விக்குக் கீசு

பதில் ஏதும் கூறவில்லை, பரலோகத்தைப் பற்றி நினைத்துத் தற்போது கிட்டியிருக்கும் மகிழ்ச்சியைக் கெடுத்துக் கொள்ள அவன் விரும்பவில்லை.

'அவள் நம்மிடம் தனக்கு ஏன் கோடி போடவில்லை என்று கேட்டால், என்ன பதில் கூறுவீர்கள்?' என்று மீண்டும் வினவினுன் மாதவன்.

'உன் தலையைச் சொல்வேன், போடா!' என்று எரிந்து விழுந்தான் கீசோ.

'அவள் கட்டாயம் நம்மைக் கேட்பாள்.'

'அவளுக்குக் கோடி கிடைக்காதென்று உனக்கு எப்படியடா தெரியும்? என்னை என்ன முட்டாள் என்ரு நினைத்துக்கொண்டிருக்கிருய்? இந்த அறுபது வயதையும் உலகத்தில் வீணுகவா கழித்திருக்கிறேன்? நான் சொல்லுகிறேன். அவளுக்குக் கோடி கிடைக்கும். கட்டாயம் கிடைக்கும். இதைவிட நல்ல துணியாகக் கிடைக்கும்.'

மாதவனுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை, 'யார் கொடுப்பார்கள்? பணத்தைத் தான் நீ தீர்த்துவிட்டாய். அவள் என்னை அல்லவா கேட்பாள். அவள் வகிட்டில் சிந்தூரம் இட்டது நான் தானே?'

கீசோவுக்குக் கோபம் வந்துவிட்டது. 'நான் சொல்லுகிறேன் கேள். அவளுக்குக் கோடி கட்டாயம் கிடைக்கும், நீ ஏன் நம்பமாட்டேன் என்கிருய்?'

'யார் கொடுப்பார்கள்? அதை ஏன் சொல்லவில்லை?'

'இப்பொழுது எல்லாம் யார் கொடுத்தார்களோ அவர்களே அதையும் தருவார்கள். ஆனுல் ஒன்று, இனிமேல் பணமாக நம் கைக்கு வராது.'

இரவின் இருள் அதிகரிக்க அதிகரிக்க தாரகைகள் பிரகாசமாக ஒளிர்ந்தன, சாராயக்கடையின் கோலாகலமும் அதிகரித்தது. ஒருவன் பாடினுன். ஒருவன் தன் வீரதீரப் பிரதாபங்களைப் பறைசாற்றினுன். இன்னொருவன் தன் தோழனை அணைத்துக்கொண்டான். மற்ருெரு

வன் தன் நண்பனுக்கு மதுவை ஊட்ட முயன்று கொண்டிருந்தான்.

அந்தச் சூழ்நிலையே போதை நிரம்பியதாய், கள்வெறி ஊட்டுவதாயிருந்தது. அங்கே வந்து ஒரு வாய் பருகியதுமே எத்தனையோ பேர் போதையில் கிறுகிறுத்தனர். சாராயத்தைவிட அங்கு வீசிய காற்றே, அந்தச் சூழ்நிலையே அவர்களுக்கு வெறியூட்டியது எனலாம். வாழ்வின் துன்பங்கள் அவர்களை இங்கே இழுத்து வந்திருந்தன. சற்று நேரத்திற்கு அவர்கள் தங்களையே மறந்துவிடுகின்றனர். தாங்கள் உயிருடன் இருக்கிறோமோ அல்லது இறந்து விட்டோமோ என்று கூட உணர முடியாத ஒரு நிலை அல்லவா இது?

தந்தையும் மகனும் மிக்க மகிழ்ச்சியுடன் ருசித்து அநுபவித்து மெல்ல மெல்லக் குடித்துக் கொண்டிருந்தனர். எல்லாருடைய பார்வையும் அவர்கள் மீதே இருந்தது. 'இருவரும் எத்தனை பாக்கியசாலிகள்! முழுப் புட்டி அவர்களின் முன்னால் இருக்கிறதே' என்று நினைத்தனர் போலும்.

வயிறு நிரம்பச் சாப்பிட்ட பின் தங்களைப் பார்த்துக் கொண்டு பசித்த விழிகளுடன் நின்ற பிச்சைக்காரனிடம் மீதமிருந்த பூரிகளை இலையோடு அள்ளிப் போட்டான் மாதவன். பிறருக்குக் கொடுப்பதில் உள்ள கௌரவத்தையும், மகிழ்ச்சியையும் பெருமையையும் இன்றுதான் அவனால் உணரமுடிந்தது.

'எடுத்துக்கொள். நன்றாகச் சாப்பிடு. மனமார வாழ்த்து. இதைச் சம்பாதித்துக் கொடுத்தவள் செத்துவிட்டாள். ஆனால் உன்னுடைய வாழ்த்துக்கள் கட்டாயம் அவளைப் போய்ச் சேரும், மனதார உள்ளம் நிறைய வாழ்த்து. மிகவும் கஷ்டப்பட்டுச் சேர்ந்த பணம்.'

மாதவன் மீண்டும் வானத்தை நோக்கினான்—'அப்பா, அவள் நிச்சயம் வைகுண்டத்துக்குத்தான் போவாள்.

வைகுண்டத்தில் ராணியாக இருப்பாள்' என்றாள்.

மகிழ்ச்சி அலைகளில் மிதந்தவாறே கீசோ எழுந்து நின்றான் — 'ஆமாம் மகனே. நிச்சயம் அவள் வைகுண்டத்துக்குத்தான் போவாள். இருக்கும்வரை அவள் யாரையும் கஷ்டப்படுத்தவில்லை. இறந்தபின்னும் வாழ்க்கையில் நாம் கொண்டிருந்த மாபெரும் ஆசையைப் பூர்த்தி செய்துவிட்டாள். மகனே, அவள் வைகுண்டத்திற்குப் போகாமல், வேறு யார் போவார்கள்? ஏழைகளைச் சுரண்டிக் கொள்ளையடிக்கிறார்களே இப்பெரிய மனிதர்கள், அவர்களா போவார்கள்? தங்கள் பாவத்தைக் கரைக்க, கங்கையில் மூழ்கிக் கோவிலில் காணிக்கை செலுத்துகிறார்களே — அவர்களா போவார்கள்?'

ஆனால் கணப்பொழுதில் இந்த நம்பிக்கையும் தத்துவ விசாரணையும் மாறிவிட்டன. நிலை தடுமாறச் செய்வது தானே போதை? துக்கமும் நிராசையும் கவிழ்ந்து கொண்டன.

'அப்பா,' என்றான் மாதவன். 'பாவம், இப் பிறவியில் அவள் மிகவும் துன்பப்பட்டுவிட்டாள். பாவம், எவ்வளவு கஷ்டப்பட்டுச் செத்தாள்?' — என்று கூறிக்கொண்டே அவன் கரங்களால் முகத்தை மூடிக்கொண்டு உரக்கக் கூச்சலிட்டு அழ ஆரம்பித்தான்.

'மகனே ஏன் அழுகிறாய்? இவ்வுலக மாயையிலிருந்து அவள் விடுபட்டு விட்டாளே என்று நினைத்துச் சந்தோஷப்படு. துன்பம் தீர்ந்துவிட்டது. மகா பாக்கியசாலியடா அவள்! அதனால் தான் இவ்வளவு சீக்கிரம் இவ்வுலகத் துன்பத்திலிருந்து அவளுக்கு விடுதலை கிடைத்தது.'

இருவரும் எழுந்து நின்றனர்.

'உள்ளம் கொள்ளை கொண்டவளே
ஏனடி கண்ணைச் சிமிட்டுகிறாய்?'

சாரயக் கடையிலிருப்பவர்களின் கவனம் இவர்கள் மீதிலேயே லயித்திருந்தது.

தந்தையும் மகனும் தங்களை மறந்த நிலையில் பாடினார்கள்: ஆடினார்கள்: குதித்தார்கள். கீழே விழுந்து புரண்டார்கள். கண்களைச் சிமிட்டிக்கொண்டு பல்வேறு பாவங்களை அபிநயத்துடன் வெளியிட்டார்கள். சுழன்று சுழன்று ஆடியவர்கள் போதையில் கிறுகிறுத்துக் கீழே விழுந்தார்கள்.

## சோதா

### 1

அவனுக்கு வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும். ஆனால் பார்வைக்கு இளைஞனைவிடப் பலமும் திடமும் கொண்டவனாக இருந்தான். தோலில் இன்னும் சுருக்கம் விழவில்லை. கொட்டும் மழையென்ன, தை மாதத்து இரவுக் கூதலென்ன, சித்திரையின் சுட்டெரிக்கும் நண்பகலென்ன என்று பாராமல் வெற்றுடம்புடன் சுற்றித் திரிவதில் இன்பம் காண்பவன் அவன். முறுக்கிவிட்ட மீசை, தேள் கொடுக்கு மாதிரி வளைந்து, பார்ப்பவர்களின் கண்ணில் உறுத்தும். மாநிறமான உடலில், பாம்பைப் போன்ற வழுவழுப்பு, மினுமினுப்பு. நாகபுரி வேட்டியின் சிவப்புக் கரை, அவன் தூரத்தில் வரும்போதே கவனத்தை ஈர்த்துவிடும். இடுப்பிலே காசிப் பட்டுக் கச்சை. அதிலே முத்துச் சிப்பி வைத்திழைந்த பிடி கொண்ட பிச்சுவா. அலை அலையான கேசத்தின் மீது படிந்திருக்கும் தலைப்பாகையின் பொன்னிறக் கரையிட்ட தலைப்பு அவனது அகன்ற முதுகின் மீது பரந்து கிடக்கும். அகன்று நிமிர்ந்த தோள்பட்டை கூரான வெட்டுக்கத்தியைத் தாங்கி நிற்கும். இதுதான் அவனுடைய அலங்காரம். கால்களை ஊன்றி வைத்து அவன் நடந்தால் நரம்புகள் சொடக்கெடுக்கும். அவன் ஒரு சோதா.

இன்றைய காசி, பதினெட்டாம் நூற்றாண்டின் முடிவில் உபநிடதத்தில் கரைகண்டிருந்த அஜாத சத்துருக்களான வேத விற்பன்னர்களின் சபைகளிலே, பிரம்ம வித்தையைக் கற்கும் ஆவலுடன் ஞானதாகம் கொண்ட பிரம்மச்சாரிகள் நாடிவந்த காசிப் பட்டினம் அல்ல.

கௌதம புத்தரும், சங்கரரும் அருளிய தரும போதனைகள், சித்தாந்தங்கள், சாத்திர வாதங்கள் யாவும் இடைவிடாமல் நிகழ்த்திய தாக்குதல்களினுலும், தொடர்ந்து ஆலயங்களும் மடங்களும் நாசமாக்கப் பட்டதினுலும், தபசிகள், முனிவர்கள் கொன்று வீழ்த்தப்பட்டதாலும் கிட்டத்தட்ட அடியோடு அழிந்தே போயிருந்தது. மத சம்பிரதாயங்களும், ஆசார அனுஷ்டானங்களைக் கடுமையுடன் பற்றி நின்ற வைணவ தர்மங்களுங்கூடச் சமுதாயக் கட்டுக்கோப்பு நலிவுற்றுக்கிடந்தாலும், புதியதொரு தர்மத்தின் உத்வேகம் நிறைந்த போதனையின் முன் தம் தோல்வியைக் கண்டு தளர்ச்சி அடைந்திருந்தன. நியாயமும் அறிவும் ஆயுத பலத்திற்கு முன்னே மண்டியிட்டுச் சரணுகதி அடைந்துவிட்டதைக் கண்டு கொதிப்பும் நிராசையும் அடைந்திருந்த ஒரு பகுதியினர் புதியதொரு சம்பிரதாயத்தைத் தோற்றுவித்தனர்.

வீரந்தான் இதன் தர்மம். உயிர் போயினும் சொன்ன சொல் தவருமை, தலை வணங்காமல் சிங்கம் போல் தன் ஜீவனத்திற்கு வழிதேடிக்கொள்ளுதல், உயிர்ப்பிச்சை கேட்கும் கோழைகள் மீதும் அடிபட்டு விழும் எதிரிகளின் மீதும் ஆயுதப்பிரயோகம் செய்யாமல் இருப்பது, நிராதரவானவர்களுக்கு வலிய உதவிபுரிவது, உயிருக்குச் சற்றும் அஞ்சாமல் இருப்பது முதலியவை இவர்களது கொள்கைகளாக இருந்தன. காசிப் பட்டினத்து மக்கள் இவர்களுக்குக் 'குண்டர்கள்' என்ற பெயரிட்டிருந்தனர்.

நிறைவேருத ஆசைகளாலும், அமையப் பெருத அபிலாஷைகளின் காரணமாகவும் பெரும்பாலோருக்கு வாழ்க்கையிலே வெறுப்பும் வைராக்கியமும் ஏற்பட்டுவிடுவதுண்டு. செல்வமும் அந்தஸ்தும் கொண்ட ஒரு ஜமீன்தாரின் மகனுக இருந்தும் நன்னூக் சிங் குண்டனுக மாறிவிட்டதற்குக் காரணம், தன் நெஞ்சிலே விழுந்த அடியை அவனுல் மறக்க முடியாமல் போனதுதான்.

தன் திரண்ட செல்வத்தை அவன் இரு கரங்களாலும் வாரி வாரிச் செலவிட்டான். ஏராளமான பொருட்செலவில், அவன் நடத்திய 'தெருக்கூத்து' நாடகம் நெடு நாள் வரை காசிப்பட்டினத்து மக்களின் நினைவை விட்டு அகலவில்லை. வேனிற் பருவத்தில், இத்தகைய கூத்துக்களை நடத்திக் காட்ட அந்தக் காலத்தில் ஏராளமான பணம் மட்டும் அல்ல, துணிவும் பலமுங்கூடத் தேவையாக இருந்தது.

ஒருமுறை நன்ரூக் தானே மேடையில் தோன்றினன். ஒரு கையில் பணப்பை, ஒரு காலில் சதங்கை, ஒரு கண்ணில் மை, ஒரு காதில் விலையுயர்ந்த முத்து, மற்றொரு காதில் அறுந்த செருப்பு—இந்தக் கோலத்துடன் ரத்தினங்கள் இழைத்த வாள் ஒரு கரத்தில் மின்ன, மற்றொரு கரம் எதிரே அணிமணிகளைச் சுமந்து நின்ற மேடைக் காதலியின் தோளைப் பற்றி நிற்க,

> 'ஓ, கத்திரிக்காய்க் கூடைக்காரி,
> அவளைக் கண்டால் அழைத்து வாடி'

என்று பாடினன்.

நகரத்திற்கு வெளியே உள்ள மைதானங்கள், நீர் நிறைந்த கிணறுகள், கங்கையின் அலைகளிலே மிதக்கும் தோணிகள் இவற்றிலேதான் பெரும்பாலும் அவன் காணப்படுவான். சூதாட்ட விடுதியிலிருந்து சில சமயம் 'சௌக்'கிற்கு நேராக வந்துவிடுவான். காசிமா நகரத்து வேசிகள் அவனைக் கண்டதும் புன்சிரிப்புடன் முகம் மலர வரவேற்பார்கள். அவனது கட்டான உடலின் வனப்பை ஆசை பொங்கப் பார்ப்பார்கள்—வெற்றிலைப் பாக்குக் கடையில் அமர்ந்துகொண்டு அவர்களைப் பாடச் சொல்லிக் கேட்பானே தவிர, மேலே ஏறி அவர்களது விடுதிக்குச் செல்லமாட்டான். சூதாட்டத்தில் ஜெயித்த காசுகளை கை நிறைய எடுத்து, அவர்களின் சாளரங்களை நோக்கி

வீசுவதுண்டு. இதைக் காண நேரிடும்போது கண்ணிய மான மக்கள்கூடத் தலையைச் சொரிந்துகொண்டு நிற் பார்கள். நன்னூக் இதைக் கண்டு உரக்க, அட்டகாச மாகச் சிரிப்பான். சில சமயம் யாராவது அவனிடம் மேலேயுள்ள விடுதிகளுக்குப் போகுமாறு கூறினல், நீண்ட பெருமூச்செறிந்தவாறே அவன் மௌனத்தில் ஆழ்ந்துவிடுவான்.

இப்பொழுதும் கூட வம்சியின் சூதாட்ட விடுதியிலி ருந்து நேராக இங்கே வந்திருந்தான். இன்று பகடைக் காய்கள் அவனுடன் ஒத்துழைக்க மறுத்துவிட்டன. பதினறு அழகிகள் ஆடிய ஆட்டத்திலும் அவன் மனம் செல்லவில்லை. மன்னூவின் வெற்றிலைபாக்குக் கடையில் வந்து உட்கார்ந்தவன்—'மன்னூ, இன்று சகுனம் சரியாக யில்லை' என்றான்.

'யசமான்! ஏன் கவலைப்படுகிறீர்கள்? நாங்கள் எல் லோரும் எதற்காக இருக்கிறோம். எல்லாம் தங்களு டையதுதான் எசமான்' — என்று குழைந்தான் மன்னூ.

'டேய் முட்டாள்! நன்னூக் பிறரிடம் காசு வாங்கிச் சூதாடினன் என்று உன் காதில் விழுந்தால் அவன் அன்றே செத்துவிட்டான் என்று வைத்துக்கொள். சூதாட்டவிடுதிக்குள் நான் எப்போது நுழைகிறேன் என்று தெரியுமா உனக்கு? கையில் ஒரு காசு கூட இல்லாமல் போகும் நிலையில்தான் நுழைவேன். எந்தப் பக்கம் குவியல் அதிகமாக இருக்கிறதோ அந்தப் பக்கந் தான் போய் உட்காருவேன். பகடையை உருட்டுவேன், அது தானுக என்னிடம் உருண்டு வந்துவிடும். எல்லாம் பாபா — ஸ்ரீராமின் அருள்.'

'ஆனல் இன்று என்ன நேர்ந்துவிட்டது யசமான்?'

'முதல் ஆட்டம் எனக்குத்தான் வெற்றி, ஆனல் அடுத் தடுத்து இரண்டு மூன்று ஆட்டத்தில் எல்லாம் போய் விட்டது. அப்படியும் இதோ பார்! ஐந்து ரூபாய்! இந்தா

ஒரு ரூபாயை வெற்றிலைப் பாக்குக்கு வைத்துக்கொள். மீதி நாலு ரூபாயை அந்த மனூாக்கிடம் கொடுத்து, துலாரியைப் பாடச் சொல். ''பிலமி விதேசா'' என்ற பாட்டையே பாடச்சொல்.'

கஞ்சா புகை போடும் பாத்திரத்தில் போடுவதற்காகத் தணலைப் பொடி செய்துகொண்டிருந்த மனூாக்கின் காதில் இது விழுந்ததுமே அவள் எழுந்துவிட்டாள். ஓட்டமும் நடையுமாகப் படிகளில் ஏறலானாள். கையிலிருந்த பாத்திரத்தைப் பார்த்தவாறே ஏறியதால் இரண்டொரு இடங்களில் இடித்துக்கொண்டு சென்றாள். நன்னூக்கிடம் அவளுக்கு ஒரே பயம். நன்னூக்கின் கோபத்தைத் தாங்கும் சக்தி அவளிடம் ஏது? அன்றொரு நாள் அவள் கண்ட அந்த காட்சியை அவளால் இன்னும் மறக்க முடியவில்லையே.

அன்றும் இப்படித்தான் சூதாட்ட விடுதியிலிருந்து நன்னூக் நேராகச் சௌக்கிற்கு வந்திருந்தான். கையில் பணப்பை இருந்தது. பாண்டு வாத்தியச் சத்தம் கேட்டதுமே, 'யார் வீட்டு பராத்?' என்று வினவினான் அவன்.

'டாகுர் போதா சிங்கின் மகனுக்கு விவாகம்.'

மன்னூ இதைக் கூறி முடிக்கு முன்னரே நன்னூக்கின் புருவங்கள் உயர்ந்தன, உதடுகள் துடித்தன.

'மன்னூ! இது நடக்காது! இந்த வழியாக அந்த ஊர்வலம் போக முடியாது. என்னிடம் இரண்டிலொன்று தீர்த்துவிட்டுத்தான் ஊர்வலத்தை மேலே நடத்திச் செல்லமுடியுமென போதா சிங்கிடம் சொல்லு. ஊம்...சீக்கிரம் போ!' என்று கூச்சலிட்டான் நன்னூக்.

'எசமான்...'

தோளின் மீதிருந்த அரிவாளை உயரத் தூக்கிப் பிடித்தான் நன்னூக் 'மன்னூக், பார்த்தாயா? போ,

போய் அந்த டாகுரிடம் "நன்னூக் வழியிலேயே நிற்கிருன். மகனுடைய கல்யாணம் அதனுல் யோசித்து விட்டு மேலே நடத்துங்கள்" என்று சொல்லிவிட்டு வா.'

மன்னூ நடுங்கியவாறே போதாசிங்கின் இல்லத்துக்கு விரைந்தான். போதாசிங்கும் நன்னூக்கும் ஒருவரை ஒருவர் சந்தித்து ஐந்து வருடங்கள் ஆகியிருக்கும். ஒரு நாள் சூதாடும்போது இருவருக்கும் பேச்சுவார்த்தை முற்றிக் கை கலக்கும் தருணத்தில் பிறர் மத்தியஸ்தம் செய்து வைக்கும்படி நேரிட்டுவிட்டது. அதன் பின் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளவில்லை.

இன்று அதே நன்னூக் தோளைத் தட்டிக்கொண்டு நிற்கிருன். உயிரைப் பற்றி அவனுக்கு அக்கறை இல்லை என்பது போதா சிங்கிற்கு நன்ருகத் தெரியும். மன்னூக்கிடம், 'பாடி சாகப் வழியிலே நிற்கிருர் என்று எனக்கு எப்படித் தெரியும்? சரி, சரி, போய்ச் சொல், அவர் இருக்கும்போது நான் வேறு எதற்கு? இரண்டு சம்பந்திகள் தேவையில்லையே' என்று சிரித்துக்கொண்டே கூறி விட்டான்.

போதாசிங் போகவில்லை. நன்னூக்குதான் மன்னூக்கின் தோளில் பணப்பையை வைத்துவிட்டு, தான் அலட்சியமாக ஊர்வலத்தின் முன்னே நடந்து சென்ருன். பாண்டு வாத்தியங்கள் முழங்க 'பராத்' மேலே சென்றது. விவாகத்திற்கு என்ன செலவாயிற்ருே, எல்லாம் நன்னூக்கின் செலவுதான். மறுநாள் சம்பந்திவீட்டார் திரும்பும்போது உடன் வந்த நன்னூக் வெற்றிலைப் பாக்குக் கடையருகில் வந்ததும், தான் நின்றுகொண்டு, கல்யாண மாப்பிள்ளையையும் மற்றவர்களையும் அனுப்பிவிட்டான்.

அன்று மன்னூக்கிற்குக் கூடப் பத்து ரூபாய் கிடைத்தது. நன்னூக் ஒன்றைக் கூறியபின் அதைச் செய்யாமல் இருப்பதும் எமனுக்கு ஓலை விடுவதும் ஒன்றுதான். மேலே சென்றவன் துலாரியிடம், 'துலாரி, நான் ஒப்புக்

கொண்டு வந்துவிட்டேன், நீ பாடு, அதற்குள் சாரங்கிக் காரன் வந்து விடுவான்' என்று அவசரப் படுத்தினன்.

'அப்படி என்ன வந்துவிட்டது? பாபு சாகப் சலாம்.' சாளரத்தின் வழியே கீழே எட்டிப்பார்த்தவண்ணம் புன் சிரிப்புடன் கூறினள் துலாரி.

நன்னுக் பதிலுக்குச் சலாம் செய்துவிட்டு தெருவில் வந்துகொண்டிருந்த வேறொருவனைப் பார்க்கலானன். கரத்திலே லேசான பிரம்பு, கண்களிலே மை, வாயிலே வெற்றிலை, நரைத்த முடி, அங்குமிங்கும் தெரிந்த தாடி யில் மருதாணிச் சிவப்பு, தலையில் குல்லாய், கட்டம் போட்ட சட்டை. அந்த மனிதனின் கூடவே வில்லை யணிந்த இரண்டு சேவகர்கள் வந்து கொண்டிருந்தார் கள். யாரோ மௌல்வி சாகப் போலும்.

நன்னூக்கிற்குச் சிரிப்பு வந்துவிட்டது. உரக்கச் சிரித்து விட்டான். அவனைத் திரும்பிப் பாராமலேயே மௌல்வி கடுமையான குரலில், சேவகர்களிடம் கூறினன்: 'அடேய்! மேலே போய்த் துலாரியிடம் இன்று ரெசி டெண்ட் துரையின் பங்களாவில் பாடவேண்டும். உடனே புறப்படு என்று சொல்லிவிட்டு வா. அதற்குள் நான் ஜான் அலியிடம் அத்தர் வாங்குகிறேன்.'

சேவகன் படிகளை நோக்கிச் சென்றன். மௌல்வி அவ்விடமிருந்து நகர்வதற்குள், நன்னூக்கின் உரத்த குரல் கேட்டது. 'துலாரி, எத்தனை நேரம் காத்திருப்பது? சாரங்கிக்காரன் இன்னுமா வரவில்லை?'

'பாபு சாகப்! இதென்ன? நான் உங்களுக்காகத் தானே இங்கு வந்து உட்கார்ந்திருக்கிறேன். இதோ, பாடு கிறேன். நீங்கள்தான்...' மேலே அவள் பேசி முடிப்ப தற்குள் மௌல்வி ஆத்திரத்துடன் இடைமறித்தான். 'டேய் யாரடா அங்கே? அந்த கழுதைச் சிறுக்கி இன் னுமா வரவில்லை? போய் கொத்தவாலிடம் மௌல்வி அல்லாவுதீன் குப்ரா கூப்பிட்டதாகச் சொல்லு. வரட்டும்,

வந்து இவளை ஒரு கை பார்க்கட்டும். நானுந்தான் பார்க்கிறேன். நவாபின் ஆட்சி போனதிலிருந்து இந்தக் காபிரிகளுக்குத் திமிர் அதிகமாகிவிட்டது' என்று இரைந்தான்.

குப்ரா மௌல்வியா? ஐயய்யோ!—வெற்றிலைக் கடைக்காரன் பரபரப்புடன் கடையைக் கட்டலானான். பக்கத்துக் கடையொன்றில் தூங்கிக்கொண்டிருந்தவன் இதைக் கேட்ட அதிர்ச்சியில் சுவரில் மோதிக் கொண்டான். குப்ரா மௌல்வி! மகாராஜா சேத் சிங்கிற்கு மூன்றரை சேர் எலும்புத் தைலம் கொண்டுவரும்படி உத்தரவிட்டவன் அல்லவா இவன்?

கடைத் தெருவில் ஒரே பரபரப்பு. 'டேய் சும்மா உட்காரமாட்டாய்?' என்று நன்னூக் மன்னூவை அதட்டினான். பின்னர் துலாரியை நோக்கி, 'பாயி, அங்கிருந்தே பாடு. இந்தப் பக்கம் அந்தப் பக்கம் நகரக் கூடாது. ஊம் பாடு – இம்மாதிரி புல்வெட்டி வீரர்கள் எத்தனையோ பேரை நான் பார்த்திருக்கிறேன். நேற்று பகடையை உருட்டிக் கொண்டு அரைக்காசு, கால்காசுக்குக் கெஞ்சிக்கொண்டிருந்தான். இன்று அதிகாரம் செய்ய வந்துவிட்டானா?' என்றான் உரக்க.

குப்ரா நன்னூக்கைப் பார்த்து, 'யார் இந்த அயோக்கியன்?' என்றான்.

'நான் தான் உன் சித்தப்பன் நன்னூக் சிங்' என்ற சொற்களுடன் பலமான அடியொன்று விழுந்ததும், குப்ராவிற்குத் தலை சுற்றியது. வில்லை தரித்த சிப்பாய்கள் ஆளுக்கொரு பக்கம் ஓடி விட்டார்கள். கதிகலங்கிய குப்ரா மௌல்வி விழுந்தடித்துக் கொண்டு எப்படியோ ஜான் அலியின் கடைக்குள் நுழைந்துகொண்டார்.

'மௌல்வி சாகப், போயும் போயும் நீங்கள் அந்தக் குண்டனிடம் வாய் கொடுத்தீர்களே. அவன் அரிவா

ளால் ஒரு போடு போடாமல் போனுனே, அதைச் சொல்லுங்கள்’ என்றுன் ஜான் அலி.

குப்ரா மௌல்வியின் வாயிலிருந்து ஒரு சொல் கூட வரவில்லை. இதற்குள் ‘பிலமி விதேச ரஹோ’ என்ற பாடல் துவங்கிவிட்டது. தெருவில் வருவார் போவார் ஒருவர் கூட இல்லை. பாட்டு முடிந்தது. மெல்ல எழுந்து நன்னூக் மெதுவாக நடந்து சென்றுன். சற்று நேரத்துக்கெல்லாம் பட்டுத்திரை கட்டிய ஒரு சிவிகை வந்தது. அதன் கூடவே ஒரு காவற்காரனும் வந்தான். ராஜமாதா அழைத்து வரச் சொன்னதாக அவன் கூறியதும் துலாரி மௌனமாக அதில் ஏறி அமர்ந்துகொண்டாள். அந்தியின் மங்கிய ஒளியும் தூசியும் நிறைந்த காசிப் பட்டினத்தின் சந்து பொந்துகளைச் கடந்து சிவிகை சிவாலயப் படித்துறையை நோக்கி சென்றது.

2

சிராவண மாதத்துக் கடைசி சோமவாரம். ராஜமாதா பன்னு சிவாலயத்தில் அமர்ந்து பூசை செய்து கொண்டிருந்தாள். துலாரி வெளியே மற்றப் பாடகிகளுடன் அமர்ந்து பஜனைப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தாள். ஆரத்தி முடிந்ததும் மலர்களைத் தூவி ஈசனின் பாதத்தில் பக்திப் பரவசத்துடன் வணங்கினுள் ராஜமாதா. பிரசாதத்தை எடுத்துக் கொண்டு வெளியே வந்ததுமே, துலாரியின் மீது அவள் பார்வை விழுந்தது. துலாரி உடனே எழுந்து நின்று கை குவித்தாள்.

‘நான் முன்னதாகவே வந்திருப்பேன், என்ன செய்ய! பாழாய்ப் போன குப்ரா மௌல்வி வந்து என்னை ரெசிடெண்ட் துரையின் பங்களாவிற்கு அழைத்துப் போவேன் என்று நின்றுன். என்ன செய்வது சர்க்கார்? நேரமெல்லாம் வீணுகிவிட்டது’ என்றுள்.

'குப்ரா மௌல்வியா? எங்கே பார்த்தாலும் அவனுடைய பெயர்தான் காதில் படுகிறது. அவன் இங்குமா வந்து...?' என்று கூறிய ராஜமாதா என்ன நினைத்தாளோ, சட்டென்று பேச்சை மாற்றிவிட்டாள். 'ஊம் சொல்லு, என்ன நடந்தது? உன்னால் எப்படி வர முடிந்தது?'

'நல்ல வேளையாக பாபு நன்னூக் சிங் வந்து சேர்ந்தார். ''ராஜமாதாவின் பூஜையிலே, பஜனைப் பாடல் பாட நான் போகவேண்டும். இவன் போகவிடமாட்டேன் என்கிறான்'' என்றேன். அவர் அவனுக்கு ஓர் அறை கொடுத்தார். மௌல்வியின் திமிரெல்லாம் அடங்கிவிட்டது. பிறகுதான் என்னால் எப்படியோ இங்கே வந்து சேர முடிந்தது.'

'பாபு நன்னூக் சிங்! யாரது?

துலாரி தலை குனிந்த வண்ணம், 'தங்கள் சமூகத்திற்குத் தெரியாதா? பாபு நிரஞ்சன் சிங்கின் மகன். நான் சின்னவளாக இருந்தபோது தங்களுடன் தோட்டத்தில் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தேனே, நினைவிருக்கிறதா? அப்பொழுது நவாபின் யானை மிரண்டு ஓடி வந்ததும், நம்மிருவரையும் நிரஞ்சன் சிங்கின் மகன்தானே காப்பாற்றினார்?' என்றாள்.

அக்கடந்த காலச் சம்பவத்தை நினைவுபடுத்திப் பார்க்கையில் ஏனோ ராஜமாதாவின் முகம் வெளிறியது, தன் மன எழுச்சியைச் சமாளித்துக் கொண்டவளாய், 'பாபு நன்னூக் சிங் அங்கே எப்படி வந்தார்?' என்று வினவினாள்.

துலாரி புன்சிரிப்புடன் தலை கவிழ்ந்தாள். ராஜமாதா பன்னாவின் தந்தையினுடைய ஜமீனில் வசித்த ஒரு வேசியின் மகள்தான் துலாரி, இளம் பருவத்தில் துலாரியுடன் பன்னா எத்தனையோ முறை ஊஞ்சலாடி, விளையாடியிருக்கிறாள். சிறுவயதிலேயே துலாரி நன்றாகப் பாடு

வாள். இனிமையான குரல், அழகும் துடிப்பும் நிறைந்தவள். பன்னு காசி அரசனின் ராஜமாதாவாக விளங்கிய போது துலாரி காசிப்பட்டினத்தின் பிரசித்தி பெற்ற பாடகிகளில் ஒருத்தியாக விளங்கினாள். அரண்மனையில் அவள் கச்சேரிகள் நடைபெறுவது உண்டு. மகாராஜா பல்வந்த் சிங்கின் காலத்தில் இசை, பன்னுவின் வாழ்விலே இன்றியமையாத ஓர் அங்கமாகிவிட்டிருந்தது. அப்பொழுதெல்லாம், காதல், விரகம், தாபம், ஏக்கம், வேதனை நிறைந்த பாடல்களில் அவள் மனம் லயித்துவிடும். இப்பொழுதோ சாத்துவிக பாவம் நிறைந்த பாடல்களில்தான் அவள் மனத்தைச் செலுத்தினாள். ராஜமாதா பன்னுவின் அழகிய பிரகாசமான அமைதி துலங்கும் முகம் கைம்பெண் கோலத்தால் சற்று மலினம் அடைந்திருந்தது.

மூத்த ராணியின் சக்களத்திப் பொருமை நெருப்பு மகாராஜா பலவந்த் சிங்கின் மரணத்திற்குப் பின்னும் அணையவில்லை. அந்தப்புரம், பூசல்களின் அரங்கமேடையாகிவிட்டிருந்தது. இதனால்தான் பன்னு காசியில் உள்ள அரண்மனைக்கு வந்து இறைவழிபாட்டில் தன் மனத்தைச் செலுத்திக்கொண்டிருந்தாள். ராம் நகரத்தில் அவளுக்கு நிம்மதியே இல்லாமல் போய்விட்டது.

மகாராஜாவின் புதிய ராணியாதலால் அவரது காதலுக்குப் பாத்திரமாகும் கௌரவமும் பன்னுவிற்குக் கிட்டியிருந்தது. தவிரவும் இளவரசனைப் பெற்றுத் தந்த பாக்கியவதியாகவும் அவள் இருந்தாள். இவையெல்லாம் இருந்தும் தான் க்ஷத்திரிய குலப்பெண்ணாக இல்லாமல் இருந்த குறை, தன் தகுதியைக் குறைப்பதைக் கண்டு அவள் மிகுந்த மனவேதனை அடைந்தாள். தன் விவாகம் நடந்த போது எழுந்த சர்ச்சைகள் அவள் நினைவுக்கு வந்தன.

சிறியதொரு மஞ்சத்தின் மீதமர்ந்து கங்கையின் பிரவாகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள் பன்னு. அவள்

மனம் எதிலும் செல்லவில்லை. கடந்துபோன நாட்களில் தன்னையும் அறியாமலேயே கை நழுவிப்போன ஒரு விஷயத்தைப்பற்றி இப்போது சிந்தித்துப் பார்க்கவேண்டிய அவசியம் இல்லை தான். அதனால் இனி நடக்கப் போவது ஏதுமில்லை. ஆனால் மனித சுபாவமே எதையும் எண்ணிப் பார்த்துக் கணக்கிடும் இயல்பு உள்ளதாய் இருப்பதால் 'ஒருகால் அப்படி நடந்திருந்தால்?' என்ற கேள்வியை எழுப்பிக்கொண்டு எண்ணிப்பார்க்கத் துவங்கிவிடுகிறது. இதுபோல் தான், பன்னாவும், இன்று பாபு நன்னூக்சிங்கின் பெயரைக் கேட்டபின், ராஜா பல்வந்த் சிங் தன்னைக் கட்டாயமாகத் திருமணம் செய்து கொள்வதற்கு முன்பு தன் வாழ்வில் நேரவிருந்த ஒரு விஷயத்தைப் பிற்றிச் சிந்திக்கலானாள். கேந்தா அவளுடைய அந்தரங்கமான பணிப் பெண். பன்னா, ராஜா பல்வந்த் சிங்கின் காதலியான தினத்திலிருந்து அவளுடன் கூட இருப்பவள். ராஜ்யம் முழுவதிலும் நடக்கும் செய்திகள் அனைத்தும் அவள் மூலமாகத்தான் பன்னாவுக்குத் தெரியும். எங்கிருந்துதான் அவளுக்கு இத்தனை செய்திகள் கிடைக்குமோ, தெரியாது. துலாரியின் குட்டை உடைக்க வேண்டியது அவசியம் என்று அந்தக் கேந்தா நினைத்தாள், அதனால், 'மகாராணி, நன்னூக் சிங் தெருக்கூத்து, கிடாச் சண்டை, குதிரைப் பந்தயம், ஆட்டம் பாட்டத்தில் ஜமீனையே சூறையாடி விட்டு, இப்போது கொள்ளைக்காரனாக மாறிவிட்டான். ஊரில் எத்தனை கொலை நடக்கிறதோ, அத்தனையிலும் அவனுக்கு...' என்று இழுத்தாள் கேந்தா.

சட்டென்று இடைமறித்தாள் துலாரி. 'இது முழுப் பொய், பாபு சாகப் மாதிரி ஒரு தர்மாத்மா இந்த ஊரிலே கிடையாது. எத்தனையோ கைம்பெண்கள் அவர் கொடுக்கிற துணியினால் தான் மானத்தைக் காப்பாற்றிக் கொள்கிறார்கள், தெரியுமா? எத்தனையோ பெண்களுக்குக்

கல்யாணம் செய்து வைக்கிறுர். துன்புறுத்தப்படுகிற எத்தனையோ பேரை அவர்தாம் காப்பாற்றுகிறுர், மகா ராணி' என்றுள் உணர்ச்சியுடன்.

ராணி பன்னுவின் இதயத்தில் மென்மையான உணர்வுகள் கிளர்ந்தெழுந்தன. சிரித்துக்கொண்டே, 'துலாரி, அவர் உன் வீட்டிற்கு வருகிறுர் அல்லவா? அதனுல் தான் நீ அவரை இவ்வளவு புகழ்கிறுய்' என்றுள்.

'இல்லை ராஜமாதா! ஆணையிட்டுச் சொல்லுகிறேன். பாபு நன்னூக் சிங் இன்றுவரை என் விடுதியில் காலெடுத்து வைத்ததேயில்லை' என்றுள் துலாரி.

இந்த விசித்திரமான மனிதனைப் பற்றி இன்னும் அறிந்துகொள்ள அவா இருந்தாலும், அதை அடக்கிக் கொண்டு, பன்னு துலாரியைப் பார்த்த பார்வை அவளை மௌனியாக்கிவிட்டது. வெளியே முதல் ஜாமத்தை அறிவிக்கும் ஷெனய் ஒலித்தது. துலாரி ராஜமாதாவிடம் விடைபெற்றுக் கொண்டு பல்லக்கில் ஏறி அமர்ந்தாள். இதன்பின் கேந்தா கூறினுள்: 'ராஜமாதா, நகரத்தின் நிலைமை ரொம்ப மோசமாகயிருக்கிறது. பட்டப்பகலில் மக்களைக் கொள்ளையிடுகிறுர்கள். எங்கே பார்த்தாலும் சூதாட்டவிடுதிதான். ஜனங்கள் தங்கள் சொத்துச் சுதந்திரம் யாவற்றையும் இதில் இழந்து விடுகிறுர்கள், குழந்தைகள் ஏமாற்றப் படுகின்றனர். ஒரு காரணமும் இல்லாமல் — அற்ப விஷயத்திற்கெல்லாம் சண்டை மூண்டு விடுகிறது. ரெசிடெண்டிற்கும் ராஜாவிற்கும் மனஸ்தாபம் ஒரு பக்கம்.' பன்னு ஒன்றுமே பேசவில்லை.

மறுநாள் ரெசிடெண்ட் மார்க்ஹோவிடமிருந்து மகாராஜாவிற்கு ஒரு கடிதம் வந்தது. அதில் நகரத்தின் மோசமான நிலைமை குறித்துக் கடுமையாக விமரிசிக்கப் பட்டிருந்தது. கொள்ளைக்காரர்கள் குண்டர்களைப் பிடிப்பதற்கும், அவர்களைக் கடுமையாகக் கண்காணிப்பில்

வைப்பதற்கும் மகாராஜாவின் சம்மதம் கேட்கப் பட்டிருந்தது. குப்ரா மௌல்வி சம்பந்தப்பட்ட சம்பவத்தைக் குறிப்பிடவும் தவறவில்லை, ஹேஸ்டிங்ஸ் வரப்போவதைச் சூசனையாக ரெசிடெண்ட் அறிவித்திருந்தார்.

சிவாலயப் படித்துறையிலும் ராம் நகரத்திலும் ஒரே பரபரப்பு மூண்டுவிட்டது. கொத்வால் ஹிம்மத் சிங் வெறிபிடித்தவன் போல் கண்ணில் படுபவர்கள் தடி, பிச்சுவா, அரிவாள், கத்தி, ஈட்டி எது வைத்திருந்தாலும் அவர்களை மனம் போனபடி கைது செய்ய ஆரம்பித்தான்.

ஒரு நாள் நன்னூக் சிங், சும்மா வாய்க்காலின் சங்கமத்திற்கு அருகே இருந்த உயர்வான குன்றின் அடர்ந்த பசும்புல் வெளியில், தன் தோழர்களுடன் அமர்ந்திருந்தான். ஆலமரத்து வேரிலே கட்டப்பட்டிருந்த அவனுடைய சிறிய தோணி கங்கையின் பிரவாகத்தில் மிதந்து கொண்டிருந்தது. கதக் ஒரு பக்கம் பாடிக்கொண்டிருந்தான், நான்கு எக்கா வண்டிகள் பூட்டித் தயாராக நின்றன.

திடீரென்று நன்னூக், 'மலூகி, கச்சேரி சூடு பிடிக்கவில்லை. எக்காவில் போய்த் துலாரியை அழைத்து வா' என்றான். மலூகி, ஜாலரா வாசித்துக்கொண்டிருந்தவன், இதைக் கேட்டதும் ஓடிப் போய் எக்காவில் ஏறி அமர்ந்தான். நன்னூக்கின் மனநிலை அன்று சரியாகவே இல்லை. கஞ்சா இலையைப் பலமுறை கசக்கிப் பிழிந்து குடித்தாகிவிட்டது. போதை ஏறவில்லை. ஒரு மணி நேரத்துக்குள் துலாரி எதிரே வந்து நின்றாள்.

'பாபு சாகப், உத்தரவு என்னவோ?' என்றாள் புன்சிரிப்புடன்.

'துலாரி, இன்று உன் பாட்டைக் கேட்கவேண்டும் போலிருக்கிறது' என்றான் நன்னூக்.

'இக் காட்டிலே எதற்கு?' சந்தேகத்துடன் சிரித்த வாறே அர்த்தம் தொனிக்கக் கேட்டாள் அவள்.

'உனக்கு எவ்விதமான பயமும் தேவையில்லை' என்று கூறிச் சிரித்தான் நன்னூக்.

'இதைத்தான் அன்று நான் மகாராணியிடமும் கூறினேன்' என்ருள் துலாரி.

'யாரது, யாரிடம் சொன்னுய்?'

'ராஜமாதா பன்னு தேவியிடம்.'

அன்றைய கச்சேரி எடுபடவேயில்லை. பாடலைக் கேட்டுக் கொண்டிருக்கும் போதே — இடையிடையே — நன்னூக்கின் கண்களில் நீர் ததும்புவதை துலாரி வியப்புடன் நோக்கினுள். பாட்டு, தாளம் எல்லாம் ஒரு வழியாக முடிந்தது. மழைக் காலத்து இரவாதலால் சுவர்க் கோழிகளின் ரீங்கார ஓசை புதர்களிடையே இருந்து ஒலித்துக்கொண்டிருந்தது. ஆலயத்தை அடுத்துள்ள சிறிய அறையில் நன்னூக் சிந்தையில் ஒன்றியவனுக அமர்ந்திருந்தான். அவனுக்குத் தூக்கமே வரவில்லை. யாவரும் தூங்க ஆரம்பித்து விட்டனர். துலாரி மட்டும் விழித்துக் கொண்டிருந்தாள். அவளும் ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தாள். இன்று தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக்கொள்வது அவளுக்குச் சிரமமாக இருந்தது. மிகுந்த முயற்சி செய்தும் தோல்வி அடைந்தவளாய் மெல்ல எழுந்து, நன்னூக் சிங் படுத்திருந்த இடத்தை நோக்கிச் சென்ருள்.

காலடி ஓசை கேட்டதுமே நன்னூக் அருகிலிருந்த வாளைக் கரத்தில் எடுத்துக் கொண்டிருந்தான். துலாரி சிரித்துக்கொண்டே, 'பாபு சாகப், பெண்கள் மீது கூட வாளை வீசுவதுண்டா?' என்று மெல்ல வினவினுள், வேட்கை மிகுந்தவளாய்.

மினுமினுக்கும் தீப வொளியில், தாபத்துடன் தன் எதிரே வந்து நிற்கும் பெண்ணின் முகத்தைக் கண்ட

நன்னூக் சிரித்தான். 'என்ன பாயி! இவ்வேளையில் கிளம்பிவிட்டாயா? என்ன, மௌல்வி சாகப் மீண்டும் கூப்பிட்டனுப்பிட்டானு என்ன?' என்று வேடிக்கையாக வினவினுன். துலாரி அவன் அருகே அமர்ந்து கொண்டாள்.

'ஏன் உனக்கு பயமாக இருக்கிறதா?' என்று கேட்டான் நன்னூக்.

'இல்லை. ஒரு விஷயம் கேட்கவேண்டும்.'

'என்ன விஷயம்?'

'வேறு என்ன? இதுதான், அதாவது எப்பொழுதாவது உங்கள் இதயத்தில்...'

'அதைமட்டும் கேட்காதே துலாரி. இதயத்துக்கு இடமில்லை என்றுதானே அதைக் கையிலே எடுத்துக் கொண்டு திரிகிறேன். என்ன வேண்டுமானுலும் செய்கிறேன். என்ன வேண்டுமானுலும் செய்கிறேன். அதை நசுக்குகிறேன், மிதிக்கிறேன், சாவதற்காக என்னவெல்லாமோ செய்கிறேன். ஆனுல் சாகத்தான் முடியவில்லை.'

'சாவதற்கு எங்கேயாவது தேடிக்கொண்டு போக வேண்டுமா என்ன? காசிப் பட்டினத்தின் நிலைமை தங்களுக்குத் தெரியாதா? எந்நிமிடமும் என்னவாகுமோ? யார் கண்டது? ஏதாவது அமர்க்களம் நடக்கப்போகிறதா என்ன? காசிப் பட்டினத்துத் தெருவிலே ஒரு ஆளைக்கூடக் காணுமே?'

'புதிதாக ஏதாவது செய்தி உண்டா?'

'யாரோ ஹேஸ்டிங்ஸ் வந்திருக்கிருனும். சிவாலயம் படித்துறைக்குக் கும்பெனி ஆட்களைக் காவல் போட்டிருக்கிருனும். ராஜமாதாவும் அங்கேதான் இருக்கிருர்கள். அவர்களைப் பிடித்துக் கல்கத்தாவுக்கு அனுப்பி விடுவார்கள் என்று பேசிக் கொண்டிருக்கிருர்கள்!'

'என்ன பன்னுவா? அந்தப்புர பெண்கள் கூட அங்கேயா இருகிறார்கள்?' நன்னூக் பரபரப்படைந்தான்.

'பாபு சாகப், ராஜமாதா பன்னுவின் பெயரைச் சொன்னதும் உங்கள் கண்ணில் ஏன் நீர் வந்தது?'

திடீரென நன்னூக்கின் முகம் பயங்கரமாக மாறியது. 'வாயை மூடிக்கொள். அதை அறிந்து நீ என்ன செய்யப் போகிறாய்?' என்று அதட்டியவனாய் எழுந்து நின்றான். கலவரமடைந்தவனாய் அங்குமிங்கும் எதையோ தேடினான். பின்னர் ஒருவாறு நிதானமடைந்து, 'துலாரி, என் வாழ்வில் முதன் முதலாக ஏகாந்தமான இரவில் ஒரு பெண் என் கட்டிலில் வந்து அமர்ந்திருக்கிறாள். பிரம்மச்சாரியான நான் ஒரு பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்காக, நூற்றுக்கணக்கான பொய்களையும் குற்றங்களையும் செய்துகொண்டு திரிகிறேன். எதற்காக? துலாரி, உனக்குத் தெரியுமா? நான் பெண்களை வெறுக்கிறேன். ஆனால் பன்னு...? இதில் அவளுடைய குற்றம் எதுவுமில்லை. அக்கொடுமைக்காரன் பல்வந்த் சிங்கின் நெஞ்சிலே கூர்வாளைப் பாய்ச்சத்தான் என்றால் முடியாமல் போய்விட்டது. ஆனால், பன்னு? வெள்ளையர்கள் அவளைப் பிடித்துக் கல்கத்தாவிற்கு அனுப்பப் போகிறார்கள்.' நன்னூக் உன்மத்தம் கொண்டவன்போல் சினந்து எழுந்தான். இருளிடையே ஆலமரத்தை அடைந்தவன், கங்கையின் பிரவாகத்திலே தன் தோணியில் ஏறி அமர்வதைக் துலாரி பார்த்துக்கொண்டே இருந்தாள். அவள் நெஞ்சு நடுங்கியது.

## 3

16 ஆகஸ்ட், 1781. காசி நகரமே அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. சிவாலயப் படித்துறையில் ராஜா

சேத் சிங் லெப்டினெண்ட் இன்டாகரின் பாதுகாவலில் இருந்தார். நகரமெங்கும் ஒரே கிலி பரவி இருந்தது. கடைகள் மூடிக் கிடந்தன. 'அம்மா, இன்று அல்வாக் காரன் வரவில்லை?' என்று குழந்தைகள் தாய்மாரிடம் நச்சரித்தன. 'சும்மா இருங்கள்' என்ற அதட்டல்தான் பதிலாகக் கிடைத்தது. பாதைகள், தெருக்கள் எல்லாம் வெறிச்சோடிக் கிடந்தன. குப்ரா மௌல்வி சில சமயம் அங்குமிங்கும் வந்து போவது தென்பட்டது. அவர் வருவது தெரிந்தால், திறந்திருந்த சாளரங்கள் மூடிக் கொண்டன. பயமும் மௌனமும் எங்கும் ஆட்சி செலுத்தின. சௌக்கில் சித்ரூ சிங்கின் அரண்மனை, தனக்குள்ளே காசியின் வீரத்தையே சிறைப்படுத்திவிட்ட பெருமையுடன் பூரித்து நின்றது.

திடீரென்று ஒரு குரல் கேட்டது. 'ஹிம்மத் சிங்.'

சாளரத்தின் வெளியே தலையை நீட்டி, 'யாரது?' என்று வினவினான் கொத்தவால் ஹிம்மத் சிங்.

'நான்தான் நன்னூக் சிங்.'

'நீ இன்னுமா வெளியே இருக்கிறாய்?'

'ஏய் பைத்தியக்காரா? மகாராஜா கைது செய்யப்பட்டிருக்கிறார். உள்ளே இருக்கிற வீரர்களை யெல்லாம் வெளியே விடு. அவர்களை அழைத்துக் கொண்டு சிவாலயப் படித்துறைக்குப் போய். பார்க்கிறேன் ஒரு கை.'

'நில்...' என்று கூறிய ஹிம்மத் சிங் தன் வீரர்களுக்கு ஏதோ உத்தரவிட்டான். சிப்பாய்கள் வெளியே வந்தார்கள். நன்னூக் சிங்கின் கரத்திலே வாள் மின்னியது. அவ்வளவுதான், சிப்பாய்கள் ஓடிவிட்டனர்.

'சீ... நம்பிக்கைத் துரோகிகளே! வளையல்களை அணிந்துகொள்ளுங்கள்!' என்று சீறிய நன்னூக் எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவ்விடத்தைவிட்டு அகன்றான்.

கொத்தவால் மாளிகையின் எதிரே மீண்டும் அமைதி நிலவியது.

நன்னூக் அன்று வெறி கொண்டவனுகி விட்டிருந்தான். அவனது சில தோழர்கள் அவனுடைய உத்தரவின்படி உயிரைக் கொடுக்கத் தயாராக நின்றனர். ராஜா சேத் சிங்கின் மீது என்ன அரசியல் குற்றம் சாட்டப்பட்டுள்ளது என்பது பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது. ஏதோ யோசித்தவனுய்த் தன் தோழர்கள் சிலரை முன்வாயிலில் சென்று குழப்பம் உண்டாக்கும்படி கூறி அனுப்பினுன். பின்னர் தன் தோணியை எடுத்துக் கொண்டு சிவாலயத்தின் சாளரத்திற்கு நேர் கீழே போய்ச் சேர்ந்தான். எப்படியோ சிரமப்பட்டு இங்கு மங்குமிருந்த பாறையில் கயிற்றை மாட்டி, அலை பாய்ந்த தோணியை நிலையாக நிறுத்தினுன். பின்னர் குரங்கைப் போல் தாவிக் குதித்துச் சாளரத்தின் வழியே உள்ளே குதித்து விட்டான்.

அச்சமயம் ராஜமாதா பன்னுவிடமும், இளைஞனை அரசன் சேத் சிங்கிடமும் பாபு மணியார் சிங் பேசிக் கொண்டிருந்தார். 'நீங்கள் இங்கே இருக்கையில் நாங்கள் என்ன செய்யமுடியும்? ஒன்றுமே புரியவில்லை. வழிபாட்டை முடித்துக்கொண்டு நீங்கள் ராம் நகர் திரும்பியிருந்தால் இந்த...'

'இப்பொழுது நான் ராம் நகருக்கு எப்படிச் செல்வது?' என்று வினவினுள் ராஜமாதா.

'எப்படியென்பதுதான் புரியவில்லை. என் வீரர்கள் எல்லாருங்கூடக் கைதியாக இருக்கிருர்களே!' என்று துயரத்துடன் கூறினுர் மணியார் சிங்.

இதற்குள் வாயிலில் பெருத்த ஆரவாரம் கேட்டது. மந்திராலோசனையில் ஆழ்ந்திருந்த அரச குடும்பத்தினருக்கு நன்னூக் சிங் அங்கு வந்து நின்றதே தெரியவில்லை. எதிரே இருந்த கதவு மூடியிருந்தது. நன்னூக்

ஒருமுறை திரும்பிப் பார்த்தான். கரையோரத்தில ஒதுங்குவதற்காக ஒரு படகு அலைகளுடன் போராடிக் கொண்டிருந்தது. இதை எதிர் நோக்கித்தான் அவன் காத்திருந்தான்.

'மகாராணி எங்கே இருக்கிறார்?'

யாவரும் திரும்பிப் பார்த்தனர். முன்பின் தெரியாத ஒருவன் வீரமே வடிவெடுத்தாற்போல் அவர்கள் முன் நின்றான். ஆயுதபாணியான அவன் ஒரு தேவனோ?

'நீ யார்?' என்று வினவினான் சேத் சிங்.

'அரச குடும்பத்தின் ஊழியன்.'

பன்னாவின் கண்டத்திலிருந்து லேசாக ஒரு விம்மல் எழுந்து அடங்கியது. அவள் அவனை அடையாளம் கண்டு கொண்டாள். எத்தனை ஆண்டுகளுக்குப் பின்பு! இன்று அதே நன்னூக் சிங்!

'உன்னால் என்ன செய்யமுடியும்?' என்று வினவினார் பாபு மணியார் சிங்.

'உயிரையும் கொடுக்க முடியும். முதலில் மகாராணியைத் தோணியில் அமர்த்துங்கள். கீழே இன்னொரு படகில் தேர்ந்த படகோட்டிகள் இருக்கிறார்கள். பிறகு பேசலாம்.'

மணியார் சிங் எட்டிப் பார்த்தார். அந்தப் புரத்துக் காவலன் ராஜாவின் தோணி நான்கு படகோட்டிகளுடன் சாளரத்தின் அருகே தயாராக நின்றது. 'புறப்படுங்கள்! நான் உடன் வருகிறேன்!' என்றார் பன்னாவிடம்.

ஆனால், சேத் சிங்கை நோக்கித் தாயன்பு நிறைந்த நெஞ்சம் கொடையாக வினவியது. இதற்குப் பதில் எவரிடமும் இல்லை. 'நான் வேண்டுமானால் இங்கேயே...' என்று இழுத்தார் மணியார் சிங்.

நன்னூக் சிரித்தான். 'யசமான், நீங்களும் போய்ப் படகில் ஏறிக்கொள்ளுங்கள். மகாராஜா படகில் ஏறி உட்காராத வரையில் பத்து, இருபது குண்டு பட்டாலும்

தாங்கிக்கொண்டு இந்த நன்னூக் எதிர்த்து நிற்பான் என்று உறுதிமொழி தருகிறேன்.'

பன்னு நன்னூக்கை ஏறிட்டு நோக்கினாள். ஒருகணம் இருவரின் விழிகளும் சந்தித்தன. எத்தனை ஜன்மங்கள் எடுத்தாலும் குறையாத நம்பிக்கை அதிலே ஒளி வீசியது.

மூடிய கதவை வெளியே இழுத்துத் திறக்க பலவந்தமாக முயற்சி செய்துகொண்டிருந்தார்கள்.

நன்னூக் வெறி கொண்டவன் போல், 'சர்க்கார், சீக்கிரம்...' என்று கத்தினான்.

மறு கணம் பன்னு படகில் இருந்தாள்.

நன்னூக் கதவருகில் இன்டாகருடன் நின்றான். சேத்ராம் ஒரு கடிதத்தை மணியார் சிங்கிடம் கொண்டு வந்து கொடுத்தான். 'தங்கள் ஆட்கள் கலகம் செய்து கொண்டிருக்கின்றனர். இனி என் ஆட்கள் சுடுவதைத் தடுக்க முடியாது—லெப்டினென்ட்.'

'என்னுடைய ஆட்கள் இங்கே எங்கே இருக்கிறார்கள்?' என்று சிரித்துக்கொண்டே வினவினார் மணியார் சிங், வெளியே ஆரவாரமும் கூச்சலும் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

'முதலில் சேத் சிங்கைக் கைது செய்யுங்கள்' என்றான் சேத்ராம்.

'யாருக்கு அத்தனை துணிச்சல்?' என்று வினவியவாறே வாளை உருவினார், மணியார் சிங். அவர் வாயை மூடுவதற்குள் குப்ரா மௌல்வி அங்கே தோன்றினான். இங்கே தன் அதிகாரம் ஒன்றும் செல்லாது, இப்பொழுது வெளியிலும் போக முடியாது என்பது மௌல்விக்கு தெரியும். சேத்ராமை நோக்கி, 'என்ன பார்த்துக்கொண்டிருக்கிறாய், சேத்ராம்?' என்றார் குப்ரா மௌல்வி.

சேத்ராம், மகாராஜாவின் மீது கை வைப்பதற்குள் நன்னூக்கின் வாள் அவனது கரத்தைத் துண்டித்து

விட்டது, இண்டாகர் முன்னே வந்தான். மௌல்வி கூச்சலிட ஆரம்பித்து விட்டான், கண் இமைப்பதற்குள் இண்டாகரையும், அவனது தோழர்களையும் வெட்டி வீழ்த்திவிட்டான் நன்னூக். மௌல்வி சாகப் மட்டும் தப்பமுடியுமா என்ன?

'அன்று ஒரு அறை கொடுத்து உனக்கு அறிவுறுத்தினேனே! புத்தி வரவில்லையா? இந்தா, அயோக்கியப் பதரே!' நன்னூக்கின் ஒரே வீச்சில் குப்ரா மௌல்வி மண்ணில் சாய்ந்து விட்டான். சில நிமிடங்களில் ஒருவரும் எதிர்பாராத பயங்கரச் சம்பவம் நடந்துவிட்டது.

'என்ன பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள் மகாராஜா? படகில் ஏறுங்கள்!' என்று கூவினன் நன்னூக். அவன் உடலிலிருந்து குருதி கொப்பளித்துப் பெருகிக் கொண்டிருந்தது.

அங்கே வாயிலின் வழியே சிப்பாய்கள் உள்ளே வந்து கொண்டிருந்தனர். சாளரத்தின் வழியே இறங்கிக் கொண்டிருந்த சேத்சிங், இருபது துப்பாக்கிச் சனியன்களுக்கு இடையேயும் நன்னூக் சற்றும் கலங்காமல் வாளைச் சுற்றிச் கொண்டிருப்பதைக் கண்டான்.

அவனது பாறை போன்ற உடலிலிருந்து செங்குருதி தாரையாகப் பெருகிக்கொண்டிருந்தது. குண்டனை நன்னூக்கின் உடலின் ஒவ்வொரு அங்கமும் வெட்டுண்டு கீழே விழுந்துகொண்டிருந்தது. ஆயினும் அவனது வாள் சுழன்றுகொண்டிருந்தது.

அவன்தான் காசிப் பட்டினத்துச் சோதா. இல்லை குண்டன்!

## கொலுசு

*1*

கடையில் புது மோஸ்தர் கொலுசு வந்திருக்கிறது. காலில் அணிந்தால் ரொம்ப அழகாக இருக்கிறது. கண்ணிகள் தளரத் தளரப் பிணைந்து நிற்கின்றன. யார் அணிந்தாலும் அந்தக் கால்களுக்கேற்ப அமைந்து விடும் ஒரு அமைப்பு அதற்கு.

அக்கம் பக்கத்தில் சிறிய, பெரிய, பெண்களின் கால்களிலெல்லாம் இந்தக் கொலுசைக் காணலாம். முதலில் ஒருத்தி வாங்கி அணிந்து கொண்டாள். பிறகு இன்னொருத்தி வாங்கினாள். இதன் பின் ஒருவரைப் பார்த்து மற்றொருவரென்று இதை அணியாதவர்களே அரிதாகி விட்டது.

முன்னி வந்து. 'அப்பா, எனக்கும் கொலுசு வேண்டுமப்பா' என்றாள். நீங்களே சொல்லுங்கள். இன்னும் நான்கு வயது நிரம்பவில்லை. கொலுசு போட்டுக் கொள்வாளாம்.

'என்ன மாதிரிக் கொலுசு?' என வினவினேன் நான்.

'ருக்மத் போட்டிண்டு இருக்காளே. சீலா போட்டிருக்கிறாளே. அது மாதிரி.'

'ரொம்ப சரி' என்றேன் நான்.

'எனக்கு இன்றே வேண்டும்' என்றாள்.

'ஆகா இன்றே வாங்கலாம்' என்றேன்.

குழந்தை அத்துடன் அந்த விஷயத்தை மறந்துவிட்டாள். நல்லவேளை. ஆனால் மத்தியானம் முன்னியின் அத்தை, என் தங்கை, வந்ததும் முன்னி எளிதில் விடவில்லை.

அத்தை அவளுக்கு மிட்டாய் தந்தாள். மடியிலெடுத்து

வைத்துக் கொண்டு கொஞ்சினாள். 'அடுத்த ஞாயிற்றுக் கிழமை உனக்குக் கட்டாயம் கொலுசு வாங்கிக் கொண்டு வருகிறேன்' என்றும் சொன்னாள்.

ஞாயிற்றுக்கிழமை வந்தது. அத்தையும் வந்தாள். கொலுசும் வந்தது. கொலுசைப் போட்டுக்கொண்டு, அது கலீர் கலீரென ஒலிக்க குழந்தை அங்குமிங்கும் வளைய வந்தாள். ருக்மத்திடம் ஓடிப்போய் 'பாரடி, என் கொலுசை' என்று காட்டினாள். சீலாவிடம் சென்று காட்டினாள். அவள் புது கொலுசு அணிந்திருந்ததைப் பார்த்து எல்லோரும் அவளைக் கொஞ்சினார்கள். புகழ்ந்தார்கள். உண்மையிலேயே கொலுசு அழகாய்த்தானிருந்தது சிறு சிறு கண்ணிகளால் பின்னப்பட்ட பளபளக்கும் வெள்ளி சரங்கள் கணுக்காலைத் தழுவித் தழையப் படிந்து நின்றது பார்க்க மிக அழகாகத்தானிருந்தது. குழந்தையின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

பெரியவர் ஆசுதோஷ் இருக்கிறாரே! முன்னியின் அண்ணா! காலில் கொலுசைப் போட்டுக்கொண்டு அவள் அலங்காரமாக நின்றதும் அகமகிழ்ந்து போனார் முதலில். தன் அழகான தங்கை முன்னியின் கையைப் பிடித்துக் கொண்டு, அக்கம் பக்கமெல்லாம் புது கொலுசைக் காட்ட அழைத்துச் சென்றார், நம் பெரியவர். முன்னியின் கொலுசுக்குக் கிடைத்த பெருமையெல்லாம் தனக்குக் கிடைத்த பெருமைபோல் ஒரு சந்தோஷம். ரொம்பவும் மகிழ்ச்சி. உரக்கச் சிரித்தான். கைகொட்டி ஆர்பரித்தான். ஆனால் சற்று நேரத்திற்குப் பின் முரண்ட ஆரம்பித்துவிட்டான். 'முன்னிக்கு மட்டும் கொலுசு வாங்கித் தந்தாயே. எனக்கும் சைக்கிள் வாங்கித் தா.'

'சரிடா கண்ணு, பிறந்த நாளுக்கு உனக்கும் சைக்கிள் வாங்கித் தருகிறேன்' என்றாள் அத்தை.

'எனக்கு இப்பவே வேண்டும்' என்றார் நம்ப பெரியவர்.

'சீச்சி நீ என்ன பெண் பிள்ளையா? பெண்கள் தான் பிடிவாதம் பிடிப்பார்கள். அழுவார்கள், ஆண் பிள்ளைகள் எங்கேனும் அழுவார்களோ?'

முடிவில் நம்ப ஆசுதோஷ் அவர்கள் தன் பிறந்த நாளுக்குக் கட்டாயம் சைக்கிள் வாங்கித் தரவேண்டும் என்ற உறுதிமொழியுடன் அமைதியடைத்தார்.

'கட்டாயம் வாங்கித் தருகிறேன். பிறந்த நாளன்று உனக்கு சைக்கிள்' என்றும் அத்தை சொல்லி விட்டாள்.

இப்படியாக அந்த ஞாயிற்றுக்கிழமை சிரிப்பும் களிப்புமாகக் கழிந்தது. மாலையில் அத்தை புறப்பட்டுப் போய் விட்டாள். கொலுசின் மகிழ்ச்சியெல்லாம் கொஞ்ச நேரத்திற்குத் தானே? தொலைந்து போய்விடும் என்று அது கழற்றி வைக்கப்பட்டு விட்டது.

நுட்பமான நகாசு வேலைப்பாடு. நல்ல விலையுங் கூட. கொலுசு அழகாக இருந்தது.

'பார்த்தீர்களா, எவ்வளவு அழகாய் இருக்கிறது? நான் கூட ஒன்று பண்ணிக் கொள்ளட்டுமா?' என்றாள் என் மனைவி.

'பண்ணிக் கொள்ளேன் தாராளமாக···உனக்கென்ன நாலு வயசா?' என்றேன்.

அவள் பேசவில்லை.

விஷயம் இத்துடன் நின்றது. இரவு நான் மேஜையடியில் உட்கார்ந்திருந்தேன். என் மனைவி ஓடி வந்தாள். 'கொலுசைப் பார்த்தீர்களா?'

'என்ன கேட்கிறாய்?' என்றேன் வியப்புடன்.

'மேஜைமேலே இருக்கிறதா பாருங்கள். ஒன்று இருக்கிறது இங்கே. இன்னொரு காலுடையதைக் காணோம். எங்கே போயிற்றோ தெரியவில்லை.'

'எங்கே போகும்? இங்கு தான் எங்கேயாவது கிடக்கும். நன்ருகப் பார். கிடைக்கும்' என்றேன்.

அவள் என் மேஜை மீது குவிந்திருந்த காகிதக்கட்டு களைக் கிளறினுள். புரட்டி கிரட்டிப் பார்த்தாள். அல மாரியிலிருக்கும் புத்தகங்களை யெல்லாம் கூட நகர்த்திப் பார்க்கவேண்டும் என்ற அவளது விருப்பமும் வெளிப் படை.

'இதெல்லாம் என்ன? அது இங்கே எங்கே வந்தது?' என்று சீறினேன்.

பதிலுக்கு என்னையே கேட்டாள். 'பின் எங்கே போகும்?'

'நீ தான் எங்கேயாவது வைத்திருப்பாய். எங்கே வைத்தாய்?'

மத்தியானம் இரண்டு மணிக்குப் பிறகு முன்னியின் காலிலிருந்து கழற்றி இரண்டையும் மிக பத்திரமாக, கீழே யிருக்கும் பெட்டியில் தான் வைத்தாளாம். இப்பொழுது பார்த்தால் ஒன்று இருக்கிறது. ஒன்றைக் காணும்.

'அப்படியென்ருல் அதற்குக் கால் முளைத்து இங்கு நடந்து வந்து விடுமா?' என்றேன் நான். 'மறந்து போயி ருப்பாய். ஒன்றை எடுத்து வைத்திருப்பாய். இன் ஞென்று அங்கு தான் தரையில் எங்கேயாவது கிடக்கும். போய்த் தேடிப்பார் கிடைக்கும். எங்கும் போகாது.'

அவ்வளவு தான், ஆரம்பித்து விட்டது ரகளை. 'நீங்கள் எப்பொழுதுமே இப்படித்தான். உங்களுக்கே கவனம் கிடையாது. என்னைக் குற்றம் சொல்ல வந்து விட்டீர்கள். நான் தான் இரண்டையும் நன்ருய்ப் பார்த்து எடுத்து வைத்தேன் என்று சொல்லுகிறேனே'.

'பத்திரமாய் வைத்திருந்தால் இங்கே வந்து எதற்காகக் கிளறுகிருய்? எங்கே வைத்திருந்தாயோ அங்கிருந்தே எடுத்துக்கொள்வது தானே? அப்படி அங்கே அது இல்லை யென்ருல் யாராவது எடுத்திருக்கவேண்டும்.'

'நானும் அப்படித்தான் நினைக்கிறேன்' என்ருள் அவள். 'வேலைக்காரன் வம்சி இருக்கிருனே அவன்தான் எடுத்திருக்க வேண்டும். நான் அதை வைத்தபோது அவன்தான் அங்கே நின்ருன்.'

'அவனைக் கேட்டாயா?'

'அவன் இல்லவேயில்லை என்கிருன்.'

'ஊம்...அப்புறம்?'

'அப்புறம் என்ன சொல்லட்டும்?' குரல் சற்று உரக்கவே ஒலித்தது. 'உங்களுக்கெல்லாம் இதெல்லாம் அக்கரையே கிடையாதே. அந்த வம்சியைக் கூப்பிட்டு உரக்க இரண்டு மிரட்டு மிரட்டுங்களேன். கட்டாயம் அவன் தான் எடுத்திருக்க வேண்டும்.'

'சொல்லு, என்ன சொல்லட்டும்? "இந்தாடாப்பா... கொலுசைக் கொடுத்துவிடு" என்று சொல்லட்டுமா?'

'போதுமே நீங்கள் கேட்கிற அழகு?' எரிச்சலுடன் பேசினுள் அவள். 'வேலைக்காரர்களுக்கு இடம் கொடுத்துத் தலைக்குமேல் வைத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஒரு அதட்டலா, மிரட்டலா, ஒன்றுங் கிடையாது. வேலைக்காரன் தலைக்குமேல் ஏருமல் என்ன செய்வான்? நான் தான் சொல்லுகிறேனே. யாரோ தான் பெட்டியிலிருந்து அதை எடுத்திருக்கிருர்கள். முக்காலும் இது வம்சியின் வேலையாகத்தானிருக்கும். காதில் விழுகிறதா? அவனே தான் எடுத்திருப்பான்.'

நான் வம்சியிடம் கேட்டேன். அவன் எடுக்கவில்லை எனத் தோன்றியது.

ஆனல் அவள் இதை ஏற்கவில்லை. 'உங்களுக்கு வேலைக்காரர்களைப் பற்றி ஒன்றும் தெரியாது' எனச் சாதித்து விட்டாள். 'அவர்களெல்லாம் கைதேர்ந்தவர்கள். அதிலும் இந்த வம்சி இருக்கிருனே. அவன் தான் உண்மையில் திருடன். அவனில்லாமல் வேறு யார், தேவதையா வந்து எடுத்திருக்கும்?'

'ஆசுதோஷிடம் விசாரித்தாயா?' என்றேன் நிதானமாக.

'கேட்டேன்' என்ற பதில் வந்தது. 'அவன்தானே பெட்டிக்கடியிலும், டிரங்குக்கு அடியிலும் புகுந்து புகுந்து தேடினுன். அவன் எடுத்திருக்க மாட்டான்.'

'பட்டம் விடுவதென்ருல் அவனுக்கு ரொம்ப குஷி' என்றேன்.

'நீங்கள் அவனைக் கண்டித்து வைத்தால்தானே? ஒன்றும் சொல்லுவதோ, மிரட்டுவதோ இல்லை. வய தென்னமோ ஆகிக்கொண்டே போகிறது. அப்புறம் இப்படியே விளையாட்டுப் பிள்ளையாக நின்று விடுவான். பட்டம் விடும் ஆசையைத் தூண்டி விட்டது யார்? நீங்கள் தானே?'

நான் பேச்சைத் திருப்பினேன். 'கொலுசு எங்கே யாவது கிடந்து அவன் கையில் கிடைத்திருந்தால்...?'

'ஊஹூம் இருக்காது. கிடைத்திருந்தால் சொல்ல மாட்டாளு?'

பேச்சுவாக்கில் அன்று மாலை ஆசுதோஷ் புதிய பட்ட மும் கயிற்றுச் சுருளும் வாங்கிக்கொண்டு வந்திருப்பதாகத் தெரிந்தது. பட்டம் விட அனுமதி தந்தது நீங்கள்தானே என்ற குற்றப் பத்திரிகையும் படிக்கப்பட்டது. 'நாள் முழு வதும் பட்டம் பட்டம்தான், அவனை உட்கார வைத்துப் பாடம் சொல்லிக்கொடுப்போம், நாலு கேள்வி கேட்போம் என்று கிடையாது. ஒரு நாளில்லாவிட்டால் ஒரு நாள் இந்தப் பட்டம் கயிறு எல்லாவற்றையும் பிய்த்துக் குப்பை யில் எறிந்துவிடப் போகிறேன், பாருங்கள், எப்பொழுது பார்த்தாலும் இருபத்தி நாலு மணி நேரமும் இதே பைத்தியம்.'

'சரி, விடு...காலையில் பார்த்துக்கொள்ளலாம்' என் றேன்.

பொழுது விடிந்ததும் ஆசுவைக்கூப்பிட்டனுப்பினேன். அவன் வந்ததும் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு முனைப்புடன்...'ஏண்டா, ஒரு கொலுசைக் காணேமே, நீ எங்கேயாவது பார்த்தாயா?' என்றேன்.

கோபித்துக்கொண்டவன்போல் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டான். எடுக்கவில்லை எனத் தலையை அசைத்தானே தவிர வாயைத் திறக்கவில்லை.

'இதோபார்...ஆசு. நீ எடுத்திருந்தால் அதனால் ஒன்று மில்லை. உண்மையைச் சொல்லிவிட வேண்டும்.'

அவன் முகம் இன்னும் உப்பியது. மௌனமாகவே நின்றான்.

என் மனத்தில் என்னென்னவோ எண்ணங்கள் தோன்றின. குற்றமிழைத்தவர்கள் பால் கருணையுடன் நடந்து கொள்ளவேண்டும். கோபப்படக் கூடாது. அன்பினால் தான் தவறு செய்யும் இயல்பைத் திருத்தி வெற்றி காண முடியும். அச்சுறுத்தி அதை அடக்கிவிடு வது சரியல்ல. இளம் சிறுவர்களின் இயல்பே மென்மை யானது. எப்பொழுதும் அன்புடனேயே அவர்களிடம் நடந்து கொள்ளவேண்டும்...இப்படி பல பல.

'ஆசு, பயப்படக் கூடாது, இதோ பார். உண்மை யைச் சொல்ல பயமே கூடாது. எடுத்திருந்தால் வெளிப் படையாகச் சொல்விடு. உண்மையைச் சொன்னால் நான் தண்டிக்கவா போகிறேன்? உண்மையைச் சொன்னால் இனாம் கிடைக்கும் தெரியுமா?'

ஆசுதோஷ் நான் சொல்வதையெல்லாம் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான். முகம் அதைத்துக் கிடந்தது. என்னை நிமிர்ந்து பார்க்கவில்லை அவன். இடையிடையே அவன் கோபப்படுவது தெரிந்தது.

'ஏண்டா ஆசு, நீ எடுக்கவில்லையா?'

தலையை ஆட்டிய வண்ணம், கோபத்தால் நடுங்கும்

குரலில் உரக்க... 'நான் எடுக்கவில்லை... எடுக்க வில்லை.' என்று கத்தினன். அழுகை வந்து விட்டதே தவிர அழவில்லை. கண்ணீரை அப்படியே அடக்கிக் கொண்டான்.

என் மனம் சொல்லிற்று, 'ஆத்திரம் குற்றத்தின் அறி குறி.'

'இதோ பாருடா, பயப்படாதே. போய்த் தேடிப் பார். எங்கேயாவது கிடந்தால் கிடைக்கும். கிடைத்து விட்டால் உனக்கு இனும்' என்றேன்.

அவன் போய் விட்டான். அடுத்த அறைக்குள் போய் முதலில் ஒரு மூலையில் நின்றுகொண்டான். சற்று நேரம் அப்படியே நின்று கொண்டிருந்து விட்டு, பின்னர் இங்கு மங்கும் கொலுசைத் தேடுவதில் முனைந்தான்.

'ஆசுவை விசாரித்தீர்களா? என்ன தோன்றுகிறது?' என என் மனைவி வந்து கேட்டாள்.

'எனக்கும் சந்தேகமாகத் தானிருக்கிறது. நிச்சயமா இது வேலைக்காரன் செய்த வேலை அல்ல' என்றேன்.

'இல்லையில்லை... ஆசு அதை எதற்காக எடுக்கப் போகிறுன்?' என்றுள் அவள்.

இதற்கு நான் பதிலொன்றும் கூறவில்லை. என் உள் ளத்தில் ஆசுவின் பால் அன்பு பொங்கிக் கொண்டிருந் தது. அதுவும் இச்சமயத்தில் ஆசுவின் மீது அனுதாபம் காட்டாமலிருக்கக் கூடாது. கொஞ்சம் அதிகப்படி யாகவே அன்பு காட்டவேண்டும். அன்போ அனு தாபமோ இன்றி நடந்து கொள்ளக் கூடாது என்று நினைத்தேன். இது ஒரு பெரிய துர்ச்சம்பவமாக எனக்குத் தோன்றிக்கொண்டிருந்தது. உண்மையில் ஆசு கொலு சைத் திருடியிருந்தால், குற்றம் அவனைவிட அதிகபட்ச மாக எங்களைத்தான் சாரும். குழந்தைகளிடம் திருடும் பழக்கம் ஏற்படுவது பயங்கரமான விளைவுகளைத் தோற்று

விக்க முடியும். ஆனால் இப்படிப்பட்ட ஒரு இக்கட்டான நிலைமை ஒரு குழந்தைக்கு ஏற்படவேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டதென்றால் அது பின்னும் பயங்கரமானது. இந்தத் திருட்டிலிருந்து நாங்கள் தப்பித்துக்கொள்ள இயலாது.

நான் அவனை மீண்டும் கூப்பிட்டேன். 'ஆசு, எங்கே என்னைப் பார் பார்க்கலாம்? கொலுசை நீ சுன்னுவிடம் கொடுத்தாயா, சொல்லு? கொடுத்தாய் அல்லவா?'

சற்று நேரம் அவன் ஒன்றும் பேசவில்லை. அவன் முகம் மாறிக்கொண்டேயிருந்தது. அவனது ஒவ்வொரு பாவத்தையும் நான் உன்னிப்பாகக் கவனித்தேன்.

கொஞ்சம் உற்சாக மூட்டினேன். 'பரவாயில்லை சொல்லு, பயப்படாதே. சரியாகச் சொல்லவேண்டும். நீ நல்ல பிள்ளையல்லவா?'

மிகுந்த சிரமத்துடன் அவன் தலை அசைத்தான்.

'சுன்னுவிடம் கொடுத்தாய் அல்லவா?' மகிழ்ச்சியுடன் மீண்டும் வினவினேன் நான்.

மீண்டும் தலையை அசைத்தான் அவன்.

மிக மிக இதமான, ஆறுதலளிக்கும் குரலில் 'எங்கே, வாயைத் திறந்து சொல். சுன்னுவிடம் கொடுத்தாய் அல்லவா?' என்றேன்.

'ஆமாம்.'

மிகுந்த மகிழ்ச்சியுடன் ஆசுவை இரு கரங்களாலும் வாரி அணைத்துக் கொண்டேன். 'நல்ல பிள்ளைகளென்றால் இப்படித்தானிருக்க வேண்டும். உண்மையைச் சொல்லவேண்டும். ஆசு, என் ராசாக்கண்ணு இல்ல...' பெருமிதத்துடன் அவனைத் தூக்கிக்கொண்டு அவன் அம்மாவைத் தேடிப் போனேன். 'பார்த்தாயா என் பிள்ளையை? உண்மையைச் சொல்லிவிட்டான். கொலுசை சுன்னுவிடம் கொடுத்தானும்' என்றேன் உல்லாசம் ததும்பும் குரலில்.

இதைக் கேட்டதும் அவன் அம்மாவிற்கு ஒரே சந்தோஷம். அவனை அணைத்து முத்தமிட்டாள். பாராட்டினுள். விரல்களைச் சொடுக்கி திருஷ்டி முறித்தாள்.

கண்களில் மிளிர்ந்த அந்த சோகத்தின் சாயல் முற்றும் மறையவில்லை. என்றாலும் ஆசுவின் முகத்திலும் லேசான புன்னகை அரும்பியது.

இதன் பின் அவனைத் தனியாக அழைத்துச் சென்றேன்.

'கொலுசு சுன்னுவிடம் இருக்கிறதல்லவா? போ. போய்க் கேட்டு வாங்கிக்கொண்டு வருகிருயா?' என்று அன்பு ததும்பக் கேட்டேன்.

ஆசு தோஷ் என்னையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

'போ, போய் வாங்கிக்கொண்டு வா.'

பதிலே பேசவில்லை அவன். வாயைத் திறந்தால் தானே?

நான் மிகவும் வற்புறுத்திய பின் 'சுன்னுவிடம் இருந்தால் தானே அப்பா கொடுப்பான்' என்ருன் ஆசு.

'அவன் யாரிடம் கொடுத்தானே அவன் பெயரைச் சொல்லட்டுமே.'

ஆசு வாயை மூடிக்கொண்டான். நான் மீண்டும் மீண்டும் கேட்டபோதெல்லாம் அதே பதில் தான் வந்தது. 'சுன்னுவிடம் இருந்தால்தானே அப்பா கொடுப்பான்.'

சலித்துப்போய், 'அது எங்கேயாவது இருந்துதானே தீரவேண்டும். அது சரி. நீ முதலில் இதைச் சொல்லு. நீ அதை எங்கேயிருந்து எடுத்தாய்?' என்று கேட்டேன்.

'கீழே கிடந்தது.'

'ஓகோ, நீ அதை எடுத்துக்கொண்டு கீழே இறங்கிப் போய் சுன்னுவிடம் காட்டினுயாக்கும்.'

'ஆமாம்.'

''நாம் இதை விற்றுவிடலாம்'' என்று அவன் சொன்ஞன். அப்படித்தானே?'

'க்கும்...'

'எங்கே விற்கலாமென்று சொன்ஞன்?'

'மிட்டாய் வாங்கலாம் என்று சொன்ஞன்.'

'ஓகோ.'

'இல்லே, பட்டம் வாங்கலாம் என்ருன்.'

'அப்படியா? பட்டம் வாங்கலாமென்ருஞ?'

'அப்படியென்ருல், கொலுசு சுன்னுவிடந்தான் இருந்தது...'

'க்கும்.'

'அப்போ....அது சுன்னுவிடம் தானே இருக்கும், இல்லேயா? இல்லாவிட்டால் பட்டம் விற்பவனிடம் இருக்கும். போ...போய் அதை வாங்கிக்கொண்டு வா. எங்கப்பா உனக்கு இனும் தருவார் என்று சொல்லு.'

ஆசு சுணங்கி நின்ருன். போக விரும்பவில்லே. மீண்டும் அதே பல்லவி வந்தது. 'சுன்னுவிடம் இருந்தால் தானே கொடுப்பான்.'

ஆசுவின் இந்தப் பிடிவாதத்தைக் கண்ட எனக்குக் கோபம் வந்தது. கேட்டேன். 'சொல்லுடா. அதை எங்கே யாவது புதைத்து ஒளித்து வைத்திருக்கிருயா? என்ன செய்தாய்? ஏன் பேச மாட்டேன் என்கிருய்?'

கண்கொட்டாது என்னேப் பார்த்தானே தவிர ஆசுவின் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வெளிவரவில்லே.

'ஏண்டா பேச மாட்டேன் என்கிருய்?'

ஒரே மௌனம். சலனமேயில்லே.

ஆத்திரத்துடன் கத்தினேன். 'போடா, போய் அது எங்கிருக்கிறதோ எடுத்துக்கொண்டு வா.'

அவன் அசையாது சிலேயாக உட்கார்ந்ததும் காதைப் பிடித்துத் தூக்கி நிறுத்தினேன். 'காதில் விழுகிறதா?

போய்க் கொலுசை எடுத்துக்கொண்டு வா. இல்லாவிட்டால் இந்த வீட்டில் உனக்கு இடமில்லை.'

இப்படி எழுப்பி நிறுத்திய பின் இடத்தைவிட்டு எழுந்த அவன் அறையை விட்டு வெளியே சென்றான். சென்றவன் வராந்தாவின் ஒரு மூலையில் போய் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு நின்றான்.

எனக்கு உள்ளூர ஒரே ஆத்திரம். இந்தப் பையன் உண்மையைச் சொல்லிவிட்டு இப்பொழுது எதற்காக இப்படிப் பயப்படுகிறான் என்பதே எனக்குப் புரியவில்லை. வெளியே வந்து தணிந்த குரலில் 'போடா, ஆசு. சுன்னுவிடம் போய் ஏண்டா கேட்க மாட்டேன் என்கிறாய்? என்றேன்.

முதலில் அவன் பதிலேதும் கூறவில்லை. வற்புறுத்திய பின் வந்த பதில்:

'சுன்னுவிடம் இருந்தால் தானே கொடுப்பான்'

மனைவியிடம் சொன்னேன். 'நீ போய் சொல். விலைக்கு விற்றிருந்தால் அந்த விலையை நாம் கொடுத்து விடலாம் புரிந்ததா? போய்க் கேள்'

தன் பிள்ளை இப்படிப்பட்ட காரியம் செய்யமாட்டான். அவன் கொலுசைக் கண்ணால் பார்க்கவேயில்லை என்றாள் சுன்னுவின் அம்மா.

'உங்கள் சுன்னு பொய் சொல்லுகிறான். ஏண்டா ஆசு. நீ கொலுசை சுன்னுவிடம் கொடுத்தாய் அல்லவா?' என்றாள் இவள்.

ஆசு மெதுவாகக் கூறினான்: 'ஆமாம்.'

சுன்னு பாய்ந்து வந்தான். முன்னால் கையை வீசிக் கொண்டு, 'டேய் ஆசு, என்னிடம் எங்கேடா கொடுத்தாய்? கொடுக்கவேயில்லை' என்றான் ஆத்திரத்துடன்.

ஆசு ஒரே பிடிவாதமாயிருந்தான். 'கொடுத்தேன்' என்று சாதித்தான். 'கொடுத்தேனேயடா. சொல்லு. நான் கொடுக்கவில்லையா?' என்றான் அழுத்தமாக.

முடிவு? சுன்னுவின் அம்மா சுன்னுவை அடித்து நொறுக்கினாள். தானும் ஓவென்று அழவாரம்பித்து விட்டாள. 'ஐயோ, நாங்கள் திருட்டுப் பட்டம் கட்டிக் கொண்டு விட்டோமே. குடியைக் கெடுக்கும் இந்தப் பிள்ளை என்று நான் ஒழியுமோ?'—என்ற புலம்பல் வேறு.

இதற்குள் விஷயம் எங்கும் பரவிவிட்டது. காற்று வேகமாய் வீச ஆரம்பித்து விட்டது. அக்கம் பக்கத்துப் பெண்கள் விசிறிவிட்டார்கள். கேட்கவேண்டுமா? வீட்டுக்குத் திரும்பி வந்த என் மனைவி 'இந்த சுன்னு, அவன் அம்மா, இரண்டு பேரும் ஒன்று தான்' என்றாள்.

'நீ ஏன் இப்படி ஆத்திரத்துடன் பேசினாய்? ஆத்திரப் பட்டால் இந்தக் காரியமெல்லாம் நடக்குமா?' என்றேன் நான்.

'நான் தான் கத்துகிறேன். ஆத்திரப்படுகிறேன். நீங்கள் போய் அவர்கள் வீட்டிலிருந்து கொலுசை வாங்கிக்கொண்டு வருவதுதானே பார்க்கலாம் உங்கள் சாமர்த்தியத்தை.'

'கொலுசை விட அமைதிதான் முக்கியம். அமைதியை இழப்பதால் கொலுசு கிடைத்துவிடப் போவதில்லை' என்றேன்.

ஏதோ முணுமுணுத்துக்கொண்டு அவள் கோபத்துடன் போய்விட்டாள்.

சற்று நேரத்திற்கெல்லாம் சுன்னுவின் அம்மாவே எங்கள் வீட்டிற்கு வந்தாள். என் மனைவி தான் அவளை அழைத்து வந்திருக்கிறாள். இப்பொழுது அவர்களிடையே சூடு தணிந்து விட்டிருந்தது. அந்த அம்மாள் என்னெதிரே வந்து 'சுன்னு தான் கொலுசை எடுக்கவேயில்லை என்கிறான். அந்தக் கொலுசு என்ன விலையோ அதை வேண்டுமானாலும் நான் தந்து விடுகிறேன்' என்றாள்.

'இதென்ன இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்? குழந்தைகள் ஏதோ இப்படி...ஆமாம். அவனிடம் இதமாக விசாரித்துப் பார்த்தீர்களா?' என்றேன்.

அந்த அம்மாள் சுன்னுவையே பிடித்திழுத்து வந்து என் முன்னே நிறுத்திவிட்டாள்.

'சொல்லேண்டா. நீ கொலுசைப் பார்த்திருந்தால் வாயைத் திறந்து சொல்லுடா' என்ருள்.

சுன்னு தலையை வேகமாக ஆட்டி மறுத்தான். 'கொலுசை நான் ஆசுதோஷ் கையில் பார்த்தேன். அவன் அதைப் பட்டம் விற்பவனிடம் கொடுத்து விட்டு வந்து விட்டான். நான் நன்ருகப் பார்த்தேன். வெள்ளிக் கொலுசு' என்ருன் சுன்னு.

'உனக்குச் சரியாகத் தெரியுமா?'

'ஓ தெரியும், என்கிட்ட நீயும் வாடா பட்டம் வாங்கலாம் என்ருன்.'

'கொலுசு எத்தனை பெரியது? எப்படி இருந்தது சொல்லு பார்க்கலாம்?'

சுன்னு கூறிய விவரங்கள் சரியாக இருந்தன.

நான் அந்த அம்மாளை நோக்கி, 'பார்த்தீர்களா? முதலில் கொலுசைப் பார்க்கவேயில்லை என்ருன். இப்பொழுது இதையெல்லாம் சொல்லுகிருன்' என்றேன்.

அந்த அம்மாள் என்னெதிரிலேயே சுன்னுவைத் தர தரவென்று இழுத்து தம் தொம் என மொத்த ஆரம்பித்துவிட்டாள். 'ஏண்டா, பொய் வேறு ஏண்டா சொல்லறே? உன் தோலை உரிக்காவிட்டால் என் பெயர் ... இல்லை.'

இடையிலே குறுக்கிட்டு நான் சுன்னுவைக் காப்பாற்றினேன். அடிபட்டுக்கொண்டும் அசையாது வீரன்போல் நின்ருன். அழவேயில்லை, ஆனல் மூலையில் நின்ற ஆசுதோஷை அவன் பார்த்த பார்வையிருக்கிறதே...?

ஒருவாறு எல்லோரையும் அனுப்பிவைத்தேன்.

'சுன்னு, போடா. போய் விளையாடு' என்று அனுப்பினேன். அவன் அம்மாவிடம், 'இப்படிப் போட்டு அடிக்காதீர்கள். கொலுசு அப்படியென்ன பிரமாதமான பொருள்?' என்றேன்.

சுன்னு ஓடி விட்டான். 'அவன் அம்மாள் போகவில்லை. 'சுன்னுதான் எடுத்திருப்பான் என நினைக்கிறீர்களா?' என்றாள் மீண்டும்.

'அவனுக்கு இது பற்றிக் கொஞ்சம் தெரியும். அவன் இதில் சம்பந்தப்பட்டிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது' என்றேன்.

இதைக் கேட்டதும் அந்த அம்மாள் அருகிலிருந்த என் மனைவியிடம் 'நீங்கள் வாருங்கள் என்னுடன். வீடு முழுவதையும் காண்பித்து விடுகிறேன். எல்லாவற்றையும் பார்த்து விடுங்கள். கொலுசு இருந்தால் எங்கே போய்விடும்?' என்றாள்.

நான் இடைமறித்தேன். 'இதெல்லாம் என்ன? அநாவசியமாய் விஷயத்தை வளர்த்திக்கொண்டு போவதால் பயன் என்ன?' என்று ஒருவாறு அந்த அம்மாளை சமாதானப்படுத்தினேன். இல்லாவிடில் சுன்னுவை அடித்துக் கொன்றுவிடுவதாக அந்த அம்மாள் சபதம் போட்டுக் கொண்டு இருந்தாள். 'நாசகாலன் இன்று அவனைக் குழியைத் தோண்டிப் புதைக்காவிட்டால் ... பார் ... என் பெயர் ...'

ஹூம். ஒரு மாதிரியாக அமர்க்களம் அடங்கியது. இந்தக் குழப்பத்திலும் சந்தடியிலும் எனக்குக் காரியாலயம் செல்லத் தாமதமாகிவிட்டது. போகும் முன் மனைவியை அழைத்து 'இதோ பார். ஆசுவை மிரட்டாதே, நயமாக எல்லா விஷயங்களையும் விவரமாகக் கேட்டுக் கொள். மிரட்டுவதால் குழந்தை மூர்க்கமாகி விடுகிறார்

கள். பயனில்லாமல் போய் விடுகிறது. புரிந்ததா?' என்று அறிவுறுத்திவிட்டுப் போனேன்.

மாலையில் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பியதும் ஆசுதோஷ் எல்லா விஷயத்தையும் கூறி விட்டான் என அறிவித்தாள் என் மனைவி. பதினேரு அணுவிற்கு அவன் கொலுசைப் பட்டம் விற்பவனுக்குக் கொடுத்து விட்டானும். அந்தக் காசைக்கூடக் கொஞ்சம் கொஞ்சமாகத் தருவதாகப் பட்டம் விற்பவன் கூறி விட்டானும். ஐந்தே அணுதான் கையிலே கொடுத்தானும். அதுவும் கூட சுன்னுவிடம் தானிருக்கிறதாம். இப்படி ஒவ்வொரு சிறிய விஷயத்தைக் கூட ஆசு சொல்லிவிட்டானும். 'நான் ரொம்ப நயமாக, அன்பாக விசாரித்து அவன் வாயில், வயிற்றிலிருக்கும் விஷயங்களையெல்லாம் கூடத் தெரிந்துகொண்டு விட்டேன்' எனப் பெருமிதத்தோடு கூறினுள் அவள். என்ன குழந்தையப்பா? இதற்காக இரண்டு மூன்று மணி நேரம் மண்டையை உடைத்துக் கொண்டேன்' என்ருள்.

இதைக் கேட்க எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. நல்லதாகப் போயிற்று. ஐந்தணுவைக் கொடுத்தனுப்பி அந்தக் கடைக்காரனிடமிருந்து கொலுசை வாங்கிக் கொண்டு வரச் சொல்லலாம் என நினைத்துக்கொண்டேன். 'அந்தப் பட்டக்காரன் தான் எத்தனை பெரிய அயோக்கியன்? குழந்தைகளிடமிருந்து இப்படியா பொருள்களைப் பறிப்பது? அவனைப் போலீசில் பிடித்தல்லவா கொடுக்கவேண்டும்? அயோக்கியப் பயல்.'

'ஆசுதோஷ் எங்கே?' என்று கேட்டேன்.

'வெளியே எங்கேயாவது விளையாடிக் கொண்டிருப்பான்' என்று பதில் வந்தது. அவனைக் கூட்டிக்கொண்டு வரும்படி வம்சியை அனுப்பினேன். வம்சி வந்து அவன் தானே வருவதாகச் சொன்னதாகக் கூறினுன்.

'என்ன செய்துகொண்டிருக்கான்?' எனக்கேட்டேன்.

'சுன்னுவோடு கில்லி தண்டு விளையாடிக் கொண்டிருக்கிறான்.'

சற்றைக்கெல்லாம் ஆசு வந்து விட்டான். அவன் வந்ததுமே தூக்கி மடியில் உட்கார்ந்திக் கொண்டேன். அறைக்குள் வரும்பொழுதே அவன் முகம் வாடி கடுகாய் சிறுத்து விட்டது. நான் மடியில் எடுத்து உட்கார வைத்துக் கொண்டதில் அவன் விசேஷ மகிழ்ச்சியடைந்ததாகத் தெரியவில்லை.

'நம்ப ஆசு ரொம்ப சமர்த்து. தானே எல்லா விஷயத்தையும் கூறிவிட்டான். ஆசு ரொம்ப நல்ல பையன். உண்மைதான் பேசுவான்' என்றாள் அவன் அம்மா.

ஆசு நிச்சலனமாய் என் மடியில் வீற்றிருந்தான். தன்னைப் பற்றிய புகழுரையைக் கேட்ட பின் கூட அவன் மகிழ்ச்சி அடைந்ததாகத் தெரியவில்லை.

'இந்தா புறப்படு. இனிமேல் என்ன? உனக்கு ஐந்தணா தானே கிடைத்தது? இந்த ஐந்தணாவை என்னிடம் கேட்டிருந்தால் தந்திருக்க மாட்டேனா? இதோ பார். இனிமேல் இப்படியெல்லாம் செய்யக்கூடாது' என்றேன் நான்.

ஆசுவை என் அறைக்கு அழைத்துச் சென்று விசாரிக்கத் துவங்கினேன்.

'ஏண்டா ஆசு, பட்டக்காரன் ஐந்து அணாதான் உன்னிடம் கொடுத்தானா?'

'ம்'

'அது சுன்னுவிடம் இருக்கிறதா?'

'ம்'

'இப்பொழுது இருக்கும் இல்லையா?'

'இல்லை.'

'செலவு செய்து விட்டீர்களா?'

'இல்லை.'

'செலவு செய்யவில்லையா?'

‘ஆமாம்.’

‘செலவு செய்தீர்களா, இல்லையா?’

ஆசு இக்கேள்வியைக் கேட்டதும் என்னையே பார்த்துக்கொண்டு நின்றான். பதில் கூறவில்லை.

‘சொல்லுடா. செலவு செய்துவிட்டாயா? இன்னும் இருக்கிறதா?’

ஒரு முறை ‘ஆமாம்’ என்றான். இன்னொருமுறை ‘இல்லை’ என்றான்.

‘எனக்குத் தெரியாது என்று சொல்லுகிறாயா?’

‘ஆமாம்.’

‘தெரியாது உனக்கு?’

‘ஊஹூம்.’

‘பட்டக்காரனிடமிருந்து காசை சுன்னுதான் வாங்கிக் கொண்டானா?’

‘ஆமாம்.’

‘நீ ஏன் வாங்கிக்கொள்ளவில்லை?’

பதில் இல்லை.

‘ஐந்து ஓரணாவா அல்லது, இரண்டணா அப்புறம் சில்லரையா?’

மௌனம்.

‘ஏண்டா பேச மாட்டேன் என்கிறாய்?’

மௌனம்.

‘சொல்லு, எத்தனை ஓரணா இருந்தது?’

‘இரண்டு.’

‘மீதமெல்லாம் சில்லரையா?’

‘ஆமாம்.’

‘இரண்டணா இல்லையா?’

‘ம்’

‘இரண்டணா இருந்ததா?’

‘ம்’

எனக்குக் கோபமாய் வந்தது. 'ஏண்டா உண்மையைச் சொல்லமாட்டேன் என்கிருய்'என அதட்டினேன். 'உண்மையைச் சொல். எத்தனை ஒரணு? எத்தனை இரண்டணு? மொத்தம் எத்தனை காசு இருந்தது?'

கட்டைபோல் நின்ருன் ஆசு.

'சொல்ல மாட்டாயா?'

வாய் திறக்கவில்லை.

'காது கேட்கிறதா, சொல்லு, இல்லாவிட்டால்...?'

ஆசு அரண்டு போனுன். ஆனுல் வாயைத் திறக்கவில்லை.

'நான் என்ன கேட்கிறேன் என்பது காதில் விழுகிறதல்லவா?' ஆசுவின் காதைப் பிடித்துத் திருகி தர தரவென என் அருகில் இழுத்தேன். கண்ணீர் பெருக்காமல் அடமாக நின்ருன் அவன்.

'பேச மாட்டாய் நீ?'

பயத்திஞல் முகம் வெளுத்து விட்டது. ஆனுல் ஒரு சொல் கூட வாயைவிட்டு வெளியே வரவில்லை. நான் உரக்க கத்தினேன். 'ஏய் வம்சி, இங்கே வாடா. இவனைக் கொண்டு போய் அந்த அறையில் தள்ளிக் கதவைச் சாத்து.'

வம்சி அவனைத் தூக்கிக்கொண்டு போய் அறையில் விட்டு, கதவை மூடிக்கொண்டு வந்தான்.

பத்து நிமிடங்களுக்குப் பின்னர் அவனை மீண்டும் அழைத்து வரச் சொன்னேன். முகம் வீங்கி அதைத்து இருந்தது. வாயைத் திறந்து பேசாவிட்டாலும் உதடுகள் துடித்தன. அறையில் போட்டுக் கதவை மூடி வைத்த பின்னும் கூட அவன் அழவில்லை. அப்படியே உறைந்து போனவன் போல் நின்ருன்.

'இப்பொழுதாவது புத்தி வந்ததா?' என்று இரைந்தேன் நான்.

கேட்டுக்கொண்டே நின்ருன் அவன்.

'சொல்லுடா, அந்தப் பட்டம் விற்பவன் யார்? வலது புறத்தில் அந்த நாற்சந்தி முனையில் இருக்கிறனே அவன் தானே?'

ஆசுவின் உதடுகள் அசைந்தன, தனக்குள்ளே ஏதோ முணு முணுத்துக் கொண்டான். எனக்குப் புரியவல்லை.

'அந்த நாற் சந்தி முனையில் இருப்பவனு? சொல்லுடா?'

'ஆமாம்.'

'இதோ பார், சித்தப்பா உன் கூட வருவான். அவன் யார் என்பதை சித்தப்பாவற்குக் காட்டு. பிறகு நாங்கள் பார்த்துக்கொள்கிறோம், புரிகிறதா?'

நான் என் தம்பியைக் கூப்பிட்டேன். எல்லா விஷயத்தையும் கூறிவிட்டு. 'இந்தா. ஐந்தணு எடுத்துக்கொண்டு போ. முதலில் நீ தூர எட்ட நின்றுகொள். ஆசு காசைக்கொண்டு போய் அவனிடம் கொடுத்துவிட்டு கொலுசைக் கேட்பான். அவனுக்க் கொலுசைக் கொடுத்து விட்டால் சரி. இல்லாவிட்டால் மிரட்டு. போலீசில் சொல்லிவிடுவோம் என்று பயமுறுத்து. குழந்தைகளிடமிருந்து ஏமாற்றிப் பொருள் பறிக்கிருயா? என்று மிரட்டு, புரிந்ததா? நயமாகப் பேச வேண்டிய அவசியமில்லை.'

'ஏய் ஆசுதேஷ், சித்தப்பா வருகிறுர். கூடப்போ'

ஆசு அசையவில்லை, நான் கூறியதைக் கேட்டபின் கூட நகர்ந்ததாகத் தெரியவில்லை.

'போக மாட்டாயா?'

மாட்டேன் என்பதற்கு அறிகுறியாக தலையை அசைத்தான்.

'ஆசு, இதோ பாருப்பா. நம்ப வீட்டு சாமான் அது. விலையுயர்ந்த பொருள். ஐந்தணுவிற்காக இத்தனை விலையுயர்ந்த பொருளை யாரேனும் இழப்பார்களா?' நான் மிகவும் இதமாக நயமாக அவனை வழிக்குக் கொண்டு வருவதில் முனைந்தேன். 'நீ ஒன்றும் சொல்ல வேண்டாம்.

சும்மா சித்தப்பா கூடப் போனால் போதும். காசைக் கொடுத்துவிட்டு நம்ப பொருளைத் திரும்ப வாங்கிக் கொள்ளவேண்டும். கொடுத்தால் கொடுக்கட்டும். கொடுக்காவிட்டால் போகட்டும், உனக்கும் இதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. உண்மை தானே ஆசு? என்ன நான் சொல்வது? இனி புறப்படு, போ.'

ஆசு அசையும் வழியாக இல்லை. அவனுடைய துணிச்சலைக் கண்ட எனக்குக் கடும் கோபம் வந்தது.

'சொல்லுடா, இதிலென்ன கஷ்டம் உனக்கு? எத்தனை நல்லதனமாய்ச் சொல்லுகிறேன். கேட்க மாட்டேன் என்கிறாய். புரிந்துகொள்ள மாட்டேன் என்கிறாய்.'

'...........'

'என்னடா, போகிறாயா, இல்லையா?'

மீண்டும் அதே தலையாட்டல், மறுதளிப்பு. என் சின்னத் தம்பி பிரகாஷைக் கூப்பிட்டேன். 'பிரகாஷ், இவனைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு போ.'

பிரகாஷ் அவனைத் தூக்கியதும் ஆசு கையையும் காலையும் உதைத்துக்கொண்டு திமிறினான். போக மறுத்தான்.

மிகுந்த சிரமத்துடன் சீற்றத்தை விழுங்கிக்கொண்டு ஆசுவிற்கு நல்ல வார்த்தைகள் கூறினேன். 'சமத்துப் பையனல்லவா? பயப்படாதே. நம்ப வீட்டுப் பொருள் திரும்பிவரப் போகிறது. அவ்வளவுதான். இது கூடவா புரியவில்லை உனக்கு? பிரகாஷ். இவனைத் தூக்கிக் கொண்டு போடா. கடை வீதியில் குழந்தை என்ன கேட்கிறானோ வாங்கிக்கொடு. ஆசு, போப்பா, போ.'

முகம் அப்படித்தான் உம்மென்றிருந்தது. கடைசியில் வெகு தூரம் சொன்ன பிறகு ஒருவழியாகப் பிரகாஷுடன் புறப்பட்டுப் போனான். அவனைப் பார்த்தால் காலடி எடுத்து வைப்பதே அவனுக்கு கனமாய், சுமையாய் இருப்பது போலிருந்தது.

'வயது எட்டாகப் போகிறது. இந்தப் பிள்ளைக்கு இன்னமும் ஒன்றும் புரியவில்லை பார்'—என்று ஓடியது என் சிந்தனை. கோபமும் ஆத்திரமுமாய் வந்தது. ஆனால் கோபித்துக் கொள்வதால் குழந்தைகள் திருந்துவதற்குப் பதில் கெட்டுப் போகிறார்கள் என்ற எண்ணம் பிறந்ததும், சிரமப்பட்டு என்னை அடக்கிக்கொண்டேன். நல்ல வேளை. ஒருவழியாய்ப் புறப்பட்டுப் போனானே என்றிருந்தது.

நிம்மதியாய் மூச்சுவிட்டேன். பார்த்தால் சற்றைக்கெல்லாம் பிரகாஷ், வந்து நிற்கிறான்.

'என்னடா?'

'ஆசு ஓடிவந்து விட்டான்.'

'எங்கேயடா அவன்?'

'முரண்டிக்கொண்டு நிற்கிறான். வீட்டிற்கு வர மாட்டானாம்.'

'போ, போய் பிடித்து இழுத்துக்கொண்டு வா.' பிடித்து இழுத்துக்கொண்டு வந்தாகிவிட்டது. 'ஏண்டா, போக்கிரித்தனத்தை விடமாட்டாயா? சொல்லுடா, போவாயா மாட்டாயா?'

அவன் பதிலே பேசாமல் நின்றதும் ஓங்கி இரண்டு அறை விட்டேன். ஓரடி விழுந்ததுமே அவன் கத்தினான். ஆனால் மறுகணம் வாயை மூடிக்கொண்டு விட்டான். சிலையாக அப்படியே நின்றான்.

கோபம் தாளாது நான் கத்தினேன் ... 'கொண்டு போங்கள் இவனை இங்கிருந்து. அறையில் போட்டு கதவை மூடிவையுங்கள். போக்கிரிக் கழுதை.'

இம்முறை அரை மணி நேரம் அறையில் அடைபட்டுக் கிடந்தான். நான் செய்வது சரியல்ல என்று எனக்குத் தோன்றியது. ஆனால் வேறு வழி எதுவும் எனக்குப் புலனாகவில்லை. அடித்து, மிரட்டி, வழிக்குக் கொண்டு

வரும் வழக்கம் மனத்திலே படிந்துவிட்டிருந்தது. வேறு பழக்கம் எதுவும் தெரியாது.

'இதனிடையே பிரகாஷிடம் நீயும் வம்சியுமாய்ப் போய் பாருங்கள். கொலுசை யார் வாங்கிக்கொண்டார்கள் என்று மெல்லத் தெரிந்துகொள்ளுங்கள். தெரிந்துகொண்டபின் கடுமையாக நடந்துகொள்ள வேண்டும். நைச்சியம், நயம் எதுவும் அவசியமில்லை, தெரிந்ததா?'

பிரகாஷ் போன சுருக்கில் வந்து விட்டான். கொலுசு அங்கே யாரிடமும் இல்லையாம்.

இதைக் கேட்ட எனக்கு எரிச்சலாய் வந்தது. 'உன்னால் ஒரு காரியமும் செய்ய முடியாது. இந்தச் சின்ன விஷயம் கூட உன்னால் முடியவில்லை என்றால் உன்னிடம் எதை எதிர்பார்ப்பது?'

அவன் ஏதோ விளக்க முற்பட்டான். 'சரி சரி, போ' என்றேன்.

பிரகாஷிற்கு என்னிடம் மரியாதை உண்டு. முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு போனான்.

அறையைத் திறந்து பார்த்தால் ஆசு தரையில் படுத்து அப்படியே தூங்கிவிட்டிருந்தான். அவன் முகத்தில் கண்ணீர் பெருகிய சுவடேயில்லை. உண்மையைக் கேட்டால் குழந்தையை அந்நிலையில் பார்த்தும் என் உள்ளம் அப்படியே உருகிப்போயிற்று. ஆனால் மனிதனிடம் ஒரே சமயத்தில் எப்படிப்பட்ட பரஸ்பர விரோதபாவங்கள் ஏற்படுகின்றன!

நான் அவனை எழுப்பினேன். அவன் அலறி அடித்துக்கொண்டு எழுந்தான்.

'என்னடா, எப்படி இருக்கிறது?'

சற்று நேரம் வரை அவனுக்கு ஒன்றுமே புரிந்ததாகத் தெரியவில்லை. மெதுவாகத்தான் அவனுக்குக் கடந்த சம்பவங்கள் நினைவு வந்தனபோலும். உடனே முகத்தில்

அதே பழைய இறுக்கம். கடுமை. பிடிவாதம் நிழலாடி யது.

'சொன்னபடி கேட்டு நட...இல்லாவிட்டால் மீண்டும் அறையில் வைத்துப் பூட்டி விடுவேன்.'

என் மிரட்டலுக்கு விசேடமாக பிரபாவம் ஏதும் ஏற் பட்டதாகத் தெரியவில்லை.

மீண்டும் அவனை வெளியே அழைத்து வந்து வெகு தூரம் புத்தி சொன்னேன். பையிலிருந்து ஒரு ரூபாயை எடுத்துக் கொடுத்தேன். 'இந்தா ஆசு, இதை அந்த பட்டம் விற்பவனிடம் கொடுத்துவிட்டு கொலுசைக் கேட்டு வாங்கி வா. இதில் பயப்படுவதற்கு ஒன்றுமே யில்லையடா போய்விடு. சமத்துப் பிள்ளையல்லவா நீ?'

'கொலுசு அவனிடம் இருந்தால்தானே கொடுப்பான்.'

'இப்படிச் சொல்லிக்கொண்டே இருந்தால் என்னடா அர்த்தம்? ஐந்தணாவிற்குக் கொலுசை அவனிடம் விற்ற தாக நீ தானேயடா சொன்னாய்? சுன்னுவை வேண்டு மானாலும் கூட அழைத்துக்கொண்டு போ.'

மேற்கொண்டு அவன் எதுவும் பேசவில்லை. ஒருவாறு போவதற்கு இசைந்தான். 'பிரகாஷுடன் போய்விட்டு வா' என்று அன்போடு கூறினேன். முகத்தை 'உம்' மென்று வைத்துக் கொள்வதைக் கண்டதும் எனக்குள் ஆத்திரம் மூளவே மிரட்ட வாயெடுத்தேன். இதற்குள் எதிரே அவன் அத்தை வருவது தெரிந்தது.

ஆசுவின் கேசத்தை வருடியவாறே 'எங்கேயடா போகிறாய் ஆசு? உனக்காக வாழைப் பழம், மிட்டாய் எல்லாம் கொண்டு வந்திருக்கிறேன்' என்றாள் அத்தை.

ஆசு முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு நின்றான். பேசவில்லை.

'அவன் போகட்டும், விடு' என்றேன் நான்.

ஆசு போகத் தயாராக இல்லை. முரண்டு பிடித்துக் கொண்டு நின்றான்.

'ஏன், என்ன விஷயம்?'

'ஒன்றுமில்லை. விட்டு விட்டு! போகட்டும்' என்றேன். ஆசு அழுது ஆர்ப்பாட்டம் செய்வான் போலிருந்தது.

ஒரு அதட்டல் போட்டேன் நான். 'பிரகாஷ், இவனை அழைத்துக்கொண்டு போ.'

'என்ன, என்ன?' என்று என் தங்கை கேட்டுக் கொண்டேயிருந்தாள்.

'ஏய் வம்சி, நீயும் கூடப் போ. நடுவழியில் ஓடி வந்து விடப்போகிறான், ஜாக்கிரதை.'

நான் கூறியதின் பேரில் இருவரும் ஆசுவை வலுக் கட்டாயமாகத் தூக்கிக்கொண்டு போனார்கள்.

'அவனை ஏன் இப்படித் துன்பப்படுத்துகிறீர்கள்?' என்றாள் என் தங்கை.

'ஒன்றுமில்லை...சும்மா...' என்று இழுத்தேன்.

இருவரும் பேச உட்கார்ந்து விட்டோம். அரசியல் நாட்டைப் பற்றியதாக மட்டுமல்ல. அவரவர் வாழும் வட்டாரம், ஊரைப் பற்றியும் இருக்கலாமே? பெண் களைத்தான் இதன் வளர்ச்சியின் பெரும் பங்கும் சாரும். எங்கே என்ன நடந்தது? நடக்கப்போகிறது? போன்ற பல விஷயங்களின் பிரசாரமும் அவர்களால்தான். பேச் சினிடையே என் தங்கை சிறியதொரு பெட்டியை என் முன்னே நகர்த்தி, 'நீ கேட்ட முக்கியமான தஸ்தா வேஜிகள் இருக்கின்றன...அப்புறம்...' என்றவள்... தன் மேல் கோட்டின் பையில் கையை விட்டுக் கொலுசை எடுத்து என் முன்னே வைத்தாள்.

தேளைக் கண்டது போல் திடுக்கிட்ட நான் 'இது என்ன?' என்று அச்சத்துடன் கூவினேன்.

'அன்று தவறுதலாய் ஒரு கொலுசு என்னுடன் வந்து விட்டது போலிருக்கிறது' என்றாள் அவள் நிதானமாக.

## பிறர் சுகம்

சூரியோதயமாகி விட்டதா என்றே தெரியவில்லை. கரியமேகத்திரள் வானத்தைச் சூழ்ந்து நின்றது. ஈரத்தின் கனமிகுந்த குளிர் காற்று சற்று வேகமாய் வீசிக் கொண்டிருந்தது. பதானகோட் ஸ்டேஷனின் பிரயாணிகளின் விடுதியில் மலைக்குச் செல்லக் காத்திருந்த பிரயாணிகள், உடைகளுக்குள்ளே புகுந்துகொண்டு லாரியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். லாரிகளின் டிரைவர்களோ பிரயாணிகளைத் தேடி இங்குமங்கும் ஓடிக் கொண்டிருந்தனர். பிரயாணத்தைத் தொடரவேண்டுமென பிரயாணிகளுக்கு எத்தனை கவலையும் ஆவலுமிருந்ததோ, அதை விட அவர்களை அவரவர் வீட்டில் கொண்டு போய்ச் சேர்க்கவேண்டுமென்று கவலைப்பட்டனர் டிரைவர்கள்.

ஸ்டேஷனின் நீண்ட பிளாட்பாரம் வெறிச் சோடியது. எப்பொழுதாவது ஒரு கூலி கண்ணில் பட்டான். அவ்வளவுதான். மிஸ்டர் சேடி தடித்த உல்லன் சூட்டும், ஓவர் கோட்டும் அணிந்தவனாய் பிளாட்பாரத்தின் ஓரத்தில் கல் பாவியிருந்த தளத்தில் மேலும் கீழுமாய் நடந்து உலவிக் கொண்டிருந்தான். அவனது கம்பளி உடைகளைத் துளைத்துக்கொண்டு அவனது உடலைத் தீண்டும் அத்தனை வலிவு அந்த மலைக்காற்றுக்கு இருக்கவில்லை. அவனது முகத்தையும் கேசத்தையும் மெல்ல வருடிச் சென்றது அது. எத்தனையோ பிரயாணிகளுக்கு உயிரைத் துளைத்தெடுக்கும் ஊதக் காற்றாயிருந்த அக்காற்றின் குளிர்ச்சி சேடிக்குப் புத்துணர்ச்சி ஊட்டியது. நிலவி நின்ற அமைதியினிடையே அவன் தனக்குள் தானே ஒன்றிவிட முயன்று கொண்டிருந்தான்.

லாரி டிரைவர்கள் பிரயாணிகள் தங்கும் விடுதியைச் சுற்றிச் சுற்றி வந்தனர். அவர்களுக்கு ஆள் சேர்த்தாக வேண்டும். கார் டிரைவர்களோ வெயிடிங்ரூம் ஜன்னல் வழியாக சற்றே அச்சத்துடன் தங்கள் புள்ளிகள் யார் என்பதை ஊகிக்க முயன்றனர். சேடியைக் கண்டதும் மிக பவ்யமாக சலாம் போட்டான் ஒருவன்.

'ரொம்ப கம்ஃபர்டபிள் வண்டி சார்.'

சேடி பதில் கூறவில்லை, சில்லென்று தவழ்ந்த குளிர் காற்றின் இனிமையை நுகர்ந்து கொண்டிருந்தவன் பதில் கூறி தனது அமைதியைக் கலைத்துக்கொள்ள விரும்ப வில்லை. அதற்கவசியமும் இல்லை. அவனைப் பொறுத்த வரையில் வண்டியில் இடம் கிடைக்காதோ என்ற பிரச்சனை இல்லை. அப்படி இடம் தேடவேண்டிய நிர்ப்பந்தமும் கிடையாது. வண்டிகள் அவன் பின்னால் ஓடி வருமே தவிர அவன் இடம் பிடிக்க ஓடவேண்டாம். டிரைவர் சற்று தூரத்தில் காத்திருந்தான் பதிலுக்காக. ஆனால் சேடியின் கவனம் அவன் பால் செல்லவில்லை.

பெண்கள் தங்கும் அறையின் கதவு திறப்பதை அவன் பார்த்துக் கொண்டிருந்தான். நீண்ட கருப்புக்கோட்டும், வெண்ணிறப் புடவையும் அணிந்த ஒரு இளம் பெண் அறையிலிருந்து வெளிப் பட்டாள். அவளுடைய விரலைப் பிடித்துக்கொண்டு ஒன்றரை வயதுக் குழந்தை நின்றது. அவ்விளம் பெண், குழந்தையுடன் பிளாட்பாரத்தின் மறு கோடியை நோக்கி நடந்தாள்.

அமைதியான அச்சூழலில் சேடியின் உள்ளத்தில் சட்டென ஒரு எண்ணம் உதித்தது. மதலையின் கரத்தைப் பற்றிய வண்ணம் கிழக்கு திசை நோக்கி நடந்து செல்லும் அந்த யுவதி வாழ்வின் முழுப் பயனையும் பெற்று விட்ட வெற்றியின் ஒரு சின்னமாக, உருவமாக அவன் கண்களுக்குத் தோன்றினாள். சேடிக்குத் தன் வாழ்க்கை,

எவ்வித குறிக்கோளோ, பயனேயின்றி காற்றில் அலைக் கப்படும் மேகச் சிதறல் போல் தோன்றியது.

ஆனால்! நீரைப் பொழிந்த, நீருண்ட மேகத்திர ளொன்று கதிர் முற்றிய பசுமையான வயல் வெளியின் மீது படர்ந்து நிற்பது போன்றது இப்பெண்ணின் வாழ்க்கை என எண்ணினான் சேடி. சின்னஞ்சிறு பாலகனின் கொழு கொழுவென்றிருந்த சின்னச் சின்ன கால்கள், தளர் நடையிட்டுச் செல்லும் மென் பாதங்கள். தன் தாயின் கரத்தைப் பற்றியவாறு ஊஞ்சலில் ஆடுவது போல் ஆடிச்செல்லும் அழகு நடை, நிறைவு பெற்ற பெருமிதமும், திருப்தியும் துலங்க, உறுதியாக அடி எடுத்து வைத்துச் செல்லும் அந்தத் தாய். சேடிக்கு அக் காட்சி வாணிபப் பொருள்களையெல்லாம் தன்னகத்தே சுமந்துகொண்டு சலன மற்ற ஆழ்ந்த நீரில், கம்பீரமாய் மிதந்து செல்லும் நாவாயை நினைவூட்டியது.

விளக்குக் கம்பத்தில் சாய்ந்து நின்ற வண்ணம் சேடி அவர்களையே இமையாது பார்த்துக்கொண்டு நின்றான். தாயும் சேயும், இள மங்கையும் அறியா பாலகனும். அவன் பார்வை அவர்களை விட்டகலவில்லை: ஸ்டேஷன் கட்ட டத்தின் அந்தக் கோடி வரை சென்றுவிட்டு அந்த யுவதி திரும்பி நடந்தாள். திரும்பி வரும்பொழுது பாலகன் வலது கரத்தை விட்டுவிட்டு இடது கரத்தைப் பிடித்துக் கொண்டு வந்தான். இருவரும் சேடி நின்ற திசையை நோக்கி வந்து கொண்டிருந்தனர்.

கொடியிலிருந்து தொங்கும் கனியைப்போல், அப்பால கன் தன் தாயின் உயிரின் சாரத்தையெல்லாம் திரட்டித் தன்னுள்ளே கொண்டிருந்தது போலிருந்தது. கொடி, கனி, அருகில் வர வர, தாய், மகன் இருவருமே, தெளி வாக, துல்லியமாகத் தெரிந்தனர். யுவதியின் முகம், பாலகனின் வடிவம் இரண்டுமே செடியின் பார்வைக்கு துலாம்பரமாகத் தெரிந்தன. அப்பெண் நல்ல நிறமாக

வெளுப்பாக இருந்தாள். மெலிந்த ஒற்றை நாடியான கொடி உடல். ஆரோக்கியத்தின் தளதளப்பு. அகன்ற நீர் விழிகள். பாலகனுக்குக் கதுப்புக் கன்னங்கள், கரிய வட்டக் கரு விழிகள். புது ரத்தத்தின் செழுமையுடன் கூடிய பளபளப்பு. சிறிய நாசி. சேடியின் மூக்குக் கண்ணாடியின் வழியே இவை யாவும் பளிச்சென்று தெரிந்தன. சிலுசிலு வென்று வீசிய குளிர் காற்று, அதன் இதமான அமைதி—யாவுமே அக்கணம் சேடிக்கு மறந்து போயின.

கார் டிரைவர் மேம்சாகிபாவிற்கு ஒரு சலாம் போட்டான். ஏதோ கேட்டான். லாரி டிரைவருடன் ஒரு சலாம் போட்டவாறே ஏதோ விசாரித்தாள்.

தொழிலதிபனுன சேடிக்கு மேம்சாகிபா, மலிவான, ஆனுல் நல்ல வசதியான பிரயாணத்தை விரும்புகிருள் என்பது புரிந்துவிட்டது. லாரி 7 மணிக்கு முன் புறப்பட முடியாது. கார்களுக்கு அத்தகைய கட்டுப்பாடுகள் எதுவும் கிடையாது. லாரியின் பிரயாணிகள் காத்துக்கொண்டிருந்தனர். ஏனெனில் அவர்களுக்கும் பாதை மூடியிருந்தது. காரின் பிரயாணிகளும் காத்துக்கொண்டு தானிருந்தனர். ஏனெனில் அவர்களுக்கு அவசரமில்லை. சட்டென்று சேடிக்கு ஒரு எண்ணம் தோன்றியது. விளக்குக் கம்பத்தில் சாய்ந்திருந்தவன், நிமிர்ந்து டிரைவரை ஒரு பார்வை பார்த்ததும் அவன் ஓடி வந்து நின்முன்.

'வண்டி சரியாக இருக்கிறதா?'

'சார், நியூ வண்டி சார். ஆஸ்டின் சலூன்.'

'ம்'

'ஐயாவும் இன்னும்...''

'ஒருவருமில்லை. நான் மட்டும்தான். உனக்கு காசு கிடைக்குமானுல் இன்னொரு சவாரியை ஏற்றிக்கொள்.'

டிரைவர் இன்னொரு நீண்ட சலாம் அடித்தான். வெயிடிங் ரூமிலிருந்து சேடியின் சாமான்கள் எடுக்கப்பட்டன.

மூன்று பெரிய பெரிய சூட் கேசுகள். ஒரு பெரிய ஹோல்டால். சிறிய, பெரிய அட்டேசி கேஸ். டிரைவர் மேம் சாகிபாவிற்கும் ஒரு சலாம் அடித்து இன்னொரு சவாரியையும் பேரம் பேசித் தனக்கு லாபமாக முடித்துக்கொண்டு விட்டான்.

சேடி பார்த்துக்கொண்டே நின்றான். மேம்சாகிபாவின் சாமான்கள் அறையைவிட்டு வெளியே கொண்டுவரப் பட்டன. ஒரே ஒரு சூட்கேஸ். ஹோல்டால். குழந்தையை அழைத்துக்கொண்டு சேடியின் பின்னால் நடந்து வந்தாள் அவள். சேடி பின் சீட்டில் உட்காரவில்லை. முன் சீட்டிலேயே டிரைவருக்கருகே அமர்ந்துகொண்டான். குழந்தையும் அவளும் பின் சீட்டில் அமர்ந்தனர்.

குளிர்ந்த காற்றைக் கிழித்துக்கொண்டு கார் விரைந்தது. தன் முதுகிற்குப் பின்னிருந்த இருக்கையின் உணர்வு தந்த இதமான மகிழ்ச்சியில் சேடி மிதந்து கொண்டிருந்தான். காருக்குரிய முழு வாடகைக் கட்டணத்தையும் தானே கொடுத்த பின்னும் குறுகலான முன் சீட்டில் அமர்ந்து பிரயாணம் செய்வது அவனுக்கு ஏனோ சிரமமாக இருக்கவில்லை. எதிரே விரைந்து சென்று மறையும் மரங்களையும், பாதையின் இருமங்கும் நின்ற வீடுகளையும் கண்ட மகிழ்ச்சியில் சிறு பாலகன் முன் சீட்டைப் பிடித்துக் கொண்டு குதித்துக் கொண்டிருந்தான் களிப்புடன். அவன் செய்த அமர்க்களத்தில் சேட்டியின் தொப்பி சரிந்தது. தலை புஜத்தில் மோதியது.

பாலகனின் விஷமத்தனம் தாய்க்குச் சங்கடமாக இருந்தது. பல தடவை சிறுவனைச் சும்மா உட்காரும்படி கூறினாள். ஆனால் அவன் புரிந்த விஷமங்களைப் பார்க்கும் போது அவளுக்கும் சேட்டிக்கும் சிரிப்புத்தான் வந்தது. சிறுவன் முன் சீட்டிற்குத் தாவ முயன்றான். சேட்டி பின்னாலிருந்த அவனை முன்புறம் தூக்கி அமர்த்திக்கொண்டான். கொழு கொழு வென்றிருந்த சிறு

வனின் மென்மையான உடலின் ஸ்பரிசம் பட்டதும் சேடி புதியதொரு கிளர்ச்சியைத் தன்னுள்ளே நுகர்ந்தான். இதுவரை நுகர்ந்தறியாததொரு புதிய உணர்வு அவனை ஆட்கொண்டது. இன்று வரை கடினமான உழைப்பு, போராட்டங்களின் மூலம் வெற்றிப் பாதையை வகுத்துக் கொண்டிருந்த தனது வாழ்க்கை திடீரென அர்த்தமற்றதாய், மகத்தான தோல்வியாய் அவனுக்குப் பட்டது. சிறுவனின் கள்ளமற்ற பால் வடியும் முகத்தையே கண்ணிமையாது பார்த்துக் கொண்டிருந்த சேடி தன் வாழ்வில் ஒரு மகத்தான சூனியத்தை, இல்லாமை என்னும் குறையை உணர்ந்தான்.

விரைந்து செல்லும் காரின் முன்னே தோன்றி மறைந்த காட்சிகளில் சேடிக்குத் தன் வாழ்வே திரைப்படத்தின் காட்சிகளாக விரிந்தது.

தந்தையின் மரணத்தினால், எம். ஏ. படித்துக்கொண்டிருந்தவன் படிப்பைப் பாதியில் விடவேண்டி நேர்ந்தது. பிழைப்புக்கு ஒரு வழியும் காணாது அவன் அலைந்தான். ஒரு கண்டிராக்டரிடம் மாதம் இருபது ரூபாய் சம்பளத்தில் இருபத்தி நாலு மணி நேரம் உடலைச் சக்கையாகப் பிழிந்து உழைத்தல், பின்னர் பிற கண்டிராக்டர்களிடமிருந்து சிறிய வேலைகளை எடுத்துக்கொண்டு செய்தல், பின்னர் மெல்ல நிலை உயர்ந்து பெரிய கண்டிராக்டர் ஆனது; ஒன்றன் பின் ஒன்றாய் பல பல பெரிய ஒப்பந்தங்கள், வேலைகள்; எந்த ரூபாய்களுக்காக அலைந்தானோ அந்த ரூபாய்கள் ஆயிரக்கணக்காக, லக்ஷக்கணக்காக அவன் கையில் புரளும் இன்றைய நிலை. ரெயில்வே பாலம் கட்டித்தரும் கண்டிராக்டில் மட்டும் ஒரே தடவையில் இரண்டரை லக்ஷ ரூபாய் நிகர லாபம்.

சேடி தன் வாழ்வில் அறிந்த அறிந்துகொண்டிருந்த ஒரே ஒரு பொருள் பணம். அந்தப் பணத்தைத் திரட்டுவதற்காக அவன் பகலைப் பகலென்றும் இரவை இரவென்

றும் பார்க்கவில்லை. இன்று அவன் லக்ஷாதிபதி. தான் ஈட்டிய பொருளைக் கொண்டு எத்தனையோ பெரிய பெரிய கம்பெனிகளில் அவன் பங்குதாரராக இருக்கிருன். ஜேபில் கிடக்கும் நாலு அங்குல நீளமுள்ள அந்த இம்பிரியல் பாங்கின் செக் புத்தகத்தில் ஒரு கையெழுத்தைப் போட்டுவிட்டால் அவனுல் சாதிக்க முடியாதது எது? ஆனுல் இத்தனை நாட்களாக, வருடங்களாக உயிர் வாழ்ந்ததில் இந்தப் பணத்தைத் தவிர அவன் அடைந்தது எது? எதை எதை அவனுல் பெற முடிந்தது?

ஹூம், பணத்தினுல் சாதிக்க முடியாதது எது? அடைய முடியாதது எது அவனுல் அடையாளம் தெரிந்து கொள்ள முடியாத, தெரிந்துகொள்ள வேண்டுமென்ற அவசியமில்லை என அவன் நினைத்த உறவினர்கள் அவன் பெயரைச் சொல்லிக்கொண்டு தன்னைப் பரிச்சயப் படுத்திக் கொள்கிருர்கள் அன்பு நிறைந்த உள்ளத்துடன் அவனிடம் ஓடி ஓடி வருகிருர்கள். மதிப்பிற்கும் கௌரவத்திற்கும் அவனுக்குக் குறைவேயில்லை, அரசியல் சமூக ஸ்தாபனங்கள், கட்சிகள், அவனைத் தலைவனுக வும், ஸ்தாபகனுகவும் ஏற்றுக்கொள்ளப் போட்டியிட்டன. ஆனுல், இவையெல்லாமிருந்தும் இத்தனை பெருமை, புகழைப் பெற்றும் அவன் அடைந்துள்ள இன்பம் என்ன?

காதல், மயக்கம் மோகம் என்ற எத்தனையோ பாவ அபினயங்கள் அவனைச் சுற்றி வட்டமிட்டன. மோக பரவசமும் நாணமிகுந்த மையலும் கொண்ட அவ்வேல் விழிகளின் கிறக்கத்தில் தன்னிடமிருந்த பணத்தின் பேரிலுள்ள ஆசையைத்தான் அவன் காண முடிந்தது. அவனைத் தங்கள் வலையில் சிக்கவைக்கத் துடிக்கும் பசப்பு, பகட்டு. இதுவரை எவளும் அவன் மனத்தைக் கவரவில்லை. தன்பால் கவர்ந்திழுத்து மெய்மறக்கச் செய்யவில்லை, வெல்லத்தைச் சுற்றிச் சுற்றி வட்டமிடும் ஈக்களையும், எறும்புகளையும் போல் அவன் அவர்களை

விரட்டி அடித்தான். அவனது லட்சியம், குறிக்கோள் எல்லாம் ஒன்றே ஒன்று தான். அது தான் பணம். பணம் ஒன்று தான்.

இன்று அவனிடம் பணத்திற்குக் குறைவேயில்லை. ஆயினும் கூட அவன் சம்பாதிக்கிறான். பணத்தை எப்படிப் பெருக்குவது? இது தான் இன்று அவனது வாழ்க்கையின் லட்சியம். கார்காலத்தில் சின்னஞ்சிறு பள்ளம், ஓடை, வாய்க்கால், கால்வாய், ஏரி என யாவற்றின் நீரும் வழிந்து பெருகியோடி ஆற்றில் வந்து சேருமே அது போல பணம் வெள்ளமாய்த் திரண்டு கொண்டிருக்கிறது. அவன் ஏற்படுத்தியிருக்கும் ஸ்தாபனங்களில் நூற்றுக்கணக்கான இடங்களில் ஆயிரக்கணக்கான மனிதர்கள் வேலை செய்து பணத்தை உற்பத்தி செய்து கொண்டிருக்கின்றனர். அப்பணமெல்லாம் பல்வேறு அமைப்புகள், வியாபாரங்கள் எனும் கால்களூடே பெருகி வந்து அவனது பணப் பெட்டியை நிரப்பிக்கொண்டிருக்கிறது. அவனுடைய வேலையெல்லாம் பணத்தையும் காசையும் குவிக்க, பல பல வழிகளையும் பாதைகளையும் அமைப்பது தான்.

தன் செல்வைப் பற்றி அவனுக்குக் கவலையில்லை. அவனுக்கென்று தனியான விருப்பங்கள் எதுவுமில்லை. தனிக் கட்டை, என்ன செலவழிப்பது? எதை வாங்குவது? அவனது தாராளமான செலவு கூட மாதம் ஆயிரம், ஆயிரத்து நூற்றுக்குமேல் போகாது. சுகத்தைப் பற்றி அவனது கவனம் சென்றதேயில்லை. ஆனால் இன்று திடீரெனக் குளிர் காற்றின் அலைகள் அவனது சலனமற்ற மனத்தைத் தொட்டசைத்து விட்டன. இதுவரை உணர்ந்தறியாத புது உணர்வு, வாழ்விலே ஒரு குறையை அவன் உணர்ந்தான்.

செருப்பணிந்த பிஞ்சுக் கால்களால் சேடியின் விலையுயர்ந்த பாண்டை மிதித்துக்கொண்டு நின்ற சிறுவன்

பனிபோல் சில்லிட்டிருந்த காரின் கண்ணாடியில் கையை வைப்பதும், முகத்தை வைப்பதுமாய் மகிழ்ச்சியுடன் எக்காளமிட்டுக் கொண்டிருந்தான். அப்பிஞ்சுக்கால்களால் துவைக்கப்படுவதில் அலாதியானதொரு இன்பத்தை நுகர்ந்தான் சேடி. அவனது கண்ணிமைகள் ஈரமாகின. முகம் ஒரு புறமாய்க் கோணியது. துரு துருவென்றிருந்த பாலகனை விழியால் பருகிக்கொண்டிருந்த சேடிக்குத் தன் காதருகே, முதுகுக்குப் பின்னால் அமர்ந்திருக்கும் ஒரு உயிரின் துடிப்பை, வாத்சல்யம் நிறைந்த உள்ளத்தின் கனிவை, உணர முடிந்தது. அடர்ந்த மரத்தின் விசாலமான குளிர் நிழலைப்போல், அம்மரத்திற்கு விதை கொடுக்கும் மலரைப்போல அது மனத்தை ஈர்த்தது. பெற்ற செல்வங்களை அரவணைக்கும் பாதுகாப்பாக உறுதுணையாக நிற்பதும், ஆண் மகனின் உள்ளத்தில் ஆசைக்கணை எய்து தனது புன்னகையில் வானவில்லின் வர்ண ஜாலங்களை வாரி இறைத்து, காதல் கனியும் பார்வையையும், ஆறுதலூட்டும் இதத்தையும் ஆசியின் நிழலையும், வேட்கையின் தவிப்பையும் தன்னுள்ளே கொண்டிருந்த ஒரு காந்தக் கவர்ச்சி அவனை மேல் நோக்கியும் மடியில் அமர்ந்திருந்த பாலகனின் கவர்ச்சி கீழ்நோக்கியும் அவனை இழுத்துக்கொண்டிருந்தன. புதியதொரு அனுபவத்தைப் பெற்ற நிலையில் அவன் தன்னை மறந்தவனாய், இழந்தவனாகி நின்றான். மின்னலைப் போன்றதொரு சக்தி அவனை முற்றும் நிலை குலையச் செய்துவிட்டிருந்தது.

கார் மலையின் மேலே செல்லச் செல்ல, குளிர் அதிகமாகிக்கொண்டு வந்தது. வானம் இருண்டு கொண்டு வந்தது. காற்றில் ஈரத்தின் கனம் மிகுந்து நின்றது. கண்ணாடிக் கதவின் மீது படியும் பனி, நீர்த்துளிகளாய் உதிர்ந்தது. காரின் முன் புறக் கண்ணாடியில் படியும் மூட்டத்தைச் சுத்தம் செய்யும் கருவி இடைவிடாது தனது

வேலையைச் செய்து கொண்டிருந்தது. குழந்தை அதைப் பிடிக்கத் தாவினான். சேடி குழந்தையின் கொழு கொழு வென்றிருந்த கைகளைப் பிடித்து அது துள்ளாமல் பார்த்துக்கொண்டான். தன் பிடியைத் தளர்த்த அவனுக்கு மனமேயில்லை. குழந்தை திமிறினான். அதன் பார்வை சேடியின் கழுத்துடையின் மீது வீழ்ந்தது. கல் பதித்த அந்த டை-பின் அதன் கவனத்தைக் கவரவே அதைப் பிடித்திழுத்தான் குழந்தை. சேடி உடனே பின்னைக் கழற்றி, குழந்தையின் கோட்டிலே குத்திவிட்டான். அவன் குழந்தையின் முகத்தருகே குனிந்தபோது, பிரயாணத்தின்போது அவன் அணிந்து கொள்ளும் அந்தத் தேன் நிற மூக்குக் கண்ணாடி அதன் முகத்தின் பாதியை மறைத்துக்கொண்டது. கண்ணாடியிலே பின்புற ஆசனத்தில் அமர்ந்திருக்கும் அந்த யுவதி உதட்டின் மீது விரலை வைத்துக் குழந்தையை எச்சரிப்பது பிரதிபலித்தது. சேடி பின்புறம் திரும்பி தணிந்த குரலில் 'பரவாயில்லை, இட் ஈஸ் ஆல் ரைட்' என்றான். அவன் உதடுகளில் தவழ்ந்த கருணை நிரம்பிய புன்னகையில் தாயின் உள்ளம் நெகிழ்ந்தது.

காரின் வேகத்தைக் குறைத்த டிரைவர் மன்னிப்புக் கேட்பவன்போல... 'சார், மழை ரொம்ப பலத்துவிட்டது. மூடுபனியும் அதிகமாக இருக்கிறது' என்றான்.

'ஓ, தட் ஈஸ் ஆல்ரைட்' என்றான் சேடி. மலையின் மேற் பகுதிகளிலே பெய்துகொண்டிருந்த மழையின் நீரெல்லாம் பெருகி ஓடி வந்து பாதையின் இருமங்கும் வடிந்துகொண்டிருந்தது. அம்மழை நீரைப் பிளந்து கொண்டு நீர் ஊற்றுப்போல், நீர்த்துளிகளை வாரி இறைத்த வண்ணம், அம்மலைப்பாதையில் கார் வளைந்து வளைந்து மேலே ஏறிக்கொண்டிருந்தது. விஞ்ஞானம் என்னும் அலாவுதீனின் அற்புத விளக்கைத் தேய்த்து உருவாகப்பட்டு, மனிதனால் வசப்படுத்தப்பட்டிருந்த

அக் கார் எனும் பூதம், வீசி அடிக்கும் மழையின் சாரலேயோ, மேகத்தின் பனி மூட்டத்தையோ, சற்றும் பொருட்படுத்தாது மலையின் செங்குத்தான ஏற்றத்தில் விரைந்துகொண்டிருந்தது.

இரண்டு மணி நேரப் பிரயாணத்திற்குப் பின் 'அக் மார்க்' முசாபரி பங்களாவை அடைந்தனர். கார் வளை விலே சென்று திரும்பி, போர்டிகோவின் முன்னே வந்து நின்றது. பங்களாவின் முன்புறமிருந்த பரந்த வெளி யிலே தகரக்கொட்டகைகள் ஓலைக் கூரைகளின் கீழே, பாதி நனைந்தும், நனையாமலும் பிரயாணிகள் பலர் அமர்ந்திருந்தனர். பொதி சுமக்கும் மாடுகள், கோவேறு கழுதைகள், மழையில் நனைந்த வண்ணம், மிரண்ட பார்வையுடன் மனிதர்களின் உற்சாகமான நடையை, ஓய்ந்து போன களைப்புடைப் பார்த்துக் கொண்டிருந்தன. கொட்டடியிலிருந்தவர்கள் வானத்தையும் சர்க்காரின் உத்தரவையும் எதிர்நோக்கிய வண்ணம் காத்திருந்த னர். அக்கால் நடைகளோ தங்கள் எஜமானரின் உத்தர விற்காக அவர்களின் முடிவை எதிர்நோக்கி நின்றன. இரவு முழுவதும் பெய்த கடுமழையின் காரணமாய், மேலே பல இடங்களில் பாறைகள் சரிந்து கிடந்ததால், பாதை சீர் குலைந்து விட்டிருந்தது. பிரயாணிகள் மேலே தங்களது பிரயாணத்தைத் தொடர அனுமதியின்றிக் காத்திருந்தனர்.

டிரைவர் இறங்கிக் காரின் கதவைத் திறந்தான். சேடி இறங்கினான். அவனது விரல்களைப் பற்றிய வண்ணம் அப்பாலகனும் கீழே இறங்கினான். பின்புறத்திலிருந்து அவ்விளம் பெண்ணும் இறங்கினாள். காரைக் கண்டதும் முசாரி பங்களாவின் சப்ராசியும் பட்லரும் சலாம் அடித்து நின்றனர். யூனிபாரம் அணிந்த பட்லர் மிகுந்த மரியாதை யுடன் அவர்கள் சிற்றுண்டி ஏதும் அருந்துவார்களா என விசாரித்தான்.

'ஆம்' என்றான் சேடி.

அவ்விளம் தாய் பிரம்புப் பெட்டியில் குழந்தைக்காக பாட்டில்களில் பால் கொணர்ந்திருந்தாள். தனக்கென அவள் பிரமாதமாக எதுவும் எடுத்து வரவில்லை மாதம் 60 ரூபாய் சம்பளம் பெறும் ஆசிரியை முசாபரி பங்களாவில் சிற்றுண்டி அருந்திப் பழக்கப்பட்டவள் அல்ல. வராந்தாவிலிருந்த சாய்வு நாற்காலியொன்றில் அமர்ந்த அவள் சேடியின் பக்கம் பாராமலேயே குழந்தை பல்லூவை பால் அருந்த வரும்படி அழைத்தாள்.

'பல்லூ, சூடான பால் சாப்பிடட்டும்' என அவள் பக்கம் திரும்பாமலேயே கூறினான் சேடி.

சிற்றுண்டி மேஜையின்மீது வைக்கப்பட்டதும், அந்த அம்மாள், ஐயா, குழந்தை மூவரும் ஒரு குடும்பத்தினர் என்ற நினைப்பில் பட்லர் அப்பெண்ணிடம் சென்று அறிவித்தான்.

அவளுக்கு இது சற்று நூதனமாகப் பட்டது போலும். ஆனால் இயற்கைக்கு முரணானதாகத் தோன்றவில்லை. இப்படி நினைப்பதும் சகஜம்தானே! சேடியை நோக்கி மிகவும் பணிவும், மரியாதையும் நிறைந்த குரலில் 'எனக்கு எதுவும் தேவையில்லை' என்றாள் ஆங்கிலத்தில்.

சேடியும் மரியாதையுடனேயே வற்புறுத்தினான். 'இந்தக் குளிரில் ஒரு கோப்பை தேநீர் பருகினால் இதமாக இருக்குமே.'

சிற்றுண்டி அருந்த உள்ளே சென்றனர். அத்தனி அறையில் பட்லர் மட்டும்தான் வந்து போய்க்கொண்டிருந்தான். சுவர்களுக்கப்பாலிருந்த வெளி உலகத்தின் கண்களுக்கு, புருஷன், மனைவி, ஒரு குழந்தை என ஒரு குடும்பமாகத்தான் தோன்றினர். வெளியுலகத்தின் பிரதிநிதியாக, சாட்சியாக இருந்தவன் பட்லர் ஒருவன்தான். அவன் எதிரே, தான் வெட்கப்படுவதாகவோ, பயப்படுவதாகவோ தவறு இழைப்பதாகவோ காட்டிக்கொள்ள

அவள் விரும்பவில்லை, அது உசிதமாகவும் படவில்லை. அவள் மிக மிக இயல்பாக, சகஜமாக தேநீரைக் கோப்பைகளில் நிரப்பினாள். ஆம்லெட்டின் ஒரு சிறிய துண்டை சேடி பல்லூவின் வாயில் வைத்தான். பல்லூ அதைச் சுவைத்து சாப்பிடத் துவங்கினான்.

மேம் சாகிபாவின் பின்னால் வந்து நின்று பட்லர் 'கொஞ்சம் பிஸ்கட், ஜாம்...பழங்கள்' என்று கேட்பான்.

'கொண்டு வா' என்பான் சேடி.

எந்தப் பொருள்கள் விலை போகாதோ, அவையெல்லாம் பாதி திறக்கப்பட்ட மூடியுடன், டின், டின்னாக மேஜையில் நிரம்பின. சேடி சிரித்துக்கொண்டே ஒவ்வொன்றிலும் கொஞ்சம் எடுத்து எடுத்து குழந்தைக்கு ஊட்டினான். குழந்தையின் மகிழ்ச்சியைக் கண்ட அந்த யுவதி உள்ளுக்குள் பூரித்துக் கொண்டிருந்தாள்.

'வேண்டாம். போதும். அதிகம் கொடுக்காதீர்கள்' என்று அவ்வப்போது சேடியைத் தடைசெய்து கொண்டிருந்தாள் அவள்.

குழந்தையின் மூலமாகத் தனது சங்கோஜத்தை உதறியிருந்த சேடி... 'நீங்கள் டல்ஹௌசியில்தான் இருக்கிறீர்களா?' என வினவினான்.

'ஆமாம். என் பெயர் மிஸிஸ் மதன். மிஸ்டர் மதன் மிலிட்டரி அக்கௌண்ட்ஸ் டிபார்ட்மெண்டில் வேலை பார்க்கிறார். நான் பள்ளியில் ஆசிரியையாக இருக்கிறேன். என் அக்காவைப் பார்க்க அம்ருதசர் போயிருந்தேன்.'

சேடி தன்னைப் பற்றி என்ன சொல்வான்? 'ஓகோ' என்றான். தன்னைப் பற்றிச் சொல்லிக்கொள்ளத் தகுந்ததாக அவனுக்கு எதுவும் தோன்றவில்லை. தன் வாழ்க்கை முற்றிலும் அடித்தளமற்றதாய், ஆதாரமற்றமாய், உருவமற்றதாய் அவனுக்குப் பட்டது.

'கோடைக்காகத் தாங்கள் டல்ஹௌசி வருகிறீர்கள் போலிருக்கிறது' என்றாள் மிஸிஸ் மதன்.

'இல்லை. தொழில் சம்பந்தமாக அங்கு சில நாட்கள் இருக்க வேண்டியிருக்கிறது. டல்ஹௌசி நல்ல ஊர். ரொம்ப அழகான இடம். கண்ணுக்கினிய காட்சிகள்.'

'குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு வரவில்லையாக்கும்?' அந்தரங்கமான உறவு தொனிக்கும் குரலில் வினவினாள் மிஸிஸ் மதன்.

'இல்லை. அப்படியெல்லாம் ஒருவருமில்லை. நான் திருமணமே செய்து கொள்ளவில்லை இதுவரை. என் பெயர் ஆர். எல். சேடி. கண்டிராக்ட்டுகள் எடுக்கிறேன். அமிருதசரஸிலிருக்கும் புதிய மாதாகோவிலைக்கூட நான் கண்டிராக்ட் எடுத்துக் கட்டியிருக்கிறேன்.' சுவற்றைப் பார்த்துக் கொண்டு, கோப்பையிலிருந்த தேநீரை, ஸ்பூனால் கலக்கியவண்ணம்... 'நான் தனியாகத் தானிருக்கிறேன்' என்றான் சேடி.

சேடியின் தொனியிலிருந்த துயரமும் தன்னிரக்கமும் மிஸிஸ் மதனின் உள்ளத்தைத் தொட்டன. 'எத்தனை நல்லவரான பணக்காரர் இவர்' என்றது அவள் உள்ளம்.

தோல் பட்டையில் பொருந்தியிருந்த சேடியின் தங்கக் கடிகாரத்தை மேஜையின் மீது வைத்து உரசிக்கொண்டிருந்தான் பல்லூ.

கையை நீட்டி மறித்தாள் மிஸிஸ் மதன். '... ஊம்... உரசாதே'... என்று அதட்டியவள், சேடியை நோக்கி சிரித்தவாறே... 'இவன் பெரிய சைத்தான்' என்றாள்.

சேடி அடிக்கடி தன் கேசத்தைக் கோதிவிட்டுக் கொண்டான். எண்ணங்களில் ஏற்பட்டிருந்த சலனமும் குழப்பமும் இதற்குக் காரணமாக இருக்கலாம். மகத்தானது எனக் கருதப்படும் எதையெல்லாமோ அடைந்த பின் கூட தன் வாழ்க்கை ஆதரவற்றதாய் அவனுக்குத் தோன்றிக்கொண்டிருந்தது. எதிரே மேஜையின் மீது முழங்கையை ஊன்றிய நிலையில் தன் மகனைப் பார்த்துக் கொண்டிருந்தாள் அந்த யுவதி. பளிங்கையொத்த களங்க

மற்ற மலர்ந்த முகம், கருத்தகன்ற தேன் சொட்டும் விழிகள். தலையை மூடியிருக்கும் முந்தாணி சரிந்து விழும் பொழுதெல்லாம் பளிச்சிடும் கருத்தடர்ந்த கூந்தல், சிவந்த அரும்பு போன்ற உதடுகள். நீண்ட கழுத்துள்ள கோட்டின் முக்கோண வடிவுடைய காலரின் கீழ் விம்மித் தணியும் மார்பகம்—இவை யாவுமே, அவன் அடையாத, அவனுக்கு எட்டாத ஒரு வாழ்வின் சின்னங்களாகத் தோன்றின.

யதேச்சையாக உயர்ந்த மிஸிஸ் மதனின் பார்வை, சேடியின் விழிகள் தன் உடலைத் தழுவி தன்னை விழுங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தது. உடலெங்கும் ஒரு சிலிர்ப்போடியது அவளுக்கு. ஆனால் அதில் வருத்தமில்லை. மாறாக, உரிமை கலந்ததொரு மிடுக்குடன் தன்னிரு கரங்களையும் மேஜையின் மீது நீட்டி, கண்கள் மின்னலிட சேடியை நோக்கி 'ஹூம்...எத்தனை பலமாகப் பெய்கிறது இந்த மழை? நாம் எப்படிப் புறப்பட்டுப் போய்ச் சேரப் போகிறோம்' என்றாள்.

சேடி தன் ஜேபியிலிருந்த தங்க சிகரெட் பெட்டியை எடுத்தான். ஒன்றை உருவிப் பற்றவைத்துக் கொண்டவன், சற்றும் தயக்கமின்றி புகையை ஊதியவாறே 'இந்த மழை நிற்காவிட்டால் தானென்ன? நாம் புறப்படா விட்டால் தான் என்ன வந்து விடும்?'' என்றான் அலட்சியமாக.

இரு கரங்களையும் இணைத்து, விரல்களைக் கோர்த்து பிரித்தவாறே கவலை மிகுந்த குரலில் அவள் கூறினாள். 'நாளை நான் பள்ளிக் கூடத்திலிருந்தாக வேண்டும். நீங்களும் வியாபார விஷயமாகச் செல்லுகிறீர்கள். உங்களுக்கும் சிரமம் தானே?'

'ஆமாம். நான் வந்த காரியம் முடியாமற் போனாலும் போகலாம்' ... சேடி வராந்தாவில் நின்ற பட்லரை விளித்தான். 'ஏய் இந்தப்பா'.

பட்லர் உடனே தட்டில் பில்லை வைத்து எடுத்து வந்தான். பில்லைப் பாராதவள் போல் மிஸிஸ் மதன் 'டிரைவரிடம் போய் எப்பொழுது புறப்படலாம் என்று கேள்' என்றாள்.

பில் இருந்த தட்டைத் தன் பால் இழுத்துக்கொண்டே 'நான் பள்ளியில் படித்துக்கொண்டிருந்த போது எப்பொழுது பார்த்தாலும் விடுமுறை என்று வரும், எந்தச் சாக்கில் பள்ளிக்குப் போகாமலிருக்கலாம் என்று பார்த்துக் கொண்டே இருப்பேன். ஆனால் உங்களுக்குப் பள்ளிக் கூடமென்றால் ரொம்பப் பிடிக்கும் போலிருக்கிறது' என்றான் சேடி.

'நீங்கள் குறும்புக்காரப் பையனாக இருந்திருப்பீர்கள். மழை பெய்து கொண்டே இருக்கட்டும். இந்த வேலைத் தொந்தரவிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்று இப்பொழுது கூட நினைத்துக் கொண்டிருப்பீர்கள். இங்கே உட்கார்ந்து சுகமாய் சிகரெட் ஊதிக்கொண்டிருக்கலாம் அல்லவா?'' இதைக் கூறியதும் சிரித்தாள் மிஸிஸ் மதன்.

'ஆமாம் உண்மை இது தான்.'

'பிஸினெஸில் தங்கள் மனம் லயிக்கவில்லையா?'

'இதைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்ததேயில்லை. வாழ்க்கைச் சகடத்தைச் சேற்றிலே இழுத்துச் சென்று கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.

பாதை இன்னமும் சீராகவில்லை என டிரைவர் வந்து கூறினான். சேடி போலீஸ் ஸ்டேஷனுக்கு போன் செய்தான். இன்னும் 6 மணி நேரத்திற்கு முன் பாதை சீர்படும் என்ற நம்பிக்கையே இல்லை, என்ற பதில் வந்து விட்டது.

செய்தி அறிந்ததும் மிஸிஸ் மதன் பயப்படுவதைக் கண்ட சேடி, 'பாதையைச் சீர்ப்படுத்துவது உங்கள் கையில் இல்லை என்பதைப் பள்ளி நிர்வாகிகள் புரிந்து கொள்வார்கள்' என்றான்.

ஸ்ரீமதி மதனின் படுக்கை ஒரு அறையில் போடப் பட்டதும் அவள் அந்த அறைக்குச் சென்று விட்டாள். பாலகன் அவளிடமும் சேடியிடமும் மாறி மாறி இருந்தான். அந்த அறைக்குள் போவான். மீண்டும் சேடியிடம் ஓடி வருவான். மிஸிஸ் மதன் எழுந்து தன்னறைக்குள் சென்றதுமே சேடிக்கு உடம்பிற்கு ஆகாது என யாரோ தன் முன்னே பறிமாறப்பட்டிருந்த தட்டைப் பிடுங்கிக் கொண்டு போய்விட்டது போலிருந்தது. பசி என்னமோ இன்னும் அடங்கவில்லை.

சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு நீலவானத்தில் மிதந்து செல்லும் மேகக் குவியல்களை நோக்கியவண்ண மிருந்தான். இடையிடையே எழுந்து வராந்தாவில் உலாவினான். மீண்டும் வந்து உட்கார்ந்தான். அவனு டைய வியாபாரக் கணக்கு மூளையை அன்றைய தினம் கற்பனை ஆட்கொண்டு விட்டது. தன் கண் முன்னே விரிந்த காட்சியில் அவன் பணத்தின் பின்னல் அல்ல, வேறெதன் பின்னேடோ ஓடிக்கொண்டிருக்கிறான். தன் முன்னே தோன்றி மறையும் ஒரு பெண்ணின் உடலைப் பற்றிக்கொள்ளும் விழைவில் எதிரே நிற்கும் மலையின் மீது ஏறிக்கொண்டிருக்கிறான். கரத்தை நீட்டி அவள் பாதத்தைப் பற்றிக்கொள்ள நினைக்கிறான். ஆனால் அப் பூ உடல் அவனது கைக்கு எட்டாமல் நழுவி விடுகிறது. அப்பெண்ணுடல், மெல்லிய துகிலென முகில் தழுவி நின்ற ஸ்ரீமதி மதனுடைய உடல்தான். வேறு யாருமில்லை.

நடந்து நடந்து சலித்தவனாய் சேடி சாய்வு நாற்காலி யில் வந்தமர்ந்தான். ஈரப்புல் பத்தையின் மீதும், மலர் களின் மீதும் கதிரவனின் கிரணங்கள் புத்தொளி பரப் பின. சட்டென வெளிப்பட்ட கதிரவனின் ஒளி கண்டு சேடியின் கண்கள் கூசின.

தான் எத்தனை வலுவற்றவன், தைரியமற்றவன் என்ற எண்ணம் சட்டெனத் தோன்றியது. அவனால் ஸ்ரீமதி

மதனின் அறைக்குள் கூடச் செல்ல முடியவில்லை. அவள் உறங்கிக் கொண்டிருக்கிருளா? விழித்துக்கொண்டிருக்கிருளா? ஒன்றும் தெரியாது. இருவரும் அருகருகே அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தால், எவ்வளவு நன்ருக...?

பெண்ணின் காலடி ஓசை கேட்டதும் திரும்பிப் பார்த்தான் சேடி. கோட்டின் இரு பைகளிலும் கைகளை நுழைத்துக்கொண்டு எதிரே நின்ருள் ஸ்ரீமதி மதன்.

'வெயில் வந்தாயிற்று. 6 மணி நேரமும் கழிந்து விட்டது. இனி நாம் புறப்பட முடியும் என நினைக்கிறேன். மணி இப்பொழுது எத்தனையிருக்கும்?'

கடிகாரம் பல்லூவிடம் தானிருந்தது. அதன் கண்ணுடியும், முட்களும் உடைந்து விட்டன. நேரம் தெரிய வேண்டுமென்ருல் டிரைவரிடம் தான் கேட்கவேண்டும்.

6 மணி நேரமென்னவோ கழிந்து விட்டது. ஆனல் பாதையென்னவோ சீர்படவில்லை. கார்கள் செல்லக்கூட இன்னும் அனுமதி வழங்கப்படவில்லை.

பட்லர் சலாம் செய்தவாறு மீண்டும் ஆஜரானன். 'லஞ்சிற்கு ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டுமா?' என்பதுதான் அவன் விசாரணை.

'மேம்சாகிபாவிடம் கேள்...' குழந்தையின் கரத்தைப் பிடித்துக்கொண்டு வெயிலில் உலாவப் புறப்பட்டு விட்டான் சேடி.

பட்லர் தங்களைப் பற்றி மனத்தில் என்ன நினைத்துக் கொண்டிருப்பான் என எண்ணும்போதே ஸ்ரீமதி மதனுடைய இதயத்தில் லேசான கிளுகிளுப்பு. இனிமையான, நாணம். ஆனல் இச்சமயம் அவள் நிலைமையைச் சமாளிக்காவிட்டால் காலையில் நடந்துகொண்ட முறையும் இப்பொழுது கொள்ளும் தயக்கமும் நிலைமையை மோசமாக்கிவிடுமே. 'எது செய்தாலும் சரி...தாமதமாக வேண்டாம்' என்ருள் சுருக்கமாக.

ஸ்ரீமதி மதனுடன் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கவே சேடியின் மனம் ஆசைப்பட்டது தவித்தது. ஆனால் அவள் தவருக நினைத்துக்கொண்டு விடாமலிருக்க வேண்டுமே!

லஞ்ச் சாப்பிட மீண்டும் மூவரும் ஒன்ருக மேஜையின் முன்னே அமர்ந்தனர். எதைப் பற்றிப் பேசுவது? 'பாதைகள் சீர் கெடுவதும், பாறைகள் சரிவதும் எப் பொழுதும் இப்படித்தான். பெரிய தொல்லை. போன முறை நான் வந்தபொழுது மூன்றே மணி நேரத்தில் வேலையை முடித்துக்கொண்டு மாலையே திரும்பி விட் டேன்' என்ற சேடி 'டல்ஹௌசியில் தாங்கள் எங்கு இருக்கிறீர்கள்?'' என விசாரித்தான்.

ஸ்ரீமதி மதன் தன் வீட்டு விலாசத்தைக் கூறினுள்.

'தாங்கள் எத்தனை நாட்கள் தங்குவீர்கள்?'

தன் தொழில் சம்பந்தமாகத்தான் சேடி வந்திருந்தான். ஒரு நாள், இரண்டு நாள், அதிகம் போனல் மூன்று நாட்கள் தங்கலாம். டல்ஹௌசியில் சுடைல்டண்டா குன்றின் மீது ராணுவத்திற்காக புதியதொரு கட்டிடம் கட்டப்பட இருந்தது. அதன் கண்டிராக்ட் சம்பந்த மாகத்தான் அவன் டல்ஹௌசி சென்றுகொண்டிருக் கிருன். சென்ற தடவை "ஹில்கெஸ்ட்'' ஹோட்டலில் தான் தங்கினுன். இம்முறையும் அங்குதான் தங்குவதாக எண்ணம்.

இதையெல்லாம் கேட்டபின் ஸ்ரீமதி மதன் தன்னைப் பற்றிய விவரங்களைக் கூறினுள். அவள் கணவருக்கு ...... ரூபாய் சம்பளம். பள்ளியில் அவளுக்கு 60 ரூபாய் கிடைக்கிறது. வேலைக்குப் போகாமல் வேறு வழியில்லை. அவர்களுக்கு ஒரு வீடு இருக்கிறது. கணவன் நோயுற் றிருந்த சமயத்தில் வீட்டை 4500 ரூபாய்க்கு அடமானம் வைத்திருந்தார்கள். சீசன் காலங்களில் வீட்டிற்கு மாதம் 200, 250 ரூபாய் வாடகை வரும். ஆனல் இப்

பொழுது வீட்டினுல் அவர்களுக்கு எந்த விதமான வரும்படியும் இல்லை. இதற்கு மாருக 50, 60 என்று வட்டி கட்ட வேண்டியிருக்கிறது.

'4500 ரூபாய் ஒரு பிரமாதமான தொகையா?' என நினைத்தான் சேடி. ஆனல் இந்த விஷயத்தில் அவன் என்ன செய்ய முடியும்? சாப்பிடும்போது பல்லூவின் விளையாட்டை இருவரும் ரசித்துக் கொண்டிருந்தனர். சேடி குழந்தைக்கு ஏதாவது தின்பதற்குக் கொடுத்துக் கொண்டே யிருக்க ஆசைப்பட்டான். ஆனல் அவள் இடையிடையே தடுத்துக் கொண்டிருந்தாள். பல்லூ சேடியின் அழகான கடிகாரத்தை வீணுக்கிவிட்டதைக் குறித்து அவள் தனது வருத்தத்தை வெளியிட்டாள். ஆனல் சேடி அதைக் காதில் வாங்கிக்கொள்ளவே யில்லை.

சாப்பிட்டு முடிந்தபின் ஸ்ரீமதி மதன் தன்னறைக்குப் போக எழுந்தாள். ஆனல் துணிவை வரவழைத்துக் கொண்ட சேடி, 'மீண்டும் தூங்கப் போகிறீர்களா?' என்றான்.

'இல்லை. இல்லை... ஆனல் வேறென்ன செய்வது? மாலையாவதற்கு முன் நாம் போய்ச் சேர முடியாதா?' என்று ஆதங்கத்துடன் கேட்டாள் அவள்.

'முடியுமென்றும் தோன்றவில்லை. எதற்காக இத்தனை கவலைப்படுகிறீர்கள். ஒரு நாள் பள்ளிக்குப் போக முடியாவிட்டால் என்னவாகிவிடும்? சம்பளத்தில் இரண்டு ரூபாய் குறையும். அவ்வளவு தானே? என் வேலை தடைபட்டால் எத்தனை கஷ்டம் ஏற்படும் என்பது தங்களுக்குத் தெரிந்தால்... 60, 65 ஆயிரம் நஷ்டமாகும். சேடி உரக்கச் சிரித்தான். தொடர்ந்து பேசிய சேடி பேச்சினிடையே கேட்டான். 'நீங்கள் உங்கள் வீட்டை ஏன் மீட்டுக்கொள்ளக் கூடாது? மீட்டுவிட்டால் நீங்கள் வேலைக்குப் போகவேண்டிய அவசியம் இராதே.'

'வீட்டையா? அதெப்படி? இதுவரை ரொம்ப சிரமப் பட்டு ஆயிரம் ரூபாய்தான் அடைத்திருக்கிறோம்.'

'இதனால் என்ன? நீங்கள் வீட்டை மீட்க ஏற்பாடு செய்யுங்கள். பணத்திற்கு ஏற்பாடாகிவிடும். எனக்கு வட்டியும் தேவையில்லை. பணத்தைப் பற்றிய கவலையு மில்லை.'

ஸ்ரீமதி மதனின் விழிகள் உவகைப் பெருக்கில் மின் னின. முகத்தில் நாணச் சிவப்பேறியது. தன் உணர்ச் சியை வெளிக் காட்டாமல் தன்னைச் சமாளித்துக்கொள்ள பல்லூவை இழுத்து மடியில் வைத்து அணைத்த வண்ணம் அவன் கையிலிருந்த கடிகாரத்தைப் பிடுங்கி... 'இந்தா ருங்கள். இதை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள். இல்லாவிட்டால் இவன் இதையும் தொலைத்துவிடுவான்' என்றாள்.

பல்லூ முரண்டதும், மிரட்டினாள் அவள். 'ஊச்... வாயைத் திறக்கக்கூடாது. மாமா அடிப்பார் தெரியுமா?' 'மாமா!' இந்த ஒரே சொல்லில் ஸ்ரீமதி மதன் சேடியின் பால் தனது உரிமையை வெளியிட்டு விட்டாள். வெளி யிட்டாளாவது? நிலைநாட்டிக் கொண்டாள். தொடர்ந்து சகஜமான பேச்சு நடந்தது. தன் பிறந்த வீட்டைப் பற்றியெல்லாம் கூறியவள் தன் பெயர் ஊர்மிளா என் பதையும் தெரிவித்தாள்.

மாலை ஆயிற்று. மாலை மங்கிய பின் இரவும் வந்தது. நீல வானில் நிலவு பளிச்சிட்டது. இருவரும் பேசிக் கொண்டே அமர்ந்திருந்தனர். சீட மரங்களூடே தவழ்ந்து வந்த தண் கதிர்கள் அவர்கள் மீது படிந்தன. உள் அறையில் பல்லூ உறங்கிக் கொண்டிருந்தான். நிலவின் தண்மை. தனிமை சூழ்ந்த இரவு. தனித்திருக்கும் இருவர். ஊர்மிளாவின் மனம் தவித்தது. ஆவலும் மிரட்சியும் தீப்பொறிகளாய் உடலிலும் உள்ளத்திலும் படபடவென வெடித்துச் சிதறியது.

வெளியே நல்ல குளிர். பனிக் காற்று. உள்ளே சென்று படுக்க அறைகளிருந்தன. ஆனல் பட்லர் தான் அறிந்திருந்தபடி இருவரின் சாமான்களையும் ஒன்றெனக் கருதி இருவர் படுக்கையையும் ஒரே அறையில் விரித்து விட்டிருந்தான். அப்படிச் செய்யாதே என அவனைத் தடுத்துக் கூறவும் இயலாத இக்கட்டு. உள்ளே சென்ருல் ஒரே அறையில் படுக்கவேண்டுமே என எண்ணும்போது ஊர்மிளாவிற்குக் கண்ணை இருட்டியது. 'சீச்சி, இதெப்படி முடியும்?' என அவள் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டாள்.

இரவு நேரமாகி விட்டது. 'குளிரில் உங்களுக்கு சிரமமாக இருக்கும். போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்' என்ருன் சேடி.

'நீங்கள்?'

'எனக்கு இன்னமும் உறக்கம் வரவில்லை.' தன் பொருட்டு அவன் வெளி வராந்தாவிலேயே இரவைக் கழித்து விடுவான் என்பதை அவள் அறிவாள். எத்தனை பெருந்தன்மையான நல்ல மனிதர்!

தனக்கு தூரத்து உறவான படித்த பெண்ணொருத்தியைப் பற்றிக் குறிப்பிட்டு... 'நீங்கள் திருமணம் செய்து கொள்ளுங்கள்' என்ருள் ஊர்மிளா.

'48 வருடங்கள் இப்படியே ஓடிவிட்டன. எஞ்சிய ஆயுளும் இப்படியே கழிந்துவிடும். அதுவும் திருமணம் என்பது ஒரு வகையில் சூதாட்டம் தான். வாய்த்தால் போச்சு, இல்லாவிட்டாலும் இல்லை.'

சேடி மீண்டும் அவளைப் படுக்கச் செல்லும்படி வற்புறுத்தினன்.

குளிர் அவ்வளவாகத் தெரியவில்லை. நிலவில் அமர்ந்திருப்பது தனக்குப் பிடித்திருக்கிறது எனக் கூறி மழுப்பி விட்டாள் ஊர்மிளா.

இருவரில் ஒருவரும் உள்ளே எழுந்து போகவில்லை. அங்கேயே அமர்ந்திருந்தனர். சேடி பேசுவான், ஊர்மிளா கேட்டுக்கொண்டிருப்பாள். ஊர்மிளா பேசுவாள், சேடி கேட்டுக்கொண்டிருப்பான்.

நவமி சந்திரன் மலைகளுக்கப்பால் இறங்கிவிட்டான். நேரம் என்பதை அறிய எந்த வழியும் இல்லை. நிச்சயமாய் நள்ளிரவிற்கு மேலாகியிருக்கும். குளிரில் இருவருமே விரைத்து நடுங்கிக் கொண்டிருந்தனர். தனக்காக சேடி இப்படிக் குளிரில் விரைத்துக் கொண்டிருப்பதைக் காண ஊர்மிளாவிற்குத் தாளவில்லை. அவன் நோயுற்று விடக் கூடும். உடம்பிற்கு ஏதாவது வந்து விட்டால்? ஊர்மிளா சட்டென எழுந்து நின்றாள். 'வாருங்கள் உள்ளே போகலாம். வீட்டில் எல்லோரும் ஒரே அறையில் படுத்துறங்குவது இல்லையா என்ன?' என்றாள் அவள்.

இருவரும் உள் அறையை நோக்கிச் சென்று கொண்டிருந்த பொழுது சேடி மெல்ல ஊர்மிளாவின் முதுகின் மீது தன் கரத்தை வைத்தான். இருவரும் அவரவர் படுக்கையில் கம்பளியை இழுத்துப் போர்த்திகொண்டு படுத்துவிட்டனர்.

காலையில் பாதை சிராகிவிட்டது. தேநீர் அருந்திய பின்னும் புறப்படுவதற்கான அறிகுறிகள் இல்லை. 'இரவு நன்றாய்த் தூக்கம் வந்ததா?' என்று கேட்ட சேடி சிரித்தான்.

முறுவலித்தவாறே—'உங்களுக்கு நிச்சயம் வந்திருக்கும்' என்றாள் ஊர்மிளா.

இருவருமே உறக்கம் கொள்ளவில்லை என்பது இருவரும் அறிந்த விஷயம் தான். ஆனாலும், இரவெல்லாம் தூக்கமின்றிக் கழித்தாலும் இருவருமே புத்துணர்ச்சியுடன் துலங்கினர்.

'இந்த பங்களாவை விட்டுச் செல்ல மனம் வரவில்லை' என்ருன் சேடி.

ஊர்மிளாவின் இரக்கம் ததும்பிய விழிகள் ஒரு முறை அவனை ஏறிட்டு நோக்கித் தாழ்ந்தன. அவளுக்குக் கணவனிருக்கிருன். ஆனுல் இத்தகைய பரந்த நோக்கத்தையும், தன்னடக்கத்தையும் அன்பையும் அவள் இதுவரை கண்டதில்லை. அவளது உடலின் ஒவ்வொரு மயிர்க்காலும் 'நீ மகத்தானவன், உயர்ந்த மனிதன் நீ' எனக் கூறத் துடித்தன. ஆனுல் நாவைக் கட்டிப் போட்டிருந்தது. சொற்கள் இல்லை, பெண்ணிற்கு என்றுமே தோல்விதான். அவனைத் தாக்கும் பொழுதும் சரி, அவளுக்கு அடைக்கலம் கொடுக்கும் பொழுதும் சரி, தோல்விதான்.

புறப்படும் முன் சேடி கூறினுன். 'உனக்கு ஆட்சேபணை எதுவுமில்லையென்ருல் இந்த பங்களாவில் உன்னை ஒரு புகைப்படம் எடுக்க விரும்புகிறேன்.'

'ஆட்சேபமா? இதில் ஆட்சேபம் என்ன இருக்க முடியும்?' நன்றி பொங்கும் கருவிழிகளை உயர்த்தி ஒரு முறை அவனை நோக்கினுள். அவ்வளவு தான்.

கழுத்தைச் சற்றே சாய்த்துக்கொண்டு ஒரு தூணிலே சாய்ந்து நின்ருள் ஊர்மிளா.

சேடி அவளைப் பல கோணங்களில் படம் எடுத்தான்.

இரண்டு மாதங்களென்பது அறுபது நாட்கள் தான். ஆனுல் இதற்குள் எத்தனை மாற்றங்கள் நிகழ்ந்து விட்டன! மதன் மிலிட்டரி அக்கௌண்ட்ஸில் பார்த்த வேலையை விட்டு விட்டு 'சேடி அண்ட் கம்பெனியில்' அக்கௌண்டெண்ட் ஆகிவிட்டான். மாதம் 300 ரூபாய சம்பளம் இப்பொழுது. ஊர்மிளா 60 ரூபாய் சம்பளம் ஆசிரியை அல்ல. இப்பொழுது தன் சின்னஞ் சிறு பங்களாவின் முன்னே பச்சைப் புல்வெளியில் குடையின் கீழ் பொன் வெயிலில் அமர்ந்து பல்லூவிற்காகக் கம்பளிச்

சட்டை பின்னுகிறுள். காண்டா ஜில்லாவைச் சேர்ந்த அந்தக் கன்னங் கரேலென்றிருக்கும் ஆயா பல்லூரவை வெளியே உலாவ அழைத்துச் செல்லுகிறுள்.

இப்பொழுதெல்லாம் சேடி அடிக்கடி டல்ஹௌசி வருகிருன். வரவேண்டியது அவசியமாகி விட்டது. ஏனெனில் ராணுவ பாரெக்ஸ்கள் கட்டும் வேலையை அவன்தான் காண்டிராக்ட் எடுத்திருக்கிருன். சேடி தன் தூரத்து உறவினரான அந்தப் படித்த பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள ஏன் ஒப்பவில்லை என்பது ஊர்மிளாவிற்கு ஒரே மனக்குழப்பம்.

எல்லாம் புரிந்திருந்தும் மனதிற்குத் தெளிவாகத் தெரிந்திருந்தும் ஊர்மிளா அந்த உண்மையை ஏற்றுக்கொள்ள சற்றும் விரும்பவில்லை. சென்ற தடவை சேடி, தெளிவாகவே கூறி விட்டிருந்தான். சுரக்காயை வயிறு நிறைய சாப்பிட்டுத் திணித்துக் கொள்வதை விட ஆரஞ்சின் இனிய மணத்தை நுகர்வது எத்தனையோ மேலானது. கம்பளி நூலைக் கோத்து இழுத்துப் பின்னிக்கொண்டிருந்த ஊர்மிளா நினைத்தாள். 'அந்த ஆரஞ்சு தான் அவன்' சேட்டியின் ஒவ்வொரு செயலும் வார்த்தைகளும் நினைவின் அலைகளிலே புரண்டு வந்தன.

சேடிக்கு அவளது கூந்தலை வருடுவது மிகவும் பிடித்திருக்கிறது. தன் விரல்களால் கோதி விடுகிருன். ஒன்றுமே பேசாமல் அவளைத் தன்னெதிரே உட்கார்த்தி வைத்துக்கொள்ள விரும்புகிருன். சேடி எந்தப் புடவையையோ, துணிமணிகளையோ வாங்கி வந்தாலும் அதை அணிந்துகொண்டு அவன் முன்னே வந்தேயாக வேண்டும். சேடியின் எந்த விருப்பத்தையும் வார்த்தைகளையும் மறுப்பதென்பது அவளைப் பொறுத்த வரையில் இயலாததாகிவிட்டது. சேடி விரும்பும்பொழுது அவள் கையில்லாத 'ரவிக்'கும், முதுகில்லாத சட்டையும் அணியத்தான் வேண்டும். அப்படியெல்லாம் வித விதமாய்

உடுத்தவும், அணியவும் அவளுக்கும் ஆசையாய் விருப்ப மாய்த் தானிருக்கிறது. சேடியின் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதில் அவளுக்கு விருப்பமில்லை என்பதில்லை. ஆனால் தான்…தனது தனித்தன்மை…தனது விருப்பம் என்பதெல்லாம் என்ன ஆயிற்று?

போன புதனன்று நள்ளிரவு வரையில் சேடி அவர்களது பங்களாவிலிருந்தான். அவன் என்ன சொன்னான் அப்பொழுது?… அவன் அவளைத் தொடவில்லை. தீண்டவில்லை. தூரத்தில்தான் அமர்ந்திருந்தான். ஆனாலும் அவளிடம் இப்பொழுது என்ன பாக்கி இருக்கிறது? அவன் சொன்னான். 'ஊர்மிளா, நான் உன்னைக் காதலிக்கிறேன். என் காதலுக்குக் காரணம் என்பது எதுவுமில்லை. என் இதயத்தின் ஆசையே உருவாக, வடிவாக நீ என் கண்களுக்குத் தோற்றமளிக்கிறாய். நான் உன்னைப் பார்க்க, பார்த்துக்கொண்டேயிருக்க விரும்புகிறேன். உன்னை என்னுடையவளாகக் கருத ஆசைப்படுகிறேன்.'

இதற்குமேல் ஊர்மிளாவிற்குத் தாங்கவில்லை. கண்ணீர் பொல பொலவெனக் கொட்டிற்று. 'மன்னித்துக்கொள்ளுங்கள்' எனக் கூறிவிட்டு அவள் மௌனமாய் எழுந்து சென்றுவிட்டாள்.

இன்று கையிலிருக்கும் கம்பளிப் பின்னலில் பார்வையைப் பதித்த வண்ணம். விளக்கின் பிரகாசமான ஒளியில், அன்றைய இரவு நடந்த காட்சிகள் யாவுமே மீண்டும் கண்ணெதிரே சுழன்றன. அன்றிரவு அவள் நடந்துகொண்டது சரிதானா?

எந்த மனிதன் தன் வாழ்நாள் முழுமையும் கடுமையாக உழைத்துச் சம்பாதித்ததையெல்லாம் எவ்வித பிரதிபலனையும் எதிர்பாராது அவளுக்கு அர்ப்பணித்துள்ளானோ, தனக்கென்று எதையும் கோரவில்லை… அவனை நிராசையடையச் செய்வதா?…

தனது சொத்துக்கள் யாவற்றிற்கும் பல்லூதான் வாரிசு எனக் கூறிய சேடி இன்னுமொன்றும் கூறியிருந்தான். இந்த சொத்தில் பல்லூவின் பங்குதாரனுக இன்னெரு உயிர் தோன்றக்கூடாது.... தெளிவாகக் கூறப்போனல் ஊர்மிளாவின் தாய்மைக்குத் தாளிட்டு அவள் மீது சேடி தன் அதிகாரத்தை நிலை நாட்டி விட்டான். அவன் அவளைத் தீண்டினல் என்ன? தீண்டாவிட்டால் என்ன?

பல்லூ அவனுடையவன். மதனும் அவனுடையவன். இவர்கள் இருவருக்கும் முன்னரே ஊர்மிளா அவனுடைய உரிமைப் பொருளாகி விட்டாள். இனி என்ன?

சேடி எத்தனை அடக்கமும் உதாரகுணமும், விசால இதயமும் கொண்டவன். தன்னுடைய துயாவற்றையுமே அவனல் எப்படி அளிக்க முடிந்தது? இதற்குப் பிரதியாக ஊர்மிளா அவனுக்கு எதையுமே அளிக்கவில்லையே? அப்படிப்பட்டதொரு சந்தர்ப்பமும் எழவில்லையே. சேடி தனது கற்பனையிலேயே, கனவிலேயே யாவற்றையும் அடைந்து, எத்தனை எளிதாக, அவளைத் தன் வசப்படுத்திக்கொண்டு விட்டான்? எல்லாவற்றிற்கும் ஒரே ஒரு சாவிதான். அதை எடுத்து அவன் பையில் போட்டுக் கொண்டுவிட்டான். ஊர்மிளா இனி இதிலிருந்து தப்ப முடியாது. தப்ப வழியும் இல்லை. பல்லூ—மதன்... எவருமே இதிலிருந்து தப்ப முடியாது. யாவருமே அவனுக்கு அடிமையாகி விட்டனர்.

நாளை சேடி வந்தால்... துயரமிகுந்த முகத்துடன் அதே வார்த்தைகளை மீண்டும் கூறினல்? 'நான் உன்னைக் காதலிக்கிறேன். விரும்புகிறேன்,' என்று சொன்னல் அவள் மீண்டும் மறுதளிப்பாளா? அவளால் அது இயலுமா? ஒருமுறை மறுத்தவள் பின்னர் அதற்காக எவ்வளவு பச்சாதாபப்படுகிருள்? குற்றமிழைத்து விட்டவள் போல் வருந்துகிருள்!

தன்னிடம் அப்படி என்ன இருக்கிறது? என நினைத்தாள் ஊர்மிளா. மறுத்துவிடவேண்டும் என்றே அவள் ஆசைப்பட்டாள். ஆனால் அப்படிக் கூற அவளுக்கென்ன உரிமையிருக்கிறது? உரிமை எல்லோருக்கும் உண்டு. இருக்கிறது. ஆனால் அவளைப் பொறுத்த வரையில் இல்லை. தன் அந்தராத்மாவின் எதிரேயே அவளுக்கு அந்த உரிமையில்லை. வேசைகளின் வாழ்வு வேறெப்படி இருக்க முடியும்? ... ஊர்மிளாவின் விழிகளிலிருந்து பொலபொலவெனக் கண்ணீர் உகுந்தது.

இரண்டு மாதங்களுக்கு முன்னே இரண்டு சிறிய அறைகள் தான் அவளுடைய இல்லம். களைத்துப்போய் வீடு திரும்பும் அவள், குழந்தையை மடியில் எடுத்து வைத்துக்கொண்டு முட்டாள் வேலைக்காரனுடன் வீட்டு வேலைகளை நடத்த மண்டையை உடைத்துக் கொள்ளுவாள். அவளுடைய தேவைகள், ஆசைகள் எத்தனையோ நிறைவேறவில்லை. தேவைகள் பற்றுக்குறைகளாகவே நின்றன. ஆனால் அச்சமயம் அவளுக்கு 'முடியும்,' 'முடியாது,' 'மாட்டேன்.' எனக் கூறும் உரிமை இருந்தது. தன் விருப்பப்படி எதையும் செய்வாள். நினைத்ததைக் கூறுவாள்... சிகரெட் கம்பெனியில் வேலை பார்த்த சிரித்த முகமுடைய அந்த மனிதர் எத்தகைய பண்புடன் இருந்தார்? ஆனால் அவள் அவரை என்றுமே மறுத்து வந்தாள். இடமளித்ததேயில்லை!

ஒருக்கால் இன்று தேடி வருவாரோ... என்ற எண்ணம் எழுந்தது அவள் மனத்தில். நீர்த் திரையிட்ட ஊர்மிளாவின் விழிகள் உயர்ந்து வாயிலை நோக்கி நிலைத்தன. அவற்றில் ஆவலில்லை... அச்சம் மிளிர்ந்தது.

# கதலின் தியாகம்

*1*

வெளியே ஒரே கூச்சல்—

'யார் அங்கே?' என்று கத்தினுன் டோடி.

ஒரு பதிலும் வரவில்லே.

'கொலேகாரி, உன்னேக் கொலே செய்துவிடுகிறேன், பார்!'

'செய்துதான் பாரேன், பிசாசாகி உன் குலத்தையே விழுங்கிவிடுகிறேனு இல்லேயா பார், பழிகாரா!'

'ஏய் நிகால்! என்னடா இது? என்னடா செய்கிருய்?' டோடி முன்னுல் வந்தான். 'உன்னேப் பெத்தவளடா.'

'பெத்தவள்!' நிகால் எட்டி நின்ருன்.

'எங்கே கையை வை பார்க்கலாம்!' அவள் சீறினுள். 'ஜாக்கிரதை, உன்னே அண்டி நான் இருக்கலே. நினே விருக்கட்டும்.'

'அண்ணி!' டோடி அதட்டினுன். 'என்ன உளறுகிருய், நிதானமாகப் பேசு.'

டோடி இரண்டடி முன்னுல் வந்து நின்றவன் பின்னுல் திரும்பிப் பார்த்து, 'ஆம், போங்க, போங்க எல்லாரும்' என்று சீறினுன்.

நிகால் நகர்ந்தான், அவனேத் தொடர்ந்து மற்றவர் களும் நகர்ந்தனர்.

கூரையில் இருந்த கம்பத்தைப் பிடித்துக் கொண்டு டோடி நின்ருன். அவள் அங்கேயே அலங்கோலமாக உட்கார்ந்திருந்தாள். அவள் கண்கள் அனலேக் கக்கின. 'எனக்கு எல்லாம் தெரியும். நிகாலுக்கு இத்தனே துணிச் சல் கிடையாது. மச்சான், இதெல்லாம் உன் வேலேதான்.'

'ஆமாம் கதல்!' என்று தணிந்த குரலில் கூறினான் டோடி. 'என் வேலைதான்.'

கதல் மேலே ஒரு கணம் பேசவில்லை, அப்படியே ஓய்ந்துவிட்டாள். 'ஏன், உனக்கென்ன வந்துவிட்டது?'

டோடியினால் பதில் கூறமுடியவில்லை, உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை ஒரு நடுக்கம் குலுக்கி எடுத்தது. ஐம்பது வயதான அந்தக் காரிகூஜரின் மீசையெல்லாம் நரைத்துவிட்டது. நிமிர்ந்து நின்றால் கூரையைத் தொட்டுவிடுவது போல் அவ்வளவு உயரம். அவனுடைய அகன்ற தோள்களின் எலும்புகள் தீபத்தின் மங்கிய ஒளியில் பளபளத்தன, உடம்பிலே கையில்லாத தடித்த சட்டை, இடுப்பு வேட்டியை முழங்காலோடு வரிந்து கட்டிப் பின்புறமாக இழுத்துச் செருகியிருந்தான். நல்ல உறுதியான கரங்கள். வாட்ட சாட்டமான கம்பீரமான உருவம். ஆனால் இச்சமயம் அவன் மௌனமாகத்தான் நின்றான்.

அவள் எழுந்தாள், அவளுக்குக் கிட்டத்தட்ட நாற்பத்தைந்து வயதிருக்கலாம், நல்ல நிறந்தான். ஆனால் வயதின் காரணமாக அவ்வெளுப்பு கூட மாறி, மங்கிவிட்டது போலும். பார்த்தால் சுறுசுறுப்பானவள் என்று தோன்றியது. வாழ்க்கை முழுவதும் உழைத்துப் பாடுபட்டதால் தளர்ச்சியுற்று ஓய்ந்திருப்பது போல் தோன்றிய அவளிடம், இன்னமும் அச் சுறுசுறுப்பும் வேகமும் இருந்தன.

'உனக்கு வெட்கமாக இல்லை?' என்றான் டோடி.

'ஏன், எதற்காக வெட்கப் படவேண்டும்?' என்றாள் அவள்.

டோடி கண நேரம் திகைத்துவிட்டான். உள்ளே கூடத்திலிருந்து குரல் வந்தது. 'இவளுக்கு எதற்கு வெட்கம்? மானம் இருக்கிறவளுக்குத்தானே வெட்கம்?'

டோடி உரக்கக் கத்தினான்: 'நிகால், நீ வாயை மூடிக் கொண்டிரு.'

இதன்பின் குரல் கேட்கவில்லை.

'என்னை எதற்காக அழைத்து வந்தாய்?'

டோடி இதற்கு பதில் ஏதும் கூறவில்லை. 'சாப்பிட்டு விட்டாயா?'

'இல்லை' என்றாள் அவள். 'எங்கே சாப்பிடுவது? பாழாய்ப் போறவங்கதான் வழியிலேயே வந்து விட்டார்களே! வயற்காட்டிலேயிருந்து சுள்ளி, கிள்ளி பொறுக்கிக்கிட்டே இருந்தேன்.' படபட வென்று பொரிந்தாள் அவள்.

'நிகால்' என்று கூப்பிட்டான் டோடி. 'உன் பெண்டாட்டியிடம் அவ மாரியாருக்குச் சாப்பாடு கொண்டு வரச் சொல்லு.'

உள்ளேயிருந்து ஒரு குரல் ஏகத்தாளமாகப் பேசியது. 'அட! கருமான் வீட்டு ராணி வந்திருக்கா? அவளுக்கு ஏழை காரியன் வீட்டுச் சாப்பாடு பிடிக்குமா?'

தொடர்ந்து சில பெண்கள் சிரிக்கும் குரல் கேட்டது.

'கேட்டாயா, பரமேசுவரி? ஊர் சிரிக்குது! காரியர்களின் மூக்கை அறுத்துவிட்டாய் நீ' என்று உரக்கக் கத்தினான் நிகால்.

2

குன்னு சாகும்போது ஐம்பத்தைந்து வயது. கதல் விதவையானாள். கதலின் மூத்த மகன் நிகாலுக்கு முப்பது வயதிருக்கும். அவனுடைய முதல் பிள்ளைக்கு ஏழு வயது. இரண்டாவது பிள்ளைக்கு நான்கு வயது. மூன்றாவது பெண்; கைக்குழந்தை. நிகாலுக்கு அடுத்தவள் தரா. அவளுக்கு அடுத்து இரண்டு பெண்கள் சம்பாவும், சமேலியும். அவர்களை முறையே ஜார்ஜ், பிஸ்வாரா, கிராமத்தில் கொடுத்திருந்தது. இன்று அவர்களின் குழந்தைகள்

மடியை விட்டிறங்கி மண்ணிலே விளையாடத் தொடங்கி யிருந்தனர். கதலின் கடைசி மகன் நராயணுக்கு இருபத்து மூன்று வயதாகியிருந்தது. அவன் மனைவி இரண்டாவது குழந்தைக்குத் தாயாகும் நிலையில் இருந் தாள். இந்நிலையில் கதல் இத்தனை பெரிய குடும்பத்தை விட்டுப் போய் முப்பத்திரண்டு வயதான ஒரு கருமானைச் சேர்த்துக் கொண்டுவிட்டாள். இதுதான் விஷயம்.

டோடி, குன்னுவின் உடன்பிறந்த சகோதரன், அவ னுக்கு மனைவி இருந்தாள்; குழந்தைகள் இருந்தார்கள்; எல்லோரும் காலமாகிவிட்டார்கள். அவன் தனி மரமாகி விட்டான். மீண்டும் விவாகம் செய்துகொள்ளாமல் கதல் சமைத்துப் போடுவதைச் சாப்பிட்டான். சம்பாதித்துக் கொண்டு வருவதை அவள் கையில்தான் கொடுத்தான். அவள் குழந்தைகளையே தன் குழந்தைகளாக பாவித் தான். அக்குடும்பத்திடம் அவன் வேற்றுமை பாராட்டி யதே இல்லை. கொலுக்குத் தன் சிற்றப்பனிடம் உயிர். இது மட்டுமா? காரிகூஜர் இனத்தவர்கள் தங்களைக் கருமான் ஜாதியினரைவிட உயர்வாக நினைத்தனர். அவர்கள் ஜாதியில் உயர்ந்தவர்கள்.

கதல் எவன் வீட்டில் போய்ச் சேர்ந்துகொண்டாளோ அவனுக்குக் குழந்தைகள் இருந்தனர்; மனைவி இல்லை. அவன் கதலின் வயதைக்கூடப் பார்க்கவில்லை. காரி கூஜர் பெண்பிள்ளை வீட்டிலே விழுந்து கிடப்பாள் என்று தான் எண்ணினான். அடுப்பை ஊதிக்கொண்டிருக்க ஒருத்தி வேண்டுமல்லவா?

அன்று காலைதான் கதல் அங்கே போயிருந்தாள். மாலையே அவள் பிள்ளைகள் வந்து கட்டி இழுத்துக் கொண்டு வந்துவிட்டார்கள். அவளுடைய புதுக் கண வன் மௌனிக்கு இச் சமாசாரம் கூடத் தெரிந்திருக்காது. அவன் மனைவியை இழந்தவன். அவனுடைய அண்ணி துல்லோ, காலைப் பரப்பிக்கொண்டு ஆடி ஆடித் தயிரைக்

கடைகிருளே. அவள் காதில் இது விழுந்தால் என்ன சொல்லுவாள்?

கதலுக்கு ஒரே ஆத்திரமாக வந்தது.

3

நள்ளிரவுக்கு மேலாகிவிட்டது. கதல் அங்கேயே கிடந்தாள். எழுந்திருக்கவில்லை. டோடியும் அங்கேயே அமர்ந்து, ஹுக்கா குடித்துக்கொண்டிருந்தான்.

சூழ்ந்து நின்ற மோனத்தினிடையே டோடி மெல்ல அழைத்தான், 'கதல்.'

'என்ன?' என்ருள் கதப் மெதுவாக.

'நீ போய்விட்டாய் அல்லவா?'

கதல் பேசவில்லை, டோடிதான் பேசினுன். 'எல்லாருந் தான் போகிருர்கள். ஒருநாள் உன் ஓரகத்தி போனுள். ஒவ்வொருவராகக் குழந்தைகள் எல்லோரும் போய்விட்டார்கள். அண்ணனும் போய்விட்டான். ஆனுல் நீ போனமாதிரி ஒருவரும் போகவில்லை. ஊர் சிரிக்கிறது, தெரியுமா?'

கதல் முணுமுணுத்தாள். 'ஊர் சிரிப்பதைப் பற்றி எனக்குப் பயமில்லை மச்சான். பதினுறு வயதிலே உன் அண்ணன் என்னைப் பார்க்க வந்தார்: நீயும் அவரோடே சிலம்பத் தடியை எடுத்துக்கிட்டு என்னை அழைத்துப் போக வந்தாய்: அப்போ நான் வந்தேனு இல்லையா? கதலுக்கு வயசாச்சு. இனிமேல் புருசன் எதுக்கு என்று நீ நினைச்சிருப்பே! நான் ஏன் போனேன், தெரியுமா.'

'கதல் போயிட்டா, முன்னிப்போல நிம்மதியா சாப்பாடு கிடைக்காதுன்னு நீ நெனச்சிருப்பே மச்சான்! மருமகளெல்லாம் உனக்கு வேலை கீலை செய்யமாட்டாங்க தெரியுமா? அண்ணன் கிட்டேயும் நீ சமாளிச்சே! நானும்

உன்னை அந்நியமா நினைக்கலை, சொல்லு, நான் சொல் றது பொய்யா?

'இல்லை கதல்! நான் அப்படிச் சொன்னேனு?'

'விஷயமே அதுதான் மச்சான். இப்ப எனக்கு யாரு இருக்காங்க? என் புருசன் போயிட்டான். உயிரோட இருக்கறமட்டும் நான் அவனுக்குப் பாடுபட்டேன். அவனுக்காக மத்தவங்களுக்கும் உழைச்சேன். கட்டின வனே போயிட்டானும். இனி எதுக்காகப் பாடுபடணும்? இந்தப் பிள்ளைகளுக்கும், மருமகளுக்குமா? மச்சான், நான் இவங்களுக்கு அடிமையாக இருக்கவா?'

'ஏ, பைத்தியமே! இவங்க எல்லாம் யாரு? உன் பெண், பிள்ளைகள் தானே! பூனை கூடன்னு தன் குட்டிக்காக ஏழு வீடு மாத்திண்டு அலையுது. நீ மனுச சன்மம் இல்லே? உன் ஒட்டு, உறவு பாசமெல்லாம் எங்கே போச்சு?'

'ஏ மச்சான், உன் பாசமெல்லாம் எங்கே போச்சு? நீ ஏன் மறுபடியும் கல்யாணம் கட்டலே?'

'எனக்குத்தான் நீ இருந்தாயே, சோறு போட.'

'சே, கோழை மனிசன்! அண்ணன் செத்தாரு! பிள்ளைங்க கருமம் பண்ணினுங்க; எல்லாம் முடிஞ்சு போச்சு. அப்ப நீ வைச்சுக் குடித்தனம் போடலா மில்லே? இந்த வயித்துக்காகத்தானே என்னை இன்னொ ருத்தன் வாசப்படியிலே ஏறவச்சே; எனக்குன்னு ஒருத் தன் இருந்தாதானே நான் அடுப்பை ஊதி உலை போட முடியும்? என் ஜன்மத்தை உழைச்சு இன்னொருத்தி மெட்டி குலுங்க நடை போட நானென்ன அடிமைப் பெண்ணு? இந்த வயித்துக்கு என்ன உண்டோ அதுக்கு ஈடுகட்டிவிட்டுத் தான் நான் இரண்டு கவளம் சாப்பிடு வேன். புரிந்ததா மச்சான்? நீ இப்பல்ல இப்படிப் பேசறே? அப்ப ஒன்னும் சொல்லலேயே?' அதுவும் இப்ப. குடும்பத்துக் கௌரவம் போச்சே, மூக்கறந்து போச் சேன்னு நினைக்கறப்பதானே இப்படித் தோணுது?

என்னை மருமகளுங்க அதட்டி மிரட்டரப்போ தோணலையே? கிடக்கு, விடு! யாரை, யாரு கவனிக்கிறாங்க? யாருக்கு யாரு லட்சியம்?'

'கதல்!' டோடியின் குரல் தழுதழுத்தது, 'எனக்குப் பயமாக இருந்தது.'

'ஏன்?'

'எனக்கோ வயசாயிடிச்சு, ஊர் சிரிக்குமென்று அச்சம், பிள்ளைங்க என்ன நினைப்பாங்க? அம்மாவுக்கும் சித்தப்பனுக்கும் முந்தியே தொடிசு உண்டு. அதனால் தான் சித்தப்பன் கல்யாணம் கட்டலை என்று நினைப்பாங் இல்லையா? கதல், அண்ணனுக்கும் கெட்ட பெயர் தானே?'

'அட சும்மாயிரு!' என்றாள் கதல். 'அண்ணனைப் பத்தி உனக்கு ரொம்பக் கவலை, கருமாதி நடக்கிற அப்போ நீயுந்தானே இருந்தே? என் மாமனாரு செத்தாரே, அப்ப உன் உறவு முறை சனங்க எல்லாருக்கும் சாப்பாடு போட்டு எழுப்பிவிட்டுத்தானே பச்சைத் தண்ணியே பல்லிலே ஊத்திச்சு? நீங்க எல்லாம் எத்தனை பேரை அழைச்சீங்க? நீ அவங்க உடன் பொறப்பு, அவங்க இரண்டு பேரும் பிள்ளைங்க. நீதானே தம்பி? இதுங்க தான் பிள்ளைங்களா? மொத்தமா இருபது இருபத்தைஞ்சு பேரைக் கூப்பிட்டீங்க. இது கூட எதுக்குக் கூப்பிடணும்? சண்டை நடக்குது, சட்டம் இருக்கு. இருபத்தி அஞ்சு பேருக்கு மேலே போனா போலீசு பிடிச்சிண்டு போயிடும். அப்படி இப்படின்னு சொன்னீங்க. ஹூம், கோழை மனுசங்க இப்படிப்பட்டவங்க கூட நான் ஏன் இருக்கணும்?'

திடீரென்று டோடியின் குரல் மாறியது. 'நான் உயிரோடு இருக்கிறபோது நீ அந்நியாயமா ஒருத்தன் கூடப் போறதா?'

'ஆமாம்.'

'எங்கே, சொல்லு பார்க்கலாம்!' டோடி எழுந்துவிட்டான்.

'ஒரு முறை என்ன? நூறு முறை சொல்லுவேன்.' கதல் படுத்தவாறே சீறினாள். டோடி இரண்டடி முன்னால் வந்தான். 'ஹூம் வா' என்றாள் கதல்.

டோடியின் கால்கள் மேலே நகரவில்லை, கதல் பார்த்துக்கொண்டே இருந்தாள். டோடி மீண்டும் போய் உட்கார்ந்து விட்டான். கதல் பார்த்துக்கொண்டே இருந்தவள் சிரித்தாள். 'நீ என்னை அடிப்பதா? உனக்கு அத்தனை தைரியம் இருக்குதா மச்சான்? இப்ப எனக்குப் புருசனாயிருக்கானே அவன் வேணுமினு ஆண்பிள்ளை! இதை வேணுமினு கேட்டுக்கோ. எனக்கு உன் அண்ணனே திரும்பக் கிடைச்ச மாதிரி இருக்கு. ஆனால் நீ!' கதல் இரண்டொரு விநாடி மௌனம் சாதித்தாள். பிறகு பேசினாள்: 'ஆம்பிள்ளையா? அட யாராவது பொம்பிளையிடம் கெஞ்சுவாங்களா? முன்னே வந்த நீ என்னை நாலு அடி அடிச்சா, நீ என்னை உன்னுடையவள் என்று நினைக்கிறேன்னு அர்த்தம். நானும் இவ்வீட்டிலேயே கிடப்பேன், படி தாண்ட மாட்டேன்.'

டோடி சிலையாக உட்கார்ந்திருந்தான். இருள் கனத்துக்கொண்டே போயிற்று. கதல் தன் பாவாடையின் கொசுவங்களை விரித்து உடலில் போர்த்திக் கொண்டாள். டோடி தூங்கி வழிய ஆரம்பித்தான்.

+

தாழ்வாரத்தில் துல்லோ சோம்பல் முறித்தவாறே வரவேற்றாள். 'வந்து விட்டாயா! ஒரகத்தி, ராத்திரி எங்கேயிருந்தாய்?'

வெள்ளி மறைந்துவிட்டது. வானத்தில் ஒளி பரவிக்

கொண்டிருந்தது. கொட்டிலில் மாடுகள் எழுந்து நின்றன. காற்றிலே இதமான குளிர் விரவி நின்றது.

கதல் வெடுக்கென்று பதில் கூறினாள்: 'ஓரகத்தியே, நீ தூங்கு, உன் அதிகாரம் என் மீது செல்லாது. உன் வயசுக்கு எனக்குப் பெண்கள் இருக்காங்க. உன் மச்சான் உறவிலே நான் ஓரகத்தி, அவ்வளவுதான். நான் உன் கால் செருப்பு அல்ல தெரியுமா? சும்மா கிட!'

துல்லோ திகைத்துவிட்டாள். மௌனியும் எழுந்துவிட்டான். பாய்ந்து வந்தான் வெளியே. 'எங்கே போயிருந்தே நீ?'

கதல் தலைத் துணியை இழுத்துவிட்டுக்கொண்டாளே தவிர, குரலின் தொனி மாறவில்லை, 'அவுங்கதான் என்னிக் கட்டியிழுத்துக்கொண்டு போயிட்டாங்க. சமயம் பார்த்து ஓடி வந்துவிட்டேன்.'

மௌனி அடங்கிவிட்டான். மௌனியின் அப்பா மாடுகளை ஓட்டிக்கொண்டு போனான். மௌனியும் நடந்தான்.

'எங்கே போகிறாய்?' என்றாள் கதல்.

'வயலுக்கு.'

'முதலில் எனக்கு முடிவு சொல்லிவிட்டுப் போ.'

நடுத்தரவயதுள்ள இப் பெண்ணின் துணிவைக் கண்டு துல்லோ அசந்து போய் நின்றாள்.

'என்ன முடிவு?' என்று வினவினான் மௌனி. இப் பெண்ணிடம் அவனும் அடங்கித்தான் நின்றான்.

'உன் குடும்பத்துக்கெல்லாம் நான் உழைப்பேனா?' கதல் கேட்டாள். 'நாம் இரண்டு பேர்தானே? தனியாக இருப்போம்! சாப்பிடுவோம்!' மௌனியின் பதிலை எதிர் பாராமல் அவள் பேசிக்கொண்டே போனாள். 'சம்பாதிப்பதைக் கொடு, நான் தடுக்கலை. ஆனால் வீட்டுக்குள்ளே அடுப்பு இனி தனித் தனிதான்,'

மௌனி கண நேரம் பிரமித்து நின்று விட்டான்.

துல்லோ சீறிக்கொண்டு கிளம்பினுள். 'வாயை ஏன் மூடிக்கொண்டுவிட்டாய் மச்சான்? ஏன் பேசவில்லை? எனக்கு ஓரகத்தியைக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிருயா; மாமியாரையோ? ஏன் வாயைத் திறக்கவில்லை? என்னவென்று நினைத்துக்கொண்டாய்? இரண்டு ரொட்டியைக் கல்லிலே போட்டு எடுத்தால், நான் ஒன்றும் வெந்துபோய் விடமாட்டேன். இவள் கண்டபடி பேசுவதைச் சகித்துக் கொள்வேன் என்று நினைத்தாயா? மச்சான், என் அம்மாவும் அடுப்பு மண்ணைத் தின்றுதான் என்னைப் பெத்திருக்கிருள், ஆமாம்!'

'அடிச் சக்களத்தி!' கதல் கூச்சல் போட்டாள். 'மண்ணைத் தின்று பொறந்தவளா? இல்லாட்டா எல்லாரையுமே விழுங்கி ஏப்பம் விடுவாயே, ராக்ஷசி! நீ என்ன, எல்லாம் கோட்டையா வைத்திருக்கிருய்? அதைத் தின்னுவிட்டால் ரொட்டி எங்க தொண்டைக்குக் கீழே இறங்காதா என்ன?'

மௌனியால் ஒன்றும் பேசமுடியவில்லை, அவன் வெளியே போய்விட்டான்.

நண்பகலாகிவிட்டது. துல்லோ சர்க்காவைச் சுழற்றிக் கொண்டிருந்தாள், நராயண் வந்து, யார் உள்ளே?' என்று குரல் கொடுத்தான்.

துல்லோ தலைத் துணியை முகத்துக்குக் கீழே இழுத்துவிட்டுக்கொண்டாள். 'யார் அது?'

நராயண் ஆத்திரத்தை விழுங்கிக்கொண்டு, 'கதலின் பிள்ளை' என்ருன்.

துல்லோ முக்காட்டுக்குள் சிரித்துக்கொண்டாள். 'சின்னவனு, பெரியவனு?'

'சின்னவன்.'

'இன்னும் எத்தனை பேர் இருக்கிறீர்கள்?'

'எத்தனை இருந்தா உனக்கென்ன?' கதல் சீறிக்கொண்டு உள்ளேயிருந்து வெளியே வந்தாள்.

'அரேரே! வந்துவிட்டாளே!' என்று கூவிக்கொண்டு துல்லோ உள்ளே ஓடிவிட்டாள்.

'இன்னிக்கு அவர் வரட்டும், உன்னை அப்புறமா பார்த்துக்கிறேன் ஓரகத்தி!' கதல் தலையை மேலும் கீழுமாக ஆட்டினுள்.

'அம்மா!' என்ருன் நராயண். 'இவள்தான் உன் ஓரகத்தியா?'

'நீ எதுக்காக வந்தே—அதைச் சொல்லு?' கதல் எரிந்து விழுந்தாள்.

'தண்டம் வசூலிக்க வந்தேன்.'

நராயண் உட்காருவதற்காக இரண்டடி முன்னுல் வந்தான்.

'நில் அங்கேயே!' என்ருள் கதல்.

இச் சமயத்தில்தான் செம்பையும் கயிற்றையும் எடுத்துக்கொண்டு திரும்பி வந்த மௌனி, கதல் தன் கைக் காப்பையும், கழுத்து அட்டிகையையும் அவிழ்த்து வீசி எறிந்து, 'இந்தா, உன் தண்டம் தீர்ந்துவிட்டது. எடுத்துக்கொள், இனி இப்பக்கம் ஒருவரும் வராதீர்கள், புரிந்ததா? இல்லாவிட்டால் "என் புருஷன் சொத்தையெல்லாம் எடுத்துக்கிட்டு, பெண்டாட்டி பேச்சைக் கேட்டுப் பிள்ளைகள் என்னை வீட்டை விட்டு விரட்டிட்டார்கள்" என்று போலீசிலே புகார் செய்துவிடுவேன். ஆமாம்' என்று கர்ஜிப்பதையும் கேட்டான்.

நராயணின் முகம் கறுத்துவிட்டது, நகைகளை எடுத்துக்கொண்டு அவன் போய்விட்டான், மௌனி பயந்துகொண்டே உள்ளே வந்தான். அவனைக் கண்டதுமே துல்லோ, 'மச்சான், கேட்டயா கதையை? ஓரகத்தி நகையெல்லாம் அவிழ்த்துக் கொடுத்துட்டா! மனசு எப்படியிருந்தாலும் பிள்ளை பக்கந்தானே சாயும்? இப்படி நாலு இடத்திலே போய் உட்கார்ந்தா, பிள்ளைங்க வய

லுக்கு வரப்பு வேலி எல்லாம் கட்டிவிடுவாங்க, சன்னக் காரை போட்ட திண்ணை வீட்டுக்கு வெளியே பளபள வென்று கண்ணைப் பறிக்கும், சொல்லி வைக்கிறேன் மச்சான்! உனக்கு ஒன்னும் தெரியாது. பொம்பளை சாகசமெல்லாம் உனக்கு என்ன தெரியும்? இதுகூட ஒரு தொழில்தான், எனக்கு வேறெ நகை பண்ணிப் போடுன்னு உங்கிட்ட சொல்லுவா!' என்றாள் கிண்ட லாக.

கதல் சிரித்தாள்: 'நல்லா பேசினே ஒரகத்தி! பேஷ்! உங்க வீட்டுப் பொம்பளைங்கதான் புதுசா கூடிக்கிட்ட ஆம்புளை கிட்ட பழைய புருசன் கணக்கைத் தீர்த்துப் பாங்க. கதல் என்னிக்கும் எஜமானியாகத்தான் இருப் பாள். தோட்டிச்சியாக இருக்கமாட்டாள், புரிஞ்சுதா! உழைச்சா என் புருசனுக்கு உழைப்பேன். இல்லாட்டி, தலையிலே எழுதினபடி ஆகுதுன்னு சும்மா இருப்பேன். புரிஞ்சுக்கிட்டியா? நடுவே பேச நீ யாருடி?'

துல்லோ அவளை எரித்துவிடுபவள் போல் பார்த்தாள். பின்பு கால்களை உதைத்துக்கொண்டு உள்ளே போய் விட்டாள்.

'ரொம்ப அதிகம் பேசாதே தெரிந்ததா? வீட்டுக்கு அடங்கின பொம்பளையாக இரு' என்றான் மௌனி.

'அட நீ சும்மாயிரு அப்ப நீ பொறந்துகூட இருக்க மாட்டே!' கதல் புன்முறுவல் பூத்தாள். 'எனக்கு எல்லாம் தெரியும். எனக்கு நீயா கத்துக் கொடுக்கிறே? சாதி சனத் திலே இல்லாத முறையா, நான் அப்படி யொண்ணும் காரியம் செய்யலையே, அப்படி ஏதாவது முறை தவறி நடந்தா, ஒரு முறையல்ல, ஆயிரம் முறை சொல்லு, கேட்டுக்கிறேன். ஆனால் சக்களத்தி மிரட்டலைப் பொறுத் துக்க மாட்டேன்.'

'இரு, இரு! சொல்றேன்!' என்று தலையை ஆட்டினான் மௌனி.

கதல் சிரித்துக் கொண்டே உள்ளே போய்க் காரி யத்தைக் கவனிக்க ஆரம்பித்தாள்.

5

குளிர்ந்த காற்று வேகமாய் வீச ஆரம்பித்து விட்டது. திறந்த கூரையின் கீழே அமர்ந்திருந்த டோடி ஹுக்கா குடித்துக்கொண்டு இருந்தான். நெடுநேரம் மௌன மாய் அமர்ந்து சலித்துப்போனதும் ஹுக்காவைத் தூர வைத்துவிட்டு உட்கார்ந்தான்.

வயலிலிருந்து வந்த நிகால் மாட்டைப் பிடித்துக் கட்டி யவன் தீனியை வைத்துவிட்டு, 'சித்தப்பா!' என்று அழைத்தான்.

டோடி ஏதோ யோசனையில் இருந்தான். அவன் காதில் இக்குரல் விழவில்லை.

'சித்தப்பா!' நிகால் குரலை உயர்த்தினன்.

'ஊம்.' டோடி திடுக்கிட்டான். 'என்ன, என்னைக் கூப்பிட்டாயா?'

'உன்னிடம் சொல்லாமல் யாரிடம் சொல்வேன்? நாள் முழுவதும் உன்னைக் காணவில்லை. நீ இன்னிக்குப் பூரா சன்யாசி பாபாவின் கணப்பு கிட்டே விழுந்து கிடந் தேன்னு சிம்மன் கடேரா சொன்னன். உண்மைதான சித்தப்பா?'

'ஆமாம், போயிருந்தேன்.'

'எதற்காகப் போனய்?'

'என்னம்மோ தோணித்து, போனேன்.'

'ஊரிலிருந்து அந்த பனியாவின் ஆள் வந்திருந்தான். நெய்யைப் பத்திக் கேட்டான். நான் ஒண்ணும் சொல்லலே. சண்டையே வந்துவிடும் போலாகி விட்ட டது, சித்தப்பா!'

'அப்படி யெல்லாம் சொல்லக்கூடாது மகனே! வெளி மனுசங்க கிட்டச் சண்டையா போடுவாங்க?'

நிகால் ஹூக்கா பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டு போய் விரட்டியில் தணல் எடுத்துவைத்து ஊதிக் கொண்டு வந்தான். 'நான்தான் போகல்லே! போயிருந்தால் மண்டை உடைந்திருக்கும். நாராயணனைத்தான் அனுப்பினேன்.'

'எங்கே?' டோடி திடுக்கிட்டான்.

'அதுதான் அந்தக் குடிகேடி நாசகாரியிடம்'

'உன் அம்மாவிடமா?'

'அவளுக்கும் உனக்கும் என்னதானே? அவள்மீது உனக்குக் கோபமே வருவதில்லையே! அவளை அம்மா என்று சொல்லுவது?'

'நீ சொல்லாவிட்டாலும் ஊரும் உலகமும் அவளை உன் அம்மா என்றுதானே சொல்லும்? புருசன் இருக்கிற வரைக்கும் அவன் பெயரைச் சொல்லி, இன்னாருடைய பெண்சாதின்னு சொல்லும். அவன் இல்லாட்டி அவ பிள்ளைங்க பேரைச் சொல்லி, அவன் அம்மான்னுதானே சொல்லும்? புதுசா இதிலே என்ன இருக்கு?'

நிகால் முணுமுணுத்தான் — 'சரி, சித்தப்பா, சரி. அவனை ஏன் அனுப்பினேன்று நீ கேட்கலியே?' என்றான்.

'ஆமாம், கேக்கலே.' திடுக்கிட்டவன் போல கூறினான் டோடி — 'நீதான் சொல்லலையே! சொல்லு, சொல்லு!'

'தண்டம் வசூலிக்க அனுப்பினேன் — பஞ்சாயத்தைக் கூட்டறதுக்கு முந்தியே அவள் நகையைக் கழட்டி வீசி எறிஞ்சிட்டாளாம்.'

டோடி புன்முறுவல் பூத்தான். 'உரிமைக்காரங்க இன்னும் பஞ்சாயத்தைக் கூட்டலேங்கிறதை அவளே சுட்டிக் காட்டிட்டா, அதாவது நாமே அவளை விரட்டிவிட

ஆசைப்பட்டோமின்னு கூட்டிட்டா. நராயண் நகைகளை எடுத்து வந்தானு?'

'ஆமாம்.'

டோடி சிந்தனையில் ஆழ்ந்தான்.

'நான் திருப்பிக் கொடுத்துவிட்டு வரட்டுமா?' என்றுன் நிகால்.

'வேண்டாம்' என்றுன் டோடி. 'அவ நிசமாகவே கோபிச்சுக்கிட்டுத்தான் போயிட்டா. வேறொண்ணுமில்லே. நீ சாப்பிட்டாச்சா?'

'இல்லே.'

'சரி, போ. முதல்லே சாப்பிடு!'

நிகால் எழுந்து போய்விட்டான். ஆனால் டோடி அங்கேயே மௌனமாக அமர்ந்திருந்தான்.

அந்தி மாலையின் கருக்கலைத் தொடர்ந்து இரவின் இருள் திரை பிரிந்து வேகமாய் விழுந்துகொண்டிருந்தது.

தூரத்திலிருந்து மத்தளத்தின் ஓசையுடன் பாடலும் கேட்டது. டோடி எழுந்து நடந்தான்.

நிகால் மனைவியிடம் கேட்டான், 'சித்தப்பா சாப்பிட்டு விட்டாரா?'

'இல்லையே!'

நிகால் வெளியே வந்தான். சித்தப்பாவைக் காணும்.

'சித்தப்பா!' என்று அழைத்த நிகால் மேலே இரண்டடி நகர்ந்தான்.

கோட்டை அனுமான் கோவிலைப் பூட்டிக்கொண்டு வந்த பூசாரி சிரஞ்சீவி வழியிலே எதிர்ப்பட்டான்.

'என்னப்பா விஷயம்?' என்று விசாரித்தார் பூசாரி.

'வணக்கம் பண்டிதர் ஐயா' என்றுன் நிகால்.

'சித்தப்பா ... இப்பத்தான் இங்கே இருந்தார்.'

'அட, அவன்தான் அங்கே மத்தளம் கேட்டுக் கொண்டிருக்கிறுனே! நான் இப்போதான் பார்த்துவிட்டுவரேன்.'

பூசாரி போய்விட்டான். நிகால் திகைத்து நின்ருன். மனைவி எட்டிப் பார்த்தாள். 'என்ன?'

'சித்தப்பா, பாட்டுக் கேட்கப் போயிருக்கிருராம்.'

'போய்க் கூட்டிக்கொண்டு வாயேன், இரவாகிவிட்டது' என்ருள் அவன் மனைவி. அழுகிற குழந்தைக்குப் பால் கொடுக்க அவளுக்கு அவசரம்.

நிகால் சித்தப்பாவை அழைத்துக்கொண்டு வந்தபோது டோடியின் உடம்பு மழுவாய்க் கொதித்தது. 'ஒன்று மில்லை' என்று கூறிய டோடி தன் சின்னக் கட்டிலில் காலை மடித்துச் சுருட்டிக்கொண்டு படுத்துவிட்டான். 'சாப்பாடு வேண்டாம். என்னவோ போலிருக்கிறது.' என்ருன்.

நிகால் நின்றுகொண்டேயிருந்தான். 'நிகால், எத்தனை நாட்களுக்குப் பின் மத்தளம் கேட்டேன் தெரியுமா? அண்ணனின் கல்யாணத்தன்று கேட்டது. அப்புறம் இன்றுதான்.'

நிகால் நின்றுகொண்டே கேட்டுக்கொண்டிருந்தான்.

டோடியின் இமைகள் கவிழ்ந்தன. தனக்குள் ஏதோ முணுமுணுத்துக்கொண்டான்.

## 6

மாலையாகிவிட்டது. மௌனி வெளியே உட்கார்ந்திருந்தான். கதல் சூடான ரொட்டிகளையும் மாங்காய்ச் சட்னியையும் எடுத்து வந்து அவன் முன்னே வைத்தாள்.

'ரொம்ப நன்ருய்ச் செய்திருக்கிருய்' ரொட்டியைச் சாப்பிட்டவாறே கூறினுன் மௌனி. 'ரொம்ப நன்ருக இருக்கிறது.'

கதல் எதிரே உட்கார்ந்துகொண்டாள். 'உன் வயசுக்குத் தகுந்தவளா இன்னெருத்தியை நீ ஏன் கட்டிக்கக் கூடாது?' என்ருள் திடீரென்று.

மௌனிக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'ஒருத்திக்கே சாப்பாடு போட முடியலையே' என்றான்.

'அப்படியில்லை' என்றாள் கதல். 'நான் சக்களத்தியை தேடறேன்னு நினைப்பே. ஆம்பிளைக்கு என்ன? எனக்கோ வயதாகிக்கொண்டு வருகிறது. உயிருடன் இருக்கும்போதே கண்ணாலே பாக்கணும். ஒன்றுமில்லா விட்டாலும் அதிகாரம் செய்யவாவது ஒருத்தி கிடைப்பாளில்லையா?'

மௌனி சிரித்தான். 'அப்படிச் சொல்லு, ஆசை இருக்கு. உனக்குச் சண்டை போட ஒருத்தி வேண்டுமே!' மௌனி சாப்பிட்டுவிட்டு எழுந்தான். கதல் ஹுக்காவை நிரப்பிக்கொண்டு வந்து வைத்தாள். பிறகு சுவரின் மறைவிலே உட்கார்ந்து சாப்பிடத் தொடங்கினாள்.

'அட, இப்ப எங்கே வந்தே?' என்று மௌனியின் குரல் கேட்டது.

'முக்கியமான காரியமிருந்தது, பேஷ்கார் சாகப் சொல்லி அனுப்பினார்.'

கதல் குரலுக்குடையவனைப் புரிந்துகொண்டாள். அவளுடைய கிராமத்தைச் சேர்ந்தவன்தான். கோட்யா மைனாவின் இடையன் கிரிராஜ். பேஷ்காரின் மாட்டை மேய்ப்பது சம்பந்தமாக ஏதாவது பேச வந்திருப்பான்.

'ராத்திரியே போகிறாயா? வா உட்கார். ஹுக்கா குடித்துவிட்டுப் போ!' என்றான் மௌனி.

கவர்ச்சி இழுத்தது. கிரிராஜ் உட்கார்ந்துவிட்டான். கதல் இன்னொரு ரொட்டியைக் கையில் எடுத்தாள்.

'உனக்குத் தெரியுமா?' என்று வினவிய கிரிராஜ் புகையை உறிஞ்சினான்.

'என்ன விஷயம்?'

'கதலின் மச்சான் டோடி இறந்துவிட்டான்.'

கதலின் வாய் அசை போடுவதை நிறுத்திவிட்டது. சட்டென்று லோட்டாவிலிருந்த தண்ணியை ஒரு வாய் குடித்துவிட்டு, நொண்டையிலிருந்த ரொட்டியைக் கீழே இறக்கினுள். நெஞ்சு வாய்க்கே வந்துவிடும் போல் இருந்தது.

'எப்படிச் செத்தான்?' மௌனி வினவினுன். 'ஆள் நல்லா இருந்தானே?'

'குளிர் தாக்கிவிட்டதாம். இரவெல்லாம் திறந்த உடம் போடு இருந்திருக்கிருன்.

கதவருகில் கதல் வந்து நின்ருள். 'கிரிராஜ்!'

'சித்தி!' கிரிராஜ் குரல் கொடுத்தான். 'உண்மைதான்! சாகும்போது கூட அவன் வாயிலிருந்து உன் பெயர்தான் வந்தது சித்தி! பாவம், ரொம்ப நல்ல மனுசன்.'

கதல் அப்படியே அசைவற்று நின்றுவிட்டாள்.

கிரிராஜ் போய்விட்டான்.

'இதோ பாரு' என்று ஆரம்பித்தாள் கதல்.

'என்ன?'

'நான் கொஞ்சம் போய் வரேன்.'

'எங்கே?' அவனுக்கு உள்ளூர சந்தேகம்.

'அங்கே தான்'

'எதற்கு?'

'மச்சான் செத்துவிட்டானில்லே?'

'மச்சான்! இப்ப அவன் உன் மச்சான் அல்ல.'

கதல் சிரித்தாள். பகபகவென்ற சிரிப்பு. 'என் அடுத்த ஜன்மத்திலும் அவன் தான் என் மச்சானுக இருப்பான். அவன் மட்டும் என் மேல் அலட்சியமாக இருந்திருக் காட்டி இந்தக் கால் அந்த வீட்டு வாசற்படியைத் தாண்டி இருக்க முடியுமா? வெட்டி இருப்பான் வெட்டி. அவன் பாராமுகமாக இருந்தான். நானும் முறிச்சுகிட்டு வந்துட் டேன். நான் அவன் கிட்டே பழியல்ல தீத்துக்கிட்டேன்'

—இதைச் சொல்லும்போதே அவள் குரலில் கடுமை தொனித்தது.

'நீ போக முடியாது.'

'ஏனும்? நீ என்னைத் தடுப்பாயா! அட; நீ ஒன்னு! என் வயத்திலே பிறந்த பிள்ளைகளே என்னைத் தடுக்க முடியலே; இனி என்ன? யாரை அவமானப் படுத்தணுமின்னு நினைச்சேனோ, அவனே போய்விட்டான். என்னைத் தடுக்க நீ யார்? என் இஷ்டமா நான் வந்தேன். இருப்பேன், இருக்கமாட்டேன். நீ என்ன என்னை விலைக்கா வாங்கியிருக்கே? அந்த வீட்டிலே எனக்கென்ன வேலைன்னு கேட்டுட்டே! உன் நாக்கை அறுத்தா என்ன?'

'ஏய்! போ...போ உள்ளே.'

மௌனி எழுந்து வந்து அவள் கையைப் பற்றி இழுத்து உள்ளே தள்ளிவிட்டுக் கதவருகில் கட்டிலை இழுத்துப் போட்டுக்கொண்டு படுத்தவன் ஹுக்கா குடிக்க ஆரம்பித்தான்.

உள்ளே கதல் அழுதுகொண்டிருந்தாள், ஆனால் கேவல் கூட வெளியே படுத்திருந்த மௌனியின் காதில் விழவில்லை. அவ்வளவு மெதுவாக அழுதாள். இன்று அவள் உள்ளம் உடைந்து ஆறுகப் பெருகிக் கொண்டிருந்தது.

பின் இரவாகிவிட்டது, மௌனி நல்ல குறட்டை விட்டுத் தூங்கிக்கொண்டிருந்தான்; கதல் தன் முழு பலத்தையும் திரட்டி மேற்கூரையை ஒரு மூலையில் பிரித்து விட்டாள்; பாம்புபோல் மெல்ல ஊர்ந்து, நகர்ந்து வெளியே குதித்து ஓடிவிட்டாள்.

மௌனிக்கு ஒரே ஆத்திரம், தவிப்பு, நேராக ஊருக்குள் போய் ரகளை செய்வதற்கு அவனுக்குத் தைரியம் வரவில்லை. தடியை சுழற்றி மிரட்டிக் கதலைத் தூக்கி வரும் துணிவும் இல்லை, தடிச்சியின் காலை ஒடித்துப் போடத் துடித்தது மனம். 'ஆசைநாயகி ஓடிப்போய்

விட்டாளே' என்று துல்லோ ஏசிக் காட்டியபோது மௌனிக்கு ஆத்திரத்தை விழுங்கிக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. கூஜர்கள் காதில் இது விழுந்ததும், 'அட போப்பா! போயும் போயும் ஒரு கிழவிக்கா அடிதடிச் சண்டை? அவளாலே உனக்கு என்ன நஷ்டம்? என்ன செலவு? இரண்டு வேளை சாப்பிட்டிருப்பா. அதுக்குத்தான் உனக்குச் சமைத்துப் போட்டிருக்காளே?' என்றனர்.

மௌனியின் கோபம் கொழுந்து விட்டெரிந்தது. ஆனால் வழி? கோட்யா கிரிராஜ் வந்து நடந்ததைக் கூறினான்.

கதல் போய்ச் சேர்ந்தபோது நாட்டாண்மைகாரன் அங்கே உட்கார்ந்திருந்தான். அவனைக் கண்டதுமே நிகால், 'ஜாக்கிரதை!' என்று உறுமினான். 'உள்ளே கால் வைக்காதே! ஏன் திரும்பி வந்தே?'

நாட்டாண்மைக்காரன் திடுக்கிட்டான். 'ஏன் எதுக்காக வந்தே?' என்றான்.

கதல் அங்கேயே உட்கார்ந்துவிட்டாள். 'நான் அறியாப் பொண்ணு இருக்கிறப்போ என் புருசனோடே என் மச்சான் தான் சிலம்பத் தடியைச் சுழற்றிக்கிட்டு வந்தான். நான் பார்த்தது இவனைத்தான். இவன் சாமர்த்தியத்தைப் பார்த்துத்தான். இவன்தான் ஆண்பிள்ளை···இவன் நிழலிலே வாழலாம்னு வந்தேன். நாட்டாண்மைக்கார ஐயா! நீங்களே சொல்லுங்க! என் புருசன் போன பின்னே இவனாலே என்னை வைச்சுக் காப்பாத்த முடியலை. நான் என்ன செய்ய? அட! நான் தான் இல்லேன்னா? இவங்க எல்லாம் என்ன செய்தாங்க? இரண்டு நாளைக்கு இந்தப் பயலுக்குச் சோறு தண்ணி போடமுடியலையே! அனுப்பிச் சுட்டாங்களே! இவர்களை நம்பி நானும் இருந்தா என் கதி என்ன?'

'உன் பொண்ணு பிள்ளைங்க வயசைப் பார்த்தாயா?' என்றான் நாட்டாண்மைக்காரன்.

'வயசைப் பார்க்கிறதா? என் மானத்தைப் பார்க்கிறதா? அதைச் சொல்லு! எனக்கும் என் மச்சானுக்கும் மனத் தாங்கல். அது இப்பத் தீர்ந்து போச்சு, இவங்க என் பிள்ளைங்கள். நான் சாதி சனத்துக் கட்டுமானத்துக்கு விரோதமா நடந்திருந்தா சொல்லு. என் மேலே பிராது போடு. பஞ்சாயத்துக்காரங்க முன்னே பதில் சொல்ல றேன். ஆனால் நானுந்தான் கேட்கிறேன். என் பிள்ளைங்க சாதி சனத்து முகத்திலே கரியைப் பூசினப்போ, நீங்க ளெல்லாம் எங்கே இருந்தீங்க?'

'அது எப்போ?' நாட்டாண்மைக்காரர் வியப்புடன் கேட்டார்.

'நாட்டாண்மைக்கார ஐயா, நீங்க சொல்லாமல் வேறு யாரு சொல்லுவாங்க? என் புருசன் கருமாதியை இரு பத்தி அஞ்சு பேருக்கு சாப்பாடு போட்டு முடிச்சு விட்டாங்களே?'

'அட பைத்தியமே! இது சர்க்கார் சட்டமாச்சே!'

'ஆமாம், சட்டம்.' கதல் சிரித்தாள். 'ஊரு உலகத்தி லெல்லாம் இச்சட்டம்தான் செல்லுதா? நாட்டாண்மைக் கார ஐயா! பட்டப் பகலிலே மாட்டை அவிழ்த்திண்டு ஓடிப்போறாங்க! ஆமாம். என் புருசனுக்கு மட்டுந்தான் சட்டமா? அப்படிச் சொல்லாதே! இனித் தட்டிக் கேட்க யாரு இருங்காங்க! பணத்தை ஏன் வீணாகச் செலவு செய்யணுமின்னு பிள்ளைங்க நினைச்சுட்டாங்க. கோழைங்க. கையாலாகாத பசங்க!'

'கோழையா? நாங்களா?' நிகால் சீறினான். 'நீ பெரிய சிங்கம்!'

'ஆமாம், நான் சிங்கம்தான்,' கதல் வீராப்புடன் சவால் விட்டாள். 'சொல்லு, உனக்குத் துணிவிருக்கா?'

'நீ சொல்லு! உனக்கு இருக்கா?' நிகால் கத்தினான்.

'அப்ப போ, சாதி சனத்தைச் சித்தப்பன் கருமாதிக் குக் கூப்பிட்டு வா.'

நிகால் அயர்ந்து நின்றான். மெதுவாகப் 'போலீஸ்' என்றான்.

கதல் மார் தட்டிக்கொண்டு நின்றாள். 'ப்பூ! இவ்வளவு தானா?'

'பைத்தியம் உளறுது' என்றான் நாட்டாண்மைக்காரன். 'இவ்வளவு தானா? சுட்டுவிட்டால் என்ன செய்வது?'

'அட சீ! பெரிய மனுசங்க, தருமாத்துமாக்கள் எல்லாம் போயிட்டாங்க. குஜராத்தே மூழ்கிப் போச்சு. இனி யாரையும் நம்பறதிலே பயனில்லே! எல்லாம் வெறும் கோழைங்க!'

சில நிமிடங்களுக்குப் பிறகு திடீரென அவள் கேட்டாள். 'நான் ஏற்பாடு செய்யட்டுமா?'

'நீயா?' என்றான் நிகால்.

'ஆமாம், நான்தான்.' கதலின் கண்கள் கரகரவென்று நீரைப் பொழிந்தன. 'சாகும்போதுகூட அவன் என் பெயரைத்தானே சொல்லிண்டு செத்தான்? அவன் கருமாதிக்கு நான் ஏற்பாடு செய்கிறேன்!'

இதையெல்லாம் மௌனி வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தான். கருமாதிக்குப் பிரமாதமான ஏற்பாடுகள் நடக்கின்றன என்பதையும் கிரிராஜ் கூறியிருந்தான். 'கதல் இன்ஸ்பெக்டருக்கு லஞ்சம் கொடுத்துவிட்டாளாம். அவன் அந்தப் பக்கமே தலைகாட்ட மாட்டானாம். கதல் தானே முன் நின்று யாவற்றையும் கவனிக்கிறாள். தன் புருசன் போனபோதும் கூட அவளுக்கு இவ்வளவு துக்கம் இல்லை. இப்போ அத்தனை துக்கம் என்று ஊரார் பேசிக் கொண்டனர்' என்றான் கிரிராஜ்.

கிரிராஜ் போய்விட்டான். மௌனியின் மனம் விஷமாய் தகித்தது. 'ஏய் கதல், உன் மனசுப்படி காரியத்தை நடக்கவிட்டா நான் மௌனியில்லே! இன்ஸ்பெக்டருக்கு

வாக்கரிசி போட்டாச்சா? அதுக்கு மேலே ஒன்னு இருக்கு, பாரு, நான் பெரிய இன்ஸ்பெக்டர் கிட்டப் போய் புகார் செய்யறேனு இல்லையா?' என்று கறுவிக் கொண்டான் அவன்.

7

கருமாதி நடந்துகொண்டிருந்தது. பந்தி உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு எழுந்தது. வாணலியில் சுடச்சுடப் பூரிகள் பொரிந்தன.

வெளியே ஆண்பிள்ளைகள் பந்தியைக் கவனித்துக் கொண்டிருந்தனர். நிகாலும் நாராயணனும் யுத்த காலத்தில் தானியங்களை அதிக விலைக்கு விற்று நோட்டுகளை வெள்ளி ரூபாயாக்கிக் கலயத்திலே போட்டு வைத்திருந்ததெல்லாம் வெளியே வந்தது மட்டுமா? மளிகைக் கடையிலே கடன் வேறு ஏறியது. ஆனால் வெளியே ஊரார் என்ன பேசிக்கொண்டார்கள் தெரியுமா? 'எல்லாம் கதல் தான் நடத்துரு! பிள்ளைங்க என்ன? நம்மால் முடியாதுன்னு உட்கார்ந்துட்டான்களே! சட்டம் என்ன, சாதி சனத்தைவிட உசத்தி?'

கதல் களைத்துப்போய் உட்கார்ந்துவிட்டாள். பெண்கள் கூட்டத்திலே அவள் அமர்ந்திருந்தாள். திடீரென்று வாசலிலே போலீஸ்காரர்கள் தென்பட்டனர். அவள் சட்டென்று வெளியே பாய்ந்து வந்தாள். நிகால் தலையைக் குனிந்துகொண்டு நின்றான்.

'என்ன விஷயம், போலீஸ்கார ஐயா?' என்றாள் கதல்.

ஒரு பெண் முன்னால் வந்து நின்றதும் போலீஸ்காரன் திகைத்து நின்றான்.

'கருமாதியை நிறுத்திவிடு என்கிறார்!' என்றான் நிகால்.

'அது எப்படி?' கதலுக்குத் தூக்கிவாரிப்போட்டது.

'இன்ஸ்பெக்டர்தான் சொன்னார்' போலீஸ்காரன் விநயத்துடன் கூறினான்.

'ஏனாம்? அவரிடம் கேட்டுத்தானே எல்லாம் நடக்கிறது?' தான் லஞ்சம் கொடுத்திருக்கிறேன் என்பதைக் கதல் தெளிவாக உணர்த்தினாள்.

'தெரியும்' என்றான் அவன், 'இன்ஸ்பெக்டர் ஐயாவிற்கு இதெல்லாம் பிடிக்கும். ஆனா யாரோ போய்ப் பெரிய இன்ஸ்பெக்டர் ஐயாகிட்டே புகார் செய்திருக்காங்க. அதனால்தான் இன்ஸ்பெக்டர் வரவேண்டியிருக்கிறது. அதனால் கூட்டத்தைக் கலைத்துவிடுங்கள் என்று சொல்லி அனுப்பினார். இல்லாவிட்டால் சட்டப்படி நடவடிக்கை எடுக்கவேண்டி வருமாம்!'

கதல் கணப்பொழுது யோசித்தவாறு நின்றாள். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. 'இன்ஸ்பெக்டர் ஐயா இதையெல்லாம் முன்னாடியே யோசிக்கலையா? இப்ப சாதி சனங்களைப் பந்தியிலிருந்து எழுப்பவா? போலீஸ்கார ஐயா! நீங்களும் ஏதாவது சாப்பிட்டுவிட்டுப் போங்க! என்ன நடக்குதோ பார்க்கலாம். இன்ஸ்பெக்டர் ஐயா எதுக்காக வரணும்? நானே சொல்லி அனுப்புறேன். அவர்தான் மகராசன் ஆச்சே!'

'சர்க்கார் வேலை அம்மா! வேலை போயிடாதா? அவர் வந்துதான் ஆகணும்.'

'அப்ப வரட்டும்' கதல் காரமாகப் பேசினாள் 'மனுசனை, ஒருமுறைதான் எடை போடுவாங்க! உறவு முறைக்காரங்களை நாங்க இலையை விட்டு எழுப்ப முடியாது.'

நாராயண் பயந்துவிட்டான்.

போலீஸ்காரன் தொடர்ந்தான். 'எல்லாரையும் கைது செய்துவிடுவாங்க. சர்க்காரை எதிர்க்கப் பார்க்காதீங்க.'

'அட சர்க்கார் என்ன? சாதி சனத்தை விடவா

உசத்தி?' கதல் வெகுண்டாள். 'சர்க்கார் காலிலே நீங்க வேணுமின்னு விளுங்க. ஆனு சர்க்காருக்காக, தருமத்தை விடமாட்டோம். ஆமாம் கேட்டுக்கோ. நீ தருமத்தைப் பிடுங்கிக் கொண்டா, உங்க உயிரே போகும் தெரிஞ்சுக்கோ!'

கதல் பூமி அதிரத் 'தட தட' வென்று நடந்து சென்றுள்.

மூன்று பந்திகள் எழுந்துவிட்டன, இது கடைசிப் பந்தி. நிகால் இருளை ஊடுருவதுபோல் பார்த்தான், 'நாராயண் சீக்கிரம் — இன்னும் ஒரு பந்திதானே பாக்கி.'

கதல் தட்டி மறைவிலிருந்து கூப்பிட்டாள்: 'நிகால்?'

நிகால் சென்றுன்.

'பயப்படுகிருயா?' என்று கேட்டாள் கதல்.

உலர்ந்த உதடுகளை நாவால் தடவியவாறே 'இல்லை' என்றுன் அவன்.

'என் வயத்திலே பிறந்த கௌரவத்தை நீ காப்பாத்தணும், உன் சித்தப்பா, உன்னையே பிள்ளையா நினைச்சு இன்னொரு கல்யாணம் கூடக் கட்டிக்க மறுத்துட்டாரு, நினைவு வெச்சுக்க, மகனே! அவருக்கு வேறு யாருமில்லே!'

நிகால் தலை குனிந்துகொண்டான்.

ஒரு சிறுவன் ஓடி வந்தான்.

'பாட்டி!' என்று கத்தினுன்.

'என்னடா?' கதல் சந்தேகத்துடன் கேட்டாள்.

'போலீஸ் ஆயுதத்துடன் வருகிறது.'

நிகால் கதலின் மீது பொருள் பதிந்த பார்வையை வீசினுன்.

'பந்தி எழுந்திருக்க அதிக நேரமாகாது! என்றுள் கதல்.

'ஆனுல் அவங்க கேட்கணுமே.'

'அவங்களைத் தடுக்கணும்.'

'அவங்க கிட்டே துப்பாக்கி இருக்கு.'

'துப்பாக்கி நம்ம கிட்டே கூட இருக்கு நிகால். காட்டிலே எத்தனை துப்பாக்கிகளுக்குக் குறைவு?'

'அப்புறம் நாம் எதைச் சாப்பிடுவது?'

'கடவுள் கொடுப்பதை.'

வெளியே போலீஸ் வானின் ஹார்ன் கேட்டது. நிகால் முன்னே சென்றான். வண்டியிலிருந்து இறங்கிய இன்ஸ்பெக்டர் கேட்டார்: 'இங்கே விருந்து நடக்கிறதா?'

நிகாலுக்குத் தூக்கிவாரிப் போட்டது. லஞ்சம் வாங்கிக் கொண்டவனே தெரியாததுபோல் பாவித்தான்.

'ஆம், நடக்கிறது!' நிகால் ஆத்திரத்துடன் கூவினான்.

'இருபத்தைந்து பேருக்கு அதிகமாக இருப்பார்களா?'

'எண்ணி நாங்கள் சாப்பாடு போடுவதில்லை. இன்ஸ்பெக்டர்.'

'ஆனால் நீ சட்டத்தை மீறக்கூடாது.'

'சட்டம் எல்லாம் நேற்று வந்த சர்க்காருடையது. ஆனால் சாதி சனம் கட்டுமானம் எல்லாம் என்றென்றும் இருப்பது. எங்களுக்கும் சர்க்காருக்கும் சம்பந்தமில்லை. சாதி சனந்தான் வேண்டும்.'

'உன்னை நான் கைது செய்கிறேன்.'

உள்ளேயிருந்து கதலின் குரல் வந்தது. 'நிகால்!'

நிகால் உள்ளே சென்றான்.

'பந்தி முடியும் வரை இவர்களை எப்படியாவது தடுத்து நிறுத்த வேண்டும்.'

'அப்புறம்?'

'எல்லாரையும் பின்வாசல் வழியாக அனுப்பி விடுவோம். யாராவது பிடிபட்டு விட்டால் நாளைக்குச் சாதி சனம் என்ன சொல்லும்.?

'ஆனால் இவர்கள் நிற்கமாட்டார்களே? சுட ஆரம்பித்து விடுவார்களே!'

'நீ பயப்படாதே! கூரையின் மீது நாராயண் நாலு பேரோடு துப்பாக்கியும் கையுமா உட்கார்ந்திருக்கிறான்.'

நிகால் நடுங்கினான். பயந்த குரலில் அவளுக்கு விளக்க முயன்றான். 'பெரிய துரை வந்திருக்கிறார். அவர் கிட்ட ரைபிள் இருக்கு' என்றான்.

'என்ன இருந்தாலும் இருக்கட்டும். பந்தி சாப்பிட்டு எழுந்திருக்கட்டும்.'

'அப்புறம்?'

'நீங்கள் எல்லாம் ஓடிவிடுங்கள்.'

திடீரென்று அரிக்கேன் விளக்கு அணைந்துவிட்டது.

'டமார்! டமார்!' என்ற சத்தம் கேட்டது. இருட்டில் குண்டுகள் பாய்ந்து வந்தன.

'என் மீது ஆணை! சாப்பிட்டுவிட்டுத்தான் எழுந்திருக்க வேண்டும்!' என்று கத்தினாள் கதல்.

ஆனால் எல்லோருக்கும் அவசரம்.

வெளியே குண்டுகள் சீறி வந்தன. யாரோ கூச்ச லிட்டுக்கொண்டு விழுந்தார்கள்.

பந்தியிலிருந்தவர்கள் பின்வாசல் வழியாக வெளியே சென்றனர்.

எல்லாரையும் அனுப்பியபின் கதல் கூரையின் மீது ஏறினாள். நிகாலை நோக்கி, 'மகனே!' என்றாள்.

அக்குரலில் தொனித்த எல்லையற்ற வாஞ்சை நிகாலின் உள்ளத்தைத் தொட்டது. மெய்சிலிர்த்து நின்றான். அவன் ஏதும் பதில் கூறுமுன்பு கதல் தொடர்ந்தாள்: 'உன்னைப் பெற்ற வயிற்றின் மீது ஆணை. நாராயணை யும் மருமகள் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு பின் வழியாகப் போ!'

'நீ?'

'என்னைப் பற்றிய கவலையை விடு. உன் சித்தப்பன் என்னைக் கூப்பிடுகிறான்.'

நிகால் மேலே ஏதும் பேசவில்லை. துப்பாக்கி வைத்துக் கொண்டிருந்த ஒருவனிடமிருந்து கதல் துப்பாக்கியை

வாங்கிக் கொண்டாள். 'போங்கள் எல்லாரும், ஊம் சீக்கிரம்!'

பெண் பிள்ளைகளின் மீது மோகங் கொண்டுள்ள இளைஞர்களைப் பயம் இருளிலே மறையச் செய்துவிட்டது.

கதல் துப்பாக்கியின் குதிரையை அழுத்தினுள். யாரோ கூச்சலிட்டுக்கொண்டு விழுந்தான். கதல் சிரித்தாள். பயங்கரமான அச் சிரிப்பு இருளிலே இன்னும் பயங்கர மாக ஒலித்தது.

சிரிப்பைக் கேட்ட இன்ஸ்பெக்டர் திடுக்கிட்டார். 'பெண் பிள்ளையா? அப்படியானுல் ஆண் பிள்ளைகள்? அவர்கள் எல்லாம் எங்கே?' அவன் சில போலீஸ்காரர் களைப் பின்பக்கமாக அனுப்பிவைத்தான். அவர்கள் மேலே ஏறினுர்கள்.

குண்டுகள் பறந்தன.

குண்டொன்று கதலின் வயிற்றிலே பாய்ந்தது.

போராட்டம் முடிந்துவிட்டது. கதல் குருதி வெள்ளத் தில் தோய்ந்து கிடந்தாள். போலீஸ் அவளைச் சூழ்ந்து கொண்டது.

'உள்ளே ஒருவரும் இல்லையா?' என்று வினவினுர் இன்ஸ்பெக்டர்.

'சார்' என்ருன் ஒருவன். 'இப் பெண் பிள்ளை ஒருத்தி தான் இருக்கிருள்.'

இன்ஸ்பெக்டர் முன்னுல் வந்தார். அவளைப் பார்த்தும் — 'நீ யார்?' என்ருர்.

கதல் புன்முறுவல் பூத்தாள், மெதுவாக 'கருமாதி யெல்லாம் முடிந்துவிட்டது இன்ஸ்பெக்டர் சாகப், ஆத்மா விற்குச் சாந்தி கிடைத்துவிட்டது.'

இன்ஸ்பெக்டர் ஆத்திரத்துடன், 'நீ யார்?' என்ருர் மீண்டும்.

கதல் மெதுவான மலினமடைந்த குரலில், 'ஒரு நாள்

கூடத் தனியாக இருக்க முடியாத ஒருத்தன் இருந்தானே அவனுடைய......'

அவள் தலை சாய்ந்துவிட்டது. அவள் உதடுகளில் இன்முறுவல் தவழ்ந்தது. முன்பே அணைந்திருந்த விளக்கை இருட்டில் ஏற்றி வைத்தாற்போன்ற புன்னகை அது.

## மூன்ருவது சபதம்

வண்டிக்கார ஹீராமனுக்கு முதுகில் குறுகுறுத்தது. கடந்த இருபது ஆண்டுகளாக வண்டியோட்டுகிருன். அதுவும் மாட்டு வண்டி. ஹீராமனின் தொழில் இதுதான். இந்திய எல்லைக்கப்பால் நேபாளத்தைச் சேர்ந்த மோரங் ராஜ் கிராமத்திலிருந்து தானியம், விறகு இரண்டும் ஏற்றி வந்திருக்கிருன். கன்டிரோல், கட்டுப்பாடு இருந்த நாட்களில் கள்ளச் சந்தை சாமான்களை இங்கிருந்து அங்கும், அங்கிருந்து இங்கும் கொண்டு வந்து சேர்த்திருக்கிருன். ஆனல் என்றுமே இன்றுபோல் முதுகில் இப்படியொரு குறுகுறுப்பு ஓடியதேயில்லை.

கண்ட்ரோல் கட்டுப்பாடு இருந்த காலம். ஹீராமனல் இந்தக் காலத்தை மறக்க முடியுமா என்ன? ஒரு முறை ஜோக்பனியிலிருந்து விராட்நகருக்கு, நாலு நடை போய் சிமெண்டு மூட்டைகளையும், துணிபேல்களையும் வண்டியில் அடைத்துக்கொண்டு வந்து சேர்ந்தபின்தான் அவனுக்குக் கொஞ்சம் தெம்பு வந்தது. பார்பிஸ்கஞ்சைத் சேர்ந்த ஒவ்வொரு கள்ளச்சந்தைக்காரனும், ஹீராமனைக் கைக்காரப் பயல் என்று பாராட்டுவது வழக்கம். அவனிடம் மிகுந்த நம்பிக்கை. பெரிய புள்ளி சேட்ஜி இருக்கிருரே அவர் கூட தமது பாஷையில் அவனுடைய வண்டி மாடுகளைப் புகழ்ந்திருக்கிருர்.

ஐந்தாவது தடவை எல்லை தாண்டிவரும் சமயத்தில் வண்டியை மறித்துவிட்டார்கள்.

வியாபாரியின் கணக்குப் பிள்ளை அவனுடைய வண்டியில்தான் மூட்டைகளுக்கிடையே கால்கைகளை மடக்கிக் கொண்டு பதுங்கிக் கிடந்தான். இன்ஸ்பெக்டர் சாகப்பின் கையிலிருக்கிறதே, அந்த ஒன்றரை முழ டார்ச்சு

விளக்கு, அதன் ஒளி எவ்வளவு தூரம் பாயும் என்பது ஹீராமனுக்குத் தெரியும். ஒரு தடவை அதன் வெளிச்சம் கண்களில் பட்டால்போதும். ஒரு மணி நேரத்திற்குக் கண் குருடாகிவிடும். அவ்வளவு பிரகாசம்.

பாய்ந்து வந்த வெளிச்சத்தோடு ஒரு குரல் கேட்டது. 'ஏலே, நிறுத்துடா வண்டியை, இல்லே, சுட்டுத் தள்ளி விடுவேன்.'

இருபது வண்டிகளும் ஒரே சமயத்தில் 'கிறீச்' சென்ற சத்தத்துடன் நின்றன. ஹீராமன் முதலிலேயே 'இருபது வண்டியையும் சேர்ந்தாற்போல் விடாதீங்க. மாட்டிக்கு வோம்' என்று எச்சரித்தான். கேட்டால்தானே! இன்ஸ்பெக்டர் நேராய் அவன் வண்டிக்கே வந்து பதுங்கிக் கொண்டிருந்த கணக்குப் பிள்ளையின் மீது டார்ச்சை அடித்தவாறே பேய் சிரிப்புச் சிரித்தான். 'ஹ, ஹ, ஹா.' கணக்குப் பிள்ளை 'இ, ஈ, ஈ,' என்று பல்லைக் காட்டினான்.

'ஏய் அயோக்கியப் பயலே, வண்டிக்காரா, என்னடா முகத்தைப் பார்த்துக்கிட்டு நிக்கறே? ஏய் மூட்டைமேல் இருக்கிற கம்பளியை எடுடா அப்பாலே' என்றவாறே கையிலிருந்த கைத்தடியால் கணக்குப் பிள்ளையின் வயிற்றில் ஒரு குத்துக் குத்தி 'அந்த மூட்டை...ஊம் எடு, அயோக்கியப் பயலே' என்றார் இன்ஸ்பெக்டர்.

இன்ஸ்பெக்டருக்கும் கணக்குப் பிள்ளைக்கும் ஏதோ பழைய விரோதம், தகராறு இருந்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் இத்தனை கத்தை கத்தையான நோட்டுக்களைப் பார்த்த பின் கூடவா மசியமாட்டான்! வண்டியை விட்டு இறங்காமலேயே கணக்குப்பிள்ளை 'நாலாயிரம் வரை தருகிறேன்' என்றானே. இன்ஸ்பெக்டரோ இன்னொரு குத்து குத்தினான். 'ஐயாயிரம்' என்றான் கணக்குப் பிள்ளை. மீண்டும் ஒரு குத்து, 'இறங்கடா கீழே முதலிலே.'

கணக்குப் பிள்ளை வண்டியிலிருந்து குதித்ததும் இன்ஸ்பெக்டர் அவன் முகத்திலே டார்ச்சு விளக்கொளியை வீசினுன். பிறகு இரண்டு போலீஸ்காரர்களேயும் கூப்பிட்டுக்கொண்டு, கணக்குப் பிள்ளையை பாதையிலிருந்து பத்து, இருபது அடி தூரத்தில், புதர் பக்கமாக இழுத்துக் கொண்டு போனுர். இருபது வண்டிக்கும் துப்பாக்கி ஏந்திய ஐந்து போலீஸ்காரர் காவல். வண்டிக்காரர்களுக்கும் காவல். 'இந்த முறை தப்ப முடியாது. கம்பி எண்ண வேண்டியதுதான்' என்பது ஹீராமனுக்கு விளங்கி விட்டது. சிறைச்சாலையைப் பற்றி அவனுக்குப் பயமொன்றுமில்லை. ஆனுல் அவன் சிறைக்குப் போய் விட்டால் அவனுடைய மாடுகளின் கதி என்னுவது? பாவம், தீவனமும் தண்ணியும் இல்லாமல், பசியும் பட்டினியுமாய் எத்தனை நாள் பவுண்டில் அடைபட்டுக் கிடக்குமோ யார் கண்டது? அப்புறம் ஏலம் போட்டு விடுவார்கள். இதிருக்கட்டும், அண்ணன் அண்ணி முகத்திலே அவன் எப்படிப் போய் விழிக்க முடியும்? மாடுகளை ஏலம் போடுவதுபோல் அவன் காதிலே ஒலித்தது. 'ஒரு தரம், இரண்டு தரம், மூன்று தரம்.'

இன்ஸ்பெக்டருக்கும் கணக்குப் பிள்ளைக்கும் இன்னும் பேரம் தகையவில்லை போலிருக்கிறது.

ஹீராமனின் வண்டிக்கருகே நின்ற ஒரு போலீஸ்காரனுடன் பக்கத்தில் துப்பாக்கியும் கையுமாய் பாரா நின்ற இன்னொருவன் தனது பரி பாஷையில், 'என்னப்பா, விஷயம் ஒரு மாதிரி தகையுமா?' என விசாரித்தான். புகையிலை உபசாரம் செய்யும் சாக்கில் அந்த போலீஸ்காரன் அவனருகே சென்றுன்.

ஒன்று, இரண்டு, மூன்று. இதோ மூன்று, நாலு வண்டிகள் மறைப்பு போல் நிற்கின்றன. ஹீராமன் ஒரு முடிவிற்கு வந்து விட்டான். மெல்லத் தன் மாடுகளின் கழுத்தில் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து விட்டான். வண்டி

யில் உட்கார்ந்தவாறே இரு காளைகளையும் ஒன்றோடொன்று பிணைத்து விட்டான். அவனது சாங்கேத மொழியைக் காளைகள் புரிந்துகொண்டு விட்டன. ஹீராமன் மெல்ல இறங்கினான். நுகத்தடியை முட்டுக் கொடுத்து வண்டியை நிறுத்திவிட்டு காளைகளின் முதுகைத் தடவிக்கொடுத்தவாறே, காதருகில் கிசு கிசுத்தான். 'போங்கடா, பயல்களா, உசிரு பிழைச்சா, இந்த மாதிரி பத்து பாரா வண்டி சம்பாதிக்கலாம். தெரியுதா? ஒன்று, இரண்டு, மூன்று. எங்கே சத்தம் போடாம ஓடுங்க பார்க்கலாம்!'

வரிசையாக நின்ற வண்டிகளையொட்டி சாலையோரம் நெடுந்தூரம் வரை அடர்ந்த புதர்கள் நீண்டு கிடந்தன. மாடுகளை விரட்டினான். அவைகள் சூட்சுமத்துடன் நிலைமையைப் புரிந்துகொண்டுவிட்டன போலும். மூச்சைப் பிடித்துக்கொண்டு மூவரும் புதர்களைக் கடந்து விட்டனர். சத்தம் போடாமல் எவ்வித சந்தடியும் எழுப்பாமல், அப்புறம் ஒன்று, இரண்டு! மாடுகள் ஓட்டமும் நடையுமாய் விரைந்தன. அவனோடு காட்டுப்பாதையில் வாலை உயர்த்திக்கொண்டு, வாய்க்கால், ஆறு, பள்ளத்தாக்கு, மேடு, பள்ளம் என யாவற்றையும் கடந்து ஓடின. இரவு முழுவதும் இதே ஓட்டம்தான். முன்னால் மாடுகள் —பின்னால் ஹீராமன்.

வீட்டை அடைந்த பின் இரண்டு நாள் வரை ஹீராமன் எழுந்திருக்கவில்லை. அத்தனை அசதி, அடித்துப்போட்டாற்போலக் கிடந்தான்.

சுயநினைவிற்கு வந்து நிதானம் பிறந்ததும் செய்த முதல் சபதம் 'இனிமேல் கள்ளச் சரக்கு, கடத்தல் சரக்கு வண்டியில் ஏறாது. எங்கப்பனாணை... விட்டேன் இத்தோட' ... அப்புறம் பல கவலை ... 'கணக்குப்பிள்ளை கதி என்னவாச்சோ. வண்டி நல்ல உறுதியான வண்டி. உருக்கு இரும்பால் வார்த்தெடுத்த அச்சு. இரண்டு

சக்கரத்திலேயும் ஒன்று மட்டும் புதிசு. ஹூம். வண்டியைத்தான் எவ்வளவு அழகாக, கலர் கலராகக் கயிறும் மணியும் கட்டி அழகுபடுத்திவைத்திருந்தேன்.'

இதுவரை சபதம் இரண்டு செய்தாகிவிட்டது. முதலாவது சபதம்: கள்ளக் கடத்தல் சரக்கை வண்டியில் ஏற்றுவதில்லை. இரண்டாவது, மூங்கில் கழிக் கட்டுகளை வண்டியில் ஏற்றுவதில்லை. வாடகைக்கு பார வண்டி பேச யார் வந்தாலும் ஹீராமன் இரண்டு கேள்விகளைத் தயாராக வைத்திருப்பான். முதலாவது கேள்வி: கள்ளக் கடத்தல் சாமானா? இரண்டாவது, மூங்கில் கழிக் கட்டுகளா? யாராவது 50 ரூபாய் வாடகை தருவதாகச் சொன்னாலும் 'என் வண்டி வராது. வேறு வண்டி பார்த்துக்கொள்ளுங்கள்.' இதுதான் ஹீராமின் முடிவான பதில்.

ஒரு முறை வண்டி நிறைய மூங்கில் கழி கட்டுகள். முன்பக்கமும், பின்பக்கமும், மூங்கில்கள் நாலு முழத்திற்கு நீட்டிக்கொண்டு நின்றன. வண்டியை ஒரு நிதானத்திற்குள் கொண்டுவரவே முடியவில்லை. ஒரு பக்கம் கட்டுப்படுத்தி ஓட்டமுடியாத நிறை பாரம். இன்னொருபக்கம் சந்தடி மிகுந்த கரைஹியா டவுன். பாரம் ஏற்றிய முட்டாள் வேலைக்காரன் ஒருவன் வண்டியின் பின்னாலே மூங்கில் கழிகளைப் பிடித்துக்கொண்டே நடந்து வந்தவன், பெண்களின் பள்ளியொன்று வந்ததும் பராக்குப் பார்க்க ஆரம்பித்துவிட்டான். அவ்வளவுதான். வண்டி திருப்பத்தில் குதிரை வண்டியுடன் மோதிவிட்டது. ஹீராமன் கயிற்றைப் பிடித்திழுத்து மாடுகளை நிறுத்துவதற்குள். குதிரை வண்டியின் கூண்டை மூங்கில் கழிகளின் முனை பொத்துவிட்டது. ஜட்காக்காரன் பொறுப்பானா? கையிலிருந்த சவுக்கினால் ஹீராமனை வீறிவிட்டான். படபடவென்று வீழ்ந்தன அடிகள்... அசிங்கமான திட்டுகள் ... அன்றுதான் இரண்டாவது

சபதம் போட்டான். 'எங்கப்பனாணை. இனி மூங்கில் கட்டு களை ஏற்றமாட்டேன்.'

மூங்கில் கழிகள் கட்டுமல்ல. கரைஹறியா டவுனுக்குச் சவாரி போவதையே விட்டுவிட்டான். இப்பொழுதெல்லாம் பார்பிஸ்கஞ்ஜ், மோரங், இந்த இரண்டு இடங்களுக்குப் பாரம் ஏற்றுவதனால்தான் வண்டியைப் பூட்டுகிறான். பல ஆண்டுகள்வரை வாடகைக்குத்தான் வண்டி எடுத்து ஓட்டினான். சம்பாதிக்கும் வாடகையில் பாதி வண்டியின் சொந்தக்காரனுக்குப் போய்விடும். பாதி தான் இவனுக்கு. அதாவது மாட்டிற்கு. வண்டியை ஓட்டிச் செல்லுவதற்கு ஒன்றுமில்லை. சும்மா ஓட்டு. அவ்வளவுதான். கிடைக்கிற பாதி வாடகையிலே மாடுகளுக்குக் கணிசமாய் வயிறூரத் தீவனம்கூட வாங்கிப் போட முடியவில்லை. நல்ல காலம். போன வருடம் தான் சொந்தத்திலே வண்டி வாங்கிக்கொண்டான்.

ஆத்தா! மாரியம்மாதான் அந்த சர்க்கஸ் கம்பெனிப் புலியைக் காப்பாத்தணும். போன வருடம் இதே திருவிழா சமயம்தான். புலி வண்டியை இழுக்கிற குதிரைகள் செத்துப்போய்விட்டனவாம். சம்பா நகரத்திலிருந்து பார்பிஸ்கஞ்ஜ் நகரத்திற்கு அந்த வண்டியை இழுத்து வந்தாக வேண்டும். இங்கு திருவிழா. சர்க்கஸ் கம்பெனி மானேஜர் வண்டிப் பேட்டைக்கே வந்து நூறு ரூபாய் வண்டிச் சத்தம் கொடுப்பதாய்ப் பறைசாற்றினார். நூறு ரூபாய் என்றதும் இரண்டொரு வண்டிக்காரர்கள் அந்த வேலையைச் செய்ய முன்வந்தனர். ஆனால் புலி வண்டியைக் கண்டதும் மாடுகள் மிரண்டு விட்டன. பத்தடி தூரத்திலேயே பயத்தினால் 'அம்···ம்···பா' என்று கத்த ஆரம்பித்துவிட்டன. நுகத்தடிப் பக்கம் இழுத்ததும், கயிற்றை அறுத்துக்கொண்டு ஓடியே போய்விட்டன.

ஹீராமன் தன் காளைகளைத் தட்டித் தடவிக்கொடுத்

தான். 'பாருங்களடா பயலுகளா? இந்தமாதிரி சந்தர்ப்பம் அப்புறம் வராது. சொந்தமாய் வண்டி செய்துகொள்ள இதைவிட சமயம் இல்லை. புரிஞ்சுதா? இல்லேன்னா, திரும்பவும் கூலிக்கு ஓடாய் உழைக்க வேண்டியது தான்... அரே, கூட்டிலே அடைச்சுவைக்கிற புலிகிட்ட என்னடா பயம்? புலி என்ன புதுசா? மேராங் போற காட்டுப் பாதையிலே புலி உறுமுகிறதைக் கேட்ட தில்லையா? பார்த்ததில்லையா? நான்தான் வண்டியிலே முன்னுக்கு உட்கார்ந்துகிட்டு இருக்கேனே?' அப்புறம்...

வண்டிக்காரர்கள் படபடவென்று கையைத் தட்டினார்கள். ஹீராமனின் காளைகள் வண்டிப் பேட்டையின் மானத்தைக் காப்பாற்றிவிட்டன. வேகத்துடன் முன்னே வந்து புலி வண்டியில் பூட்டிக்கொள்ளத் தயாராக நின்றன. ஒவ்வொன்றாகப் பூட்டப்பட்டன. வலது பக்கத்தில் பூட்டிய காளை மட்டும் நுகத்தடியில் பூட்டியதுமே குளமாக மூத்திரம் கொட்டியது. ஹீராமன் தன் மூக்கிலே கட்டிக்கொண்ட துண்டை இரண்டு நாள் எடுக்கவில்லை. பெரிய வீட்டு சேட்ஜி மாதிரி கைக்குட்டையாலே மூக்கை மூடிக்கொள்ளாமல் புலி வண்டியின் நாற்றத்தை யாராலும் தாங்கிக்கொள்ள முடியாது. குடலை பிடுங்கி எடுக்கிற நாற்றம்.

இப்படியொரு நாற்றம் நாறிய புலி வண்டியை ஹீராமன் ஓட்டியிருக்கிறான். அப்பொழுதுகூட முதுகிலே இப்படியொரு கிளுகிளுப்பு ஊர்ந்துவிடவில்லை. இன்று அவன் வண்டியில் சற்றைக்கொருதரம் சண்பகப் பூவின் வாசனை 'குப் குப்' பென்று மலர்கிறது. முதுகு குறுகுறுப்பு நெளியும்போதெல்லாம் மேல் துண்டினால் முதுகைத் தட்டிவிட்டுக்கொள்கிறான்.

சம்பா நகரத்துப் பகவதி அம்மனின் கருணைதான் இது. இரண்டு வருடமாய் அவன்மீது தேவி கருணை காட்டுகிறாள். போன வருடம் புலி வண்டி சவாரி. ரொக்கமாய்

கையிலே நூறு ரூபாய். இது மட்டுமா? வழியெல்லாம் சாப்பாட்டுக் கவலையேயில்லை. ரொட்டி, பிஸ்கட், தேநீர். இப்படி ஏதாவது கிடைச்சுக்கிட்டே இருந்தது. கோமாளி, குரங்கு, கரடி...ன்னு வேடிக்கையெல்லாம் பார்த்துக் கிட்டு வந்தது. அதுவும் காசு கொடுக்காம வேடிக்கை பார்த்தது. ஆதாயம் தானே.

இந்த முறை. பெண் பிள்ளை சவாரி வண்டியிலே உட்கார்ந்திருக்கிறது. பொம்பளை தானு? அல்லது சண் பகப் பூவா? அப்பப்பா, வண்டியிலே ஏறி உட்கார்ந்த திலிருந்து என்னமா கமக்குது வாசனை? வண்டியெல்லாம் ஒரே வாசனை. வாசனை. முதுகெல்லாம் அப்படியே குறு குறுன்னு. ஸ்...ஸ்...ஸோ.

மண் பாதை. அங்கங்கே பள்ளம் மேடு. சிறு பள்ளத் தில் வலது பக்கச் சக்கரம் இறங்கியதும் வண்டி ஒரு ஆட்டம் ஆடியது. வண்டிக்குள்ளேயிருந்து 'ஸ்...ஸ்...ஸ்' என்ற மெல்லிய முனகல்... ஹீராமன் வலது பக்கத்துக் காளைக்குத் தாற்றுக் கோலாலே செம்மையாக ஒரு அடி கொடுத்தான். 'ஏலே, திமிருபிடிச்சவனே. மூட்டை யைச் சுமந்துகிட்டுப் போறதா நினைப்பா கழுதை?'

'த்ஸொ ... த்ஸொ ... அடிக்காதே. அடிக்காதே.' ஹீராமன் அசந்து போனுன். கண்ணுல் பார்க்காத அந்தப் பெண்ணின் குரலில்தான் என்ன இனிமை. குளு குளுப்பு. அப்படியே ஜிலுஜிலுன்று பேச்சு.

மதுரா மோகன் நாடகக் கம்பெனியிலே லைலா வேடம் போடற பொம்பளை ஹீராபாயின் பெயரைக் கேட்கா தவங்க யாரு இருக்காங்க? அந்த வட்டாரத்திலேயே அந்தப் பேரு பிரசித்தம். ஆனுல் ஹீராமனிருக்கிருனே அவன் விஷயமே அலாதி. ஏழு வருசமாய் திருவிழாக் காலத்திலே பாரவண்டி ஓட்டிக்கொண்டு வருகிருன். ஆனுல் ஒரு நௌடங்கி நாடகமோ. பயாஸ்கோப்போ பார்த்தது கிடையாது. லைலா, ஹீராபாயிங்கிற பேரைக்

காதால் கூடக் கேட்டதில்லை. அப்புறமின்னா பாக்கிற தற்கு? இந்த சவாரி வந்து சேர்ந்ததே ரொம்ப விசித்திரம். திருவிழா கலைய இன்னும் பதினைந்து நாளிருக்கு. நேத்திக்கு நள்ளிரவிலே கறுப்புச் சால்வையை முட்டாக்காகக் காலோடு தலை போர்த்திக்கொண்டு வந்து நின்ற பொம்பளையைக் கண்டதும் ஒருகணம் அப்படியே விதிர் விதிர்த்துப் போனது உண்மை. பெட்டியைத் தூக்கிக் கொண்டு கூட வந்த ஒருத்தன்தான் வாடகை பேசி, பேரம் பண்ணிப் பார்த்தான். ஆனால் அதற்குள்ளே இந்தப் பொம்பளை தலையை ஆட்டி அவனைத் தடுத்து விட்டாள்.

காளையைப் பூட்டியவாறே ஹீராமன் வழக்கம்போல் அந்த ஆளிடம் கேட்டுவைத்தான். 'என்னப்பா, ஏதாவது கள்ளச் சந்தை, கடத்தல் சரக்கு எதுவுமில்லையே?'

அந்த ஆசாமி பதிலே சொல்லாமல் வண்டியை ஓட்டும்படி கைகை காட்டினான். அவ்வளவுதான். ஹீராமனுக்கு ஒரே வியப்பு, குழப்பம். வந்த ஆள் இருட்டோடு இருட்டாய் மறைந்து போனான். ஹீராமனுக்குத் திருவிழாச் சந்தையிலே இதே மாதிரி கறுப்புச் சால்வையைப் போர்த்திக்கொண்டு உட்கார்ந்திருப்பாளே புகையிலை விற்கும் கிழவி. அவள் நினைவுதான் வந்தது.

இந்த நிலையிலே வண்டியை எப்படி ஓட்டுவது?

முதுகுத் தண்டில் புல்லரிப்பது போல் குறுகுறுப்பு. விட்டுவிட்டு சண்பகப் பூவின் வாசனை. என்னமாய்க் கமழ்கிறது? காளைகளை விரட்டினால் அடித்தால் உள்ளேயிருந்து ஸ்…ஸ்…ஸ்… என்ற அங்கலாய்ப்பு. நல்ல சவாரி கிடைத்தது இன்று. வண்டிக்குள்ளே ஒரு பெண், தன்னந்தனியாக. நிச்சயமாய்ப் புகையிலை விற்கும் கிழவி இல்லை இவள். குரலைக் கேட்டால் திரும்ப வண்டிக்குள்ளே ஒரு பார்வை பார்க்க மனசு என்னமாய்த் தவிக்கிறது? அடிக்கடி திரும்பிப்பார்க்க வேண்டும் என்ற

நமைச்சல். ஹீராமன் மேல்த்துண்டை எடுத்து முதுகை வருடிக்கொண்டான்.

இந்த கடவை கடவுள் அவனுடைய அதிர்ஷ்டத்தில் என்ன எழுதியிருக்கிருரோ?

வண்டி கிழக்குப் பக்கமாய்ச் சற்று திரும்பியதும் நிலவின் கீற்று வண்டிக்குள் எட்டிப் பார்த்தது. ஹீராமன் பார்த்தான். வண்டிக்குள்ளேயிருந்த பெண்ணின் மூக்கில் ஒரு நட்சத்திரம் மின்னியது. அப்பா, என்ன பளபளப்பு! ஹீராமனுக்கு எல்லாமே மர்மமாய்க் குழப்பமாயிருந்தது. இனிச் சர்பா நகரத்திலிருந்து சிந்தியா கிராமம் வரை ஒரே வெட்ட வெளிப் பரப்புத்தான். பொட்டல் வெளி. வண்டியிலிருப்பவள்...ஒருவேளை...மோகினிப் பிசாசோ!

அவள் புரண்டு படுத்தாள். நிலவின் தண்ணொளி முகமெங்கும் படர்ந்தது. வாயிலிருந்து எழவிருந்த சிறு கூச்சலை ஹீராமன் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டான். 'அடேயப்பா! தேவலோகத்து அப்சரஸ்தான்!'

அப்சரஸின் விழிகள் மலர்ந்தன. விழித்துக்கொண்டு விட்டாள். ஹீராமன் சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு சாலையைப் பார்த்தான். காளைகளை விரட்டினன். நாக்கை மடித்து 'டிரி...டிரி...டிரியோ' என்பது வழக்கம். ஆனல் இப்பொழுது நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக்கொண்டு கட்டையாக உலர்ந்துவிட்டது. சத்தம் வந்தால் தானே?

'உங்க பெயரு என்ன அண்ணே?'

ஹீராமனுக்குப் புல்லரித்தது. தேனினுமினிய குரல்... அப்பப்பா, கிள்ளையேதான். வாயிலிருந்து வார்த்தை வெளி வந்தால்தானே! புதுக்குரலைக் கேட்டதும் காளைகளிரண்டும் காதுகளை நிமிர்த்தின.

'என்...பெயர்...பெயர்...வந்து...ஹீராமன்.'

உள்ளேயிருந்தவள் 'களுக்'கென சிரிக்கிருள். சிரிப்பில் கூட என்ன மணம் வீசுகிறது?

'அப்படியானால் இனி "மீதா" (நண்பர்)என்று கூப்பிடு கிறேன். அண்ணே...என்று வேண்டாம். என் பெயர் ஹீரா'

...ஷ்...ஹீராமனுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. ஆண் பிள்ளைக்கும் பெண் பிள்ளைக்கும் எங்கேயாவது ஒரே பெயர் இருக்குமா? வித்தியாசம் இருக்குமே?

இதைப் புரிந்துகொண்டவள்போல் அவள் தொடர்ந் தாள் 'என்பெயர் ஹீராபாயி.'

ஹீராமன் எங்கே! ஹீராபாயி எங்கே! வித்தியாசம் இருக்கிறது நிறைய.

காளைகளைச் சுண்டிவிட்டு அதட்டினான் ஹீராமன். 'லே என்னடா, காதை நிமிர்த்திவிட்டுக்கொண்டு வம்பா கேக்றீங்க? இன்னும் முப்பது மைல் தொலைவு போகணு மடா. நினைவு இருக்கா? இந்த இடப்பக்கத்துப் பயல் இருக்கிறானே வயிறெல்லாம் வினை, இந்தப் போக்கிரிக்கு ...' ஹீராமன் தார்கோலினால் இடப்பக்கத்துக் காளையை ஒரு தட்டு தட்டினான்.

'அடிக்காதீங்க. மெள்ள மெள்ளப் போகட்டுமே. என்ன அவசரம் இப்ப?'

அந்தப் பெண்ணை என்னவென்று அழைத்துப்பேசுவது என்பதுதான் இப்பொழுது ஹீராமனின் முன்னேயுள்ள பிரச்சனை "நீ" என்பதா? "நீங்க" என்பதா? அவனு டைய பேச்சிலே பெரியவங்களை "அஹாம்" அதாவது "நீங்க"ன்று சொல்றது பழக்கம். நகரத்து நாகரீக மொழி யிலே அவனாலே பேசமுடியாது. இரண்டொரு கேள்வி... பதில். அவ்வளவுதான். அதற்குமேலே மனசுவிட்டு அரட்டை அடிக்கணுமின்னா கிராமத்து...பட்டிக்காட்டுப் பேச்சிலே தான் தாராளமாய்ப் பேச முடியும்.

ஐப்பசி கார்த்திகை மாதங்களிலே விடியற்காலை மூடு பனியின் மூட்டத்தைக் கண்டாலே ஹீராமனுக்கு ஒரே எரிச்சலாக வரும். எப்பொழுதுமே பிடிக்காது. பல முறை

இந்த மூட்டத்திலே அவன் வழி தப்பிக் கூடப் போயிருக்கிறான். ஆனால் இன்று, பனி ஒரே மூட்டமாய் மப்பாயிருந்தால் கூட அவனுக்கு ஒரே உற்சாகம். பாதையோரப் பக்கத்து வயல்களிலிருந்து, கதிர் முற்றின மணம் காற்றிலே கலந்து வீசுகிறது. பண்டிகை நாட்களில் கிராமத்திலும் இப்படித்தான் தானிய மணம் கமழ்ந்து கொண்டிருக்கும். வண்டிக்குள்ளேயிருந்து 'குப்'பென்று மல்லிகை மணத்தது. இல்லை சண்பக மலரின் மணம். சண்பக மலர் போன்ற ஓர் அழகிய அப்சரஸ் வண்டிக்குள்ளே...ஹே, பகவதிதேவியே! உன் அருள் தான்.

ஹீராமன் மெல்லக் கடைக் கண்ணால் பார்த்தான்... அந்தப் பெண்...அவள் தான் ஹீரா...விழிகளை மலர்த்தி நிமிர்த்தி அவனையே பார்த்துக் கொண்டிருக்கிறாள். ஹீராமனின் உள்ளத்தில் இனமறிய இசையொன்று ஒலித்தது. உடலெங்கும் 'ஜிவ்' வென்று ஒரு உணர்ச்சி. மெல்லக் கேட்டான்...'மாட்டை அடித்தால் உங்களுக்குக் கஷ்டமாக இருக்கிறதா?'

ஹீராபாயி அக்கணமே உணர்ந்து கொண்டாள். ஹீராமன் உண்மையிலேயே ஹீரா (வைரம்) தான்.

நாற்பது வயதுக் காளை, கட்டான உடலமைப்பு, நல்ல கறுப்பு நிறம், கிராமத்தான். வண்டி மாடு இவற்றைத் தவிர உலகத்தில் வேறு எதிலும் பற்றுக் கொள்ளாதவன். விசேஷ அக்கறையும் இல்லாதவன். இவன் தான் ஹீராமன். இவனுக்கு மூத்தவன் வீட்டிலிருக்கிறான். பயிர் பச்சையைக் கவனித்துக் கொள்கிறான். குழந்தை குட்டிக்காரன், ஹீராமனுக்குத் தன் அண்ணனைவிட அண்ணியிடம் தான் அதிக மதிப்பும் மரியாதையும், கொஞ்சம் பயமும் உண்டு. ஹீராமனுக்குச் சிறு வயதிலேயே திருமணம் நடந்தது. சாந்தி கழிந்து முதல் இரவுக்கு முன்னரே மனைவி இறந்து போனாள். ஹீராமனுக்குத் தன் இளம் மனைவியின் முகம் கூட நினை

வில்லை. இரண்டாம் கல்யாணம்? இதைப் பற்றிய பேச்சென்னவோ எழுந்தது. இது நடக்காததற்குப் பல காரணங்கள் உண்டு. இதிலொன்று அண்ணியின் பிடிவாதம். கன்னிப் பெண்ணைத் தான் கட்டிவைப்பேன் என்பது அவளுடைய பிடிவாதம். கன்னிப் பெண் என்றால் ஐந்து, ஆறு வயது சிறுமி. சாரதா சட்டத்தை யார் மதிக்கிறார்கள்? பெண்ணைப் பெற்றவள் தன் கன்னிப் பெண்ணை வேறு வழியில்லாமல் போனால் தானே இரண்டாந்தாரக் காரனுக்குக் கட்டச் சம்மதிப்பாள்? அண்ணி என்னவோ ஆணையிட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாள். இன்னும் தான் காத்திருக்கிறாள். அண்ணியின் சொல்லுக்கு முன் அண்ணனின் வார்த்தை செல்லாது. இப்பொ...ஹீராமன் ஒரு முடிவிற்கு வந்து விட்டான். இனி அவன் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை. வீணாகத் தொல்லையை ஏன் விலை கொடுத்து வாங்க வேண்டும்? திருமணம் செய்து கொண்ட பின் எவனாவது வண்டியோட்டிப் பிழைப்பானா? எது போனாலும் சரி! ஹீராமன் வண்டியோட்டும் தொழிலை விட்டு விட மாட்டான். விட முடியாது.!

ஹீராபாயி...ஹீராமனைப் போன்ற வெகுளியை அதிகம் கண்டதில்லை.

'உங்கள் வீடு எந்த ஊர்ப் பக்கம்?' என அவளிடம் கேட்டான் ஹீராமன்.

'கான்பூர்' என்று அவள் சொன்னதும் ஹீராமனுக்குச் சிரிப்புத் தாளவில்லை. 'கான்' என்றால் காது. 'கான்பூரா?' அவன் சிரித்ததும் மாடுகள் மிரண்டன. சிரிக்கும் பொழுது ஹீராமன் தலையைக் குனிந்து கொள்வான். சிரித்து முடித்ததும் 'கான்பூரா? ரொம்பப் பிரமாதம். அப்படியென்றால் 'நாக்பூர்' என்று கூடத் தானிருக்கும்.' என்றான். 'நாக்' என்றால் மூக்கு. "காதூர் என்று ஒன்றிருந்தால் மூக்கூர் இருக்கக் கூடாதா

என்ன?' நாக்பூர் என்றும் ஒரு ஊர் உண்டு என்று அவள் சொன்னதும் அவனுக்குத் தாளவில்லை. விழுந்து விழுந்து சிரித்தான்.

'என்னங்க இது உலகம்? கான்பூரு, நாக்பூரு?... இதெல்லாம் என்ன பேரு?' ஹீராமன் ஹீராபாயின் காதில் அணிந்திருக்கும் தோட்டைக் கவனமாகப் பார்த்தான். மூக்கிலிருக்கும் மூக்குத்தி...ஹீராமனுக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது. ரத்தத்துளி மாதிரி என்ன சிவப்பு!

ஹீராமன் இதற்கு முன் ஹீராபாயின் பெயரைக் கூடக் கேட்டதில்லை. நாடகக் கம்பெனி நடிகையை அவன் மதிப்பிற் குறைந்தவளாகக் கருதவில்லை. கம்பெனியில் வேலை பார்க்கும் பெண்களை அவன் பார்த்திருக்கிறான். சர்க்கஸ் கம்பெனியின் எஜமானி, தன் இரண்டு பெண்களுடன் புலி வண்டிக்கருகே வந்து பார்ப்பாள். புலிக்கு ஆகாரம் போடுவாள், கொஞ்சுவாள், ஹீராமனின் காளைகளுக்குக் கூட டபிள் ரொட்டி, பிஸ்கட் எல்லாம், அந்தப் பெரிய பெண் தான் தன் கையால் கொடுத்தாள்.

ஹீராமன் கெட்டிக்காரன். பொழுது புலர்ந்து, பனி மூட்டம் விலகியதுமே சட்டென்று தன் போர்வையை எடுத்துக் கூண்டுப் பக்கம் திரைபோல கட்டிவிட்டான். 'இன்னும் இரண்டே மணி நேரம். அப்புறம் தான் வெறி ரொம்ப மோசம். கார்த்திகை மாதத்து வெயிலை உங்களால் தாங்க முடியாது உச்சிக்கு ஏறிவிடும், கஜரி ஆற்றங்கரையில் நிழலிடமாகப் பார்த்து, வண்டியை அவிழ்த்துவிட்டு இளைப்பாறலாம்...'

எதிரே வண்டி வருவது தெரிந்தது. ஹீராமன் நிமிர்ந்து அமர்ந்து கொண்டான். போகிற தடம், காளைகள் இரண்டையும் ஒரு பார்வை பார்த்துக் கொண்டான்.

எதிரே வந்தவன் கேட்டான். 'திருவிழா முடிந்து விட்டாதா அண்ணே? புறப்பட்டு விட்டே?'

'நமக்கு அதெல்லாம் தெரியாது தம்பி. வண்டியிலே பிறந்த வீட்டுக்குப் போற பொண்ணு இருக்கிறாள்.' சத்தாப்பூர்... பசீரா என்று ஏதோ ஒரு பெயரைச் சொல்லி வைத்தான் ஹீராமன்.

'சத்தாப்பூர், பசீராவா? எங்கே இருக்கிறது அந்த ஊர்?' என்று கேட்டு வைத்தாள் ஹீராபாயி.

'அதைப் பத்தியென்ன? வம்புக்காரப் பயலுகளுக்கு ஏதோ போக்குக் காட்டவேண்டும்.' ஹீராமன் தனது சமயோசித புத்தியைத் தானே மெச்சிக் கொண்டான். திரைபோட்டு விட்டால் கூட இதென்ன, முதுகெல்லாம் குறு குறுக்கிறதே?'

இடுக்கு வழியாக உள்ளே பார்த்தான் ஹீராமன். தீப்பெட்டி அளவிலிருந்த ஒரு கண்ணாடியில் முகத்தையும் பல்லையும் பார்த்துக் கொண்டிருந்தாள் ஹீராபாயி. மதன்பூர் திருவிழாவில் ஒருமுறை, சின்னச் சின்ன சோழி மாலையொன்று வாங்கியிருந்தான், வரிசை வரிசையாக. இப்பொழுது ஹீராமனுக்கு அதன் நினைவு வந்தது.

தூரத்திலிருந்தே அந்த மூன்று மரங்களும் தெரிந்தன. ஹீராமன் திரையைச் சற்றே ஒதுக்கினான். 'பார்த்தீர்களா? இது தான் தேகசியா. நல்ல நிழல். வேரும் விழுதுமாய் இரண்டு ஆல்மரங்கள். இன்னொரு மரம்... அந்தப் பூவுக்கு என்ன பெயர்? அதுதான் உங்க குர்தாவிலே போட்டிருக்கே பூ... அதே மாதிரி. ரொம்ப வாசனைங்க. சும்மா இரண்டு காததூரம் வரை ஜம்மென்று மணக்கும். அந்தப் பூவை புகையிலைச் சாற்றிலே ஊற வச்சு, சனங்க குடிக்கிறாங்க.'

'அதோ, அந்த மாந்தோப்புப் பக்கம் வீடெல்லாம் தெரியுதே. அது என்ன ஊரா, கோவிலா?'

பீடியைப் பற்றவைத்துக் கொள்ளும் முன் ஹீராமன் கேட்டான். 'பீடி குடிக்கலாமா. வாசனை உங்களுக்கு ஒன்றும் கஷ்டமாக இராதே?'

'அதுவா? அதுதான் நாம்நகர் மாளிகை. நாம திரு விழாவிலேந்து வந்தோமே... அந்த ஊரே, இந்த நாம் நகர் மாப்பிள்ளேக்குச் சொந்தமாக இருந்ததுதானே? திருவிழா கூட அவர் பெயரிலேதானே நடக்குது. அந்தக் காலத்திலே எப்படி இருந்தாங்க தெரியுமா? அது ஒரு காலம்.'

'ஹூம் அது ஒரு காலம்' என்று சொன்ன ஹீராமன் பேச்சிலே கொஞ்சம் சுவையைக் கூட்டினான். ஹீரா பாயி திரையைத் தூக்கி கூண்டுக் கட்டையிலே செருகினாள். கதை கேட்கும் ஆவல்.

ஹீராபாயின் பல் வரிசை மின்னியது. 'ஊம். அது எந்தக் காலம்?' மோவாயில் கையை ஊன்றிய வண்ணம் கேட்டாள் ஹீராபாயி.

'அதாங்க. நாம்நகர் அரண்மனே சீரும் சிறப்புமாய் இருந்த காலம். என்னமாய் இருந்தது? இப்போ எப்படி ஆயிடுச்சு?'

ஹீராமனுக்குப் பேச்சிலே கவர்ச்சியைக் கலக்கத் தெரியும்.

'நீ பார்த்திருக்கிறாயா...?'

பார்க்கிறதாவது? எல்லாம் கேள்விப் பட்டதுதான். ராஜ்யம் எப்படிக் கை நழுவிப் போனதுங்கறது ஒரு பெரிய கதைங்க. அவுங்க வீட்டிலே சாமியே குழந் தையா வந்து பொறந்ததுன்னு சொல்லுவாங்க. என்ன சொல்லுங்க. சாமி, சாமிதான். மனிதப் பிறவியிலே வந்தாலும் அது சாமி தானே? இல்லிங்களா? இந்திர லோகத்தைவிட்டு மண்ணுலகத்திலே வந்து பொறந்தா அதன் தேஜஸை யாராலும் தாங்கிக்க முடியுங்களா? சூரியகாந்திப் பூவில்லே. அந்த மாதிரி நெத்தியிலே ஒளி, அப்படியே சுடர் விடுமாம். ஆனல் காலம் செய்யற கோலம் இது. ஒருத்தருமே இதைப் புரிஞ்சுக்கலே. ஒரு

தரம் யாரோ வெள்ளைக்காரத் துரையும், துரைசானி அம்மாவும் இந்த அரண்மனைக்கு வந்திருந்தாங்க. சும்மா காத்து வாங்க வந்தாங்களாம். துரைக்குக் கூடத் தெரியலே. துரைசானி அம்மா தான், கடைசியிலே அவங்களுக்குத் தான் தெரிஞ்சிருக்கு. சூரியகாந்திப்பூ மாதிரி··· மலர்ந்த அந்த தேஜஸைப் பார்த்ததுமே "ஏய் மேன். ராஜாசாகப், இது மனிசக் குழந்தை அல்ல. "காட்" தெய்வம்" அப்படீன்னு சொன்னாளாம். ஹீராமன் தன் குரலை மாற்றிக்கொண்டு அப்படியே அந்த துரைசானி மாதிரிப் பேசிக் காட்டியதும் ஹீராபாயிக்கு ஒரே சிரிப்பு. உடல் குலுங்கக் குலுங்கச் சிரித்தாள் அவள்.

ஹீராபாயி தன் மேலாடையைச் சரி செய்து கொண்டாள். என்னென்னவோ எண்ணங்கள் கிளர்ந்தன, ஹீராமனின் இதயத்தில்.

'ம்··· அப்புறம்?'

'உஸ்···கதையின்னு உங்களுக்கு ரொம்பப் பிடிக்கும் போல இருக்கு. கறுப்பு மனிதன் அவன் ராஜாவாக இருந்தால் என்ன, மகாராஜாவாக இருந்தால் என்ன? கறுப்பன் தானே. வெள்ளைக்காரத் துரைமாருங்க புத்தி வருமா? சும்மா புகழ்ச்சியாய் ஏதோ பேசறுங்கன்னு எல்லோரும் சிரிச்சுட்டு சும்மா இருந்துட்டாங்க. அப்புறம் சாமி ராணியம்மா கனவிலே வர ஆரம்பிச்சுட்டாரு. ஒரு நாள் "சரி, எனக்கு உங்களாலே பூசை நடத்த முடியலேன்னு என்னை விட்டு விடுங்கள். இனி இங்கே இருக்க மாட்டேன். புறப்படறேன்"னு சொல்லிட்டாரு. அப்புறமா···பாருங்க...சாமி தன் வேலையைக் காட்ட ஆரம்பிச்சுட்டாரு. முதலிலே இரண்டு முழ நீளம் தந்த மிருந்தபட்டத்து யானை செத்தது. அப்புறம் குதிரை, அப்புறம் ராஜபோக வைபவமெல்லாம் போச்சு.'

'வைபவமெல்லாம்னு என்ன அர்த்தம்?'

கணத்திற்குக் கணம் உணர்ச்சியிலே ஒரு மாற்றம்.

வான வில்லின் வர்ணக் கலவைகள் உள்ளத்திலே மெல்ல மெல்ல இதழ் விரித்து மலர்ந்து கொண்டிருக்கின்றன. எங்கோ…காற்றில் மிதப்பது போன்றதொரு உணர்வு. அப்பப்பா, என்ன அழகு! அவன் வண்டியிலே தேவ லோகத்து அப்சரஸ்தான் உட்கார்ந்திருக்கா, சந்தேகமே யில்லே. என்ன இருந்தாலும் தேவதை, தேவதை தானே? ஐய்யோவ்…முதுகெல்லாம் குறு குறுக்குதே!

'வைபவமா? சொல்லறேன். வைபவமின்னு பணம் காசு, வீடு வாசல், மாடு, கன்று எல்லாம் தாங்க. இது எல்லாமே போச்சு. ஒரே அடியாய்ப் போயிடிச்சு. அந்த சாமி ரூபத்திலே வந்ததும் போயிடிச்சு.'

ஹிராபாயி, கண்களுக்கு மறைந்து கொண்டிருந்த ஆலய கோபுரத்தின் கலசங்களைப் பார்த்தவாறே நெடு மூச்செறிந்தாள்.

'ஆமா, அந்த சாமி குழந்தை போறதுக்கு முன்னாலே சொல்லிட்டுப் போச்சு. அதாவது இந்தக் குடும்பத்திலே ஒரு ஆண் குழந்தை தான் பிறக்கும். இரண்டு பிறக்காது…ன்னு சொல்லிடுத்து…அப்புறம்…சொத்து சுகமெல்லாம் நான் எடுத்துக்கிட்டுப் போனாலும் நல்ல குணமெல்லாம் இங்கே இருக்கும் அப்படின்னு சொன்னாராம் சாமி. அந்த சாமியோட மத்த எல்லா சாமி, தெய்வம் எல்லாமே போயிட்டாங்க. இந்த சரசுவதி தேவி மட்டும் தான் இங்கேயே தங்கிக்கிட்டாங்க. இந்தக் கோவில் அந்த தேவி கோவில் தான்.'

எதிரே மரப்பலகைகளை ஏற்றிக்கொண்டு நாட்டுக் குதிரை வண்டிகள் வருவதைக் கண்டதும் ஹீராமன் சட்டென்று திரையை அவிழ்த்து விட்டான். காளைகளை விரட்டியவாறே பழைய காலத்து நாட்டுப் பாடலை உரக்கப் பாடலானான். அது ஒரு தோத்திரப் பாடல். 'தாயே சரசுவதி, தாள் பணிகின்றோம். எங்கள் மீது அருள் புரிவாயம்மா தேவி.'

வண்டிகள் அருகே வந்ததும் மகிழ்ச்சி பொங்கும் குரலில் 'பலகையெல்லாம் என்ன விலைக்கு எடுக்கிறீங்க'...ன்று விசாரித்தான் ஹீராமன்.

நொண்டிக் குதிரையை ஓட்டி வந்த கிழட்டு பனியா விடமிருந்து அலட்சியமாகப் பதில் வந்தது.

'குறைந்த பட்சம் இருபத்தி ஏழு, இருபத்தி எட்டு. அதிகமாய்ப் போனால் முப்பது. சரக்குக்குத் தக்கவிலை.'

இதற்குள் இளவட்டம் ஒன்று கேட்டது.

'இந்த வருடம் திருவிழாவெல்லாம் எப்படி? எந்தக் கம்பெனி நாடகம் போடுது? ரௌதா கம்பெனியா? மதுரா மோகன் கம்பெனியா?'

'திருவிழாவிற்குப் போனவங்களைக் கேட்டாலல்ல அது தெரியும்' என்று பதில் கூறிய ஹீராமன்...மீண்டும் சத்தாப்பூர், பசீரா ... என்ற பெயரைக் கூறி சரடு விட்டான்.

வண்டி மேலே நகர்ந்தது.

சூரியன் இரண்டு பனை உயரம் வந்து விட்டான். ஹீராமன் தன் காளைகளிடம் பேசலானான். 'டேய், பயலுகளா, இன்னும் இரண்டே மைல், கொஞ்சம் மூச்சுப் பிடியுங்கடா. தண்ணித்தாகம் எடுக்கிற நேரம் ஆயிடுச்சே, நினைவிருக்குதா? அந்தத் தடவை தேகசியா கிட்ட சர்க்கஸ் கம்பெனி கோமாளிக்கும் குரங்கை ஆட்டற துரைக்கும் சண்டை வந்திச்சே, அதெல்லாம் நினைவிருக்கா? அந்தக் கோமாளி அப்படியே குரங்காட்டமா பல்லைக் காட்டி கெஞ்சிக் கூத்தாடினானே ..ஹி...ஹி... ஹி ... அடேயங்கப்பா ... சர்க்கஸிலே தான் எங்கெங்கே யிருந்து ஆளுங்க எல்லாம் வராங்கப்பா!'

ஹீராமன் மெல்லத்திரையின் இடுக்கு வழியே பார்த்தான். ஹீராமாயி ஒரு துண்டுக் காகிதத்தைக் கையிலே வைத்துக்கொண்டு அதையே பார்த்துக்கொண்டிருக்கிருள். ஹீராமனின் உள்ளமெல்லாம் இன்று ஒரே உவகை

யால் பூரித்து நிற்கிறது. ஏதேதோ பாட்டெல்லாம் நினைவு வருகிறது. இருபது இருபத்தி ஐந்து வருடங்களுக்கு முன் தான் தெருக்கூத்தாடிகள், கழைக்கூத்தாடிகள் நாட்டியக் காரிங்க, என்னென்ன அருமையான, துக்கடா, கஜல் எல்லாம் பாடுவாங்க. இப்போயெல்லாம்···ம்...ம்ஞொய்··· என்று ஏதோ வாத்தியத்தை வாசிச்சுகிட்டல்ல பாடு ராங்க···அந்தக் காலத்திலே! ஹீராமனுக்குக் கூத்துப் பாடல் ஒன்று நினைவு வந்துவிட்டது.

> "சஜனுவா வைரி ஹோகயே ஹமாரா! சஜனுவா...
> அரே...சிடியா...ஹோதோ சப்கோயி பாஞ்ச்,
> சிடியா ஹோதோ...
>
> ஹாய்!...கரமுவா! ஹோய்! கரமுவா...
> கோயி பாஞ்சே ஹமாரோ! சஜனுவா!
> ஹோய் கரமுவா".

வண்டிக் கட்டையில் தாளம் போட்டுக்கொண்டு பாடிய ஹீராமன் சட்டென்று நிறுத்தினான்.

கூத்து ஆட்டத்திலே வேஷம் கட்டற மனுவாள் முகம் அசப்பிலே ஹீராபாயி முகம் மாதிரித்தானிருக்கும். அது ஒரு காலம்...மாதா மாதம் தெருக்கூத்துக் கட்டறவங்க கிராமத்திற்கு வருவார்கள். தெருக்கூத்துப் பார்க்கிறது என்றால் ஹீராமனுக்கு உயிர். இதற்காக அண்ணியிடம் எத்தனை முறை வசவும், திட்டும் வாங்கியிருக்கிறான். ஒரு தரம் வீட்டை விட்டுப் போடா...ன்று கூட அண்ணா சொல்லி விட்டார்.

இன்னிக்கு அவன் மேலே சரஸ்வதிதேவியின் அருள் தான் போலிருக்கிறது. ஹீராபாயின் குரல் கேட்டது. 'எவ்வளவு அழகாய்ப் பாடுறீங்க.'

ஹீராமனின் முகம் சிவந்தது. தலையைக் கவிழ்த்துக் கொண்டு சிரித்தான் அவன்.

இன்று தேகசியாவில் வீற்றிருக்கும் மகாவீரஸ்வாமியின் அருள்நோக்கு அவன் மீது உள்ளதுபோலும். யோகம்

தான். நிழலில் ஒரு வண்டியைக் கூடக் காணும். எப்போதும் இங்கு வண்டிகளும் வண்டிக்காரர்களுமாய் ஒரே கூட்டமாயிருக்கும். ஒரே ஒரு சைக்கிள்காரன் மட்டும் நிழலில் அமர்ந்து இளைப்பாறிக் கொண்டிருந்தான். மகா வீரஸ்வாமியை மனதில் தியானித்துக் கொண்டே ஹீராமன் வண்டியை நிறுத்தினன். ஹீராபாயி திரையை விலக்கினுள். சைக்கிள்காரன் இங்கேயே முறைத்துப் பார்த்துக்கொண்டிருப்பதை ஹீராபாயிக்குக் கண்களாலேயே உணர்த்தினன் அவன். விழியோடு விழிகள் பேசின முதன் முறையாக.

வண்டிக்கு முட்டுக்கோல் கொடுத்து நிறுத்தி, மாடுகளை அவிழ்த்துவிட்டான். பின்னர் சைக்கிள் காரனை முறைத்து முறைத்துப் பார்த்தவாறே... 'ஏன் தம்பி, எங்கே போகணும்? திருவிழாக்கா? ஆமாம், எங்கிருந்து வராப்போல?' என விசாரித்தான்.

'பிஸன்பூரிலேயிருந்து.'

'பிஸன்பூரா? ப்பூ. இதுக்குள்ளாறவா இப்படிக் களைச்சுப் போயிட்டே. வயசு பிள்ளை நீ...ப்பூ.'

நோஞ்சலாய், வற்றற்காச்சியிருந்த அந்த இளவட்டம் ஏதோ முணு முணுத்தவாறே பிடியைப் பற்ற வைத்துக் கொண்டு எழுந்து விட்டது.

ஹீராபாயியை உலகத்தின் கண்களுக்குக் காட்டாமல் அவள் மீது எவர் பார்வையும் படாமல் வைத்திருக்கவே ஹீராமன் ஆசைப்பட்டான். சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு வண்டியோ குதிரையோ காணும்.

சிலு சிலுவென்று மெல்லிய காலாக ஓடிவரும் கஜரி ஆறு, தேகசியாவிற்கருகே கிழக்கு முகமாகத் திரும்பி ஓடுகிறது. நீரில் அமிழ்ந்து கிடக்கும் எருமைகளையும், அதன் முதுகின் மீது அமர்ந்திருக்கும் கொக்குகளையும் ஹீராபாயி வேடிக்கை பார்க்கலானுள்.

'போய் கைகால் கழுவிக்கொள்ளுங்கள்' என்றன் ஹீராமன் அவளிடம்.

ஹீராபாயி வண்டியிலிருந்து இறங்கினுள். ஹீராமனின் இதயம் வேகமாய் படபடவென்று அடித்துக் கொண்டது. 'இல்லை... இல்லை ...' காலெல்லாம் சரியா ... நேராகத்தானிருக்கிறது. பூமியிலே பதியுதே. அப்ப சரி. ஆனுல் உள்ளங்காலெல்லாம் ஏன் இத்தனை சிவப்பா! அப்பப்பா!...

அவள் இறங்கிக் கரையோரமாகச் சென்றுள். 'அவள் நடந்து போகும்போது தான் எப்படிப் போகிறுள். குடும்பப் பொண்ணு மாதிரி, குனிந்த தலை நிமிராமல், மெள்ள மெள்ள, தலைப்பை இழுத்துப் போர்த்திக்கொண்டு அடக்கமாய் மெதுவாய்... ஹூம். கம்பெனிப் பொம்பளையின்னு யாரு சொல்ல முடியும்? பொம்பளையா! இல்லே, பொண்ணு... கன்னிப் பொண்ணுதான்.'

ஹீராமன் தாங்கு கட்டையின்மீது நின்ற வண்டியில் உட்கார்ந்து கூடுக்குள் எட்டிப் பார்த்தான். ஒரு முறை சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு தலையணைமீது கையை வைத்துப் பார்த்தான். முழங்கையை ஊன்றிக்கொண்டு குனிந்தவன் அதன் மீது அப்படியே சாய்ந்துகொண்டு விட்டான். உடலெங்கும் நறுமணம் விரவியது. ஆகா! எத்தனை இனிய மணம்! தலையணை உறையின்மீது பூ வேலை செய்திருந்தது. அதை விரலால் தடவிப் பார்த்து முகர்ந்தான். ஆகா! என்ன இனிய சுகந்தம்! அப்பாடியோவ்! என்னமாய்க் கமக்குது? ஹீராமனுக்கு ஒரே மூச்சாய் ஐந்து தடவை கஞ்சாப்புகையைக் குடித்தது போலிருந்தது. அத்தனை இனிய போதை! அப்பாடி! ஹீராபாயின் சிறிய கண்ணுடியில் தன்னை யொருமுறை பார்த்துக்கொண்டான். தன் கண்கள் ஏன் இப்படி சிவப்பேறிக் கிடக்கின்றன?

ஹீராபாயி திரும்பி வந்ததும் 'இனி நீங்க வண்டிக்குக்

காவல். நான் போயிட்டு நொடியிலே திரும்பி வந்து விடுவேன்' என்றான் ஹீராமன் சிரித்துக்கொண்டே. தன் பிரயாணப் பையில் மடித்து வைத்திருந்த பனியனை எடுத்தான். துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டான். வாளியும் கையுமாய்ப் புறப்பட்டுவிட்டான்.

காளைகள் இரண்டும் மாறி மாறிக் கனைத்தன. நடந்து கொண்டிருந்த ஹீராமன் திரும்பினான். 'தெரியுது. தாகம் எல்லோருக்கும் தான் நாவை வரட்டுது. திரும்பி வந்து புல்லுக்கட்டை அவிழ்த்துப் போடறேன். அது வரைக்கும் ரகளை பண்ணாமெ இருக்கணும்··· என்ன?'

காளைகள் காதுகளை ஆட்டின.

குளித்து முழுகி ஹீராமன் எப்பொழுது திரும்பினான் என்றே ஹீராபாயிக்குத் தெரியாது. கஜரி ஆற்றின் தெள்ளிய நீரோட்டத்தைப் பார்த்தவாறே அமர்ந்திருந்த வள், இரவு சரியாகத் தூங்காததால் அப்படியே கண் ணயர்ந்து விட்டாள்.

ஹீராமன் அருகிலிருந்த கிராமத்திலிருந்து கொஞ்சம் தயிர், சூடா, சர்க்கரை எல்லாம் வாங்கிக்கொண்டு வந் திருந்தான்.

'எழுந்திருங்க··· இரண்டு வாய் ஏதாவது சாப்பிடுங்க.'

கண்களைத் திறந்த ஹீராபாய் வியப்பிலாழ்ந்தாள்.

ஒரு கையில் புதுச் சட்டியில் தயிர், சூடா, வாழை இலை, இன்னொரு கையில் வாளி நிறையத் தண்ணீர். கண்களில் பரிவுடன் வேண்டுகோள்.

'இவ்வளவெல்லாம் எங்கிருந்து கொண்டு வந்தாய்?' என்றாள் இள நகை சிந்த.

'இந்தக் கிராமத்துத் தயிரு பேர் போனதாயிற்றே. தேநீர் வேணுமின்னா, பார்பிஸ் கஞ்ஜ் போய்த்தான் குடிக்கணும்.'

ஹீராமனுக்குத் தேகமெல்லாம் புல்லரித்தது. இன மறியாப் பரவசம்.

ஹீராபாயி சொன்னாள். 'நீயும் இலையைப் போட்டுக் கொள்... ஏன்? மாட்டாயா? நீ சாப்பிட மாட்டாயென்றால் எல்லாவற்றையும் எடுத்துப் பையிலே வைத்துக் கொள். எனக்கும் வேண்டாம்.'

'த்ஸொ ... த்ஸொ ... இதென்ன? 'சரி சரி' என்றான் ஹீராமன் வெட்கத்துடன்.'

'நீங்க சாப்பிடுங்க முதலில்.'

'முன்றாலென்ன, பின்றாலென்ன? நீயும் உட்கார், இப்படி.'

ஹீராமனுக்கு மகிழ்ச்சி தாளவில்லை. நெஞ்செல்லாம் இனித்தது. ஹீராபாய் தன் கையால் அவனுக்கு இலையைப் போட்டாள். தண்ணீர் தெளித்தாள். சூடாவைக் கொஞ்சம் அள்ளி வைத்து, தயிரையும் விட்டாள். உஷ்...ஷ்... என்ன பாக்கியம் என்ன பாக்கியம்! அவனுக்கு! பகவதி அம்மனே நேரில் வந்து தன் கையால் அவனுக்கு அமுது படைக்கிறாளே!

சிவந்த அதரங்களில் தயிர்த்துளிகள்!

காட்டுக் கிளி பாலன்னம் சாப்பிடுவதைப் பார்த்ததுண்டோ?

வெம்மை தணிந்து பொழுது தாழத் துவங்கியது. வண்டிக்குள் படுத்திருந்த ஹீராபாயும் கீழே மரத்தடியில் ஜமுக்காளத்தை விரித்துப் படுத்துறங்கிய ஹீராமனும் ஒரே சமயத்தில் கண் விழித்தனர். திருவிழா செல்லும் வண்டிகள் பல மரத்தடியில் நின்றன. குழந்தை, குட்டிகள், ஒரே கூச்சல். பரபரப்பு.

ஹீராமன் அவசர அவசரமாக எழுந்து வண்டியைப் பூட்டினான். திரைகளை அவிழ்த்துத் தொங்கவிட்டான். வண்டிக்குள் எட்டிப்பார்த்து நேரமாகிவிட்டதை ஜாடையால் உணர்த்தினான். மாடுகளை வண்டியில் பூட்டும் போது, சுற்றிநின்ற வண்டிக்காரர்கள் கேட்ட கேள்வி

களுக்கு அவன் நேரான பதிலே கூறவில்லை. வண்டியி லேறி அமர்ந்தபின், பொதுப்படையாகச் சொல்லிவைத் தான். 'சிர்புர் பஜார், ஆசுபத்திரி டாக்டரம்மா இது. நோயாளியைப் பார்க்கப் போறுங்க. பக்கத்திலே குக் கிராமம்.'

வண்டி நகர்ந்தது.

இதற்குள் அவன் முன் சொன்ன ஊர்களின் பெயர் ஹீராபாயிக்கு மறந்துவிட்டது. வண்டி சற்று தூரம் வந்ததும் சிரித்துக்கொண்டே... 'அப்போ சொன்னுயே ஏதோ ஒரு ஊர் பேரு, அதென்ன? பத்தாப்பூரா? சித்தாப் பூரா?' என்று கேட்டாள் வேடிக்கையாக.

ஹீராமனுக்குச் சிரிப்புத் தாளவில்லை. சிரித்துச் சிரித்து வயிறு வலித்துவிட்டது. 'பத்தாப்பூர், சித்தாப்பூரா? ஹா...ஹா...ஹா ... அதுவா? இவங்களெல்லாம் அந்த ஊர் வண்டிக்காரங்க ஆச்சே. அந்தப் பெயரையே எப்படிச் சொல்லறது? அதான் வேறு ஊரு பேரைச் சொன்னேன். ஹி... ஹி...'

ஹீராபாயும் சிரித்துக்கொண்டே கிராமத்தைப் பார்க்க லாளுள்.

வண்டிப் பாதை தேகசியா கிராமத்தின் நடுவேதான் செல்லுகிறது. பர்தா போட்ட வண்டியைக் கண்டதும் கிராமத்துச் சிறுவர்களுக்கு ஒரே குதூகலம். கையைக் கொட்டிக் கொட்டிப் பாடிக்கொண்டே பின்னல் ஓடி வந்தார்கள்.

> 'செக்கச் சிவந்த பல்லக்குள்
> செக்கச் சிவந்த பொண்ணிருக்கு.
> வெத்திலே போட்ட சிவந்த பொண்ணு
> செக்கச் சிவந்த சிங்காரப் பெண்ணு.'

ஹீராமன் அகமகிழ்ந்து உவகை வெள்ளத்தில் மிதந் தான். சிவப்புப் பல்லக்கு...சிவப்பு சிங்காரப் பொண்ணு... அடசக்கை!

'பொண்ணு வெத்திலே போட்டுகிரு. மாப்பிள்ளை துண்டிலே முகத்தைத் துடைக்கிரு.'

'மருமகப் பெண்ணே. இந்த தேகசிய கிராமத்துச் சிறுவர்களை நினைவு வெச்சுக்கம்மா. மறக்காதே.'

'திரும்பி வரும்பொழுது லட்டு கொண்டுவந்து கொடுக்கணும் எங்களுக்கு.'

'உங்க மாப்பிள்ளைக்கு நூறு வயசு.' இப்படி பல குரல்கள்.

ஸ்ரீராமனின் நெடு நாள் ஆசை தீர்ந்துவிட்டது. இப்படி அவன் எத்தனையோ கனவுகளைக் கண்டிருக்கிருன். புது மணப் பெண்ணை வண்டியில் வைத்து அழைத்துக்கொண்டு வருகிருன். ஒவ்வொரு கிராமத்திலும் சிறுவர்கள் வண்டியைச் சுற்றி வந்து, கைகளைக் கொட்டிக்கொண்டு பாடுகிருர்கள். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் பெண்கள் நின்று எட்டிப் பார்க்கிருர்கள். எந்த ஊர் வண்டி? எங்கே போகிறது என்று ஆண் பிள்ளைகள் விசாரிக்கிருர்கள். மணப் பெண் மெல்லத் திரையை விலக்கி அவனைப் பார்க்கிருள். இப்படி எத்தனையோ இனிய கற்பனைகளில் அவன் திளைத்ததுண்டு.

கிராமத்து எல்லையைத் தாண்டியதும் அவன் கடைக்கண்ணுல் வண்டிக்குள் பார்த்தான். ஸ்ரீராபாயி ஏதோ சிந்தனையிலாழ்ந்தவளாய் அமர்ந்திருக்கிருள். ஸ்ரீராமனும் யோசனையில் ஆழ்ந்தான். சற்றைக்கெல்லாம் பாடலொன்றைப் பாட ஆரம்பித்துவிட்டது அவன் வாய்...

> 'பெண்டு பிள்ளை வீடு, கன்று மாடு குளம்
> பொய்மையான பெரு வெள்ளம்
> இதைக் கண்டு மயங்கி, நெஞ்சில் கொண்டு
> மயங்காதே... நீ! பொய்மையில் மூழ்காதே நீ'

'உனக்கு உன் மொழியில் பாட்டுத் தெரியாதா?' என வினவிஞள் ஸ்ரீராபாயி.

ஹீராமனால் இப்பொழுதெல்லாம் கூச்சமில்லாமல் ஹீராபாயின் விழிகளை நேருக்கு நேர் சந்தித்து உரையாட முடிகிறது. கம்பெனி நடிகை கூட இப்படி இருப்பாளா? இவளைப் பார்த்து யாராவது கம்பெனிக்காரி எனக் கூற முடியுமா? அவள் வந்து கிராமிய பாஷையில் பாட்டுக் கேட்க ஆசைப்படுகிறாள். ஹீராமன் உரக்கச் சிரித்து விட்டான். 'கிராமிய பாஷை உங்களுக்குப் புரியுமா?'

'ம்...ஹூஉம்' என்று தலையை ஆட்டினாள் அவள். காது ஜிமிக்கி அழகாய் அசைந்தது.

ஹீராமன் சற்று நேரம் மௌனமாய் வண்டியை ஓட்டினான். பிறகு கேட்டான், 'அப்ப, பாட்டுக் கேக்கணும். பாடித்தான் ஆகணும்...இல்லையா? இஸ்...ஷ்... கிராமத்து நாட்டுப் பாடலைக் கேட்க உங்களுக்கு இத்தனை ஆசையா? அப்படின்னா...இந்தத் தடத்தை விட்டு மாறி அப்பாலே போய் தான் ஆகணும். வண்டியும், குதிரையுமா, போற ரோடு இது. இதிலே உரக்கப் பாடிக்கிட்டு வண்டியை ஓட்ட முடியுமா? முடியாது.'

ஹீராமன் மூக்கணாங்கயிற்றை வலித்து மாடுகளைத் திருப்பி வேறு பாட்டையில் ஓட்டினான். 'அப்பொ ஹரிப்பூர் வழியாகப் போகணும்.'

நேரான பாதையை விட்டு வண்டி திரும்புவதைக் கண்டதும், பின்னால் வந்த வண்டிக்காரன் கத்தினான். 'ஏனப்பா, தடம் மாறிப் போறே? எங்கே போறே?'

ஹீராமனுக்கு ஒரே எரிச்சல், தார்க்குச்சியை ஒரு சொடுக்கு சொடுக்கினான் வேகமாய். 'எங்கய்யா தடம் மாறிப் போறேன்? நனன்பூர் போற பாதை இது தானே?' என்று பதிலுக்கு உரக்கக் கத்தியவன் தனக்குள் முணு முணுத்துக் கொண்டான். 'இந்தப் பக்கத்து வண்டிக் காரங்ககிட்ட இது தான் ஒரு கெட்ட வழக்கம். வழியிலே போறவங்ககிட்ட நூறு குறுக்குக் கேள்விகள் கேட்பாங்க. போக்கத்த பயலுக.'

நனன்பூர் பாதையில் வண்டி விரைந்தது. கொஞ்ச தூரம் சென்றதும் கயிறுகளைத் தளர்த்தி மாடுகளைத் தன் னிச்சையாகப் போகவிட்டான் ஹீராமன். மாடுகள் மெல்ல அசைந்து நடைபோட்டன.

ஹீராபாயி பார்த்தாள். நனன்பூர் பாதை வெறிச் சோடிக்கிடந்தது. சந்தடியே காணும். ஹீராமன் அவள் கண்களைச் சந்தித்ததுமே புரிந்து கொண்டுவிட் டான். 'பயப்பட வேண்டிய அவசியமில்லை. இந்தப் பாதை வழியாகவும் பார்பிஸ்கஞ்ஜ் நகருக்குப் போகலாம். ராத்திரி ஒரு மணிக்குப் போய்ச் சேர்ந்து விடலாம். வழி யிலே எத்தனையோ ஊரு, கிராமம். சனங்களெல்லாம் நல்லவங்க' என்றான்.

ஹீராபாயி மனதிற்குள் அவனுடைய இங்கிதமான பேச்சை மெச்சினாள். பார்பிஸ்கஞ்ஜ் செல்ல அவளுக்கு அப்படியொன்றும் அவசரமில்லை. ஹீராமனிடம் அவளுக்கு முழு நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. பயம், அச்சம், எதுவுமே தோன்றவில்லை. ஹீராமன் மனதிற் குள் சிரித்துக் கொண்டான். எந்தப் பாட்டைப் பாடு வது? பாட்டு, கதை இரண்டுமே ஹீராபாயிக்குப் பிடித் ததுதான். 'தோணிக்காரி மஹுவர் பாட்டைப் பாடலா மா?' ஹீராமன் சொன்னான். 'சரி, கேளுங்க பாடறேன். உங்களுக்கு என் பாட்டைக் கேட்க இத்தனை ஆசையாக இருந்தா...தோணிக்காரி மஹுவர் பாட்டைப் பாடட் டுமா? அதிலே பாட்டும் உண்டு. கதையும் உண்டு.'

எத்தனையோ நாட்களுக்கு அப்புறம் வாய்விட்டுப் பாட ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. 'பகவதி, தாயே, என்னுடைய ஆசையை நிறைவேற்றி வைத்திருக்கிறாய். இன்று ஹீராமன் தன் வெகு நாளைய ஆசையைத் தீர்த்துக் கொள்ளப்போகிறான். ஜெய் பகவதி.'

சிரிப்பை அடக்கிக்கொண்டு ஹீராபாயி தன் பிரார்த்

தனையைக் கேட்டுக் கொண்டிருப்பதை ஹீராமன் ஒரு கண் பார்த்துக்கொண்டான்.

'கேளுங்க. இன்னிக்கும் பரமான் ஆற்றங்கரையிலே தோணிக்காரி மஹுவாவின் பேரில் பல பழைய படித் துறைகள் இருக்கின்றன. மஹுவா இந்த வட்டாரத்துப் பெண்தான். தோணிக்காரியானாலும் நேர்மையான பெண். நெறியுள்ளவள். அவன் அப்பன் ஓரே குடி காரன். குடித்துவிட்டுக் கண் மண் தெரியாமல் விழுந்து கிடப்பான். இராப்பகல் போதைதான். மஹுவாவிற்கு அம்மா இல்லே. இளைய தாயார் தான். அவளும் ஒரு ராட்சசி. ரொம்ப கைக்காரி. பொல்லாதவள். கள்ளச் சாராயம் காய்ச்சி ராவோட ராவா விற்கிறவள். கஞ்சா, அபினி கடத்திகிட்டு வருகிறவள். பல களவாணிப் பயல்களோட அவளுக்குத் தொடர்பு. பல ரக சினேகி தம். மஹுவா கன்னிப் பெண். அழகான இளமை. பாவம், அவளை இடுப்பொடிய வேலே வாங்கி விடுவாள், இந்த ராட்சசி. பொண்ணு வயசுக்கு வந்தாச்சு. கல்யா ணம் காட்சி செய்யணுங்கிற பேச்சே இல்லே. ஒரு நாள் ராத்திரி என்ன நடந்தது தெரியுமா?''

ஹீராமன் லேசாகத் தொண்டையைக் கனைத்துக் கொண்டான்.

> 'ஓ....ஓ.... ஆவணி மாதத்து மேகங்களே!....
> துள்ளிக் குதித்தோடும் அருவிகளே! ஓ.. ஓ....'

ஹீராமன் பாடலாகவே கதையைச் சொன்னான்.

'ஐயோ, அம்மா, ஆவணி புரட்டாசி மாதத்து வெள்ளம் புரண்டோடுகிறது. ஆற்றில் பயங்கரமான இருள். மேகங்கள் குமுறுகின்றன. மின்வெட்டு கண்ணைப் பறிக் கின்றது. சின்னஞ்சிறுமியான என் நெஞ்சம் நடுங்கு கிறதே. அறியாப் பெண்ணல்லவா நான். தனி வழியே எப்படிச் செல்வேன் நான். அதுவும் படித்துறைக்கு.

அங்கே யாரோ ஒருவன் முகமறியா வழிப் பயணி காத்திருக்கிருனும். அவன் கால்களுக்கு எண்ணெய் தடவிவிட நான் போகவேண்டுமாம். அம்மா, என் நெஞ்சம் துடிக்கிறது. சின்னம்மா தன் கதவை மூடிக்கொண்டு விட்டாளே! வானம் கறுத்துவிட்டது. பயங்கரமான இடி மின்னலோடு மழை தாரை தாரையாகக் கொட்டுகிறதே...' பாவம், மஹுவா! இறந்துபோன தன் தாயை நினைத்து அந்த மழை இருட்டில் கண்ணீர் பெருக்கிளுள். அவள் அம்மா மட்டும் உயிரோடு இருந்திருந்தால் அவளுக்கு இந்த கதி நேர்ந்திருக்குமா? 'கார்காலத்துக் காரிருளில் நெஞ்சொடு சேர்த்தணைத்து உன் மகளான எனக்கு ஆறுதல் கூறியிருப்பாயே! ஐயோ, அம்மா, என்னை இதற்காகவா பெற்றெடுத்தாய்? இந்த அலங்கோல நிலைக்காகவா உன் வயிற்றில் என்னை சிசுவாகத் தாங்கினாய்?' மஹுவாவிற்குத் தன் தாயின்மேல் கோபமாக வந்தது. 'என்னைத் தனியேவிட்டு, நீ ஏன் போனாய் அம்மா?' என்று நிந்திக்கலானாள் மஹுவா.

ஹீராமனின் குரலிலே... ஒரு சோகக் கமறல்.

"ஊ... ஹும்... ரே... ஓ...ஓ... மையாம் மோரீ...."

சற்றே ஆசுவாசப்படுத்திக் கொண்டு ஹீராமன் கேட்டான்.

'உங்களுக்கு இந்த பாஷை கூடப் புரியுதா? இல்லே வெறும் பாட்டுக் கேட்டுக் கொண்டு இருக்கிறீங்களா?'

'கொஞ்சம் தெரியும். உட்கன் என்ருல உபடன்... உடம்புக்குத் தேய்த்துக்கொள்கிருர்களே வாசனைப்பொடி அதுதான்' என்ருள் ஹீராபாயி.

ஹீராமனுக்கு ஒரே ஆச்சரியம். 'ஷ்... ஷ்...'

கதை மேலே தொடர்ந்தது. 'அழுது புலம்பி என்னங்க பயன்? தோணிக்கரைக்குப் போய்ச் சேர்ந்தாள் மஹுவா. அங்கே ஆள் காத்திருந்தான். அவன் தான்

அவளுக்குரிய விலையை முதலிலேயே கொடுத்து விட்டானே. விடுவானா? தலை மயிரைப் பிடித்துத் தரதர வென்று இழுத்துக்கொண்டு தன் படகுக்குப் போய்விட்டான். தோணிக்குப் போனதும் "பாய் மரத்தை அவிழ்த்து விடுங்கடா, சுக்கானைப் பிடியுங்கடா" என்று படகோட்டிக் கெல்லாம் உத்தரவு போட்டான். பாவம், இராத்திரி முழுக்க அந்த மஹுவா பொண்ணு கண்ணீரும் கம்பலையுமா, புலம்பிக்கிட்டுக் கிடந்தாள். அந்த வியாபாரியின் ஆட்களெல்லாம் வந்து அவளை மிரட்டினுங்க. பயமுறுத்தினுங்க. "சும்மா வாயை மூடிக்கிட்டு இரு. இல்லாட்டா தூக்கி தண்ணியிலே போட்டு விடுவோம்" என்று அதட்டினதும் மஹுவிற்குச் சட்டென ஒரு யோசனை தோணித்து. ஒரு முடிவுக்கு வந்து விட்டாள்.

விடி வெள்ளி முளைச்சு...மேக மூட்டத்திலேயிருந்த நிலா கொஞ்சம் எட்டிப் பார்த்துவிட்டு திரும்பவும் மறைஞ்சு போச்சு...இங்கே மஹுவா பொண்ணும் தொப்புன்னு தண்ணிக்குள்ளே குதிச்சிட்டா. வியாபாரியின் வேலைக் காரர்களிலே ஒருவன் மஹுவாவைக் கண்டதும் மோகிச்சுப் போயிருந்தான். இவ தண்ணியிலே விழுந்ததைக் கண்டதும் அவனும் உடனே குதித்து விட்டான். வெள்ளத்திலே எதிர் நீச்சுப்போடறது அதனை சுலபமா என்ன? அதுவும் கார்கால வெள்ளம். ஓடுகிற ஆற்றிலே குதிக்கிறது விளையாட்டா? மஹுவா...தோணிக்காரன் மகள் அல்லவா? மீன் குஞ்சுக்கு யாராவது நீந்தக் கத்துக் கொடுக்கணுமா? தண்ணியைக் கிழிச்சிக்கிட்டு விர்ன்று கொண்டை மீனு மாதிரி மஹுவா துள்ளிக்கிட்டுப் போனு...பின்னுலே இவன் கத்திக்கிட்டே நீச்சல் படிக்கிருன். "ஏய், மஹுவா, சற்று நில்லு. உன்னைப் பிடிக்க வரலை நான். நான் உன் சினேகிதன். கொஞ்சம் பொறு. நாம் இருவரும் சேர்ந்து வாழ்க்கை நடத்தலாம்..." ஆனல்...' ஹீராமன் சற்றே நிறுத்தினுன்.

இந்தப் பாடல் அவனுக்கு மிகவும் பிடித்தமானது. தோணிக்காரி மஹுவாவின் பாடலைப் பாடும்போதெல் லாம் அவன் கண் முன்னே புரட்டாசி மாதத்து ஆற்று வெள்ளம் அலைமோதிக்கொண்டு வரும். அமாவாசை இரவும், கருத்து இருண்ட மேகங்களும் கண்ணைப் பறிக் கும் மின்னல்களும் நிழலாடும் வேளையில் அலைகளோடு போராடிக்கொண்டே எதிர் நீச்சல் போடும் மஹுவா அவனுக்குக் காட்சி தருவாள். அப்பப்பா, என்ன வேகம்? நீரைக் கிழித்துக்கொண்டு விரையும் கெண்டை மீனை யொத்த மஹுவாவின் வேகம் பின்னும் அதிகரிக்கும். ஹீராமனுக்கும் தான் தான் அவன் பின்னே விரையும் வியாபாரியின் ஆள் என்று கூடத்தோன்றும். ஆனால் மஹுவா...எதையும் காதில் போட்டுக் கொள்வதில்லை. நம்புவதுமில்லை. திரும்பிப் பார்ப்பதுவும் இல்லை. தன் பாட்டில் போய்க்கொண்டே இருக்கிறாள். அவனும் அவள் பின்னால் நீந்தி நீந்திக் களைத்து விட்டான். சோர்ந்து விட்டான்...

ஆனால் இந்த முறை...மஹுவா தானே வலிய வந்து அவனிடம் சேர்ந்து விட்டாள். அவன் பிடிக்குள் வந்து விட்டாள் என்று ஹீராமனுக்குத் தோன்றியது. அவன் மஹுவாவைத் தீண்டிவிட்டான். அவளை அடைந்து விட்டான். அவனது சோர்வெல்லாம் பறந்தோடிவிட்டது. பதினைந்து இருபது வருடங்களாகப் பெருக்கெடுத்தோடும் வெள்ளத்தில் எதிர் நீச்சு போட்டுக்கொண்டிருந்த அவ னது உள்ளம் கரையைக் கண்டு விட்டது. ஆனந்தக் கண்ணீரை அடக்கமுடியுமா?...

கண்ணீர் மல்கிய விழிகளை ஹீராபாயிடமிருந்து மறைக்கவே அவன் விரும்பினான். ஆனால் அவளோ அவனது இதயத்திற்குள்ளேயிருந்து யாவற்றையுமே எப் பொழுதிலிருந்து பார்த்துக்கொண்டிருக்கிறாளோ யார் கண்டது?

ஹீராமன் மிகுந்த சிரமத்துடன் தன் மனவெழுச்சியைக் கட்டுப்படுத்திக்கொண்டு மாடுகளை விரட்டிஞன். 'இந்தப் பாட்டைக்கேட்டா நீங்க இரண்டு பேருமே அப்படியே உருகிப்போயிடிறீங்களே. என்னமோ நூறு மணங்கு பாரத்தை உங்க மேலே ஏத்திவிட்டாப் பல. ஊம்… நடங்க…'

ஹீராபாயி நெட்டுயிர்க்கின்ருள். ஹீராமனுக்கு உடம்பெல்லாம் கிளுகிளுப்பு.

'நீங்க பெரிய கலைஞர்தான்.'

'இ…ஸ்…ஸ்'

ஐப்பசி கார்த்திகை மாதத்திலே சீக்கிரமே இருட்டி விடுகிறது. அந்திமாலைக்குள் நனன்பூர் போய்ச்சேர்ந்தாக வேண்டும். ஹீராமன் தன் காளைகளிடம் விஷயத்தை எடுத்துச்சொல்லுகிருன். 'பாருங்கடா, காலை எட்டிப் போட்டு, மூச்சைப் பிடித்து ஓடுங்க…தொ…தொ… ஓடுங்கடா தம்பி…ஸ்…ஸ்…ஹாம்…ய…ஏ…ஏ…ஹாம் ….ஏலே…லே…லே.'

நனன்பூரை அடையும் வரை அவன் மாடுகளை விரட்டிக்கொண்டே இருந்தான். ஒவ்வொரு முறை தூண்டும்போதும் பழைய சமாசாரங்களை நினைவுபடுத்திக்கொண்டேயிருந்தான். 'ஏலே…சௌத்திரி வீட்டுக் கல்யாணத்திலே எத்தனை வண்டி வந்தது? நினைவிருக்காடா தம்பீங்களா? அத்தனையும் முந்திக்கொண்டு விரைவா ஓடினீங்களே அப்பொ…ஊம்…அந்த மாதிரி ஓடுங்கடா இப்பொ பார்க்கலாம்.'

நனன்பூரிலிருந்து பார்சிமி கஞ்ஜ் 6 மைல். இன்னும் இரண்டு மணி நேரப் பயணம். ஓடுகிற ஓட்டம்.

நனன்பூர் கடைகளில் இப்பொழுதெல்லாம் தேநீர் கிடைக்கிறது. வண்டியை நிறுத்திவிட்டு ஹீராமன் தன் லோட்டாவில் தேநீர் வாங்கிக்கொண்டு வந்தான். கம்பெனி நாடகக்காரிகளுக்கு தேநீர் என்ருல் உயிராம்.

மணிக்கு மணி தேநீரைக் குடித்துக்கொண்டே இருப்பார்கள் என்று அவன் கேள்விப்பட்டதுண்டு.

அவன் ஏன் தேநீர் குடிப்பதில்லை என்பதைக் கேட்டு ஹீராபாயிக்கு சிரிப்பை அடக்கவே முடியவில்லை. வயிற்றைப் பிடித்துக்கொண்டு குலுங்கக் குலுங்கச் சிரித்தாள். 'ஒண்டிக் கட்டையாய் இருக்கற ஆளு தேநீர் குடிக்கக்கூடாதுன்னு யார் சொன்னார்கள்?' என்று கேட்டாள்.

ஹீராமனுக்கு லஜ்ஜையாய் இருந்தது. இதற்குப் பதில் என்ன சொல்வது? சீச்சி... வெட்கக்கேடான விஷயம்... ஆனால் அவனுக்கே தெரியாதா என்ன? சர்க்கஸ் கம்பெனி முதலாளி அம்மா தன் கையாலேயே தேநீர் கொடுத்த அனுபவம்தான் இருக்கே. அப்பப்பா! ரொம்ப உஷ்ணமான பானம்.

'குருஜி··· குடியுங்கள் ···' என்றாள் ஹீராபாயி.

'இ···ஸ்···ஸ்···'

நனன்பூர்க் கடைத்தெருவில் விளக்கு ஏற்றியாகி விட்டது. ஹீராமன் கீழே இறங்கி லாந்தரை ஏற்றி வண்டியின் பின்னால் மாட்டினான்··· இப்பொழுதெல்லாம் பட்டணத்திலிருந்து ஐந்து மைலுக்கப்பால் இருக்கும் கிராமத்தான்கூடத் தன்னைப் பட்டணத்தான் என்றுதான் நினைச்சுக்கிறான். விளக்கு இல்லாத வண்டியை மடக்கி தண்டம் போட்டுவிடுவார்கள். இப்படி எத்தனையோ தொல்லைகள்.

'ஐயய்யே! என்னை குருஜின்று சொல்லாதீங்க···'

'ஏன் சொல்லக்கூடாது? நீங்க என் குருஜிதான். ஒரு எழுத்துக் கத்துக்கொடுத்தாலும் சரி, ஒரு ராகம் கத்துக் கொடுத்தாலும் சரி, அவர் குருதான்னு சாத்திரத்திலேயே சொல்லியிருக்கு.'

'அடேயப்பா! உங்களுக்கு சாத்திரம் புராணமெல்லாம்

தெரியுதே!··· அப்படி நான் என்ன சொல்லிக்கொடுத்து விட்டேன். நீங்க ஒண்ணு···'

ஹீராபாயி மென்நகை புரிந்தவாறே மெல்லிய குரலில் பாடலானுள் ...

'... ஓ ... ஆவணி மாதத்து மேகங்களே ...'

ஹீராமன் வியப்பினுல் ஊமையானுன். 'அடேயப்பா! என்ன புத்திசாலித்தனம்? அப்படியே மஹுவா மாதிரியே இருக்காளே! மஹுவாதான்.'

வரண்டு போயிருந்த ஆற்றுத்தடத்தின் சரிவிலே வண்டி கடகடவென்று இறங்கியது. நல்ல சரிவு, ஹீராபாயி சட்டென்று அவன் தோளேப் பற்றிக் கொண்டாள் ஒரு கையால். நெடுநேரம் வரை அம்மெல்லிய விரல்கள் அவன் தோளில் தான் படிந்து கிடந்தன. பல தடவை மெல்ல விழிகளைத் திருப்பி அம்மென் விரல்களைப் பார்க்க முயன்ருன், ஹீராமன். ஆனுல் இயலவில்லை. வண்டி மீண்டும் ஏற்றத்தில் ஏற ஆரம்பித்ததும் விரல்கள் மெல்ல அகன்றுவிட்டன.

எதிரே பார்பிஸ்கஞ்ஜ் நகரத்தின் விளக்கொளி தெரிந்தது. நகரத்திலிருந்து சற்றுத் தள்ளி திருவிழா சந்தையின் விளக்குகள் மினுக்குகின்றன. வண்டியில் தொங்கிய விளக்கின் வெளிச்சத்தில் இரு புறமும் நிழல்கள் நாட்டியமாடுகின்றன. ஹீராமனின் கலங்கிய கண்களுக்கு ஒவ்வொரு ஒளி விளக்கும், சூரிய காந்த மலர் போல் தோன்றுகிறது. ஏனிந்தக் கலக்கம்?

பார்பிஸ்கஞ்ஜ் நகரம் ஹீராமனுக்குச் சொந்த வீடு போல். எத்தனையோ முறைகள் வந்து போகிருன். திருவிழாச் சந்தைக்கு பாரமேற்றிக் கொண்டு வந்திருக்கிருன். யாராவது பெண்ணுடன் வந்ததுண்டோ? ஓ... ஒரு தரம் வந்திருக்கிருன். அண்ணியை முதல் தடவையாகப் புக்ககத்திற்கு அழைக்கும் போது அவன் தான்

வண்டியை ஓட்டி வந்தான். இப்படித்தான் வண்டியின் இரு பக்கமும் திரை கட்டித் தொங்க விட்டிருந்தான்.

வண்டியை நேராக வண்டிப் பேட்டைக்கு ஓட்டினன். வண்டியின் இரு பக்கமும் தான் திரை கட்டியிருக்கிருனே. இரவு முழுவதும் ஹீராபாயி வண்டிக்குள்ளே தானிருப்பாள். இருக்கட்டும், காலையிலே ரௌதா கம்பெனி மானேஜரு வந்த பின், பேசி முடிச்சுக் கிட்டுத் தான் ஹீராபாயி கம்பெனியிலே சேருவாள். நாளைக்கு மறு நாள் தான் இங்கு திருவிழா துவங்குகிறது. கூடாரமும் கொட்டகையுமா இந்தத் தடவை திருவிழாவிலே ரொம்ப பிரமாதமாயிருக்கு…ஹு…இன்னும் ஒரு இரவு. இன்று இரவு முழுவதும் ஹீராபாயி அவனுடைய வண்டியில் தான் தங்கியிருப்பாள். ஹீராமனின் வண்டியில் அல்ல, அவனுடைய வீட்டில். வண்டி தானே அவனுடைய வீடு.

'எந்த ஊரு வண்டியப்பா?'

'அடேடே! ஹீராமனு? எந்தத் திருவிழாவிலிருந்து என்ன சரக்கு ஏத்திக்கிட்டு வந்திருக்கே?'

வண்டிப் பேட்டையில் இப்படித்தான். வண்டிக்காரர்கள், தங்கள் ஊர்க்காரர்களை விசாரித்து ஒன்று கூடி, தங்கள் வண்டிகளை ஒரு பக்கமாய் அவிழ்த்து விடுவார்கள். ஹீராமனின் ஊர்க்காரர்களும் அங்கிருந்தனர். லால்மோகர், துன்னிராம், பலட்தாஸ், இப்படி பலரையும் அங்கே கண்டதும் ஒரு கணம் ஹீராமனுக்குத் துணுக்கென்றது. 'வம்புக்காரப் பயல்கள், சும்மா இருப்பாங்களா?' இதற்குள் பலட்தாஸ் வண்டிக்குள் எட்டிப் பார்த்தாகி விட்டது. ஏதோ புலி, கிலியைப் பார்த்து அரண்டு விடுவது போல் அதிர்ந்துபோய் ஓடி வந்து விட்டான். ஹீராமன் தன் தோழர்களைச் சும்மாயிருக்கும்படி ஜாடை காட்டினன். பின்னர் மெல்ல வண்டியின் பக்கம் கண்ணுல் ஜாடை காட்டி, கிசுகிசுத்தான். 'சும்மா இருங்கடா,

பயலுகளா! வண்டியிலே இருக்கிறது நாடகக் கம்பெனி... பொண்ணு.'

'நௌடங்கி...யா?'

'ஆமாம், ஆமாம்.'

'?...?...?...'

இப்போ, ஒரு ஹீராமன் இல்லே. நாலு ஹீராமன்கள் சேர்ந்து விட்டார்கள். நாலு பேரும் வியப்பினுல் விழி யகல ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். 'வண்டியில் கம்பெனிக்காரி... நடிகை... அப்பாடி' கம் பெனி என்ற சொல்லுக்குத்தான் என்ன சக்தி? மத்த மூணு பேரும் ஒன்று கூடி நின்றதை ஹீராமன் கவனிக் காமல் இல்லே. லால் மோகர் சற்றுத் தள்ளி நின்று பேச லாம் என்பதை சாடையால் வெளியிட்டான்.

ஹீராமன் வண்டியைப் பார்த்துக்கொண்டு 'ஓட்டல் எதுவும் இப்ப திறந்திருக்காது. பட்சணக் கடை யிலிருந்து ஏதாவது இனிப்பு வாங்கி வரட்டுமா?' என்ருன்.

வண்டிக்குள்ளிருந்து பதில் வந்தது. 'ஹீராமன்! கொஞ்சம் இதைக் கேட்டுவிட்டு போ. எனக்கு எதுவும் வேண்டாம். நீ போய் சாப்பிட்டு வா... இந்தா.'

'என்னது காசா? இல்லே...' பார்பிஸ்கஞ்ஜ் வந்தா காசைக் கொடுத்து எதையாவது கண்டதை வாங்கி அவன் இதுவரை சாப்பிட்டதில்லே. அவன் ஊர்க்கார வண்டிக்காரங்க இருக்கிறது வேறு எதற்காக? அவன் காசைத் தொடுவானு? ஹீராமன் 'காசு வேண்டாங்க...' என்று மறுத்தான்.

ஹீராபாயி விடவில்லே. 'திருவிழாச் சந்தையிலே வந்து இதெல்லாம் என்ன? காசை எடுத்துக்கொள்' என்ருள் அவள்.

தருணத்தைப் பயன்படுத்திக்கொண்டு லால்மோகர்

வண்டிக் கருகே வந்துவிட்டான். 'சலாமுங்க. நாலு வண்டிக்காரங்க கிட்ட இருக்கிற சோறு, பதார்த்தத்தை ஆறு பேரு தாராளமாய்ச் சாப்பிடலாமுங்க. நாங்க எல்லோரும் ஒரே ஊரு வண்டிக்காரங்க ஹி···ஹி...ஹி··· நாங்கயெல்லாம் இருக்கிறப்போ ஹீராமன் ஹோட்டலிலே, கடையிலே போய் சாப்பிடுவானு?' லால்மோகர் குழைந்தான்.

ஹீராமன் சட்டென அவன் கையைப் பிடித்து ஒரு அழுத்து அழுத்தினுன். அதன் அர்த்தம் 'சும்மாயிருடா, வள வளவென்று பேசாதே.'

வண்டியிலிருந்து சற்று அப்பால் போனதும் இதுவரை மனசைப் போட்டுக் குடைஞ்ச விஷயத்தைத் துன்னிராம் வெளியே கக்கிவிட்டான். 'ஹீராமன், நீ ரொம்ப அதிர்ஷ்டக்காரனடா! போன வருடம் சர்க்கஸ் புலி வண்டி. இந்த வருடம் கம்பெனிப் பொம்பளே, தேவலாம் போ.'

ஹீராமன் தணிந்தகுரலில் 'டேய், நாம்ப தாறுமாருய்ப் பேசினு கேட்டுக்கிட்டு இருக்க இது நம்ப ஊரு பொம்பளே யில்லேயடா. சாக்கிரதை. மேற்கத்திப் பொண்ணு. அதுவும் கம்பெனிக்காரி' என்ருன்.

துன்னிராம் மெல்லத் தன் சந்தேகத்தை வெளியிட்டான். 'ஏண்டா, நாடகக் கம்பெனியிலே நடத்தை கெட்ட பொம்பளேங்க தான் இருப்பாங்களாமே? கேட்டிருக்கிறேன்.'

தத்···மற்ற மூவரும் ஒரே சமயத்தில் அவன் மீது பாய்ந்தார்கள்··· 'சீச்சீ, என்னடா மனுசன் நீ! கம்பெனியிலே ஒழுக்கம் கெட்ட பொம்பளே தான் இருப்பாளாம். ரொம்பக் கண்டவன் நீ! புத்தியைப் பாரு புத்தியை! கேட்டிருக்காணும்! ஏலே பார்த்திருக்கிருயாடா?'

துன்னிராம் தன் தவறை ஏற்றுக்கொண்டு மன்னிப்புக் கேட்டுக்கொண்டான்.

பலட்தாஸின் மூளேக்கு ஒரு விஷயம் எட்டியது.

'ஹீராமன்! பொம்பளை வண்டியிலே தனியே இருக்குமா? என்ன இருந்தாலும் பொம்பளை பொம்பளைதானே! ஏதாவது தேவைப்பட்டா...' என்று இழுத்தான்.

அவனது யோசனை மற்ற மூவருக்குமே உகப்பாயிருந்தது. அவனை வண்டிக்குக் காவலாய் நிறுத்திவிட்டு மற்ற மூவரும் சாப்பிடச் சென்றனர். போகும்போது ஹீராமன் எச்சரித்துவைத்தான். 'ஏலே கொஞ்சம் ஜாக்கிருதையாக நடந்துக்கோ. ஆமாம், உளறிக் கிளறி வைக்காதே.'

ஹீராமனின் உடம்பிலிருந்து அத்தர் செண்ட் வாசனை கமழ்ந்தது... ஹீராம் ரொம்ப அதிர்ஷ்டக்காரன். போன தடவை அவன் உடம்பை விட்டு அந்தப் புலி நாத்தம் போகவே எத்தனையோ மாதமாச்சு... லால் மோகர் ஹீராமனின் மேல் துண்டை இழுத்து முகர்ந்து பார்த்தான். 'அடேயங்கப்பா! என்ன வாசனை!'

நடந்துகொண்டிருந்த ஹீராமன் நின்றுவிட்டான். 'என்ன செய்யறது? லால்மோகர்! நீதான் கொஞ்சம் சொல்லேன். நாடகம் வந்து பார்த்துத்தான் ஆகணுங்களா? ரொம்ப பிடிவாதமா சொல்லுங்க' என்றான்.

'காசு கொடுக்காம! இனுமாவா?' இது ஒருவன்.

'சமாசாரம் ஊர்ப்பக்கம் எட்டிவிடாதே.' இது இன்னொருவனின் கவலை.

'வேண்டாம்ப்பா' என்றான் ஹீராமன். 'ஒரு நாள் நௌடங்கி கூத்துப் பார்த்துவிட்டு அப்புறம் ஆயுசு பூரா எவன் பேச்சுக் கேக்கிறது? காட்டுக் கோழிக்கு நாட்டு வளப்பமேன்?

'இலவசமாய்ப் பார்த்தாக்கூட உங்க அண்ணி கண்டபடி ஏசுமா?' என்றான் துன்னிராம்.

லால் மோகர் வண்டியை அவிழ்த்துவிட்டிருந்த இடத்திற்குப் பக்கத்திலேதான் மரங்களை ஏத்திவந்த வண்டிக்

காரர்களும் வண்டியை அவிழ்த்துவிட்டிருந்தார்கள். பேட்டை வண்டிக்காரக் கிழவன் மியான்ஜான் ஹுக்காப் புகையை ஒரு இழுப்பு இழுத்துக்கொண்டே 'யாரப்பா அது? மீனு பஜார் சவாரியை ஏத்திக்கிட்டு வந்திருக்கிறது?' என விசாரித்தான்.

'மீனு பஜார்... வேசிங்க குடியிருப்புக்கல்ல மீனு பஜாருண்ணு பேரு... இந்தக் கிழவன் என்ன உளறுன்?' லால் மோகன் ஹீராமனின் காதருகில் கிசுகிசுத்தான்... 'டேய், உன்னுடைய உடம்பு அப்படி மணக்குடா! நிசம் தான். என்ன வாசனை கமக்குது?'

லகசன்வா, லால் மோகனின் துணையாள். வண்டிக்காரனும் கூட: எல்லோரையும்விட வயதில் இளையவன். முதல் முறை நகரத்திற்கு வந்திருந்தான். ஆனாலென்ன? பணக்காரர்கள் வீட்டில் சின்ன வயதிலிருந்தே எடுபிடி வேலைகள் செய்வது பழக்கம். நல்ல துடிப்பான இளவட்டம், எங்கேயிருந்து மணக்கிறது என்பது புரியாமல் மூக்கை விரித்து, சுருக்கி... நுகருகிறுன். அவன் முகம் பரவசத்தால் மலர்வதை ஹீராமன் கவனிக்கத் தவறவில்லை.

தடதடவென்ற சத்தம். யார் ஓடி வருகிறது இப்படி? பார்த்தால் பலட்தாஸ் வியர்க்க விருவிருக்க ஓடி வந்து கொண்டிருக்கிறுன். காவலாக நின்றவன் ஏன் ஓடி வந்து விட்டான்? 'பலட்தாஸ், என்னடா சமாசாரம்? ஏன்?'

பலட்தாஸ் பாவம், என்ன பதில் கூறுவான்? ஹீராமன் முதலிலேயே அச்சு பிச்சுன்னு பேசாதே. ஜாக்கிரதையாக இரு...ன்று எச்சரித்துத் தான் வைத்திருந்தான். அவனும் வாயைத் திறக்காம, வண்டியிலேறி ஹீராமன் உட்காரும் இடத்தில்தான் உட்கார்ந்துகொண்டான். 'நீ யாரு? ஹீராமனின் நண்பனு?' என ஹீராபாயி கேட்டாள். பலட்தாஸ் வாயைத் திறக்கவில்லை. 'ஆமாம்'

என்று கழுத்தை மட்டும் ஆட்டினுன். ஹீராபாயி மீண்டும் படுத்துக்கொண்டு விட்டாள். பலட்தாஸ்க்குத் தாளவில்லை. இப்படிப்பட்ட அழகியை அவன் இதற்கு முன் இவ்வளவு நெருக்கத்தில் கண்டதேயில்லை. அவள் கை, கால், முகம், பேச்சு, பாவனை, எல்லாவற்றையும் பார்த்ததுமே நெஞ்சு படபடவென்று அடித்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டது. ஏனே தெரியவில்லை. இனம் தெரியாத நடுக்கம், பரவசம். ராம்லீலா நாடகம் பார்த்திருக்கிருன். அதில் சீதா தேவி, இப்படித்தான் களைத்து, துவண்டு படுத்திருந்தாள். 'ஜெய் சீதா சமேத ராமசந்திரருக்கு ஜேய்.' பலட்தாஸ் ராமபக்தன். அவன் மனம் பக்தியினுல் அப்படியே நெக்குருகிப்போய் விட்டது. கண் முன்னே சாட்சாத் சீதா தேவி கண்ணயர்ந்திருக்கிருள். அவன் விஷ்ணு பக்தன் மட்டுமல்ல, பாடகன். பஜனைகள் பாடுவான். ஹீராபாயியை அவன் மனம் சீதா தேவியாகப் பாவித்துக்கொண்டு விட்டது. கால்களைத் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொள்ளவேண்டும் போலிருந்தது. ஹார்மோனியப் பெட்டியின் கட்டைகளை அழுத்துவது போல் விரல்களை மெல்ல அவள் பாதத்தில்...

ஹீராபாயி விருட்டென்று எழுந்து சீறினுள். 'யாரையா நீ? பைத்தியமா என்ன? போ. ஓடிப்போ...'

பலட்தாஸ் அப்படியே நடுநடுங்கிப் போனுன். கம்பெனிக்காரியின் கண்களிலிருந்து தீப்பொறிகள் பறப்பது போலிருந்தது அவனுக்கு. அங்கு பிடித்த ஓட்டம் தான் இங்கு வந்து நிற்கிருன்.

இப்ப என்ன பதில் சொல்லுவான்? எப்படியாவது திருவிழாவை விட்டே ஓடிவிடலாமா என்றிருந்தது. தயங்கியவாறே, 'அவசரமாய் ஒரு சவாரி கிடைச்சிருக்கு. ஸ்டேஷன் வரை போகணும். சாப்பாடு ஆக இன்னும் நேரமாகுமே! அதற்குள் வந்துவிடுகிறேன்' என்று கூறி விட்டுப் போய்விட்டான்.

சாப்பிடும்போது துன்னிராமும் லகன்சனுவாவும் ஒரு பாட்டம் அவனைத் திட்டித் தீர்த்தார்கள்… 'சின்ன புத்திக்காரன். அற்பப் பயல். ஒவ்வொரு காசுக்கும் கணக்குப் பார்க்கிறான்.' சாப்பிட்ட பிறகு லால் மோகரின் குழுவினர் கலைந்துவிட்டனர். துன்னிராமும், லகன்சனுவாவும் தங்கள் தங்கள் வண்டியை இழுத்துக் கொண்டு ஹீராமனிருந்த இடத்திற்கு வந்துவிட்டனர். வழியில் சற்றே நின்று ஹீராமன் சொன்னான். 'லால் மோகர், கொஞ்சம் என் தோள்பட்டையை முகர்ந்து பாரேன். கொஞ்சம் பாரு.'

முகர்ந்து பார்த்த லால்மோகரின் விழிகள் அப்படியே கிறங்கின. வாயிலிருந்து உருவற்ற தொனிதான் வெளி வந்தது… ஐயப்பா ஓ…ஓ…

'சும்மா கொஞ்சம் கையை வைத்தாளடா. அதுக்கே என்ன மணம் வீசுது பாரு'… என்றான் ஹீராமன்.

லால் மோகர் சட்டென அவன் கரத்தைப் பற்றிக் கொண்டான். 'நிசமாகவாடா சொல்லறே! அவள் உன் தோளிலே கையை வைத்தாளாடா?'…சில கணம் அவன் ஒன்றுமே பேசவில்லை. பிறகு. 'ஹீராமன் நாம்ப கட்டாயம் நாடகம் பார்க்கணுமடா. அப்புறம் இந்த மாதிரி சந்தர்ப்பம் கிடைக்கவே கிடைக்காதுடா.'

'நீயும் வர்றயா?'

நாற்சந்தி முனையின் தெரு விளக்கொளியில் பல் வரிசை பளபளக்க இளித்தான் லால் மோகர்.

வண்டியின் பக்கம் வந்ததும் வண்டிக்கருகே யாரோ ஒருவன் நின்று ஹீராபாயுடன் பேசிக்கொண்டிருந்ததைக் கண்டான். துணுக்கென்றது அவனுக்கு. துன்னிராமும், லகன்சனுவாவும் ஒரே சமயத்தில் கிசுகிசுத்தார்கள். 'ஹீராமன், எங்கேயடா போயிட்டே? ரொம்ப நேரமாய் தேடிக்கிட்டு இருக்காங்க அந்தக் கம்பெனி…'

மேற்கொண்டு எதையும் காதில் போட்டுக் கொள்ளாமல் விரைந்தான், ஹீராமன். பார்த்தால் சம்பா நகரத்தில் ஹீராபாயை வண்டியில் ஏற்றிவிட்டு பெட்டியைத் தூக்கிக்கொண்டு வைத்துவிட்டுப் போனுனே அதே ஆசாமிதான்.

'ஹீராமன் வந்து விட்டாயா? ரொம்ப நல்லதாய்ப் போயிற்று இங்கே வா, இந்தா உன் வாடகை. இதோ உனக்கு பக்ஷீஸ், இருபத்தி ஐந்தும் இருபத்தி ஐந்தும்··· ஐம்பது ரூபாய்.'

ஹீராமனுக்கு யாரோ தன்னை வானத்திலிருந்து உருட்டிவிட்டாற் போலிருந்தது. வேறு யார்? இந்த பெட்டி தூக்கி ஆசாமி தான். ஹூம்···பக்ஷீஸ்...என்று நாவின் நுனி வரை வந்த வார்த்தை வெளிவராமலேயே நின்று விட்டது. அவன் ஒன்றும் பேசாமல் மௌனமாய் நின்ருன்.

'இந்தா வாங்கிக்கொள் ஹீராமன்' என்ருள் ஹீராபாயி. 'நாளைக்குக் காலையில் ரௌதா கம்பெனிக்கு வா. பாஸ் தரச் சொல்லுகிறேன்...தெரியுதா? ஏன் சும்மா நிற்கிருய்.'

'அம்மா, ஏதோ இனும், பக்ஷீஸ் கொடுக்கிருங்க, வாங்கிக்கோ ஹீராமன்' என்ருன் லால்மோகர்.

ஹீராமன் அவனை முறைத்துப் பார்த்தான். 'பேசத் தெரியாத பயலே, உன்னை எவண்டா கேட்டது?' என்பது போலிருந்தது அவன் பார்வை.

துன்னிராம் தனக்குள் சொல்லிக்கொண்டது எல்லோர் காதிலும் விழுந்தது. ஹீராபாயின் காதிலும் விழுந்தது.

'வண்டி மாட்டை விட்டு விட்டு எந்த வண்டிக்காரன் நாடகம் பார்க்க வருவான்?'

ஹீராமன் பணத்தைப் பெற்றுக்கொண்டான். 'நல்லதுங்க, வேறென்ன சொல்லட்டும்?' அவன் சிரிக்க முயற்சித்தான் ··· அவன் ஏன் வருத்தப் படவேண்டும்?

கம்பெனிக்கார நடிகை, கம்பெனிக்குப் போகிறாள். இதில் அவனுக்கு என்ன வந்தது.?

அந்த ஆசாமி பெட்டியைத் தூக்கிக்கொண்டு நடந்தான். அவள் பின்னே சென்றாள். இரண்டடி நடந்தவள் நின்று, 'நான் வரட்டுமா அண்ணே?' என்றாள்.

'அண்ணே' என்ற அழைப்பைக் கேட்டதும் காளைகள் காதுகளை ஆட்டின.

யாவர் கண்களும் நோக்கின.

?...?...?

அண்ணன் மார்களே, தம்பி மார்களே, இன்றிரவு ரௌதா சங்கீத நாடகக் கம்பெனியின் மேடையில் குல்பதனைச் சந்தியுங்கள். குல்பதன், மதுராமோகன் கம்பெனியின் புகழ் பெற்ற நடிகை மிஸ் ஹீராதேவி, தன் நடிப்பினால் ஆயிரமாயிரம் உள்ளங்களைக் கொள்ளை கொள்கிறவள், இம் முறை நமது கம்பெனியின் நாடகத்தில் நடிக்கப் போகிறாள் என்பதே உங்கள் யாவருக்கும் பெரு மகிழ்ச்சி தரக்கூடிய செய்தியாகும். நினைவிருக்கட்டும். மறவாதீர்கள் குல்பதனை. இன்றிரவு காணத் தவறாதீர்கள். மிஸ் ஹீராதேவி தான் குல்பதன் குல்பதன்.

நாடகக் கம்பெனியின் இந்த விளம்பர முழக்கம் மறுநாள் காலை திருவிழாச் சந்தையின் மூலை முடுக்குகளிலெல்லாம் எதிரொலித்தது. மிஸ் ஹீராதேவி, லைலா குல்பதன்? திரைப்பட நடிகையும் ஹீரா தேவிக்கு முன் நிற்க முடியாது. அத்தகைய தனிச்சிறப்பும், நடிப்பும், அழகும் கொண்ட மிஸ் ஹீராதேவி...இப்படி ஹீராதேவியின் புகழ் பறைசாற்றப் பட்டது. கேட்டவர்களின் உள்ளம் பரபரத்தது. துடித்தது.

*கண்டேன் உன்னை, கொண்டேன் மையல்*
*காணத் தவிக்குது நெஞ்சம் என்ன சொல்ல!*

*காலமெல்லாம் நீ என்னைப் பார்த்திருக்க*
*கணந்தோறும் நான் உன்னைக் கண்டிருக்க....*

*என் தங்க மயிலே! ஏ...ஏ...ஏ...*
*டமர...டமர...டம்...டம்...டம்...*
*டமர...டமர...டம்...டம்...டம்...*

இந்தப் பாடலுடன் வாத்தியங்கள் முழங்கின.

கேட்டவர்கள் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் நகராவின் ஒலி துடிப்பேற்றியது.

லால் மோகர் மூச்சிறைக்க இறைக்க வண்டிப் பேட்டைக்கு ஓடி வந்தான். 'டேய்! ஹீராமன்! இங்கே உட்கார்ந்திருக்காயேடா! போய்ப் பாருடா. ஊரிலெல்லாம் அவபேரு எப்படிக் கொட்டி முழங்குது! நகரா, பாண்டு வாத்தியங்களோட ... அச்சடித்த காகிதத்தோட ... அவ பெயரு ... ஊரெல்லாம் கொட்டி முழங்குதடா ... எங்கும் இதே தான் பேச்சுடா...'

ஹீராமன் பதறியடித்துக் கொண்டு எழுந்தான்.

'துன்னி அண்ணே, நீங்க பேட்டையிலே இருங்க... நான் போயிட்டு வர்றேன்' என்றான் லகன் சுவ.

துன்னி பேச்சை யார் காதிலே போட்டுக்கிறார்கள்? மூவரும் உடனே கிளம்பி விட்டார்கள். நோட்டீஸ் கொடுக்கிற வாத்திய வண்டிக்குப் பின்னாலேயே மூவரும் நடந்தனர். ஒவ்வொரு தெரு முனையிலும் வண்டி நிற்கும். வாத்தியங்களின் முழக்கமும் பாட்டும் நின்றுவிடும். அப்புறம் மிஸ் ஹீரா தேவியின் நடிப்பும் அழகும், புகழும், நாடகமும் பறைசாற்றப்படும். மீண்டும் வண்டி மேலே நகரும்.

ஹீராமனுக்கு ஒரே ஆனந்தம். களிவெறிதான். ஹீரா பாயியைப் பற்றிச் சொல்லுகிற ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டுக் கேட்டு அப்படியே பொங்கிப் பூரித்துப் போனான். பெருமையும் மகிழ்ச்சியும் பிடிபடவேயில்லை.

லால்மோகரின் முதுகிலே தட்டிக் கெக்கலிக்கிறுன். பேஷ் ···சபாஷ்... இல்லையா லால் மோகர்!

'இப்ப சொல்லுடா! இப்பவாவது ஒத்துக்க. நீ நாடகம் பார்ப்பாயா மாட்டாயா?'' என்றுன் லால் மோகர்.

'காலையிலே இருந்தே. போடா, கம்பெனியிலே போய்ப் பார்த்துவிட்டு வாடா. போகிறதுக்கு முந்தி உன்னை வரச் சொல்லிவிட்டுப் போயிருக்காங்க···'ன்று சொல்லிச் சொல்லி லால்மோகர் களைச்சுப் போயிட்டான். ஹீராமன் அசையவில்லை. 'தூ··· யாருடா போவாங்க! கம்பெனிக்காரப் பொண்ணு. கம்பெனிக்குப் போயிடுச்சு. அவ்வளவுதான் இனி அவளுக்கும் எனக்கும் என்ன சம்மந்தம்··· உறவு··· போனல் கண்டுக்கக்கூட மாட்டா' என்று ஒரேயடியாய் மறுத்து விட்டான்.

மனதிற்குள் அவனுக்கு ரொம்ப தாங்கல்தான். ஒரே கோபம். ஆனுல் இப்பொ அவளைப் பற்றிய புகழைப் பறைசாற்றியதைக் கேட்டதுமே··· 'கட்டாயம் பார்க்கத் தான் வேண்டும். இல்லையடா லால்மோகர்' என்றுன் ஹீராமன்.

இருவரும் கலந்தாலோசித்துக் கொண்டு ரௌதா கம்பெனிக் கூடாரத்தை நோக்கி நடந்தனர். கூடாரத் தருகே சென்றதும் 'நீதான் விசாரித்து வரவேண்டும். அந்தப் பொறுப்பு உன் தலையில்தான்' என ஜாடையாய் லால் மோகரிடம் அறிவித்து விட்டான் ஹீராமன். லால் மோகருக்கு நகரத்து நாகரீக பாஷை கொஞ்சம் பேச வரும். கறுப்புக்கோட்டு அணிந்துகொண்டு நின்ற ஒரு வரை நெருங்கி 'பாபுஜி···வந்து' என்று ஆரம்பித்தான் லால் மோகர்.

'யாரது, எங்கே வந்தாய்?'' என்று முகத்தைச் சுளித்துக் கொண்டு சிடு சிடுத்தான் கறுப்புக் கோட்டுக்காரன்.

லால் மோகர் அரண்டு விட்டான். நகரத்து பாஷை

யெல்லாம் அக்கணமே மறந்துவிட்டது. 'வந்து···குல்··· குல்··· வந்து···ஹி···ரோ...' என்று உளறினான்.

ஹீராமன் சட்டென நிலைமையை சமாளித்தான். 'ஹீராதேவி எங்கே இருக்காங்கன்னு சொல்ல முடியுமா?' ஏது, தனக்கே இவ்வளவு பேச வந்துவிட்டதே என்று அவனுக்கு உள்ளூர வியப்பு.

கறுப்புக் கோட்டுக்காரனின் கண்கள் கோவைப் பழமாய்ச் சிவந்தன. எதிரே நின்ற நேபாளி சிப்பாயைக் கூப்பிட்டு··· 'இவங்களை யெல்லாம் ஏன் உள்ளே விட்டாய்?' என்று இரைந்தான்.

'ஹீராமன்.'

தேனினுமினிய குரல், எங்கிருந்து வருகிறது?

கூடாரத்திரையை விலக்கிக்கொண்டு ஹீராபாயி அழைத்தாள். 'இங்கே வாங்க உள்ளே···' என்றவள் காவலாளியை நோக்கி··· 'பகதூர், இவங்களை நன்றாய்ப் பார்த்துக்கொள். இவங்க எனக்குத் தெரிந்தவர்கள். இதுதான் ஹீராமன்' என்றாள்.

நேபாளக் காவலாளி ஹீராமனைப் பார்த்துச் சிரித்து வைத்தான். பின்னர் கறுப்புக் கோட்டுக்காரனிடம் சென்று 'இவங்க ஹீராபாயின் ஆசாமிகள். இவங்களை உள்ளே அனுப்பச் சொன்னாங்க' என்றான் தணிந்த குரலில்.

நேபாளி காவலாளிக்காக லால் மோகர் வெற்றிலைபாக்கு கொண்டு வந்திருந்தான். 'ஏதோ போட்டுக்கொண்டு போகட்டும்.'

கூடாரத்திலிருந்து வெளியே வந்த ஹீராமனின் முகம் மலர்ந்திருந்தது.

'உஸ்··· அப்பாடி. ஒன்றல்ல··· ஐந்து···ஐந்து பாஸ்··· ஐந்து எட்டணா டிக்கட். லால் மோகர், திருவிழாவிலே நீங்க இருக்கிற வரைக்கும் தினம் தினம் ராத்திரி நாடகம்

பார்க்க வரலாம் என்று சொன்னுங்கடா. நம்ப பேரி லெல்லாம் எத்தனை அன்பு! ''உன்னோடே இருக்காங்களே. உன் சினேகிதககாரங்க, அவுங்களுக்கெல்லாம் கூட பாஸ் வாங்கிக்கொண்டு போங்க''...ன்னு கொடுத்தாங்க ...டேய், கம்பெனிக்காரிங்க விஷயமே அலாதியானதடா ...இல்லையா? சொல்லு.'

வியப்பால் லால்மோகருக்கு மூச்சே திணறியது. அந்தச் சிவப்புக் காகிதத்துண்டுகளைக் கையால் தடவித் தடவிப் பார்த்தான். 'பாஸ்...ஐந்து பாஸ்! ஹீராமன், என்னடா சொல்லட்டும்?... ஆமாம், ஐந்து பாஸை வைத்துக் கொண்டு என்ன செய்ய? நாம் நாலு பேரு தானே இருக்கோம். பலட்தாஸ்தான் போனவன் இன்னும் திரும்பிவரவேயில்லையே.'

'அவன் கிடக்கிருன்...பயல்...விட்டுத்தள்ளு. கொடுத்து வைக்காத பயல்...லால்மோகர்...ஒரு விஷயம். நாம் எல்லோரும் சாமி பேராலே, இது பத்தி ஊரிலே பேச்சு மூச்சுகாட்டறதில்லை...ன்று சத்தியம் பண்ணனும் தெரியுமா?'

'எந்த அயோக்கியப் பயல் ஊருலே போய் சொல்லு வாங்கறேன்.' என்ருன் ஆவேசத்துடன். 'பயல் பல்டா ஏதாவது வாலையாட்டிஞ அவ்வளவுதான். அடுத்த தரம் கூட கூட்டிக்கொண்டு வர மாட்டேன்.'

ஹீராமன் இன்று தன் பணப்பையை ஹீராபாயிடம் கொடுத்துவிட்டு வந்திருக்கிருன். திருவிழா சமயத்திலே பத்திரத்தைப் பற்றி என்ன சொல்லமுடியும்? எத்தனையோ முடிச்சுமாறிங்க, ஜேபடிக் காரங்க சுத்திக் கிட்டே திரிவாங்க. கூட இருப்பவங்களைப் பத்தி மட்டும் என்ன நிச்சயம்?

ஹீராவும் அதை வைத்துக்கொள்ள இசைந்தாள். ஹீராமனுடைய அந்தக் கறுப்புத் துணிப்பையைத் தன் தோல் பெட்டிக்குள் வைத்துக்கொண்டாள். அந்தத்

தோல் பெட்டிக்கு மேலேயும் துணி உறை. உள்ளே ஜிலு ஜிலுன்னு சில்க் துணி போட்டிருந்தது. ஹீராமனின் கோபதாபமெல்லாம் பறந்தோடி விட்டது.

லால் மோகரும், துன்னிராமனும் ஹீராமனின் புத்தி சாலித்தனத்தைப் பாராட்டினுர்கள். அவனுடைய பாக்கி யத்தைப் புகழ்ந்தார்கள். அடிக்கடி தாழ்ந்த குரலில் அவ னுடைய அண்ணனையும் அண்ணியையும் திட்டினுர்கள்.

லச்சனுவாவிற்கு சுரத்தேயில்லை. முகம் தொங்கிக் கிடந்தது. பாண்டு வாத்திய முழக்கத்தோடு அவனும் சுற்றிக்கொண்டே இருந்துவிட்டு, பொழுது சாய கொஞ்ச நேரம் இருக்கும்பொழுது தான் திரும்பி வந்தான். எஜ மானனுக்கே உரித்தான அதிகாரத்துடன் லால்மோகர் திட்டினுன். 'சோதாப் பயலே, எங்கேயடா போனுய்?'

அடுப்பில் பொங்கலை வைத்துக் கிளறிக்கொண்டே 'முதலில் இந்த விஷயம் முடிவாகணும், வண்டிப்பேட் டையில் யார் காவல் இருக்கப்போகிறுர்கள்?' என்று கேட்டான் துன்னிராம்.

'யார் இருப்பது? பயல் லச்சனுவா இருக்கானல்ல...' என்று லால்மோகர் சொன்னதும் லக்சனுவாவிற்கு அழு கையே வந்து விட்டது...'எசமான், கையெடுத்துக் கும் படறேன். ஒரே ஒரு காட்சி. ஒரு தரம் பார்த்து விட்டு வந்துடறேனுங்க'...எனக் கெஞ்சினுன்.

'சரி, சரி... ஒரே ஒரு காட்சியென்ன! ஒரு மணி நேரம் வேணுமின்னுலும் பாரேன். நான் வந்து வண்டிகளைப் பார்த்துக்கிறேன்' என்றுன் ஹீராமன் பெருந்தன்மை யுடன்.

நௌடங்கி நாடகம் தொடங்க இரண்டு மணி நேரம் இருக்கும்போதே டமாரம் கொட்டவாரம்பித்து விட்டார் கள். ஈசல் மாதிரி சனங்கள் வந்து மொய்க்கத் துவங்கி விட்டனர். டிக்கட் கொடுக்குமிடத்தில் ஒரே கூட்டத் தைக் கண்டதும் ஹீராமனுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

'லால்மோகர், பார்த்தாயா? சனங்க எப்படி மோதி அடித்துக்கொண்டு விழருங்க! அங்கே பாரு' என்ருன் பெருமையுடன்.

'ஹீராமன் அண்ணே!'

'யாரு, பலட்தாஸா? எந்த ஊர் சவாரி ஏத்திக்கிட்டு வந்தாப்பலே?' யாரோ அன்னியனை விசாரிப்பதுபோல் விசாரித்தான் லால்மோகர்.

பலட்தாஸ் கையைப் பிசைந்து கொண்டு நின்ருன். 'அறியாம தவறு செய்துவிட்டேன். மன்னிச்சுடுங்க. நீங்களெல்லாம் என்ன தண்டனை கொடுத்தாலும் ஏத்துக்கிறேன். உண்மையைச் சொல்லுகிறேன்…சாட்சாத் சீதாதேவி மாதிரி.'

வாத்தியங்களின் தாள கதியில் ஹீராமனின் உள்ளம் உவகையால் பூரித்து நின்றது. 'பல்டா, இதோ பாருடா, யாரோ ஊரார் வீட்டுப் பொம்பளை மாதிரி நினைச்சுக் காதே. உனக்குக் கூட பாஸ் கொடுத்திருக்காங்க. இந்தா எடுத்துக்க உன் டிக்கட்டை. நாடகம் பாரு' என்ருன்.

'ஆனல் ஒரே ஒரு நிபந்தனை' என்ருன் லால்மோகர். 'நடு நடுவே லச்சனுவாவிற்கும் நாடகம் பார்க்க சான்ஸ் தரணும்.'

பலட்தாஸுக்கு எதுவும் சொல்லவேண்டிய அவசியமிருக்கவில்லை. வெளியே லச்சனுவாவுடன் இப்பொழுது தான் பேசிவிட்டு வந்திருக்கிருன்.

லால்மோகர் இரண்டாவது நிபந்தனையை முன்வைத்தான். 'கிராமத்துக்குப் போன பிறகு இந்த விஷயம் யார் காதுக்காவது எட்டியதோ… அப்புறம்…'

'ராம் ராம்' நாக்கைப் பல்லால் கடித்துக்கொண்டான் பலட்தாஸ்.

எட்டணு டிக்கட் பகுதியை பலட்தாஸ் தான் காண்பித்தான்.

கதவருகில் காவலாளி அவர்களை ஏற இறங்கப் பார்த்தான். 'இந்தப் பாஸெல்லாம் உங்களுக்கு எங்கேயிருந்து கிடைத்தது?' என்ருன் அதட்டும் குரலில்.

லால்மோகரின் மணிப்பிரவாள பாஷையைக் கேட்க வேண்டுமே இப்பொழுது? அவனது சீற்றத்தைக் கண்ட காவலாளி நடுநடுங்கிவிட்டான்.

'எங்கிருந்தய்யா கிடைக்கும். போய் உங்க கம்பெனிக் காரங்ககிட்ட காட்டி, கேட்டுக்கொண்டு வாய்யா. நாலு மட்டுமில்லே. இதோ பாரு. இன்னென்று இருக்கு.' என ஐந்தாவது பாஸையும் எடுத்து நீட்டினுன் லால்மோகர்.

ஒரு ரூபாய் டிக்கட் வாசலிலே அந்த நேபாளி காவலாளி நின்று கொண்டிருந்தான். 'ஏ, பாராக்காரரே, காலையிலேதான் பார்த்தீங்களே. அதுக்குள்ளே மறந்து போச்சா?' என உரக்கக் கூவினுன்.

'ஹீராபாயின் ஆட்களப்பா இவங்களெல்லாம். உள்ளே விடு. கையிலே பாஸ் இருக்கும்போது எதுக்காக நிறுத்தறே' என்று இரைந்தான் அந்த நேபாளிக் காவலாளி.

எட்டணு வகுப்பு.

மூவரும் கூடாரத்துக்குள்ளே இப்பொழுதுதான் முதன் முதலாகச் சென்று பார்க்கிருர்கள். எதிரே நாற்காலி, பெஞ்சி வகுப்புகள் இருந்தன. திரையிலே இராமர் வனம் செல்லும் காட்சி தீட்டியிருந்தது. பலட்தாஸுக்குத் தெரிந்துவிட்டது. உடனே திரையிலிருந்த இராமன், சீதை, இளையவர் லக்ஷ்மணனைக் கைகூப்பி வணங்கி நின்ருன். 'ஜய்...சீதாராம்...ஜி...ஜய்'... பலட்தாஸின் விழிகள் நீரால் நிறைந்தன.

மூவரும் வரிசையாக அமர்ந்தனர். லால்மோகர் தன் அக்கம் பக்கத்திலிருந்தவர்களைப் பரிச்சயப்படுத்திக் கொண்டான்.

'ஆட்டக்காரங்க எல்லாம் திரைக்குள்ளே இருக்கிருங்க.

கூட்டம் சேருகிறதுக்குக் காத்துக்கிட்டு இருக்காங்க' என்ருன் லால்மோகர்.

பலட்தாஸ் நன்ருய் டோலக் வாசிப்பான். அதனுல் இசையின் தாளத்திற்கேற்பத் தலையை ஆட்டுகிருன். தீப்பெட்டியின் மீது விரலால் தாளம் போடுகிருன். பீடிப் பரிவர்த்தனையில் ஹீராமனுக்கும் இரண்டொரு புதிய அறிமுகம் ஏற்படுகிறது. லால்மோகருக்குப் பரிச்சிய மானவன், 'இன்னும் ஆட்டம் ஆரம்பிக்க நிறைய நேரம் இருக்கு. அதற்குள் ஒரு தூக்கம் போடறேன்' எனப் போர்வையை நன்ருய் இழுத்துப் போர்த்திக் கொண்டான்.

எல்லா வகுப்பையும் விட எட்டணு வகுப்புதான் மேல். எல்லோரும் பின்னுல். நல்ல உயரமான இடம். தரை யிலே வைக்கோலைப் பரப்பி இருக்கிருர்கள். நல்ல இதமான சூடு. ஹி... ஹி... நாற்காலி, பெஞ்சியிலே உட்கார்ந்திருக்கிறவங்க பாடுதான் திண்டாட்டம். இந் தக் குளிரிலே நாடகம் பார்த்தா சும்மா சும்மா தேநீர் குடிக்கப் போகணும்' என ஓடியது ஹீராமனின் சிந்தனை.

போர்வை ஆசாமி, தன் பக்கத்திலிருந்தவனிடம் 'ஆட்டம் ஆரம்பித்ததும் என்னை எழுப்பிவிடப்பா...' என்றவன், 'வேண்டாம் வேண்டாம். அந்த ஹிரியா வந்தவுடன் எழுப்பிவிடு' என்ருன்.

ஹீராமனுக்குச் சுரீர் என்று தைத்தது இது. 'ஹிரியாவாம். ஹிரியா. மகாத் தலைக் கிறுக்குப்பிடிச்ச ஆசாமியாய் இருப்பான் போலிருக்கிறது.' ஹீராமன் லால்மோகருடன் கண்ணுல் பேசினுன். 'இந்த மனித னுடன் பேசவேண்டிய அவசியமில்லை.'

கணகணவென்ற ஒலி. அதிர்வெடியுடன் திரை தூக்கப்பட்டது. ஹய்யா... ஹய்... முதல் காட்சியிலேயே ஹீராபாயி மேடைக்கு வந்துவிட்டாள். கூடாரம் நிரம்பி

வழிந்தது. துளி இடமில்லை. வியப்பினுல் வாயும் கண்களும் விரிய ஹீராமன் மேடையையே பார்த்துக் கொண்டிருந்தான். ஏன்தான் லால்மோகருக்கு இப்படிக் காரணமில்லாமல் சிரிப்பு வருகிறதோ. ஹீராபாயின் பாட்டுக்கு, அடிக்கு அடி சிரிக்கிருனே அர்த்தமில்லாமல்.

குல்பதன் பேகம் அரியணையில் வீற்றிருக்கிருள். தர்பார் கூடியிருக்கிறது.

மிகச் சிறந்த அரியாசனம் செய்து கொண்டு வருபவர்களுக்குக் கேட்ட வெகுமதி அளிப்பதாக சபையில் அறிவிக்கிருள் அவள். 'யாரேனும் அப்படிப் பட்ட கலைஞர்கள் இருக்கிருர்களா? இருந்தால் வரட்டும் என் முன்னுல். கொணர்ந்து தரட்டும் அரியாசனத்தை.' நகரா முழங்குகிறது. இதன் பின் குல்பதன் நடனமாடுகிருள். பாடுகிருள். அடடா, என்ன குரல்! என்ன ஒயில்! என்ன ஆட்டம்!

தொடர்ந்து பலரும் பேசுவது ஹீராமனின் காதில் விழுகின்றது.

'என்னமாய் ஆடுகிருளடா.' இது ஒரு ரசிகன்.

'பாட்டு மட்டும் என்ன, குறைவா?'

'பாக்கு வெத்திலை, பீடி சுருட்டு ஒன்றும் ஹீராபாயி தொடமாட்டாளாம்.'

'ஆமாண்டா! ரொம்ப நேர்மையான தேவடியாள்.'

'தேவடியாளா? யார் சொன்னு? பல்லைப் பாரு! சாயம் இருக்கா பாரு.'

'பற்பொடி போட்டுப் பல்லைத் தேய்ச்சிருப்பா.'

'இல்லவே யில்லை.'

'யாருடா அவன் கண்டபடி பேசறவன்? கம்பெனி நடிகையைத் தேவடியான்னு சொன்னவன்?'

'நான் சொன்னு உனக்கென்னடா வந்தது?'

'யாரடா அவன் தேவடியா மகன்?'

'உதையுங்கடா இந்தப் பயலே, ஊம்... கொடுங்கடா... நாலு உதை.'

இந்தக் கூச்சலுக்கும் குழப்பத்திற்கு மிடையே ஹீராமனின் குரல் கூடாரத்தையே பிய்த்துக்கொண்டு ஒலித்தது. 'வாங்கடா, இங்கே பயலுகளா? அப்படியே கழுத்தை முறிக்கிறேன் பாரு.'

லால்மோகர், தார்க்கோல் சாட்டையை எடுத்து எதிரே இருந்தவர்களைப் படபடவென அடித்து விளாசினான். பலட்தாஸ் ஒருவனைக் கீழே தள்ளி அவன் நெஞ்சில் உட்கார்ந்திருக்கிறான். 'அயோக்கியப் பயலே, சீதா தேவி மாதிரி இருக்கிற அவங்களை...தேவடியான்னு சொல்றயா?'....எனச் செம்மையாய் அடித்தான்.

ஆரம்பித்திலிருந்தே துன்னிராம் ஒன்றும் பேசவில்லை. குழப்பம் மூண்டதும் மெல்ல வெளியே நழுவி ஓடி விட்டான்.

கறுப்புக் கோட்டுக்கார மானேஜரும், நேபாளி காவலாளியும் ஓடோடியும் வந்தனர். போலீஸ் இன்ஸ்பெக்டர் தடிப் பிரயோகம் செய்யத் துவங்கிவிட்டார். நாலைந்து அடி பட்டதுமே லால்மோகர் துடித்துப் போய்விட்டான். மணிப்பிரவாள பாஷை மடைதிறந்து பெருகியது. 'இன்ஸ்பெக்டர் சார், என்னை அடிக்கிறீங்களா. நல்லா அடியுங்க, பரவாயில்லை. அடியுங்க. ஆனால் இந்தப் பாஸைப் பாருங்க. இந்தாங்க, ஜேபியிலே இன்னொரு பாஸ் இருக்கு... அதையும் பாருங்கள், டிக்கட் இல்லை... பாஸ்... நீங்களே சொல்லுங்க. எங்க முன்னாலே, எங்க காது கேட்க, அந்தக் கம்பெனிக்கார நடிகையை ஒருத்தன் கண்டபடி பேசினா, நாங்க சும்மா இருக்க முடியுங்களா? சொல்லுங்க.'

கம்பெனி மானேஜர் உடனே விஷயத்தைப் புரிந்து கொண்டுவிட்டார். இன்ஸ்பெக்டரிடம் விஷயத்தை எடுத்துச் சொல்லி சமாதானப்படுத்தினார். 'ஐயா,

எனக்கு இப்ப எல்லாம் புரிஞ்சு போச்சு. இவங்க ஹீரா பாயின் ஆளுங்க, விட்டுடுங்க. மதுரமோகன் கம்பெனிக் காரன் தான் இந்த கலாட்டாவெல்லாம் செய்திருக்கிருன். ஆளுங்களே அனுப்பி நாடகம் நடக்கிற சமயத்திலே கலாட்டா ரகளை செய்து கம்பெனிக்குக் கெட்ட பெயரை ஏற்படுத்தத்தான் இந்த திட்டம். பாவம், ஹீராபாயி··· ரொம்ப ஆபத்தான நிலைமை··· இதைப்பற்றி உங்ககிட்ட முன்னரே சொல்லியிருக்கிறேன்··· ஹீராபாயி.'

ஹீராபாயின் பெயரைக் கேட்டதுமே இன்ஸ்பெக்டர் மூவரையும் விட்டுவிட்டார். ஆனல் தார்க்கோல் சாட்டையை மட்டும் பிடுங்கிக்கொண்டு விட்டார். மானேஜர் மூன்று பேர்களையும் முதல் வகுப்பில் ஒரு ரூபாய் ஆசனத் திற்கு அழைத்துப் போய் அமர்த்திஞர்.

'இங்கே உட்கார்ந்து பாருங்கள். நான் வெற்றிலைபாக்கு அனுப்பி வைக்கிறேன்' என்ருர் உபசாரமாக.

கூடாரத்தில் அமைதி பரவியது. ஹீராபாய் மேடையில் தோன்றிஞள்.

டம்··· டம்··· டமர··· டமர··· டர் என முரசு முழங்கியது. வாத்தியங்கள் ஒலித்தன.

சற்று நேரத்திற்குப் பின், மூவருக்கும் ஒரே சமயத்தில் துன்னிராமனின் நினைவு வந்தது. 'அடேய் துன்னிராம் எங்கேயடா?'

'ஏய் துன்னிராம்! ஏய் துன்னிராம்!'

கூடாரத்திற்கு வெளியேயிருந்து, லச்சுவாவின் குரல் ஒலித்தது. 'எசமான் எசமான்! எங்கே இருக்கீங்க!'

லால் மோகரின் உரத்த குரல் யாவரின் கவனத்தையும் கவர்ந்தது.

'இங்கே இருக்கிரும். முதல் வகுப்பு··· ஒரு ரூபாய் டிக்கட் வகுப்பிற்கு வாடா··· வா··· இப்படி!'

யாவருடைய கண்களும் லால்மோகர்மீது நிலைத்தன. சிலர் திரும்பிப் பார்த்தனர். அந்த நேபாளி காவலாளி

லச்சனுவாவை அவர்களிடம் அழைத்து வந்தான். லால் மோகர் ஜேபிலிருந்து இன்ெனாரு பாஸை எடுத்து நீட்டினான்.

லச்சனுவா உள்ளே வந்ததுமே... 'எசமான்! யாருங்க அந்தப் பயல்? காட்டுங்க. எவன் பேசினான் கண்டபடி? ஒரு கண் பார்த்து வச்சுக்கிறேன். சும்மா காட்டுங்க போதும்' என்றான் படபடப்பாக.

பார்வையாளர்கள் வாட்ட சாட்டமாய் பயில்வான் போல் நின்ற லச்சனுவாவைப் பார்த்தனர். அகன்ற மார்பு, திரண்ட புஜங்கள். இந்தக் குளிரில் மேலே துணியே இல்லை. திறந்த உடம்பு... அப்பாடி... ஆசாமிகள்... சீடப் பிள்ளைகளோடு தயாராகத் தான் வந்திருக்காங்க போலிருக்கு. லால்மோகர், லச்சனுவாவைச் சமாதானப் படுத்தி தன்னருகே அமர்த்திக் கொண்டான்.

நாடகத்திலே என்ன பார்த்தீங்கன்னு அந்த நாலு பேரிடமும் கேட்டால் பதில் வராது. கதையா? கதை யாருக்கு நினைவிருக்கும்? ஹீராமனைப் பொறுத்த வரை யில் நாடக ஆரம்பத்திலிருந்தே ஹீராபாயி, தன்னையே இமையாது நோக்கியதாக, தன்னைப் பார்த்தே ஆடி னாள் பாடினாள் என்ற நினைப்பு. லால்மோகனுக்கு ஹீரா பாயி தன்னைப் பார்த்துக் கொண்டிருந்ததாக எண்ணம். ஹீராமனைவிட அதிகம் 'பவர்' உள்ளவன் லால்மோகர் என்பது அவளுக்குத் தெரிந்துவிட்டதாம். பலட்தாஸுக் குக் கொஞ்சம் கதை புரிந்திருக்கிறது. கதை வேறென்ன இருக்க முடியும்? அதே, ராமர், சீதை, ராவணன், லக்ஷ்ம ணன் கதை தானே? சீதா தேவியை ராம்ஜிகிட்டே யிருந்து தூக்கிக்கிட்டுப் போக ராவணன் விதவிதமா வேடம் கட்டிக்கிட்டு வர்றான். ராம்ஜி, சீதாதேவிங்க கூட உருவத்தை மாத்திக்கிறாங்க. அந்த அரியாசனத் தைப் பண்ணிக்கொண்டு வர்றானே அந்தத் தோட்டக்

காரன் பிள்ளை. அவன் யாரு? நம்ப ராம்ஜீதான். குல்ப தன்தான் சீதாதேவி. தோட்டக்காரப் பிள்ளையின் சிநேகிதக்காரன் தான் தம்பி லட்சுமணன். சுல்தான் தான் ராவணன்...

துன்னி ராமுக்கு நல்ல காய்ச்சல். லச்சனுவாவிற்கு நாடகத்திலேயே அந்த கோமாளிப் பாத்திரம் தான் ரொம்பப் பிடித்தது. அந்தக் கோமாளியுடன் சிநேகம் செய்துகொள்ள ரொம்ப ஆசைப்பட்டான்.

ஹீராமனுக்கு நாடகத்திலே வர ஒரு பாட்டிலே ஒரே ஒரு அடி தான் நினைவிலே இருந்தது.

'மாரே கயே குல்ஃபாம்.'

'யார் அந்த குல்ஃபாம்?' ஹீராபாயி கண்ணீர் பெருக் கியவாறே அஜி...ஹாம்...மாரே கயே குல்ஃபாம்...ன்று பாடுறளே!...பாவம் குல்ஃபாம்.'

நாடகம் முடிந்த பின் மூவருடைய சாட்டைக் கம்பும் திருப்பித் தரப்பட்டது.

'தடிக் கம்பையெல்லாம் எடுத்துக் கிட்டா நாடகம் பார்க்க வர்றது?' எனக் கேட்டான் போலீஸ்காரன்.

மறு நாள் திருவிழா சந்தை முழுவதும் இதே பேச்சுத் தான். மதுர மோகன் கம்பெனியிலிருந்து ஹீராபாய் இங்கே ஓடி வந்திருக்கிறுள். அதனுலே தான் இந்தத் தடவை மதுரமோகன் கம்பெனி இங்கே வரவில்லை... குண்டர்களை அனுப்பியிருக்காங்களாம். இந்த ஹீராபாயி மட்டும் லேசுபட்டவள் இல்லை. சரியான ஆட்களாக, பத்து பன்னிரண்டு போர்வழிகளைத் தன் கையிலே வைத் திருக்கிறுளாம். யாராவது ஒருத்தன் பேச்சு, மூச்சுக் காட்ட முடியுமா? 'என் ஆருயிரே'ன்று சொன்னுக்கூடப் போதும் எலும்பு நொறுங்கி விடும்! எவனுக்குத் துணிச் சல் இருக்கு?' இப்படிப் பல பேச்சு.

பத்து நாட்கள்—இரவும் பகலுமாய் பத்து நாட்கள் கழிந்தன.

பகல் முழுவதும் ஹீராமன் வண்டி ஓட்டினுன். அந்தி மாலையாகியதுமே பாண்டு வாத்தியங்கள் காதிலே ஒலிக்கத் துவங்கிவிடும். டமாரத்தின் ஒலி கேட்டதும் ஹீராபாயின் குரல் ஒலி கேட்கும். 'அண்ணே! ஹீராமன்! குருஜி! உஸ்தாத்! நாடகம் பார்க்க வாங்க.' நாள் முழுவதும் உள்ளத்தின் ஒரு மூலையில் இக்குரலும, வாத்தியங்களின் இன்னிசையும் டமாரமும் ஒலித்துக்கொண்டு தானிருந்தது. ஹார்மோனியம், டோலக், டமாரம், ஹீராபாயின் காற்சதங்கையில் கல் கல்லென்ற ஓசைக்கேற்ப அவன் இயங்கினுன். நிற்கும்போதும் நடக்கும்போதும், உட்காரும் போதும். இதே இசையும். தாளமும் தான் அவனை ஆட்டுவித்தன.

நாடகக் கம்பெனியின் மானேஜரிலிருந்து திரை இழுக்கிறவன் வரை எல்லோருக்கும் அவனைத் தெரியும். அவன் ஹீராபாயின் ஆசாமி.

ஒவ்வொரு நாளும் நாடகம் துவங்கும் முன்னர் பலட்தாஸ் மேடையைப் பார்த்து கரம் குவித்து வணங்கத் தவற மாட்டான். லால்மோகர் ஒரு நாள் தனது மணிப் பிரவாள பாஷைப் புலமையை ஹீராபாயிடம் காட்டியிருக்கிருன். ஹீராபாயி அவனைத் தெரிந்ததாகவே காட்டிக்கொள்ளவில்லை. அன்றிலிருந்து அவனது உற்சாகம் குறைந்துதானிருக்கிறது. லச்சனுவா, அவனிடமிருந்து மெல்ல நழுவி விட்டான். இப்பொழுது அவனுக்கு நாடகக் கம்பெனியில்தான் வேலை. கோமாளியுடன் அவனுடைய நண்பனுகி விட்டான். நாள் முழுவதும் தண்ணீர் இறைக்கிருன். துணிகளைத் துவைத்து உலர்த்துகிருன். ரொம்ப சந்தோஷமாக இருக்கிருன். கிராமத்திலே என்ன இருக்கிறது? என்கிருன். நோய் கண்டதால் துன்னிராம் ஊருக்குத் திரும்பிப் போய்விட்டான்.

இன்று காலையிலிருந்து ஹீராமன் ஸ்டேஷனுக்கு மூன்று நடை வந்துவிட்டான். இன்று ஏனே அண்ணியின்

நினைவு அடிக்கடி வருகிறது. காய்ச்சல் வேகத்தில் துன்னி ராம் ஏதாவது உளறி வைத்து விடுவானோ என்னவோ! இங்கேயே '...குல்பதன்! அரியாசனம், அப்படி...இப்படி ...'ன்று பேத்தத் தொடங்கி விட்டானே!

லச்சனுவா...மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதக்கிறான். நாளெல்லாம் ஹீராபாயியைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். அதிர்ஷ்டக்காரப் பயல். நேத்துப் பார்த்த போது '...எசமான்! உங்க தயவாலே ரொம்ப சந்தோஷமா இருக்கிறேன். ஹீராபாயி அம்மாவின் புடவையைத் தோய்த்த தண்ணி இருக்கே. அது கூட மணக்குதுங்க. என்னா வாசம் வீசுது. என் துண்டை அதிலே நனைச்சு வைக்கிறேன். பாருங்க! என்ன வாசம்: கம கமன்னு' என்றான்.

தினம் இரவு நாடகம் பார்க்கும்போது எத்தனையோ பேச்சு காதிலே விழத்தான் விழறது. ஒவ்வொருத்தன் ஹீராபாயைத் 'தேவடியாள்'ன்று சொல்லத்தான் சொல்லுகிறான். என்ன செய்வது? எத்தனை பேருடன் சண்டை போடுவது? ரகளை செய்வது? எதைப் பற்றியும் தெரியாம, கண்ணாலே பார்க்காமே எதையோ பேசறாங்க. சொல்லுங்க. ஆத்திரப்பட்டு என்ன பயன்? ராஜாவாக இருந்தாலென்ன? அவன் முதுகுக்குப் பின்னாலே சனங்க கண்டபடி திட்டத்தான் திட்டறான். இன்று ஹீராபாயைப் பார்த்துப் பேசுவது என்று ஹீராமன் தனக்குள் முடிவு செய்துகொண்டான்.

'இதோ பாருங்க, நாடகக் கம்பெனியிலே நீங்க வேலை பார்க்கிறதால் கண்டவன் கண்டபடி பேசறான். சர்க்கஸ் கம்பெனியிலே புலி கிட்ட வர்றதுக்கு எவனுக்காவது தைரியம் உண்டா? நீங்க பேசாம சர்க்கஸ் கம்பெனியிலே சேர்ந்திடுங்க...' என்று சொல்லவேண்டும். அங்கே பத்திரமாய் இருக்கலாம்...

ஏதோ வண்டி வராப்பலே இருக்கே! எங்கிருந்து வர்றது?

'ஹீராபாயி அம்மா உன்னைத் தேடிக்கிட்டு இருக்காங்க. ஸ்டேஷனிலே இருக்காங்க. ஊருக்குப் போருங்க' ஒரே மூச்சில் செய்தியைச் சொல்லி முடித்தாகி விட்டது.

லால்மோகரின் வண்டியில்தான் ஸ்டேஷனுக்கு வந்திருக்கிருர்களாம்.

'போகிருங்களா? எங்கே ஊருக்கா?'

ஹீராமன் வண்டியை அவிழ்த்து விட்டான். மண்டிக் காவலாளியிடம் 'அண்ணே, கொஞ்சம் ஒரு கண் பார்த்துக்கோ. இதோ வர்றேன்.' எனக் கிளம்பினன் ஹீராமன்.

'உஸ்தாத்.'

குரல் வந்த திசையில் பெண் பிரயாணிகள் தங்கும் அறையின் கதவருகே முகத்திரையால் தன்னை மறைத்துக்கொண்டு நின்ருள் ஹீராபாயி. ஹீராமனைக் கண்டதும் அவள் பையை நீட்டியவாறே...'இந்தாங்க, நல்ல வேளை, உங்களைப் பார்க்க முடிந்தது. சந்திப்போங்கிற நம்பிக்கையே எனக்கில்லை. பயந்தே போனேன். நான் ஊருக்குப் போகிறேன் குருஜி.'

அன்று பெட்டியைத் தூக்கிக்கொண்டு வந்த ஆள் இன்று கோட்டு, பாண்ட் எல்லாம் அணிந்துகொண்டு பெரிய மனிதனுகி விட்டிருந்தான். பெரிய மனிதனைப் போல் கூலிகளை அதிகாரம் செய்துகொண்டிருந்தான்.

'சாமான்களைப் பெண்கள் வண்டியில் ஏற்றவேண்டும் புரிந்ததா?'

ஹீராமன் பையைப் பெற்றுக்கொண்டு மௌனமாய் நின்றன். ஹீராபாயி தன் ரவிக்கைக்குள்ளே பையை வைத்துக்கொண்டிருக்கிருள். புருக் குஞ்சு போல் ஒரு வெதுப்பு பையில்.

'வண்டி வந்து விட்டது'...பெட்டி தூக்கி ஆசாமி

சற்றே கடுமையுடன் ஹீராபாயிடம் பேசினான். முகம் உர் ரென்றிருந்தது. 'இவனிடம் இத்தனை என்ன பேச்சு?' என்பது போல் இருந்தது அந்த பாவம்.

ஹீராபாயி கலங்கிப் போயிருந்தாள். 'ஹீராமன்! இப்படி வா, உள்ளே, நான் திரும்பவும் மதுராமோகன் கம்பெனிக்கே போகிறேன். அது எங்கள் ஊர்ப் பக்கத்துக் கம்பெனி...பழகிய இடம். பனைலி திருவிழாவிற்கு வருவாயல்லவா? கம்பெனி அங்கு தான் முகாம் போட்டிருக்கிறது' என்றாள் ஹீராபாயி. அவன் தோளில் தன் கையை வைத்தாள். இந்த முறை வலது தோளில். பின்னர் தன் பணப்பையிலிருந்து பணத்தை எடுத்தவாறே. 'நல்ல கம்பளிப் போர்வையாக வாங்கிக்கொள்.'

இத்தனை நேரத்திற்குப் பின் இப்பொழுது தான் ஹீராமனால் பேச முடிந்தது. 'இஸ்ஸ்...எப்பொழுது பார்த்தாலும் பணம் பணந்தானா?...பணத்தை நீங்களே வைச்சுக்கங்க...எனக்கு எதுக்கு போர்வை?'

ஹீராபாயின் கரம் அப்படியே நின்று விட்டது. ஹீராமனின் முகத்தை அவள் விழிகள் உருடுவின...'உன் மனசு ரொம்ப நொந்துபோயிருக்கு...இல்லையா?...மீதா... அந்த தோணிக்காரி மஹுவையை...வியாபாரி விலைக்கு வாங்கி விட்டானல்ல. அப்படித்தான் நானும்...' பேச முடியாமல் அவள் குரல் தழுதழுத்தது.

பெட்டி தூக்கி ஆசாமியின் குரல் வெளியே இருந்து கேட்டது.

'வண்டி வந்து விட்டது.'

ஹீராமன் அறையை விட்டு வெளியே வந்தான். நாடக மேடை கோமாளி மாதிரி முகத்தை அஷ்டகோணலாக வைத்துக்கொண்டு நின்ற பெட்டி தூக்கி சிடுசிடுத்தான், 'இங்கு நிற்காதே. பிளாட்பாரம் டிக்கட் இல்லாம இங்கே நின்றால் பிடிச்சு உள்ளே போட்டு விடுவான். மூணு மாசம் கம்பி எண்ணணும்...ஓடு...ஊம்...போ.'

ஹீராமன் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு வெளியே வந்து நின்றான்.

ஹீராபாயி...அவன் நின்றிருந்த இடத்திற்கு நேர் பெட்டியில் வந்து ஏறிக்கொண்டாள்.

இஸ்...ஸ்...வண்டியில் உட்கார்ந்த பின்னும் கூட அவனையே வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருக்கிறாளே!...தன் பின்னால் நிற்கும் லால் மோகரின் பால் எரிச்சலாக வருகிறது. 'சனியன் பிடித்தவன். எப்பொ பார். பின்னாலேயே ... பின்னாலேயே ... எல்லாத்துக்கும் பங்குக்கு வந்து விடுகிறான்...'

கார்டு விசில் உதினார்...ஹீராமனுக்குத் தன் இதயத்திலிருந்து மீறிட்டெழும் ஓலம் அந்த விசிலின் ஒலியுடன் கலந்து வானமெங்கும் விரவி நிற்பதுபோல் தோன்றியது.

குக்கூ...கூ...கூ...இஸ்...ஸ்...

வண்டி அசைகின்றது. இதோ கிளம்பி விட்டது. ஹீராமன் தனது வலது கால் கட்டை விரலை, இடது காலால் மிதித்து அழுத்தி, தன் இதயத்தின் தவிப்பை அடக்கிக்கொள்கிறான். மெல்ல மெல்லப் படபடப்பு அடங்குகிறது.

ஹீராபாயி தன் கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொள்வது தெரிகிறது. அதோ! கைக்குட்டையை வீசி...'இனிப் போகலாம்' என்று சாடை காட்டுகிறாள்.

இதோ கடைசி வண்டி...யும் போய்விட்டது. பிளாட்பாரம் வெறிச் சோடுகிறது. எல்லாம் சூனியம், காலி, உலகமே வெறுமையாகி சூனியமாகிவிட்டது.

ஹீராமன் வண்டிக்குத் திரும்பி வந்தான். 'நீ எப்பொழுது ஊருக்குத் திரும்பப்போகிறாய்?' என்று விசாரித்தான் லால்மோகரிடம்.

'இப்பொழுதே ஊருக்குப் போய் என்ன செய்ய? இங்கிருந்தாலாவது வண்டி ஓட்டி இரண்டு காசு சம்பாதிக்க

லாம், ஹீராபாயி போயாச்சு. இனித் திருவிழாவும் கலைந்துவிடும்.'

'சரி, சரி. ஊருக்கு ஏதாவது சமாசாரம் உண்டா சொல்லு.'

லால்மோகர் வெகுதூரம் சொல்லிப் பார்த்தான். ஹீராமன் கேட்கவில்லை. ஊருக்குத் திரும்பும் பாதையில் வண்டியைத் திருப்பிவிட்டான். 'திருவிழாவிலே...இனி மேல் என்ன இருக்கு...மண்ணாங்கட்டி?'

ரெயில்வே லைனை ஒட்டினாற்போல் நெடுந்தூரத்திற்கு கப்பிப்பாதை. வண்டி பாதையிலே ஓட ஓட ஹீராமனின் பழைய நினைவுகள் தடம் புரண்டு கொண்டேயிருந்தன. நீண்ட நாள் ஆசை ஒன்று தலை தூக்குகிறது.

அவன் ரெயில் ஏறியதேயில்லை. ரெயில் ஏறி, பாடிக் கொண்டே ஜகன்னாத்பூரிக்கு யாத்திரை போகவேண்டும் என்பது அவனது ஆசை.

ஹீராமனுக்கு காலி வண்டிக்குள் பார்வையை வீசும் துணிவேயில்லை...வண்டி தன் பாட்டில் ஓடுகிறது.

இன்று கூட முதுகில்...அதே குறுகுறுப்பு. இடையிடையே கம்மென்று சண்பக மலரின் இனிய மணம் வண்டியெங்கும் கமழ்கின்றது. பாடலின் ஓரடி, வாத்திய இசையுடன் தாளத்திற்கேற்ப ஒலிக்கிறது அடிக்கடி...

ஹீராமன் திரும்பிப் பார்த்தான். மூட்டைகள் இல்லை. மூங்கில் கழிகள் இல்லை. புலி வண்டி இல்லை. அப்சரஸ் தேவி மீதா...ஹீராபாயி...தோணிக்காரி மஹுவா...ஒருவருமே...ஒன்றுமேயில்லை. கடந்து போன காலத்தின் மௌனக்குரல்கள் உயிர்பெற்றெழுந்து துடிக்கின்றன... ஹீராமனின் உதடுகள் அசைகின்றன. அவன் மூன்றுவது சபதம் எடுக்கிறான் போலும், 'இனிமேல் நாடகக் கம்பெனிக்காரி சவாரியை வண்டியிலே ஏற்ற மாட்டேன்.'

ஹீராமன் திடீரென மாடுகளை விரட்டுகிறான். தார்க்கோல் சாட்டையால் சுறீர் சுறீரென்று விளாசுகிறான்.

'ரெயில்வே லைனைத் திரும்பித் திரும்பி என்னடா பார்வை? ஓடுங்கடா பயலுகளா!' மாடுகள் விரைகின்றன. ஹீராமனின் உதடுகள் முணுமுணுத்தன—'அஜி! ஹாம்! மாரே கயே குல்ஃபாம்!'

## லண்டனில் ஓரிரவு

நான் அங்கு சென்றது இரண்டாம் முறை. முதல் நாள் இரவு நான் சென்றபொழுது தாமதமாகி விட்டது. நான் போய்ச் சேருவதற்கு முன்னரே வேலைப் பங்கீடு வியவகாரமெல்லாம் முடிந்துவிட்டது. மனம் குழம்பியவனாய் கேட்டுக்கு வெளியே நின்று கொண்டிருந்தேன். கடைசி நிமிடத்தில் யாரேனும் தேவைப்பட்டால் என்னை எடுத்துக் கொள்வார்கள் என்ற நினைப்பு எனக்கு. நெடுநேரம் வரை தடதடவென்ற இரைச்சலுடன் ஓடிக் கொண்டிருந்த யந்திரங்களுக்குள்ளே சோடா புட்டிகளின் ஒலி கேட்டுக் கொண்டேயிருந்தது. வேலை கிடைத்திருந்தவர்கள் அவசர அவசரமாகத் தங்கள் உடைகளைக் கழற்றி விட்டுத் தொழிற்சாலைக் குரிய உடையை அணிந்து கொண்டிருந்தனர்.

வெளியே திறந்த முற்றமெங்கும் பாட்டில்கள் தான். வரிசை, வரிசையாய், அடுக்கடுக்காய், தொழிற்சாலையின் வெளிச்சுவரோடு சுவராய் அடுக்கப் பட்டிருந்த பாட்டில்கள் மங்கிய நில வொளியில் பளபளத்தன. தூரத்திலிருந்து பார்த்தால் நீண்ட தொடுக் கண்ணாடிக் குவியலின்மீது நிறைய பூனைகள் ஒன்றின் கழுத்தை மற்றொன்று கவ்விக் கொண்டு அமர்ந்திருப்பது போல் தோன்றும்.

நான் நின்று கொண்டேயிருந்தேன். சற்றைக் கெல்லாம் ஒரு ஆங்கிலேயக் கனவான் என்னை நெருங்கினார்—'இன்றுமா நிற்கிறாய் ... இன்று வேலை யொன்றுமில்லை யென நான் சொல்லவில்லை?' அவர் என் தோளின் மீது தன் கரத்தை வைத்தார்.

'ஒன்றுமில்லை, சும்மா பார்த்துக்கொண்டு நிற்கிறேன்'

—மெல்ல அவர் கரத்தை என் தோளிலிருந்து அகற்றினேன்.

'நாளைக்கு 15 நிமிடம் முன்னதாக வா, நாளைக்கு யாரேனும் வராவிட்டால் நீ எடுத்துக் கொள்ளப்படுவாய். குட் நைட்.' — அவர் போய் விட்டார்.

இது இரண்டாவது இரவு. டியூப் ஸ்டேஷனின் படிகளிலேறி மேலே வந்ததும் நேற்றைய நிலவு இன்று முழு நிலவாக விரிந்து ஒளி பரப்புவதைக் கண்டேன்.

தூரத்தில் தெரிந்த ஆலைச் சிம்னிகளினிடையே, லண்டன் மாநகரத்து வானம் தெளிவற்றதாய், கவிந்து நெருங்கி வந்திருப்பது போலிருந்தது.

நான் மீண்டும் வழியைத் தேட வேண்டியதாயிற்று. நேற்று நான் நடந்து சென்ற பாதை, இன்று எனக்குப் பரிச்சயமானதாகத் தோன்றினும், இரண்டாம் முறையாக அதன் வழியே நடக்கையில், நிலவொளியில் முற்றிலும் பரிச்சயமற்றதாய், புதுமையாகத் தெரிந்தது.

ஆனால் நார்த் எக்டனிலிருந்து சற்று மேலே சென்றதும் என் கால்கள் தாமாகவே நின்றுவிட்டன. இன்று சீக்கிரமாகவே வந்துவிட்டோம். நம்மைத் தவிர கேட்டில் யாரும் இருக்கமாட்டார்கள் என்று நினைத்தேன். ஆனால் என்னுடைய அநுமானம் தவறுகிவிட்டது. எனக்கு முன்பே வேலையற்ற 10, 15, இளைஞர்கள் அங்கே கூடி நின்றனர். ஆங்கில இளைஞர்கள், பர்மியர்களைப்போல் காணப்பட்ட சில மாணவர்கள், தென்னுப்பிரிக்கா, வெஸ்ட் இன்டீஸ் நீக்ரோ வாலிபர்கள், என யாவரும் தனித்தனிக் குழுவாக நின்றனர். யாவருடைய பார்வையும் கேட்டின்மீதே பதிந்திருந்தது. நான் சென்றதும் யாவருடைய விழிகளும் என் பக்கம் திரும்பின. மௌனமான, வெகுண்ட பார்வை. அங்கு நிலவிய மௌனத்திடையேயும் விசித்திரமானதொரு பீதி, என் வருகையை விட, அதிகமாக, அந்த விதியின் முடிவைக் குறித்து,

இன்னும் சில நிமிடங்களில் தெரிந்துவிடப் போகிற அந்த முடிவைக் குறித்து, அங்கே நிலவுவதை என்னால் உணரமுடிந்தது.

நானும் அவர்களுடன் ஒரு மூலையில் நின்றேன். அவர்களிடம் உள்ளூரப் பயந்துகொண்டே, ஆனால் அவர்களில் ஒருவனாக என்னை இணைத்துக் கொண்டு, நின்றேன்.

கிட்டத்தட்ட எட்டே முக்கால் மணிக்கு, மானேஜர் எங்களை நோக்கி வந்தார். கொஞ்சம் ஏமாற்றமாக இருந்தது. என் தோளிலே கை வைத்து என்னுடன் உரையாடியவர் அல்ல இவர். வந்தவரின் கரத்தில் ஒரு சிறிய துண்டுக் காகிதம் இருந்தது. நாங்கள் யாவருமே அவரை நோக்கி நகர்ந்தோம். யாரையேனும் கண்டதுமே மிருகக் காட்சி சாலையிலுள்ள வாயற்ற ஜந்துக்கள், ஏதாவது கிடைக்குமோ, என்ற ஆசையில் ஆவலுடன், யந்திர கதியில் கம்பிகளை நோக்கி நகர்ந்து வருமே··· அது போல··· நாங்கள் நெருங்கி வருகிறோம். ஒரு கணம் அவர் எங்களை நோக்கினார்.

எங்களுடைய, உணர்ச்சியற்ற, வெறுமை நிறைந்த முகங்கள், அவருக்கு அச்சத்தை விளைவித்திருக்கலாம். ஏன் எனில் சட்டென அவர் விழிகள் தாழ்ந்து கையிலிருந்த காகிதத்தில் ஒளிந்துகொண்டன. மடமடவெனப் பெயர்களைப் படித்துக் கொண்டே போனார் அவர்.

முந்திய இரவு வேலை செய்தவர்கள் யாவரும் இன்று தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டனர். அவர்களைத் தவிர இன்னும் இரண்டொருவர் எடுத்துக்கொள்ளப்பட்டனர். நாடோடிகள் போல் காணப்பட்ட இரு ஆங்கிலேய இளைஞர்கள், எல்லோருக்கும் முன்னால் நின்று, அந்த மானேஜரின் காதருகில் குனிந்து ஏதோதோ கிசுகிசுத்துக் கொண்டிருந்த அந்தத் தென்னாப்பிரிக்க மாணவன் — இவர்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டனர்.

'இன்று ··· இவ்வளவுதான்' என்ற அந்த மானேஜர்

அனுதாபத்துடன் எங்களைப் பார்த்தவாறே... 'நாளைக்கு வந்து பாருங்கள். ஒருக்கால் உங்களில் சிலர் தேவைப் படலாம்' என்றார்.

கூட்டத்திலிருந்த இரண்டொருவர் முன்னே வந்து அவரிடம் விவாதிக்க முயன்றனர். ஆனால் தனது இயலாமையைத் தெரிவிப்பவர் போல் கைகளை விரித்து விட்டு புன்சிரிப்புத் தவழும் கண்களுடன் எங்களைப் பார்த்தவாறே உள்ளே போய்விட்டார் அவர்.

நாங்கள் எதிர்நோக்கிநின்ற நிகழ்ச்சி நடந்து முடிந்து விட்டதென்பதை அறிந்தபின் கூட எங்களில் எவராலும் அதை நம்ப முடியவில்லை. மானேஜர் உள்ளே சென்ற பின்னும் எங்களில் எவரும் தன்னிடத்தை விட்டு அசைய வில்லை. 2, 3, நிமிடங்களுக்குள் நடந்து முடிந்தவை யெல்லாம், அரைகுறையானதாக, எங்களுக்குச் சம்பந்த மில்லாததொரு பொய்மைத் தோற்றமாக, இன்னும், ஏதோ நடக்க விருக்கிற ஒன்று எங்களுக்காகத் தனது வாயிலை திறந்துவைத்துக்கொண்டு காத்திருப்பது போல வும் தோன்றியது. எங்களில் மூன்று நான்கு பேர், லண்டனின் ஒரு கோடியிலிருந்து, டியூப் ரயிலில் மூன்று, நான்கு ஷில்லிங் கொடுத்து டிக்கட் வாங்கிக்கொண்டு வந் திருந்தோம். எங்கள் ஒவ்வொருடைய கையிலும் ஒரு பை இருந்தது. இரவு வேளைக்கான மாற்றுடைகள், உணவுப் பொட்டலங்கள் அதிலிருந்தன. அடுத்த டியூபில் நாங்கள் திரும்பிச் செல்லவேண்டும் என்பதை நம்புவதே கடினமாக இருந்தது. குழாயிலிருந்து கொட் டும் வெதுவெதுப்பான தண்ணீர், நில வொளியில் பள பளக்கும் சேறும் சகதியுமான குட்டைகள், சாக்கடை யில் உருண்டு கிடந்த காலிபுட்டிகள் யாவுமே சற்றும் பொருத்த மற்றதாய், தாறுமாறுனதாய் எங்களுக்குத் தோன்றியது. எதற்காக இங்கு வந்து நிற்கிறேம் என்பது கூட மறந்துவிட்டது. சில விஞடிகளுக்கு முன்

வரை வேலை கிடைக்கவில்லையே என ஏற்பட்டிருந்த துயரம், விகாரமான தொரு சுமையாகி எங்களது கால்களிலே கனத்துத் தொங்கியது. இனி இதை மீண்டும் வீடுவரை இழுத்துச் சென்றுகவேண்டும்.

பசியும் நிராசையு மிகுந்திருந்த அக் கணத்தில் எங்களது உள்ளத்தில் ஒரு மூலையில் கூட எரிச்சலோ கசப்போ இல்லை.

ஆனுல் எல்லாம் சில கணங்களுக்குத் தான். திடீ ரென அம்மாயக் கணங்கள் உடைந்து சிதறின, நாங்கள் மீண்டும் எங்கள் சுய உணர்வுக்குத் திரும்பி வந்தோம். நீண்ட ஆழ்ந்த பெருமூச் சொன்று கலந்து நின்ற அக் கூட்டத்தின் மேலே விரவி நின்று, சில ஆபாசமான, அசிங்கமான வசவுகளிலே கரைந்து தன்னை இழந்தது. நெருக்கியடித்துக் கொண்டு நின்றபொழுது நுகர முடிந்த தேகங்களின் அந்த நெடி, மனதிற்குள் திட்டிக்கொண்டே எங்களால் சகித்துக் கொள்ளமுடிந்த அந்த வாசனை, இப்பொழுது வெவ் வேறு பாதைகளிலே சிதறியது. நாங்கள் மூன்றே பேர் தான் இன்னமும் முகப்பு வாசலின் முன் தயங்கியவாறே நின்று கொண்டிருந்தோம். எனக்குப் பின்னுல் லேசான சலசலப்பு.

'பிளடி-பாஸ்டர்ட்' — முதலில் நின்றவன், சற்றுத் தணிந்த, கரகரத்த குரலில் கூறினுன். சற்றே நகர்ந்து வந்தான் அவன். திகிலுடன், பயமும் மிரட்சியும் நிறைந்த கண்கள் நாற்புறமும் ஒரு முறை சுழன்று வந்தன. பின்னர் பாட்டில்களின் குவியல்களிலிருந்து சோடா பாட்டிலை எடுத்து உடைத்துக் குடிக்கலானுன். இன்னொரு பாட்டிலை எடுத்து மூன்ருவதாக நின்றவனின் கரத்திலே திணித்து — 'குடித்துவை! ··· இந்தப் பயங்களுக்கு எங்கே தெரியப் போகிறது? குடி!' என்ருன்.

மூன்ருவதாக நின்ற அந்த இளைஞன் நீக்ரோ மாணவன்போல் தோன்றினுன். பாட்டிலை வாங்கிக்கொள்ள

சற்றே தயங்கியவன், பின்னர் என்ன நினைத்தானோ, தலையை லேசாக ஒருதரம் உதறிக்கொண்டு, பால் குடிக்கும் குழந்தையைப்போல, பாட்டிலைத் தன் இரு கரங்களாலும், இறுகப் பற்றிக்கொண்டு, உதட்டிலே பொருத்திக் கொண்டான். வாய் நிறையக் குடித்தவுடன் புறங்கையால் உதட்டைத் துடைத்தவாறே பாட்டிலை என் முன் நீட்டினான்.

'...நான் இங்கு வருவது இது மூன்றும் தடவை. நேற்று வேலை தருவதாகச் சொன்னவரை இன்று காணோம்.'

'...நாளைக்கும் இதுதான் நடக்கப் போகிறது. வேறொருவன் புதிதாக வருவான். இன்றிரவு நாம் வந்து காத்திருந்தோம் என்பது அவனுக்குத் தெரியப் போவதில்லை.'

'...நாளைக்கு யார் வரப் போகிறார்கள்? நான் இந்தப் பக்கம் எட்டிக்கூட பார்க்கப் போவதில்லை ..டாம்...திஸ்..'

முதலாமவன் தன் ஓவர் கோட்டின் பொத்தான்களை அவிழ்த்துவிட்டுக் கொண்டான். இத்தனை வெப்பத்திலும், புழுக்கத்திலும், அவன் ஓவர் கோட்டு அணிந்து வந்ததைப்பற்றி எனக்கு வியப்பேதும் உண்டாகவில்லை. ஓவர் கோட்டிலிருந்து அவனை இனம் பிரித்துப் பார்ப்பதுதான் வியப்பூட்டுவதாக இருக்கும். ஏன் எனில் அவனது பர்சனலிடி அந்தக் கோட்டுடன் ஒன்றிவிட்டிருந்தது. நல்ல வாட்ட சாட்டமான உடற்கட்டு. சிறிய வெண்ணிற குறுந்தாடி. கசப்பு மிகுந்த எரிச்சலுடன் இமைத்துக் கொண்டிருக்கும் வரண்ட விழிகள். கசப்பு மிகுந்த எரிச்சல் என்று சொல்வது கூட சரியில்லை. வேட்டைக்காகத் துரத்தப்படும் மிருகங்களின் பார்வையில் காணப்படுமே குரோதம் கலந்த நெர்வஸ்னெஸ் அப்படியொரு சுட்டெரிக்கும் பார்வை. ஹாலிவுட் வில்லனைப் போன்ற வாட்ட சாட்டமான அந்த ஆகிருதி இருளில், புதிதாகப் பார்க்கும் யாருக்குமே அச்சமூட்டுவதாகத் தானிருக்கும்.

மெதுவாக நடந்து நாங்கள் நார்த் எக்டனின் பாலத்தைக் கடந்துவிட்டோம். லண்டனின் டபுள் டெக்கர் பஸ் ஒன்று எங்களைக் கடந்து சென்றது. ஆகஸ்ட்டு மாதத்தின் இலையுதிர் காலத்து உலர்ந்த சருகுகள் நெடுந் தூரம் வரை பஸ்ஸின் பின்னால் பறந்துகொண்டிருந்தன.

அந்த நீக்ரோ இளைஞன் மிகுந்த சோர்வுடன் காணப் பட்டான். மௌனமாய்ப் பாதையில் பார்வையைப் பதித்தவண்ணம் நடந்துவந்தான்.

'லண்டனில் எத்தனை நாட்களாக இருக்கிறாய்?...' நீக்ரோ வாலிபனின் தோளிலே தன் கரத்தை வைத்த தாடிக்கார இளைஞன் கேட்டான். (பின்னால் இவன் தன் பெயர் விலி என்று கூறினான்.)

பதிலில்லை.

'எங்கிருந்து வந்திருக்கிறாய்?'

'தென்னாப்பிரிக்காவிலிருந்து—இங்கே படிக்கிறேன்.' அவன் மேலே பேச விரும்பவில்லை எனத் தெரிந்தது. ஜேபிலிருந்த சிகரெட் பாக்கெட்டை எடுத்து எங்க ளிருவர் முன்னேயும் நீட்டினான். வந்தனம் தெரிவித்து விட்டு நாங்கள் பார்வையை வேறுபுறம் திருப்பிக் கொண்டோம். பெட்டியிலிருந்த கடைசி சிகரெட் அது. அதை எடுத்துப் பற்றவைக்க மனம் பேராவல் கொண்டு பறந்தாலும், அதை எடுத்துக்கொள்ள மறுக்கும் பண்பு இன்னமும் கொஞ்சம் எங்களிடம் ஒட்டிக் கொண்டு தானிருந்தது. ஆனால் இந்தப் பண்பு நெடுநேரம் தாக்குப் பிடிக்கவில்லை. நடந்துகொண்டே மூவரும் மாறி மாறி அதைப் புகைக்கலானோம்.

எதிரே லண்டன் மாநகரம்—இரவு வேளை. கனத்த, மூட்டம் கவிந்த, அமைதியான இரவு—நாங்கள் நடந்து கொண்டிருந்த பகுதி, மாநகரத்தின் சந்தடியற்ற பாழடைந்த மூலை, பாதை வெறிச்சோடிக் கிடந்தது. வெறுமைதான். வெட்ட வெளி அல்ல. காற்றிலே

அசையும் இலைகளின் சலசலப்பு, பழங்காலக் கட்டிடங்களி லிருந்து எழும் பழைய நாற்றம்··· உயிரற்ற பொருள்களை இடறிக் கொண்டே சேற்றில் நாங்கள் நடந்து செல்லுவது போலிருந்தது. விளக்குக் கம்பங்களினிடையே யிருந்த இடைவெளி, வீசும் காற்று இவைகளைத் தவிர எதுவுமே இல்லை.

'எங்கே போகவேண்டும் உனக்கு?'

'வாரென் தெரு···' என்றான் அவன். 'இரண்டு நாட்களாய் வருகிறேன். இதுவரை வந்து போவதற்கே ஐந்து பாப்ஸ் செலவழிந்துவிட்டது. இந்தக் காசில் நான் டென்னிஸ் விளையாடப் போயிருக்க முடியும்.'

இத்தகையதொரு சந்தர்ப்பத்தில் டென்னிஸ் விளை யாடுவது பற்றிய பேச்சு விசித்திரமாகப் பட்டது. அவன் முகத்தைப் பார்த்தால் கடந்த சில நாட்களாக வயிறு நிரம்பக்கூட சாப்பிட்டிருக்கமாட்டான் என்று தோன்றியது.

'என் நண்பனுக்கு வேலை கிடைத்து விட்டது.' சற்றே உற்சாகத்துடன் கூறினான் அந்த நீக்ரோ இளைஞன். 'நாங்களிருவரும் ஒன்றாக இருக்கிறோம். நாளைக்கு அவரால் எனக்குச் சில ஷில்லிங்குகள் கடனாய்த் தர முடியும்.'

'டாம் ஹிம் ஈப் ஹி டசண்ட்.' விலி எரிச்சலுடன் கூறி னான். 'என்னவானாலும் நாளைக்கு நான் வரமாட்டேன்.' ··"பிளீஸ் கம் டுமாரோ" மானேஜர் கூறியது போலவே கூறிப் பழிப்புக் காட்டிய விலி முகத்தைச் சுளித்துக் கொண்டு — 'டு மாரோ...பி···டாமிட்···நாளைக்கு நீ வரு வாயா?'—முதன் முறையாக என்னைப் பார்த்துக் கேட் டான் விலி.

'வந்தாலும் வருவேன்.' அவனுக்கு இன்னும் கொஞ்சம் எரிச்சலூட்டுவதற்காகவே நான் இதைச் சொன்னேன்.

அவன் இச்சமயத்தில் ''நாளை'' யைப் பற்றிப் பேசுவது எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

'என்ன தருகிறார்கள்? அயோக்கியப் பயங்கள்!'

'இரண்டரைப் பவுண்ட்' — என்றான் நீக்ரோ இளைஞன்.

'தினமும் காலையில்?'

'ஆமாம், காலையில். நள்ளிரவில் தேநீரும் சாண்ட்விச்சும் கூடக் கொடுகிறார்கள் என்று என் நண்பன் சொல்லிக் கொண்டிருந்தான். நேற்றும், நானும் அவனும் தான் ஒன்றாக வந்தோம். அவனை எடுத்துக் கொண்டார்கள். என்னை எடுத்துக் கொள்ளவில்லை.'

'அவன் நீக்ரோவா?'

'இல்லை! பார்சியன்.'

'நீங்கள்?' — விலி சந்தேகத்துடன் என்னைப் பார்த்தான். பார்வையால் அளந்து விடுபவன் போல்...'நீங்கள் ஜப்பானியரா?'

நான் தலையை அசைத்தேன்... இந்த விஷயத்திற்குப் போய் மறுத்து எதிர்வாதம் செய்வது எனக்கு அர்த்தமற்றதாய்ப் பட்டது.

சற்று நேரம் நாங்கள் மௌனமாகவே டியூப் ஸ்டேஷனை நோக்கி நடந்து கொண்டிருந்தோம். காற்றின் வெப்ப அலை வந்து மோதும் பொழுது நாங்கள் விதிர் விதித்துப் போனோம். அப்பொழுதெல்லாம் எங்கள் பசி தன் கட்டுப்பாடுகளையெல்லாம் தகர்த்துக் கொண்டு, வீசி எழும் காற்றின் அலை விளக்குக் கம்பத்தின் அதிக ஒளியற்ற, மங்கலான வெளிச்சத்தைச் சிதறவடித்து, தன்னுடன் அடித்துப் புரட்டிக்கொண்டு போகுமே அப்படி எங்களை நிலை குலையச் செய்துவிடும்.

'ரொம்பவும் உஷ்ணமாய் இருக்கிறது ··· கடந்த ஐந்து வருடங்களில் இத்தனை வெப்பத்தைக் கண்டதேயில்லை.'

'ஐந்து வருடமாய் லண்டனில் தானிருக்கிறாயா?'

'...இதைவிடக் கூட அதிகமாக இருக்கலாம். எத்தனையோ வேலைகள் பார்த்துவிட்டேன். இனி அதிகம் தாமதிக்கமாட்டேன் என்று நினைக்கிறேன்.'

'வீட்டிற்குத் திரும்பிப் போய்விடுவாயா!' என்று வினவினான் விலி.

—'வீடா?' நீக்ரோ இளைஞனின் வெறுமை நிறைந்த வெறும் குரல். 'வீடு' என்பது விசித்திரமான ஒரு சொல் என்பது போல். முதன் முறையாக அச்சொல்லைக் கேட்பவன் போல் —'இங்கேயே இருக்கத்தான் நான் விரும்பினேன். ஆனால் அவர்கள் நம்மை விரும்பவில்லையே'— என்றான்.

'அவர்களா? ... ஹூம்' — என்றான் விலி.

'அவர்கள்' எங்களையுமறியாமலேயே எங்களது விழிகள் நாற்புறமும் சுழன்றன. ஒருவருமில்லை. ஆனால் அந்த 'அவர்கள்' எங்கும், ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு சமயத்திலும், எங்களுடனேயே யிருந்தனர். எங்களுக்கு வெளியே, எங்களுக்குள்ளே, எங்களைச் சுற்றி...

'ஜாரிங் ஹில்லில் ரகளை நடந்தபொழுது, நீ இங்குதான் இருந்தாயா?' — விலியின் வெண்ணிறப் பற்கள் மின்னின.

—'இல்லை அப்பொழுது நான் லண்டனுக்கு வந்திருக்கவில்லை.'

—'நான் அங்குதானிருந்தேன், மூன்று நாட்கள். ஒரு ஆங்கில யுவதியின் வீட்டில் ஒளிந்து கொண்டிருந்தேன். ஒவ்வொரு நீக்ரோவாகத் தேடித்தேடி அவர்கள் லிஞ்ச் செய்துகொண்டிருந்தபோது, நான் அந்த வெள்ளைக்கார விபசாரியுடன் நேரத்தைக் கழித்துக்கொண்டிருந்தேன். நான் அவளை நேசிப்பதாகத்தான் அவள் நினைத்தாள். ஆனால் அதற்குப் பின் நான் அவளைப் பார்க்கக்கூட இல்லை. அவளுடைய வெள்ளைத் தோலி

டம் நான் பழி தீர்த்துக் கொண்டிருந்தது அவளுக்குத் தெரியாது.' ...கையால் ஜாடை காட்டினுன் அவன்.

ஆபாசத்தைவிட அது அருவருப்பாக இருந்தது.

தொலைவில் ஆலைப் புகை மண்டலத்திற்கப்பால், டியூப். ஸ்டேஷனின் விளக்குகள், எங்கோ ஓரிடத்தில் பூமி வெடித்து, அதனுள்ளே யிருந்து சிதறிய வைர மாமணிக் கற்கள் ஒளி சிந்துவது போலிருந்தது.

'நீ இங்கே படிக்கிருயா?'

'ஆமாம், கோடை விடுமுறையில் வேலை செய்கிறேன். முன்பெல்லாம் டான்ஸ்க்குப் போவதுண்டு.'—என்ருன் ஜார்ஜ். வேலை கிடைக்கவில்லை என்ற ஆற்ருமை இன்னும் தணியவில்லை என்பது போல் அவன் குரலில் துயரத்தின் சாயை மேலிட்டு நின்றது.

'காண்டினென்ட்டிற்கு ஏன் போகவில்லை?' என்ருன் விலி. 'என் நண்பனெருவன் ஜெர்மனிக்குப் போயிருக்கிருன். அங்கு வேலைக்குப் பஞ்சமே யில்லையாம்...அங்கே பெண்கள் கறுப்பு நிறமென்ருல் ஒரே பைத்தியமாக இருக்கிருர்களாம். சும்மா ஜாடை காட்டினுல் போதுமாம்... கேள்விப் பட்டேன்.'

'...சென்ற யுத்தம் இதற்குக் காரணமாக இருக்கலாம்'—என்ருன் ஜார்ஜ். 'சில வருடங்களுக்கு முன்னர் என் அப்பா அங்கே போயிருந்தார். ஆண்களே அதிகம் கண்ணில் படவில்லையாம். எங்கும் பெண்கள் பெண்கள் தானும்...சொன்னுர்.'

'ஓ...ஹௌ ஐ விஷ் ஃபார் அனதர் வார்...அனதர் அண்ட் தென் அனதர்' என்ருன் விலி.

ஜார்ஜ் வியப்புடன் முதலில் விலியை நோக்கினுன். பிறகு என்னைப் பார்த்தான். அவன் ஏதோ கூறவிரும்புவது போல் தோன்றியது. ஆனுல் எதையோ நினைத்தவன் போல் வெறுமே தலையை மட்டும் அசைத்தான். ஒன்றும் பேசவில்லை.

ஒருக்கால் இது சரியானதாகவும் இருக்கலாம். லண்டன் மாநகரத்தின் வெப்பமிகுந்த அமைதியான இந்த இரவில்...யுத்தம் என்பது எட்டாத் தொலைவிலுள்ள, அர்த்த மற்ற, கேலிக்கிடமான தொன்ருகத் தோன்றியது. அதைப் பற்றி விவாதிப்பதிலும் அர்த்த மெதுவுமில்லை. நடந்ததும் இது தான். விரைவிலேயே விலியின் இந்த வார்த்தைகளை நாங்கள் மறந்து விட்டோம், நெடு நேரம்வரை வெவ்வேறு நாட்டுப் பெண்களைப் பற்றிய பேச்சுத்தான் எங்களிடையே அடிபட்டது. பழைய பசியினிடையேயே திடீரெனப் புதிய தொரு பசி விழித்துக் கொண்டு விட்டது.

'நான் ஸ்பெயினுக்கு செல்ல விரும்பினேன். அங்குள்ள பெண்கள்...ஆகா! ... ஆனல் எத்தனையோ வருடங்களாக முயற்சி செய்கிறேன். விஸா கிடைக்கவில்லை. ஸ்பெயின் நாட்டுக் காரர்களுக்குத் தங்கள் பெண்களின் வர்ஜினிடியைப் பற்றி மிகுந்த அக்கறை.'

'ஸ்பெயின்'...மூடிக் கிடந்த சாம்பலைக் கிண்டி விட்டு விட்டார்கள்.

'நீ போயிருக்கிருயா?'

'போகத் தான் ஆசைப் பட்டேன். வெகு நாட்களுக்கு முன்னரே.'

'சிவில் வாரின் போதா?'

'அப்பொழுது நான் மிகவும் சிறியவனுக இருந்தேன்.'

'சிவில் வார் எங்கள் நாட்டில் ஒரு வேளை...' ஜார்ஜ் சட்டென்று பேசுவதை நிறுத்திவிட்டான். அவனது சுருண்ட கேசத்தின் மீது வியர்வைத் துளிகள் மின்னின.

'ஐ டோண்ட் லைக் சிவில் வார்'...என்ருன் விலி. எங்கள் பேச்சு மீண்டும் இங்கேயே வந்து இடறியது. பிக்டெலியின் குண்டு நாற்புறமும் சுற்றிச் சுழன்ருேடி வந்து ஒரு குழியில் வந்து சிக்கிக்கொள்ளுமே அது போல். எங்களுக்கும் யுத்தத்திற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. லண்டன்

மாநகரத்து வெப்பமிகுந்த அமைதியான இரவு இது. யுத்தம் என்பது எங்கோ எட்டாத தொலைவிலுள்ள விஷயம்.

வழியில் இடது பக்கத்தில் ஒரு பழைய மதுபானக் கடையிலிருந்து இசையும், சிரிப்பும் இரண்டறக் கலந்த ஒலி அலைகள் காற்றிலே மிதந்து வந்தன. மதுபானக் கடைக்குப் பின்னால் ஒரு சந்து. அந்தச் சந்தின் இருண்ட மூலையில் இரு நிழல்கள். ஒன்றையொன்று தழுவிய நிலையில், நிழல்கள் அடிக்கடி அசைந்தன. மினி ஸ்கர்ட்டின் கீழே தெரிந்த உருண்டுதிரண்ட காலொன்று இடை இடையே நடுங்கியது. விழைவுடன் தேடி வரும் கரங்களிடையே அது புதைந்தது...

'வாருங்கள்; கொஞ்சம் பியர் சாப்பிட்டு விட்டு வருவோம். குடிக்காவிட்டால் என்னால் சரியாகத் தூங்க முடியாது'—என்றான் விலி.

லேசான குழப்பம் என்னுள் மூண்டது. டியூபிற்காக நான் மீத்து வைத்திருந்த, கடைசி இரண்டு ஷில்லிங்குகள் தான் என் ஜேபில் கிடந்தன. ஜார்ஜின் நிலைமையும் அப்படி யொன்றும் மேம்பட்டதாகத் தெரியவில்லை. விலியின் பிரஸ்தாபத்தைக் கவனித்தும் கவனியாதவன்போல் இருளில் சீட்டி யடித்துக் கொண்டு நின்றான்.

விலிக்குப் புரிந்துவிட்டது போலும். ஜார்ஜின் தோளைத் தொட்டு, 'கவலைப்பட வேண்டாம். இங்குள்ளவர்களுக்கு என்னைத் தெரியும். ஒரு காலத்தில் நான் இங்கு அடிக்கடி வருவதுண்டு' என்றான்.

கணத்தில் ஜார்ஜின் அலட்சியம் மறைந்து விட்டது. குழந்தைத் தனமான மகிழ்ச்சி முகமெங்கும் விரவியது.

'நான் கொஞ்சம் ஜின் குடிக்கிறேன். நாளைக்கு என் நண்பன் சில ஷில்லிங்குகள் எனக்குக் கடனாகத் தர இயலுமென நினைக்கிறேன்.'

எங்களது கால்கள் மதுபான விடுதியை நோக்கி நடந்தன.

கதவைத் திறந்ததும் குரல்களின், கதகதப்பான ஓசைப் பிரவாகம் எங்களைத் தன்னுள்ளே ஆழ்த்திக் கொண்டது. சுற்றிச் சுழன்று, ஒன்றொடொன்று பின்னிப் பிணைந்து, மோதி எழுந்த குரல்கள், வடிகால் கிடைக்காது, சகதி நிரம்பிய கொதிநீர் ஒரே குட்டையில் வீழ்ந்து குழம்பி நிற்பதுபோல் கலந்து ஒலித்தன. வெளிச்சமிருந்தது. ஆனால் மங்கலான, புகை மூட்டம் கவிந்த வெளிச்சம். ஒருவர் முகத்தை யொருவர் இனம் கண்டு கொள்ளு வதோ, வேறுபடுத்திப் பார்க்கவோ இயலாது.

சில படிகள் இறங்கினால் — பேஸ்மண்ட் — கீழ்த்தள மிருந்தது. சில சமயம் நடனமாடிக் கொண்டிருந்த ஜோடிகளின் நிழல்கள் அப் படிகளின்மீது வீழ்ந்தன. சில சமயம் நீண்ட, அழகற்ற நிழல்கள். சில சமயம் மிக மிகச் சிறிய நிழல்கள், தெளிந்த நீரோட்டத்தின் மேல் மட்டத்திற்குத் துள்ளிவரும் மீன்கள், மறுகணம் மூழ்கி மறைந்துவிடுவது போன்று மறைந்தன.

மூலையிலிருந்த ஒரு மேஜையைச் சுற்றி நாங்கள் மூவ ரும் அமர்ந்து கொண்டோம். சற்று நேரத்திற்குப் பின் னர் விலி 3 பியர் பாட்டில்களும் டம்ளர்களும் எடுத்து வந்தான். நாங்கள் குடிக்க வாரம்பித்தோம்.

'முன்பு நான் இங்கே வேலை செய்து கொண்டிருந் தேன். சில மாதங்கள்தான். பிறகு சலித்துவிட்டது. இதன் முதலாளி இத்தாலியன். ஆசாமி கெட்டவன் அல்ல. ஆனால் கோழை. இந்தப் பக்கம் அவன் வந்தால் உங்களுக்கு அறிமுகப் படுத்தி வைக்கிறேன்.' — என் றான் விலி.

'டிப்ஸ்கள் நிறைய கிடைத்திருக்கும்.'

'ஆங்கிலேயர்கள் அதிகம் தருவதில்லை. அதிகம் போனால் ஆறு பென்னி. ஆனால் காண்டினெண்டினி

ருந்து டூரிஸ்ட் வருகிறார்களே அவர்கள் விஷயம் வேறு. தாராளமான மனது. ஆனால் முட்டாள்களாவும் இருக்கின்றனர்.'

'எனக்கு இப்பொழுது என்ன வேலை கிடைத்தாலும் செய்யத் தயார்'—என்றான் ஜார்ஜ்.

உள் மனத்தின் இறுகிய முடிச்சுகளிடையே பியர் வழி ஏற்படுத்தி விட்டது. மூடிய கம்பிகளிருந்த இடத்தில் பட பட-க்கும் இறக்கைகள் — பறக்க வேண்டுமென்ற விழைவு.

'இனி நான் அதிக நாட்கள் இங்கு இருக்க மாட்டேன்'—விலி கூறினான். 'என் நண்பன் ஜெர்மனியிலி'ருக்கிறான். முடிந்தால் அங்கு போய் விடுவேன்'

விலி தம்ளரைக் காலி செய்து விட்டான். மேஜையின் மீது அதைக் கவிழ்த்து வைத்தான். அதிலிருந்து ஒரு சொட்டுகூட கீழே விழ வில்லை. பியரின் நுரை, தாடியின் மீது ... ஈர, வெண் மணல் போல் சிதறிக் கிடந்தது.

'என்னால் ஜெர்மனியர்களைச் சகித்துக் கொள்ள முடியாது'—என்றான் ஜார்ஜ் மீண்டும்.

'தேர் ஈஸ் ரியல் லைஃப் — ஒவ்வொரு மூலை முடுக்கிலும் இளம் பெண்கள் நிற்கிறார்கள்'—என்றான் விலி.

'என்னால் ஜெர்மனியர்களைச் சகித்துக் கொள்ள முடியாது' என்றான் ஜார்ஜ்.

நான் சிரிக்கலானேன்.

ஜார்ஜ் என்னை நோக்கினான். அவன் விழிகளில் பரிதாபம் தேங்கி நின்றது.

'ஜனங்கள் எல்லோரும் ஒரே மாதிரியாகத் தானிருக்கிறார்கள்' என்றான் விலி.

ஆனால் 'அவர்கள்' ஜார்ஜ் கதவிற்கு வெளியே சுட்டிக் காட்டினான். வெறும் இருள் கவிந்து நின்றது அங்கே.

'அவர்கள். அவர்களும் கூடத்தான் ... நீ வீணுகப் பயப்படுகிருய்' — என்ருன் விலி.

ஒரு கணம் கண்ணுடித் தம்பளரின் மீது படிந்திருந்த ஜார்ஜின் கரம் நடுங்கியது.

'யூ ஆர் எ ராடர்' — என்ருன் ஜார்ஜ்.

அந்தத் தொனியில் ஏதோ இருந்திருக்க வேண்டும். விலியின் முகம் அக்கணமே வெளுத்து விட்டது.

'நான் மிகவும் பொல்லாதவன் — தெரியுமா ··· இந்த வார்த்தையை மீண்டுமொருதரம் சொல்லாதே.'

'ஓ! ரியலி!···' ஜார்ஜின் குரலில் ஒரு நடுக்கம். அந்தரத்தில் ஊசாலடும் கயிற்றின் மீது அவென் நடக்கிருன். கீழே··· பெரும் பள்ளம். எக்கணமும் அவனது கால் நழுவிவிடலாம்... இப்படியொரு நடுக்கம் அந்தக் குரலில்... 'எஸ். — யூ ஆர் எ — ராடர்' என்ருன் மீண்டும்.

கையில் தம்பளருடன் விருட்டென எழுந்து நின்ருன் விலி. ஆட்டக்காரனொருவன் விளையாட்டினிடையே நியமப்படி எழுந்து நிற்பது போல்.

'எங்கே இன்னொரு முறை சொல்லு...' அவனது கண்ணுடி தம்ளர் ஜார்ஜின் தலையை நோக்கி நகர்ந்தது. கண்ணுடியில் ஒட்டிக் கொண்டிருந்த, பியரின் நுரை ஒளியில் மின்னிக் கொண்டிருந்தது.

பாதி மூடியிருந்த ஜார்ஜின் விழிகள் உயர்ந்தன.

'எஸ். யூ ஆர் எ ராடர். ஆல்ரைட்.'

தம்ளருக்குக் கீழே அவன் தலை அசைந்து கொண்டிருந்தது. மனிதனுடைய தலை மட்டும் உடல் அல்லாது இப்படி நடுங்க முடியும் என்பது என்பது எனக்கு வேடிக்கையாக இருந்தது.

விலி ஆழ்ந்த வியப்புடன் அவனை நோக்கினுன். பின்னர் சிரித்தான் — 'நீ சொல்வது உண்மையாக

இருக்கலாம். மே பி ஐ ஏம்' விலி மீண்டும் தன் நாற்காலியில் அமர்ந்துகொண்டான்.

நாங்கள் அதிகம் குடித்திருக்கவில்லை. ஆனால் எங்களைச் சுற்றி பயங்கரமானதொரு வலையை யாரோ பின்னி வைத்திருந்தார்கள். அதைத் தீண்டினாலே குருதி பெருகியது.

சிறிது நேரத்திற்குப் பின்னர் பப்பின் முதலாளி எங்களது மேஜையினருகே வந்து நின்றான். உயரமும் பருமனுமான உடல். ஆனால் நல்ல கட்டான அமைப்பு. வெளிறிய நிறம். குறுகிய நெற்றியின் மீது எண்ணெயின் மினுமினுப்புடன் கரிய கேசச் சுருள்கள் இறங்கி வந்திருந்தன.

'இன்னும் வேண்டுமா?' — அவன் புன்சிரிப்புடன் விலியை நோக்கினான்.

'தற்சமயம் போதும்— அப்புறமாக'...விலியின் குரலில் முன்னிருந்த இறுக்கமில்லை. 'இவர்கள் என் நண்பர்கள்.'

இத்தாலியன் எங்களை ஏறிட்டுப் பார்த்தான். அறி முகத்தின் ஆவல் அதில் சுடர் விடவில்லை.

'விலி எங்களிடம் வேலை பார்த்து வந்தான்'...பெருமிதத்துடன் அவன் விலியைப் பார்த்த பார்வை, விலிக்கு முன் நாங்கள் துச்சம் என்பது போலிருந்தது.

'ரொம்ப நாட்களாக இருக்கிறீர்களா?'—என விசாரித்தான் அவன்.

ஜார்ஜ் மௌனமாக இருந்தான். (நல்ல வேலை! கடவுளே! அவன் தலை இப்பொழுது நடுங்கவில்லை.) காலித் தம்ளருடன் விளையாடிக் கொண்டிருந்த என் கரம் அசைவற்றிருந்தது.

'கொஞ்ச நாட்களாயிற்று'—என்றேன் நான்.

'இஸ் இட் இன்டீட் ஃபைன்?'

'ஏதாவது வேலையில்?'—அவன் எனது ஷர்ட் காலரைப் பார்த்துக் கொண்டிருந்தான். எத்தனை நாடுகளின் தூசி அதில் படிந்திருந்ததோ?...

'தற்போதைக்கு ஏதுமில்லை...'

'விலிக்கு வேலை கிடைக்கும். ஆனால் அவன் ஒரு வேலையில் நிலைக்க மாட்டான்'—செல்லமாகக் கடிந்து கொண்ட இத்தாலியனின் விழிகள் விலியைப் பரிவுடன் நோக்கின.

'நான் உன்னிடத்தில் இருந்திருக்க முடியும். நீ மட்டும்...'

இத்தாலியனின் முகம் சட்டென்று இறுகியது—'உனக்குத்தான் தெரியுமே.'

'ஓ...'என்றான் விலி. 'நீங்கள் எல்லோருமே ஒரே ரகம் தான்.'

'ரொம்ப உஷ்ணமாக இருக்கிறது'...என்றான் ஜார்ஜ்.

'உனக்குத்தான் தெரியுமே'... இத்தாலியன் மீண்டும் அதையே வலியுறுத்துபவன் போல் ஆரம்பித்தான்.

'உஹூம்... எனக்கு ஒன்றும் தெரியாது. நான் இப்பொழுது டான்ஸ் ஆடப்போகிறேன் என்பது மட்டும் தான் எனக்குத் தெரியும்.' விலி நாற்காலியைப் பின்னால் தள்ளிக்கொண்டு எழுந்துவிட்டான். பாய்ந்து வந்த அவன் தோள்களைப் பற்றிக்கொண்டான். அவன் கண்கள் திடீரெனப் பீதியுற்றன. விலியின் உயரமான மெலிந்த தேகத்தின் முன் கட்டுமஸ்தான அந்த உருண்டை வடிவம் ஏனோ அக்கணத்தில் பரிதாபகரமாகத் தோற்றமளித்தது.

'விலி... உனக்குத்தான் தெரியுமே... இங்கு...' வேகமான உந்தலுடன், விலி தன் தோளை விடுவித்துக் கொண்டான். அவனுடைய முதுகு எங்களது மேஜையின் மேல் சாய்ந்தது. ஜார்ஜ் பியர் பாட்டில்களை இறுகப் பற்றிக்கொண்டான். ஒரு கணம், மேலும் கீழுமாய்

அசையும் கப்பலின் மேல் தளத்தில் உட்கார்ந்திருப்பது போன்றிருந்தது.

வாத்தியங்கள் முழங்க வாரம்பித்ததும் பப்பின் வெவ்வேறு மூலைகளிலிருந்து ஆணும் பெண்ணுமாய், ஜோடி, ஜோடியாய் பேஸ்மெண்டின் படிகளில் இறங்கலாயினர்.

இத்தாலியன் பின்னால் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. சூனியத்தை வெறித்துக்கொண்டு நின்றான்.

விலியை எங்குமே காணோம்.

அவனது காலித் தம்ளர் எங்களது முன்னே யிருந்தது. ஜார்ஜ் பாட்டிலைக் கையில் எடுத்துக்கொண்டு விட்டான். அவனது உள்ளங்கையின் வியர்வை கண்ணாடிக் குப்பியில் வெள்ளைக் கறை போல் படிந்திருந்தது.

இத்தாலியன் எங்களைப் பார்த்த பார்வையில் அவன் எங்களைத் தெரிந்து கொண்டதாகவே தோன்றவில்லை. நிராதரவான பாவத்துடன் தன்னிரு கரங்களையும் விரித்தவாறே—'பயித்தியக்காரன் இல்லையா?' என்றான்.

நாங்கள் மௌனமாக இருந்தோம். எங்களுக்குச் சம்பந்தமில்லாத ஒன்றின் கனம் எங்களைச் சுற்றித் தெளிவற்ற நிழலாகச் சூழ்ந்து நின்றது. சோர்ந்து போன நடையுடன் அவன் கவுண்டரை நோக்கித் திரும்பி நடந்தான்.

'ரொம்பவும் உஷ்ணமாக இருக்கிறது'—என்ற ஜார்ஜ், 'உன்னிடம் எத்தனை பணம் இருக்கிறது?' என்றான்.

'ஏன்?' என்றேன். எனக்கு ஏனோ திடீரென எல்லாவற்றின் மீதும் எரிச்சல் மண்டிக் கொண்டு வந்தது.

'என்னிடத்தில் ஒன்னரை ஷில்லிங் இருக்கிறது. இதற்கு லாகர் கிடைக்குமா?

என் விழிகள் விலியின் காலித் தம்ளரின் மீது நிலைத்திருந்தன. 'அவன் எங்கே போயிருப்பான்?'

மங்கலான ஒளியின் கீழ் பூட்சுகளும், சாண்டில்களும்

படபடவென ஒலிக்கும் ஓசை, சுற்றும் முற்றும், உடைந்து, சிதறும், உருவமற்ற ஒலிகளின் பிரவாகம், ஒரு மூலையில் நாங்கள், ஒரு மேஜை, ஜார்ஜ், இரண்டு தம்ளர் லாகர். எல்லாம் முன் போலவே, முதன் முதலில் நாங்கள் பார்த்தது போலவே...இருந்தன. எவ்வித மாறுதலுமில்லை. ஒரு நாற்காலி மட்டும் காலி. அவ்வளவுதான்.

'அவனுக்குக் கோபமோ என்னவோ! என்றால் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலவில்லை.' என்றான் ஜார்ஜ்.

'நீ அவனை ஒன்றுமே சொல்லவில்லை. அப்படித் தானே?'

'என்றால் என்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள முடியாது'—மேஜையின் மீதிருந்த என் கரத்தை இறுகப் பற்றிக் கொண்டான் அவன். என் விரல்கள் அவனது உள்ளங்கையின் கீழ் தவிதவித்தன.

'உனக்குத் தெரியாது. எனக்கு பாக்சிங் ரொம்பவும் விருப்பமானது. நான் முதன் முதலில் லண்டன் வந்த பொழுது வேலையற்றவனாய் இருக்கவில்லை. தினம் தினம் பாக்சிங்கிற்குப் போவேன். ஆனால் இன்றுவரை ஒரு நாள் கூட நான் ஜயித்ததில்லை. கேட்டுக் கொண்டாயா! ஒரு தடவை கூட ஜயிக்கவில்லை... என்னுள்ளே விசித்திரமானதொரு பரபரப்பு மூண்டுவிடுகிறது. எதிராளி என்னைத் தாக்கட்டும், அடிக்கட்டும் என்று சில விநாடி காத்திருக்கிறேன். அவன் தாக்காமல் போனால் என் ரத்தம் கொதிக்க வாரம்பித்து விடுகிறது. வரப் போகிற ஆபத்தை எதிர்நோக்கிக் கொண்டிருக்க என்னால் முடியாது. சரியான சந்தர்ப்பம் வருவதற்கு முன்னரே நான் பாய்ந்து விடுகிறேன். கண் மண் தெரியாமல் பாய்ந்து விடுகிறேன். இது தவறு என்பது எனக்குத் தெரியும். சண்டை போடும் முறையும் இதுவல்ல. இதனாலேயே தான் வீட்டை விட்டு ஓடி இங்கு வந்திருக்

கிறேன். என் அப்பாவைப் போல் என்னால் காத்துக் கொண்டிருக்கமுடியாது.'

'வந்து.... உன் அப்பா எதற்காகக் காத்துக் கொண்டிருக்கிருர்?'

—'எனக்குத் தெரியாது. எனக்கு அரசியலில் ஆர்வமோ, அக்கரையோ கிடையாது.....' ஜார்ஜின் தலை லாகரியிலிருந்த தம்ளர்களுக்குப் பின்னல் மறைந்து விட்டது.

நான் மெல்ல என் விரல்களை விடுவித்துக் கொண்டேன். அவை வியர்வையால் நனைந்திருந்தன. மெதுவாகக் கரத்தை உயர்த்தி, செல்லமாக வளர்க்கும் பிராணியைப் போல மென்மையாகப் பார்த்துக் கொண்டேன். விரல்களுடன் இணைந்த, மெத்தென்ற, வெண்ணிறமான மாமிசப் பகுதி. புறங்கையில் பொன்னிற ரோமங்கள் அவன் பிடித்த பிடியில் அப்படியே தோலுடன் ஒட்டியிருந்தன. உண்மையில் நாம் எத்தனை முறை நம் கரத்தை இப்படிப் பார்த்துக் கொள்கிறோம்? இதன் பிடிக்குள் அகப்படும் எந்தப் பொருளும் நம்முடையதாக முடியாதோ என்ற பிரமை எழுகின்றது கூடவே.

'விலியை நான் ராடர் என்று ஏன் சொன்னேன் தெரியுமா?'

'இட் ஈஸ் நத்திங்' — ஜார்ஜின் முகத்தை நேருக்கு நேர் பார்ப்பதை நான் தவிர்த்தேன்.

'ஏன் என்ருல் நானும் அப்படிப் பட்டவன்தான். உன்னிடம் என் தந்தையிடம் நான் பெரு மதிப்புக் கொண்டிருப்பதாகக் கூறினேன் அல்லவா? (உண்மையில் அவன் அப்படிச் சொல்லவேயில்லை) உனக்கு அவரைத் தெரியாது. அவர் உயிரோடு இருக்கிருரா இல்லையா என்றும் எனக்குத் தெரியாது. "அவர்கள்" அவரைப் பின்தொடர்ந்து கொண்டிருந்தனர்.'

'அவர்கள்?...யார் அவர்கள்?'

'அவர்கள்'....சில்லிட்டுப் போன பீதி...சுருண்டு கிடக்கும் பாம்பு போல் அவன் விழிகளில் நெளிந்தது.

'நீ பார்த்ததில்லை அவர்களை...' அவன் என் கரத்தைத் தன்னிரு உள்ளங் கைகளிடையே அழுத்திப் பிடித்துக் கொண்டான். அக்கரிய முகத்தில் வெள்ளை வெளேரென்ற பல் வரிசை மட்டும் இந்தக் காதிலிருந்து அந்தக் காதுவரை பளிச்சிட்டது. அவன் சிரிக்கிருனு, அல்லது தன்னை மறந்த ஒரு கணத்தில் வாய் தானுகவே திறந்து கொண்டு விட்டதா என என்னுல் புரிந்துகொள்ள இயலவில்லை.

'நான் இங்கு பத்திரமாய் இருக்கிறேன். அண்ட் ஃபார் தட் ஐ ஹேட் ஹிம். ஐ ஹேட் ஹிம் லைக் ஹெல்.'

நாங்கள் மௌனமாய்க் குடித்தோம். குடித்துக் கொண்டேயிருந்தோம். எனக்கு முன்னுல் கடிகாரம் இருந்ததை இப்பொழுதுதான் முதன் முறையாகக் கவனித்தேன். சிகரெட் பிடிக்க வேண்டும் என நினைத்தேன்...நான் சிகரெட் பிடித்து நெடு நாளாகி விட்டது போலிருந்தது.

'நீ என்ன யோசித்துக் கொண்டிருக்கிருய்?'...அவன் குரலில் குழந்தையைப்போல் ஒரு ஆவல்.

'ஒன்றுமில்லை.'

'என்னிடத்தில் நீ இருந்தால் என்ன செய்வாய்?'

'உன்னிடத்திலா?'...நான் சிரித்தேன். நான் நானுக இருக்கும் பொழுது என்ன செய்ய வேண்டுமென்பதே இன்று வரை எனக்குத் தெரியவில்லை. 'உன் நாட்டைத் துறக்கும் முன் நீ நிச்சயம் ஒரு முடிவிற்கு வந்திருப்பாய்.'

'தப்பித்துக் கொள்வதற்காக இருக்கலாம்.'

'யாரிடமிருந்து?'

என் நாட்டினரிடமிருந்து. இன்னும் மற்ற விஷயங்களிலிருந்து...எனக்கு இப்பொழுது எதுவும் நினைவில்லை.

இனிக் குடிக்க முடியாது. காலையிலிருந்து இன்னும் ஒன்றும் சாப்பிடவில்லை. வெறும் வயிற்றை லாகர்தான் நனைத்திருந்தது. நீலமும் பச்சையுமாயொரு புகைப் படலம் நானிருந்த இடத்திலிருந்து வெளியே பார்க்கக் கூடிய சாளரத்தின் முன் உள்ளே புக வழியைத் தேடிக் கொண்டு திரண்டிருந்தது. அங்குதான் கடிகாரத்தின் டையல் இருந்தது. பளிச்சென்று வெண்மையாக— காற்றிலே ஊசலாடும் மிகப் பழைய சடலம் போல்— எப்பொழுதிலிருந்து என்னுடன் உராய்ந்து கொண்டிருந் ததோ!...

'நீ ஏன் சிரிக்கிறாய்?'

நான் சிரிக்கிறேன் என்பதை அறிந்து எனக்கே வியப்பாக இருந்தது. நான் சிரிக்கிறேன் என்று தெரிந்த பின் அதை அடக்கிக் கொள்வது அர்த்தமற்றதாகப் பட்டது.

'ஒன்றுமில்லை. ஏதோ நினைவு வந்தது.' —பேச்சைத் திசை மாற்றினேன். உண்மையில் அப்பொழுது எனக்கு எதுவுமே நினைவு வரவில்லை.

'என்ன நினைவு வந்தது?' அவன் என் பக்கம் குனிந்தான். என் கழுத்தைப் பிடித்துக் கொண்டு தொங்கி விடுவான் போலிருந்தது. 'சொல்லு! என்ன நினைவு வந்தது?'

'மூன்று நாட்களுக்கு முன்னர் நான் சிறைக்குப் போயி ருக்க வேண்டும். மயிரிழை தப்பினேன்.'

தவிர்க்க முடியாத கட்டத்தில் எதையும் நினைவு படுத்திக் கொண்டுவிட முடியும். உண்மையிலேயே மூன்று நாட்களுக்கு முந்திய அச்சம்பவம் எனக்கு நினைவு வந்துவிட்டது.

ஆமாம் மயிரிழை தப்பினேன். ...(எனக்கு இப்படிப் பட்ட பதப் பிரயோகங்கள் மிகவும் பிடிக்கும். சமயா

சந்தர்பங்களில் இவற்றைத் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருக்கிறேன்)

'லண்டனில் ஒரு நாள் பலுடன் தங்கி இருக்கிறேன். அவனுடைய கேர்ள் ஃபிரண்ட் அவனுடன் சிலநாட்கள் தங்கி இருக்க பின்லாந்திலிருந்து வந்திருக்கிருள். இருப்பது ஒரே அறை. அதனுல் நான் வெளியே தானிருக்கிறேன். பகல் முழுவதும் மியூசியம் லைப்ரெரியில். இரவில் தூங்குவதற்கு யூஸ்டேன்ட் ஸ்டேஷனுக்குப் போய் விடுவேன். தினமும் குறிப்பிட்ட என் நண்பன் என்னைச் சந்தித்து எனக்கு சில ஷில்லிங்குகள் தந்து விட்டுச் செல்லுவான். அன்று மாலை ஏதோ காரணமாக என்னிடமோ பத்து பென்னி தான் மீதமிருந்தது. பகல் முழுவதும் மியூசியத்தில் அமர்ந்திருந்ததால் பசியே தெரியவில்லை. ஆனுல் இரவாக ஆக என்னுல் சமாளித்துக் கொள்ள இயலவில்லை. கிங்க்ஸ் கிராஸ்ஸிலுள்ள மலிவான ஹோட்டல்கள் கூட மூடப் பட்டு விட்டன. அந்நேரத்தில் பஸ்ஸில் ஏறி அமர்ந்து நகரத்தின் 'செண்டருக்கு' போகும் பொறுமை என்னிடம் இருக்கவில்லை. நெடு நேரம் வரை நான் வாரேன் ஸ்டிரிட் ஸ்டேஷனின் சுற்றும் முற்றும் நிலை கொள்ளாது உலவிக் கொண்டேயிருந்தேன். கடைசியில் ஒரு கிரேக்க ரெஸ்டரென்ட் கண்ணில் பட்டது. வெளியிலிருந்து பார்க்க மலிவானதாகத் தோன்றியது. உருளைக் கிழங்கு சிப்ஸ், ஒரு டோஸ்ட் இரண்டிற்கும் ஆர்டர் கொடுத்து விட்டு உள்ளே சென்று அமர்ந்தேன். இவை இரண்டுமே மிக மலிவானவை என்பது உனக்குத் தெரிந்திருக்கும். அதிகமாய்ப் போனுல் எட்டு பென்னி இருக்கும். அவ்வளவு தான். இதனுல் நான் கிஞ்சித்தும் கவலையற்றவனுய் அமர்ந்திருந்தேன். சில நிமிடங்களுக்கெல்லாம் எனது பார்வை யதேச்சையாக எதிரே மாட்டப்பட்டிருந்த விலைப் பட்டியலின் மீது சென்றது. உள்ளே வந்த

பொழுது எனக் கிருந்த பதட்டத்தில் இதை நான் கவனிக்கவில்லை போலும். ஒரு டோஸ்ட் ஒரு பிளேட் சிப்ஸின் விலை ஒன்னரை ஷில்லிங். என்னிடமோ அந்தப் பென்னிகளைத் தவிர கால் பென்னிகூட கிடையாது. அப்புறம் நான் என்ன செய்தேன் தெரியுமா? விருட்டென்று எழுந்து நின்றேன். (இப்பொழுதும் ஜார்ஜின் முன் அப்படி எழுந்து நின்று காண்பித்தேன்) உரக்க "குட் ஈவினிங்! அட! வெளியே ஏனப்பா நிற்கிறாய்?" என்று கத்தினேன்! (இப்பொழுதும் ஜார்ஜிடம் கத்திக் கொண்டிருக்கிறேன் உண்மையிலேயே) ஹோட்டலின் முதலாளி திகைப்புடன் என்னையே பார்த்துக் கொண்டிருந்தான். "என் நண்பரொருவர் வெளியே நிற்கிறார். அவரைப் பார்த்து விட்டு வருகிறேன்" என்று கூறிய நான் டோஸ்டும், சிப்ஸும் அப்படியே மேஜையின் மீதிருக்க நடந்து விட்டேன், கதவை நோக்கி. அதுவும் பதற்றமில்லாமல் நிதானமாக. (நான் இப்பொழுது மேஜைகளிடையே யிருந்த இடைவெளியில் நடந்து காண்பித்தேன். கதவைத் தாண்டியதுமே ... உனக்குத் தான் தெரியுமே ... திரும்பிக்கூடப் பார்க்கவில்லை ... (ஆனால் நான் இப்பொழுது திரும்பி ஜார்ஜிடம் வந்து நின்றேன். ஒரு வாய் நிறைய லாகரைப் பருகி விட்டு என்னிடத்தில் அமர்ந்தேன்.)...அப்புறம் வெகு நேரம்வரை ஓடினேன், ஓடிக் கொண்டே யிருந்தேன்.'

'அவன் உன்னைத் தொடர்ந்து வந்தானா?'

இல்லை...இதில் வேடிக்கை என்னவென்றால் அவன் என்னைத் துரத்திக் கொண்டு வரவில்லை. நான் தான் அந்த இருட்டில் ஒரு சந்திலிருந்து இன்னொரு சந்திற்குள் ஓடிக் கொண்டிருந்தேன். வேடிக்கையைப் பார்...என் பையில் அந்தப் பத்துப் பென்னியும் பத்திரமாக இருந்தது. என் பசியோ எப்போதோ அடங்கி விட்டிருந்தது'

'நல்ல ஆளப்பா நீ'—எனச் சிரித்துக் கொண்டே கூறினான் ஜார்ஜ்.

அவன் சிரித்துக் கொண்டிருப்பதைக் காண எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. 'மறுநாள் இச் சம்ப வத்தைப் பற்றிக் கூறியதும் என் நண்பனும் அவன் காதலியும் கூட இப்படித்தான் சிரித்தனர். எனக்கு மிகுந்த வியப்பை அளிக்கக் கூடிய விஷயம் என்ன வென்றால், மனிதர்கள், அதுவும் இந்த மாதிரியான சம்பவங்களுக்கு ஆளாக நேர்கின்றவர்கள் பின்னால் தங்களது இந்த அனுபவத்தை எத்தனை லேசாக எடுத் துக் கொண்டு விடுகின்றனர். ஆனால் அக்கணத்தில் தான் மனிதன் எத்தனைத் தடுமாறி, திகிலடைந்து போய் விடுகிறான்! வியர்த்துக் கொட்டி சட்டை உடம்போடு ஒட்டிக் கொண்டு விடுகிறது. வயது அனுபவம் எல்லாம் இருந்தும் கூட நெஞ்சுக்குள்ளே என்ன பதைபதைப்பு? என்ன திகில்! அன்றைய இரவு பத்துப் பென்னியை ஜேபியில் வைத்துக் கொண்டு இருண்ட சந்துகளில் நான் ஓட்டமாய் ஓடும்போது யாரோ என் காதில் "...யூ ஃபூல் யூ...இடியட்...யூ..." என்று ... கூவிக் கொண்டே யிருந் தான்.'

'நீ பிரமாதமான ஆளப்பா!' என்றான் ஜார்ஜ். மூன்றும் முறையாக அவன் இதைக் கூறியதும் எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. கண் முன்னே அந்தக் கடிகாரத்தின் முட்கள் வேகமாய்ச் சுழன்றன. நான் டாய்லெட்டை நோக்கி விரைந்தேன். டாய்லெட் அறை கீழ் தளத் திலிருந்தது. நான் அவசர அவசரமாகப் படிகளிலிறங் கினேன். படிகளிலேயே ஏதும் நேர்ந்து விடப் போகி றதோ என்ற பயம் எனக்கு. கையால் வாயைப் பொத்திக் கொண்டு எனக்குள்ளே ரகசியமாய்ச் சிரித்தேன்.

அப்படியொன்றும், படிகளிலோ, வாஷ் பேசினிலோ, நேர்ந்து விடவில்லை. வாந்தி வந்து விடும் என எதிர்

பார்த்து நெடு நேரம் வரை வாஷ் பேசினில் குனிந்து கொண்டிருந்தேன். இப்பொழுது கண் முன்னே கடிகாரத்தின் அந்த வெள்ளை டையல் சுழலவில்லை. பைப்பை நன்ருகத் திறந்து விட்டேன். இனி ஒவ்வொன்ருக நிதானமாய் நினைவு படுத்திக் கொள்ளலாம். என் குரலைக் கேட்காமலிருக்கலாம். (இரவு இந்நேரத்தில் நான் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறேன். இல்லை...இது சரியல்ல. நான் வரிசைக் கிரமமாக, ஒவ்வொன்ருய் நினைவு படுத்திக் கொள்ளப் போகிறேன். இது மிக முக்கியமானது மட்டுமல்ல, மாபெரும் உண்மை இதனைச் சார்ந்திருக்கிறது )...வரிசைக் கிரமமாக, இந்தச் சொல் எனக்குப் பொருத்தமானதாகப் பட்டது. அடிக்கடி இதை நாவில் புரட்டி எடுத்தேன்....நினைவு படுத்திக் கொள்ள வேண்டியவைகளை நினைவில் கொண்டு வருவதற்குப் பதிலாய் இந்தச் சொல்லையே திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தேன். அதாவது...நான் வரிசைக் கிரமமாக, விவரமாக எல்லாவற்றையும் நினைவு படுத்திக் கொள்ள வேண்டும்.

டாய்லெட்டிலிருந்து வெளிவந்த என் கால்கள் தடைபட்டன போல் நின்று விட்டன. நடமாடிக் கொண்டிருந்த ஜோடிகள் என்னைச் சூழ்ந்து கொண்டு விட்டன. சுழலிலே மாட்டிக் கொள்வது போல நான் திக்கு முக்காடிப் போனேன். சிலர் என்னை உந்தித் தள்ளி விட்டுப் போனுர்கள். இடமும், வலமுமாய் மாறி மாறி பொம்மலாட்டப் பொம்மை போல் நான் சுழன்றேன். நான் கால்களை ஊன்றிக் கொள்ள முயன்றேன். நான் முயற்சித்த போதெல்லாம் காலடியிலிருந்த தளம் சுருங்கி விட்டது போல், துரிதகதியில் சுழலும் பம்பரத்தின் மீது நான் நிற்பது போன்ற உணர்வு என்னுள்ளே ஏற்பட்டது.

'நீ இங்கேயா இருக்கிருய்?' விலியின் குறுந்தாடி என் நெற்றியிலே உரசியது.—'ஜார்ஜ்?'

'அங்கே.' நான் மேல் தளத்தைச் சுட்டிக் காட்டினேன்.

அவனுடன் நடனமாடிக் கொண்டிருந்த பெண்ணின் முகம் அவனது மார்பிலே புதைந்திருந்தது. அடர்த்தியான கூந்தல் கற்றை மட்டும் தான் தெரிந்தது.

'நீ வரவில்லையா? உன் லாகர்...'

'வருகிறேன். நீ டான்ஸ் ஆடப் போவதில்லையா?'

இம்முறை அப்பெண்ணின் முகம் நிமிர்ந்தது. அவளது திறந்த தோள்களில் பவுடரின் லேசானப் பூச்சுத் தெரிந்தது.

மலிவு ரகமான சீட்டித்துணியில் சம்மர் ஸ்கர்ட் அணிந்திருந்தாள். நெடுநேரமாய் ஆடியதாலோ என்னவோ, உதட்டுச் சாயத்தின்மீது வியர்வைத் துளிகள் அரும்பி நின்றன.

கூட்டத்தின் நடுவே நிற்க முடியவில்லை. அவர்கள் என்னருகிலேயே மந்தகதியில் மெள்ளடி வைத்து ஆடத் துவங்கினர். மிக மிகக் குறுகிய இடம். சில சமயம் விலியின் தலை என்னருகே நெருங்கி வரும். சில சமயம் அந்தப் பெண்ணின் கருத்தடர்ந்த கூந்தல்.

'எப்படி இருக்கிறது?' விலியின் கரம் அப்பெண்ணின் கூந்தலில் அளைந்தது.

அவள் மென்னகை புரிந்தாள்.

'இது ரொம்ப மோசம்... இல்லை?' சிரித்துக்கொண்டே கூறினான் விலி. அப் பெண்ணின் கரு விழிகள், உறங்கி விழிக்குமே ஒரு பொம்மை—தலையைச் சாய்த்ததும் கருமணிகள் மூடிக்கொண்டு விடும், நிமிர்த்தியதுமே விழிக்குமே... அதுபோல இருப்பதாக எனக்குப் பட்டது.

'ஆடுகிறாயா! ... மே. பி. வித் ஹர்...' என்றான் விலி.

அவர்களிருமே சுழன்று கொண்டிருந்தனர்... மிகமிக மெதுவான, லேசான, அடி வைத்து அசைந்து... யாரு

டைய முகம் என்னருகில் வந்தாலும், என் காதில் ஏதோ கோ கிசுகிசுத்தனர்.

'இவளுடைய தோழிகள் அங்கே உட்கார்ந்திருக் கின்றனர். என்னை இவளுடன் பார்த்துவிட்டால் உயி ரையே விட்டு விடுவார்கள்' — இது விலி.

'நீ ஆடமாட்டாயா? மே பி வித் மி...' இது அந்தப் பெண்.

'அந்த இத்தாலியன் உன்னைத் தடுத்தானே' — என் றேன் நான்.

'அவன் கிடக்கிறான்' என்றான் விலி.

ஆர்கெஸ்டராவின் அந்தப் பழைய தேய்ந்த மெட்டி னிடையே போத்சார்டேயின் 'லிட்டில் நைட்' இசை யின் சாயல் லேசாக மேலெழும்பியது. எல்லாம் ஒரு அரைக்கணம்தான். அக் கணத்திற்குள் யாரோ என் மூச்சை, நூலைப்போல் விரலிலே சுற்றிக் கொண்டு இழுப் பது போலிருந்தது.

'ஜின் குடிக்கிறாயா? பணம் இவள் தருவாள்'...விலியின் குரல் தணிவாக இருந்தது.

'மே பி வித் மி'...அந்தப் பெண் முன்போலவே அலட் சியமான குரலில் கூறினாள்.

நான் ஏதும் பதில் கூற வாயெடுப்பதற்குள், நடன மாடிக் கொண்டிருந்தவர்களின் கும்பல் அவர்களை என்னி லிருந்து வெகுதூரம் இழுத்துச் சென்று விட்டது. அவர்கள் திடீரென என் கண்களுக்கு முன்னேயிருந்து மறைந்து விட்டனர்.

இன்னமும் எனக்குத் தலை சுற்றிக் கொண்டுதானிருந் தது. ஆனால் டாய்லட்டிற்குப் போவதற்கு முன்னிருந் தது போல அவ்வளவு சுற்றவில்லை. பளுவற்ற லேசான ஒரு உணர்வு. எங்கோ மிதப்பதுபோல். மூட்டம் கலைந்து, வானம் வெளுத்து, பெய்து ஓய்ந்த மேகத்திரள்கள்

அங்கு மிங்குமாய் சிதறிக்கிடக்குமே… அதுபோல் சுழன்று விட்ட உணர்வு.

கும்பலினிடையே வழியை விலக்கிக் கொண்டு செல்வது எளிதாக இல்லை. பேஸ் மெண்டின் படிகளருகே வந்த நான் நின்றுவிட்டேன். அங்கேயே அப்படியே அந்தப் படிகளின் மீது படுத்துக்கொள்ள, உறங்கிவிடும் ஆசை என்னுள் அடக்கமாட்டாமல் பொங்கியது.

'ஹலோ!' யாரோ என் கரத்தைப் பிடித்துக் கொண்டனர். திரும்பிப் பார்த்தேன். பப்பின் முதலாளி, அந்த இத்தாலியன் நின்றான். என்னைப் பார்த்துவிட்டு, தூரத்திலிருந்து ஓடோடியும் வந்தான் போலிருக்கிறது. மடித்து விட்டுக் கொண்டிருந்த சட்டையின் கை மடிப்பு அவிழ்ந்து தொங்கியது. மூச்சு விடக் காற்றுப் போதாமல் தவிப்பது போல் அவனுக்கு மூச்சுத் திணறியது.

'இதோ பார்! உன் நண்பன் எங்கே?'

நான் தோள்களை குலுக்கினேன்.

'அவனை இங்கிருந்து உன்னால் அழைத்துக் கொண்டு போக முடியாதா?…அதாவது…இந்த இடத்திலிருந்து…'

எங்களைச் சுற்றி நாற்புறமும் நடனம் ஆடிக் கொண்டிருந்தவர்களின் வட்டம்…சில சமயம் குறுகி, எங்களை நெருக்கியது. பின்னர்…விரிந்து கொண்டே போயிற்று. பாண்ட்டிற்கு முன்னால் யாரோ ஒருவன் மைக்கை இரு கரங்களாலும் பிடித்த வண்ணம் பாடிக் கொண்டிருந்தான். எங்களிருவரிடையேயும் எங்கள் பார்வையைத் தவிர வேறு எதுவுமில்லை.

'நீயே ஏன் சொல்லக் கூடாது?' என்றேன் நான்.

'என்னால் அவனிடம் எதையுமே கூற முடியாது. நான் சொல்வதை அவன் கேட்க மாட்டான்.'

'ஆனால் அவன் — அவன் ஏன் இங்கே இருக்கக் கூடாது?'

'இந்த இடம் அவனுக்குச் சரியல்ல.' —செயலற்ற ஒரு

தீனமான பாவம் அவன் குரலிலே ஒலித்தது — 'முன்பே பலமுறை நான் அவனைத் தடுத்திருக்கிறேன்.'

படியிலே படுத்துக் கொள்ளலாமா என்றிருந்தது எனக்கு.

'என்றாலும் ஒன்றும் செய்ய முடியாது. இதோ பாருங்கள். சில மணி நேரத்திற்கு முன்னர் தான் எங்கள் சந்திப்பே நிகழ்ந்திருக்கிறது! உங்களால் இதை நம்ப முடிய வில்லையா?' ஒரு கணம் அந்த பரிதாப கரமான முகத்தின் பால் எனக்கு வெறுப்பாக இருந்தது. கொழ கொழ என்ற ஏதோ ஒன்றைத் தொட்டு விட்டது போல் ஒரு அருவருப்பு. 'எனக்கு அவனைப் பற்றி எதுவுமே தெரியாது. அவனது முழுப் பெயர் என்னவென்று கூடத் தெரியாது—...' என்றேன். நான் இதைச் சொன்ன விதம், வாழ்க்கையில் பெயர் தான் மிக மிக மகத்துவம் உள்ளது; அது இல்லாமல் எதுவுமே நடக்காது என்று நினைப்பது போலிருந்தது.

சட்டென்று அவன் என் இரு கைகளையும் பிடித்துக் கொண்டான். மிக மிக அண்மையில் நெருங்கி வந்தான்...'நீ... நீ இங்கேயே இருப்பாயா?'

'ஆம்' என்று தலை யாட்டினேன் நான் — 'நீயாக என்னை வெளியே தள்ளாத வரையில்.'

அவனது பிடி தளர்ந்தது. ஆனால் அவனது விழிகள் இன்னும் என்னைத் துருவிக் கொண்டு தானிருந்தன. நான் படிகளின் மீது ஏறத் துவங்கினேன். இன்னமும் அவன் பின்னாலிருந்து என்னைப் பிடித்துக் கொண்டிருப்பது போலவே தோன்றியது. 'கடவுளே ஒரு சிகரெட் இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்.' சிகரெட் குடித்து ஒரு யுகமே ஆகி விட்டது போலிருந்தது.

இடிபட்டுக் கொண்டு என் சாமர்த்தியத்திற்கு ஏற்ப இடித்துத் தள்ளிக் கொண்டு என் மேஜையை நெருங்கினேன். ஜார்ஜ் சுற்றும் முற்றும் நடப்பவைகளின்

உணர்வேயில்லாது உறங்கிக் கொண்டிருந்தான். அவனது தலை மேஜையின் ஓர் ஓரத்தில் சாய்ந்திருந்தது. உடல் நாற்காலிக்குள் ஒடுங்கிக் கிடந்தது. பாதி மூடியிருந்த இமைகளிடையே வெள்ளை விழி பஞ்சின் துகள் போல் பிதுங்கி இருந்தது. முதலில் அவன் என்னைப் பார்ப்பது போன்ற பிரமை என்னுள் எழுந்தது. ஆனால் அது உண்மையல்ல...உதட்டோரத்தில் எச்சில் வழிந்து மெல்லிய வெள்ளைக் கோடு போல் வரண்டிருந்தது. நான் கைகுட்டையை எடுத்து, பிறர் பார்க்காத சமயம் அதைத் துடைத்து விட்டேன்.

அன்றிரவு முதல் முறையாக அவன் வயதில் மிக இளைஞன், கேலிக்கிடமாகும் வகையில் ஒன்றுமறியாதவன், அப்பாவி எனத் தோன்றியது.

என்னுடைய தம்ளர் காலியாக இருந்தது. அவனுடைய தம்ளரிலிருந்து கொஞ்சம் லாகரை எடுத்து என்னுடைய தம்ளரில் ஊற்றிக் கொண்டேன். ஒரு கணம் பாதி மூடியிருந்த விழிகளால் என்னை நோக்கிச் சிரிப்பது போலிருந்தது. அதில் லேசான கிண்டலின் சாயல். அவன் தூங்கவில்லை. என்னைப் பார்த்துக் கொண்டு தானிருக்கிறான். தூங்குவது போன்ற பாவனை என என் நினைப்பு ஓடியது. ஒருக்கால் இதுவும் என் பிரமையோ! அப்படியும் இருக்கலாம் என நினைத்த நான் குடிக்க வாரம்பித்தேன். திடீரென என்னைத் தனிமை சூழ்ந்து கொண்டது. என் நண்பனுக்கு டெலிபோன் செய்யலாமா என நினைத்தேன். அவனது கேர்ள் ஃபிரண்ட் புறப்பட்டுப் போயிருந்தால் அறையில் போய் படுத்துறங்கலாம் அல்லவா? ஆனால் ஒருவேளை அவள் சென்றிரா விட்டால் இது தவறாகப் படலாம். இவனை எழுப்பலாமா? இன்னும் எத்தனை நேரம் தூங்குவான் என நினைத்தேன். இந்த வயதில் வீட்டை விட்டு ஓடி வந்திருக்கிறான். இப்பொழுது தூங்குகிறான்.

நல்ல தூக்கம்···பழைய விஷயமொன்று என் ஞாபகத்தில் வந்தது. ஐரோப்பாவிற்குப் புறப்பட்டு வரும் முன் வீட்டில் எனது கடைசி இரவு — ஜூலை மாதத்து இரவு. மறு நாள் நான் புறப்பட வேண்டும் — அப்பா என் படுக்கையருகில் நின்ருர். நான் தூங்குவதாக நினைத்தார் போலும். நான் யாவற்றையும் கவனித்துக் கொண்டு தானிருந்தேன். எங்கள் ஊரில் ஜூலை மாதத்து இரவுகள் கூட வெளிச்ச மாயிருக்கும். கண்களை மூடிக் கொண்டால் கூட எல்லாம் தெரியும்··· திடீரென இங்கிருந்து போய்விட வேண்டும் என்று தோன்றியது. இது மிகவும் எளிது. நாற்காலியை விட்டு எழுந்திருந்து, கதவைத் திறந்து போய்விட வேண்டும். அவ்வளவு தானே! ஜஸ்ட் டு கம் அவுட்···ஜார்ஜின் கடை வாயிலிருந்து மீண்டும் எச்சில் வழிகிறது உதட்டின் வழியாக மோவாயிலிறங்கி நீல நிற முட்கள் போல் குத்திட்டு நின்றன ரோமங்களூடே··· நான் கைக்குட்டையால் மீண்டும் அவன் வாயைத் துடைக்கிறேன்.

குரல்கள் — அவலமான ஒரு கூக்குரல்.

பயங்கரமான கெட்ட கனவு போல் கீழ் தளத்தின் சுவர்களிலே நிழல்கள் ஊசலாடுகின்றன. நாற்காலிகள் தரதரவென இழுபடும் ஓசை. இசைகேடான சிரிப்பு — நான் எழுந்திருக்க வில்லை. ··· தம்ளரில் லாகர் இன்னும் மீதமிருக்கிறது. என்ருல் எழுந்திருக்க முடியவில்லை. முற்றும் எதிர்பாராத முறையில் அக்கணத்தில் என்னுள்ளே விசித்திரமான அமைதியை நான் உணருகிறேன். சுட்டெரிக்கும் வெய்யில், கொதிக்கும் மணற் பரப்பின் எல்லையற்ற நீள் வெளி—நான் அதைப் பிடித்துக் கொண்டு நிற்கிறேன்.

ஜஸ்ட் டு கம் அவுட். ஜஸ்ட் டு...

எனது முழு பலத்துடன் ஜார்ஜை உலுக்கினேன். திடுக்கிட்டு எழுந்து உட்காருகின்ற அவன் என்னையே

வெறித்து நோக்கினன். பழக்கப் பட்ட மிருகம் சமயத்தில் தன் பாடத்தை மறந்து விட்டு, சுற்றும் முற்றும் நின்று வேடிக்கை பார்ப்பவர்களை வெறித்து வெறித்துப் பார்க்குமே! அது போல் ஏனோ சட்டென அவ் விழிகளில் திகில் படர்ந்தது.

'என்ன விஷயம்?'

'புறப்படு ... இங்கிருந்து போய் விட வேண்டும்.'

'ஆனல் ... இப்பொழுதேயா?'

அவனுக்கு எதுவும் தெரியாது. அவனிடம் யாவற்றையும் கூறி விட வேண்டியது உசிதமா என்பதை என்னுல் உடனடியாக நிச்சயிக்க இயல வில்லை.

'நான் தூங்கி விட்டேனு?' என்ருன் அவன். என் முகத்தில் என்ன தெரிந்ததோ அவன் கலவரமடைந்தான்.

இதென்ன சத்தம்?

சோடா பாக்டரி வெளியே இருளில் நின்றிருந்த பொழுது எப்படி யிருந்ததோ அதே போல் அவன் முகம் மாறிவிட்டது... இப்பொழுது... அந்த இரவு வெகு தூரத்தில் இருப்பது போல்... பொருத்த மற்றதான ஒன்ருய்த் தோன்றுகிறது.

'நாம் போக வேண்டும் ... வெளியே.'

வெளியே லண்டனின் இரவு... எங்களை எதிர் நோக்கிய வண்ணம்... எங்களை விழுங்கத் தயாராக...

'விலி எங்கே? அவனில்லாமல் நாம் போக முடியாது.'

'அவன்... அவன் வர இயலாது.'

பப்பின் வாயிற் கதவு திறக்கிறது. தட தட வென்று சிலர் உள்ளே நுழைகின்றனர்.

'தே ஆர் தேர்... தே டாமிட்' மிக அசிங்கமான வசவு. கூச்சல்... ஈக்களின் ஞொய் என்ற சத்தம் போல், அர்த்த மற்ற ஓசை.

நான் ஜார்ஜின் கையைப் பற்றி இழுக்கிறேன்.

'நான் இப்பொழுது வர மாட்டேன்.'

'உனக்குப் பயித்தியமா?...'

'அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?'

'அவர்களா?' நான் கோபத்துடன் அவனை எழுப்பி நிறுத்துகிறேன். அவன் எனக்கு நேர் எதிரே நிற்கிறான். 'சொல்லு, அந்த அவர்கள் யார்?...' நான் அவன் தோளைப் பற்றி உலுக்குகிறேன். —'சொல்லு! யார் அவர்கள்?'

'யூ ஆர் டிரங்க்' ஒரு உதறலில் அவன் தன்னை விடுவித்துக் கொள்கிறான்.

இது உண்மைதான் என நினைக்கிறேன் நான். ஒருக்கால் நான் அதிகம் குடித்து விட்டேனோ? இதை எண்ணியதும் எனக்கொரு ஆறுதல்.

'நீ இங்கேயே இருப்பாயா!'

'எங்கே வேண்டுமானாலும் இருப்பேன்...'

'இதைக் கேள்'—எங்களுக்கு நடுவே இருந்த நாற்காலியை நகர்த்த முயலுகிறேன்.

'யூ ஆர் டிரங்.' அவன் பின்னால் நகர்ந்து கொண்டான்.

நான் நடந்தேன். அவனும், ஆனால் சற்றுத் தள்ளி. கண்ணைக் கட்டிக்கொண்டு விளையாடுவார்களே அது போல். ஒருவரிடமிருந்து மற்றொருவர் எட்டப் போவதாக நினைத்துக் கொண்டு, மேலும் மேலும் நெருங்கி வருவார்களே அது போல.

வாயிலை நோக்கி நடக்கிறோம். முதலில் மேஜைகள் எதிர்ப்படுகின்றன. பாதி எரிந்த சிகரெட் துண்டுகளின் குவியல்கள், காலி புட்டிகள், தம்ளர்கள், நாற்காலிகளின் மீது கிடக்கும் மாலைப் பத்திரிகைகள், தரையின் ஒரு மூலையில் கிடக்கும் லிப்ஸ்டிக் குழல்; பரபரப்பில் எவளாவது மறந்து விட்டுச் சென்றிருப்பாள்...திடீரென

ஏதோ ஒரு சம்பவம் நிகழ்ந்துவிட்டது. முற்றிலும் எதிர் பாராத வகையில். முன் பின் யோசிக்க நேரமில்லாது அலை மோதிய கூட்டத்தின் சுழல் அடித்துப் புரட்டிக் கொண்டு போய் விட்டது எனத் தோன்றியது.

லிலி எங்கே?

அந்த இத்தாலியன்?

மேலே எதுவும் சிந்திப்பதற்குள் தடாலென கதவு திறந்தது. திறந்த வேகத்தின் அதிர்ச்சியில் ஜார்ஜ் என்னிடமிருந்து பிரிந்து விட்டான்…கடைசி நிமிடத்தில் (கடைசி என்ன இது, துவக்கமாகவும் இருக்கலாம்.) என்னுடைய மிக மிக முக்கியமான அருமையான வஸ் துவைப் போல் அவனை என்னிடம் இழுத்து வைத்துக் கொள்ள முயற்சித்தேன். ஆனால் கிர் ரென்று சுற்றிய என் தலை என்னைக் கீழ் நோக்கித் தள்ளியது. ஜார்ஜைப் பிடிப்பதற்காக நீட்டிய கரம் மடங்கிக் கொண்டது. மாடி இல்லை, இது மாடி அல்ல. வெறும் வெளிச்சம்—விசித் திரமான கதியில் மேலும் கீழும் ஆடும் பல்ப் — என் கையை திருகிக் கொண்டே போகிறார்கள் (டோன்ட் லெட் தெம் எஸ்கேப் — என்ற விகாரமான கூச்சல்— பின்னர் அதுவுமில்லை.)

என் கை ஒரு கட்டைபோல் ஊசலாடுகிறது. இல்லை. நடுங்குகிறது. எனக்குச் சம்பந்தமற்ற ஏதோ ஒன்று போல் என்னால் அதைப் பார்க்க முடிகிறது. அது என் னுடைய கையே அல்ல … யாரோ அதை இன்னும் இன்னும் திருகிக் கொண்டே இருக்கிறார்கள் … ஆம். கடைசி வரை…அதற்குள் அது மளாரென முறிந்து விடு கிறது…உடலெங்கும்…ஆ…ஆ இல்லை. இது வலி இல்லை. வலி என்றால் அதற்கும் ஒரு எல்லையிருக்கும். இது… அதற்கெல்லாம் அப்பால்…வேதனை, வலி என ஒன்றை இனம் பிரித்தே உணர முடியாததொரு நிலை…ஆ…

'ஐ சே லீவ் ஹிம் அலோன்', இது அந்த இத்தாலிய

னின் குரல் அல்லவா? என்னுள் லேசான வியப்பு. என் மேல் கவிழ்ந்திருந்த முகங்கள் ஒவ்வொன்றாய் விலகுகின்றன. ஆனால் என்னால் அவர்களைப் பார்க்க முடியவில்லை. கழுத்தினருகே அவர்களுடைய சூடான மூச்சுப் படுகிறது....இப்பொழுது அதுவுமில்லை.

'உன்னால் எழுந்திருக்க முடியுமா?'

நான் என் கரத்தைப் பார்க்கிறேன். அது தரையில் கிடக்கிறது. ஆச்சர்யம்தான். அது இன்னமும் என் உடலுடன் தான் ஒட்டிக் கொண்டிருக்கிறது.

நான் உட்கார்ந்து கொள்கிறேன். என்னையுமறியாமலேயே என் கரம் கன்னத்திற்கு உயருகிறது. கன்னங்கள் ஈரமாக இருக்கின்றன. 'கண்ணீராக இருக்கலாம். என்னால் இதை நம்ப முடியவில்லை. இது சற்றும் நாகரீகமில்லாமல் தானாகவே பெருகி வந்திருக்கிறது... எனக்கு இதைப்பற்றிய உணர்வேயில்லை ... சிலர் காலையில் படுக்கையை விட்டெழுந்ததும் அது ஈரமாக இருப்பதைக் கண்டு...தான் தான்... என்பதை நம்ப முடியாமலிருக்கிறார்களே அது போல.

'கொஞ்சம் ஏதாவது குடி...' இத்தாலியன் என்னையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான்.

'லிலி எங்கே?' என்று கேட்டேன் நான்.

'அவர்கள் அவனைக் கொன்றுவிடுவார்கள்... நான் உன்னிடம் சொன்னேன் அல்லவா?...' இத்தாலியனின் குரல் தழுதழுத்தது. தொண்டை அடைத்துக் கொண்டது.

'நீ என்ன சொன்னாய்?— இப்பொழுது எனக்கு எதுவுமே நினைவுக்கு வரவில்லை.'

'உனக்குத் தெரியும். நீ அவனை உன்னுடன் அழைத்துச் சென்றிருந்தால் எதுவுமே நேர்ந்திருக்காது.'

ஆம் எதுவுமே நிகழ்ந்திருக்காது.... ஆனால் நிகழ்ந்து

விட்டதை யாராலும் தடுத்திருக்க முடியும் என்பதும் யாருக்கும் தெரிந்திருக்காது.

'நான் சென்று வருகிறேன்' — என்றேன் நான்.

'எங்கே!' அந்த இத்தாலியன் கதவிற்கு முன்னுல் நின்றிருந்தான்.

எங்கேயோ! வெளியே!... என் விழிகள் நாற் புறமும் தேடின. ஜார்ஜைக் காணேம். என்னுள் லேசான மகிழ்ச்சி.

'வெளியேவா!' இத்தாலியனுல் நம்ப முடியவில்லை போலும். நான் எந்த அளவிற்குப் போதையில் இருக்கிறேன் என்பதையும் அவனுல் நிச்சயிக்க இயலவில்லை. கூறுவதை எந்த அளவிற்கு உண்மையெனக் கொள்வது என்ற தவிப்பு.

'இப்பொழுது வேண்டாம். "அவர்கள்" வெளியே நிற்கிருர்கள்.'

'இதோ பார்'— நான் சகஜபாவத்துடன் பேசினேன். 'நான் ஒன்றும் செய்யமாட்டேன். பேசாமல் நேராக வீட்டிற்குப் போய்விடுவேன்.'

'இதென்ன பேசுகிருய் நீ'... இம்முறை அவனுக்கு உண்மையாகவே கோபம் வந்துவிட்டது. 'நீ விலியுடன் வந்தவன் என்பது அவர்களுக்குத் தெரியும். நீ அவர்களிடமிருந்து தப்பிச் செல்ல முடியாது.'

விவாதம் செய்வது வீண். அவன் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை.

வெளியே திடீரென ஆரவாரமும் கூச்சலும் அதிகரித்து விட்டது. ஒரு கணம் முறுக்குவது போன்றதொரு உணர்வு. பனிக்கட்டிபோல் முதுகிலே சர சரவென நழுவுகின்றது. அது என்ன தென்று எனக்குப் புரிகிறது. பயம்... திகில்... முதன் முதலாகத் தோன்றும் பயம். வெளிப் போர்வை எதுவுமின்றி அப்பட்டமான பயம். சந்தடியற்ற, ஆரவார மில்லாத பயம்.

நான் புன்னகை புரிவதுபோல் எனக்குத் தோன்றியது.

'எனக்குக் கொஞ்சம் விஸ்கி தரமுடியுமா?' சற்று நேரம் அவன் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். நான் இன்னும் நெருங்கி வந்தேன். எங்கள் இருவரின் முகமும் அருகருகே, வெளியே மிகுந்திருந்த ஆரவாரத்தினிடையேயும் அவனது மூச்சுக் காற்றை என்னால் கேட்க முடிந்தது.

'நீ போய் விட மாட்டாயே!'—சந்தேகம், நம்பிக்கையின்மை அக்குரலில் இழைந்து வந்தது, சற்று அழுத்தமாக.

'நான் பயித்தியக் காரனல்ல.'

சில நிமிடம் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றான்.

'உன்னை விட்டு விட்டு நான் நகர முடியாது.'

வியர்வை வழிந்தோட, சதை சதையாய் தொங்கிய அந்த குண்டு முகத்தை அக்கக்காய் பிய்த்தெறிய வேண்டும்போலிருந்தது. ஆனால் நான் முன்போலவே புன்னகைத்து நின்றேன்.

'நான் இங்கேயே இருப்பேன். உனக்காக இல்லாவிடினும் விஸ்கிக்காக. உனக்கு என் மீது இவ்வளவு கூட நம்பிக்கை யில்லையா?'

இம்முறை அவன் உதடுகள் முற்றும் சிரிப்பிலே லேசாக விரிந்தன. அந்த சிரிப்பில் செயலற்ற அப்பாவித் தனம் ஒளிந்திருந்தது. என் மீது தனக்கு நம்பிக்கை யிருக்கிறது என்பதை இச்சிரிப்பின் மூலம் வெளியிட்டு, தன்னைத்தானே நம்பவைத்துக் கொள்கிறன் போலும்.

கவுண்டரை நோக்கி நடந்தான் அவன். அங்குதான் பல்வேறு மது வகைகளும் பியரும் வைக்கப் பட்டிருந்தன. அடிக்கடி திரும்பி என்னைப் பார்த்துக் கொண்டே போனான்.

நான் நின்று கொண்டே யிருந்தேன்.

ஸ்காட்ச் பாட்டிலை எடுத்து கவுண்டரின் மீது வைத்தாகி விட்டது. இப்பொழுது அவன் என்னைத் திரும்பிப் பார்த் தான். எங்களுக்குள் எதுவோ ரகசிய உடன்படிக்கை இருப்பது போல ஒரு பார்வை.

எங்களது மௌனம், அந்த கூக்குரல்களை விட, மோதி அடித்து, ஆர்ப்பரித்தெழுந்து, ஒன்றோடொன்று கலந்து மடியும் அக்குரல்களை விட, மகத்தானதாக இருந்தது. கூச்சல்கள் கதவிலே மோதி எல்லையற்ற இருளிலே கரைந்து கொண்டிருந்தன.

அவன் தம்பளரைக் கழுவிக் கொண்டிருந்தான். குழா யிலிருந்து கொட்டும் நீர்...பள பளக்கும் கண்ணாடி தம்ப ளரின் மீது உருண்டோடும் நீர்த் திவலைகள். நான் அந்நீர்த் துளிகளையே இமையாது நோக்கிக் கொண்டி ருந்தேன். வயிற்றைப் பிரட்டியது. வாந்தி வரும் போலி ருந்தது. வெறும் கண்ணாடியின் மீது உருண்டு வரும் நீரை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. எனக் குள்ளே விசித்திரமானதொரு சிலிர்ப்பு. நான் நடக் கிறேன். கதவை நோக்கி. அவன் முதுகு என் பக்க மிருக்கிறது. குழாயிலிருந்து சடசடவென கொட்டும் நீர் என் இதயத் துடிப்பின் ஓசையை அமுக்கிக் கொண்டிருந் தது....அக்கணம்...அந்த விநாடி...நானே விரும்பினால் கூட என்னால் திரும்ப முடியாது என எனக்குத் தோன் றியது. என் கால்களின் மீது, என் மீது, எனக்கே வச மில்லை. நான் என்னிலிருந்தே விடுபட்டு, வசமிழந்து வேறாகி நிற்பது போலிருந்தது.

கதவு திறந்தது. மறு விநாடி நான் வெளியே இருந் தேன்.

வெளியே ... இருளில்.

'ஜஸ்டு அவுட்' எனக்குள் கூறிக் கொண்டேன்.

கோடை காலத்தின் தெளிவான மென்மையான இரவு.

பயங்கரமான காட்டு மிருகம், பகலெல்லாம் ஓடியாடித் திரிந்த களைப்பில் தன் பொந்தில் உடலைக் கிடத்தி உறக்கத்திலாழ்ந்திருப்பது போன்ற மௌனம். மௌனம் தேங்கிய இரவு.

வியர்வை உலர்ந்து கொண்டிருந்தது. ஆழ்ந்த மூச்சு விட்டேன். ஒரு முறை, இரண்டு முறை ... நன்றாக நிதானமாய் மூச்சு விட்டேன்....என்னுள்ளே இலேசான பச்சாதாபம்....விஸ்கியை விட்டு விட்டு வந்ததற்காக. அது மட்டும் இப்பொழுது எனக்குள்ளே இருந்தால்!... மீண்டும் பெருமூச்செறிகிறேன்...ஹூம் ஒரு சிகரெட்டாவது இருந்தால்...நெடுஞ் சாலையை விட்டு விட்டுக் குறுகிய சந்திற்குள் வந்தாகி விட்டது....பெரும்பாலும் தெருக்களின் முனையில் சிகரெட் ஆடோ மிஷின்கள் இருக்கும்...

'ஹியர் ஹி ஈஸ்...த...சன் ஆப் எ பிச்'

நான் நின்று விடுகிறேன் அசைவற்று. இல்லை. இது பயம் இல்லை. நான் மிகவும் அமைதியாகவே இருக்கிறேன். சில்லிட்டுப் போன ஏதோ வொன்று முதுகெலும்பில் விரு விருவென்று ஊர்கின்றது. பசபசக்கும் பல்லியைப் போல், எவ்வித சலனமுமில்லாமல்.

அவர்கள் அங்குதானிருந்தனர். சுவரோடு சுவராய் இருந்த நிழல்கள் நகர்ந்து முன்னே வந்தன.

'ஹோல்ட் ஹிம்'—உடைத்த குரலில் ஒரு கூச்சல்.

சட்டென்று நான் பின்னால் திரும்புகிறேன். காற்று விர்ரென்று என் விலாவிலே புகுந்து வெளியேறுகிறது.

'கண் டெட் நிக்கர்'

'வெயிட், ஜஸ்ட் வெயிட்'

பின்னாலிருந்து அவன் பாய்ந்து வந்தான். என் தலை பின் புறமாகத் திருப்பப் படுகிறது என்பது கூட எனக்குத் தெரியவில்லை. இன்னும் ஒரே ஒரு கணம். நான் இரு துண்டுகளாகி விடுவேன்.

அவனுடைய முகத்தை மட்டும் நான் பார்க்க முடிந்தால்?

கை...இதோ இருக்கிறது. பிசுபிசுப்பான ஈரம் அதில். நெற்றிப் பொட்டிலிருந்து குருதி குபுகுபுவெனப் பொங்கி வருகிறது. எல்லாமே எனக்குத் தெரிகிறது. நான் சற்றே அசைகின்றேன். கொஞ்சம் முன்னால் நகர்ந்து வருகிறேன். அவனும் நகர்கிறான். இவன் அவனல்ல, இன்னொருவன். என் கையை மட்டும்தான் பிடித்துக் கொண்டிருக்கிறான்.

இமைப் பொழுது என் உள்ளத்தில் ஒரு வியப்பு. 'இப்படி வெடவெடவென்று ஆடிக் கொண்டிருப்பது என் உடல்தானா?'

'யூ ஷிடிங் ஸ்வைன்.'

ஒரு உந்தலுடன் என்னை இழுத்துக் கொள்கிறேன். ஆனால் என் தலை மயிர்...என் தலை மயிர் அவன் கையில் சிக்கி இருக்கிறதே—அவனது கரம் என் முகத்தின் எதிரே அசைகின்றது. சட்டென என் பற்களை அக்கரத்தில் பதிக்கிறேன். 'ஓ! லீவிட்...பெகர்'...திணறும் மூச்சு. அவன் என்னைத் தள்ளுகிறான். ஒரு முறை, இரண்டு முறை... ஒவ்வொரு முறையும் குடிகாரனைப் போல் அவனது புஜத்தில் நான் ஊசலாடுகிறேன்.

'லீவ் ஹிம் யூ சன் ஆப் எ ஹோர் ... ஹோர்.'

இது... இது... விலியின் குரலல்லவா! முழு பலத்துடன் கூச்சலிட முயற்சிக்கிறேன். கொர் கொர் என்ன பயங்கரமான சத்தத்தைத் தவிர என் தொண்டையிலிருந்து வேறு ஒலியே கிளம்புவதில்லை.

என்னைப் பற்றியிருந்த பிடி தளர்வதை உணர்கின்றேன். என்னால் எழுந்திருக்க முடியும். என் கண் முன்னே பெருகிச் செல்லுகிறது. அதற்கப்பால் சிகப்பு, பச்சை, ரோஜா வண்ணப் புள்ளிகள் அசைந்தாடுகின்றன. நான் இவைகளைப் பார்த்திருக்கிறேன். இது

நானறிந்திருந்த கெட்ட கனவு. அதையே மீண்டும் காண்கிறேன் — துவக்கத்திலிருந்து முடிவு வரை.

என்னிடமிருந்து இரண்டு கஜ தூரத்தில் அவன் நின்று கொண்டிருந்தான். தெருவில் சுவரிலே சாய்ந்து கொண்டு நின்றான். அவன்தான் விலி என்று ஒரு கணம் நம்பவே முடியவில்லை. சற்றுமுன் யாருடன் லாகரைப் பருகிக் கொண்டிருந்தேனே...

ஆனால் அவனால் என்னை அடையாளம் கண்டுகொள்ள முடியுமா?...

அந்த யுவதி...ஜார்ஜ்... இருவருமே நினைவு வட்டத் திற்கு அப்பால் இரவின் இருளில் மூழ்கி விட்டார்களா?... தங்களைத் தாங்களே இனம் கண்டு கொள்ள முடியாத எங்களை இங்கே விட்டு விட்டு...

இன்றும் இரண்டே கஜ தூரம்தான். இடையிலே இருள். ஒரே இருள்.

கூட்டம், அரை குறையாய்த் தெரியும் முகங்கள். உயர மான இளைஞனொருவன் விலியின் மீது குனிந்து கொண் டிருக்கிறான்... விலியின் ஷர்ட் காலரைப் பிடித்து... சுவரினருகே இழுத்து வருகிறான்... கடக்... கடக்...

அந்த ஸ்கார்ப் பறக்கிறது. அந்த உயரமான இளை ஞன் கழுத்திலே சுற்றிக் கொண்டிருக்கிறானே அந்த ஸ்கார்ப்... ரோஜா மலர்கள் அதில் அச்சிடப்பட்டிருக் கின்றன.

ரோஜா மலர்கள்... ரத்தம்... விலியின் உதட்டிலிருந்து பெருகி முகவாய் வரை வழிந்திருக்கிறது.

கணநேர ஒளியில் யாவும் தெளிவாகின்றது. குரல்கள், வியர்வை, சந்தின் நாற்றம்... சிரிப்பு.

அப்பொழுது தான் அவன் வந்தான். வாட்டசாட்ட மான ஆள். இதுவரை கும்பலுக்குள் மறைந்திருந்தான் போலும். அவனது கருத்தடர்ந்த புருவங்களின் கீழ் அந்தச் சிறிய சஞ்சல மிகுந்த விழிகள் மின்னின. நாயின்

முகத்தைப் போன்ற முக மூடியை முகத்தில் அணிந்து கொண்டிருப்பதைப் போல் உருவத்தின் நீண்டடர்ந்த ரோமங்கள் கண்கள் மீது கவிந்திருந்தன.

அவன் நிதானமாக, மெதுவாக விலியை நோக்கி நடந்தான்.

'எங்கே போனாள் உன் டார்லிங்...?' வெடுக்கென விலியின் மோவாயை நிமிர்த்தினான் அவன்.

'சொல்லு! எங்கே போனாள்?'

'எங்கே போனாள்?' என்று கேட்கும் ஒவ்வொரு முறையும் விலியின் தலையை டணால் டணாலென சுவரிலே மோதினான். ஒவ்வொரு முறையும் விலியின் உடல் குடிகாரனைப் போல் தள்ளாடியது.

'அவர்கள்'... அவர்கள் சிரித்தனர்.

'பாஷ் ஹிம் தேர்...' இன்னொருவன் தன்னுடைய... சுட்டிக் காட்டினான். கட்; கட்டென தலை சுவரிலே மோதும் ஓசை. கட், கட்... அசுர வேகத்துடன் துடிக்கும் என் இதயத்தின் துடிப்பு. வியர்வையிலும், குருதியிலும் நனைந்த விலியின் ஷர்ட்... இடைவிடாத, முடிவேயில்லாத கட்... கட்... என்று மோதும் ஒலி... அட்டகாசப் பேய்ச் சிரிப்பு, 'சொல்லு! எங்கே போனாள்?... ஸ்பீக்! ஸ்பீக்! ஸ்பீக்! யூ ஃபில்தி... ஹா... ஹா... ஹா...' கட்... கட்... கட்...

ஸ்கார்ப்பிலே ரோஜா மலர்கள் அசைகின்றன. ஆடுகின்றன......

எனக்கு இப்பொழுது எதுவுமே நினைவில்லை. உண்மையைக் கேட்டால் நான் தான் கூச்சலிட்டேனா அல்லது வெளியிலிருந்து கேட்ட கூக்குரல் என்னை இப்படி அதிரவடித்து விட்டதா என்று எனக்கு எதுவுமே புரியவில்லை. (அந்தப் பயங்கரமான ஓலம் என் தொண்டையிலிருந்துதான் வெளி வந்தது என்பதை இன்றும் என்னால் நம்ப முடியவில்லை!... எனக்குத் தெரிந்தது, நான்

உணர்ந்தது... குருட்டு வௌவால் போல் என் மூச்சு இதயத்தின் சுவர்களிலே முட்டி, மோதியடித்து படபடத்துக் கொண்டிருந்தது. இதுவரை என்னை அமுத்திக் கொண்டிருந்த கரங்களிலிருந்து சடாலென்ற ஒரு வேகத்துடன் ஒரு உந்து உந்தி என் கழுத்தை விடுவித்துக் கொண்டேன்.

இரண்டே இரண்டு கஜ தூரம்தான். ...இடையிலே இருள்... ஒரே... இருள்.

நான் விலியை நோக்கி நகர்ந்தேன். அவனிடம் ஏதோ சொல்ல விரும்புகிறேன். அவனை ஸ்பரிசிக்க விரும்புகிறேன். இது மிக மிக முக்கியமானதாக எனக்குத் தோன்றுகிறது.

இடையிலே கவிந்துள்ள இருள்... அந்த சில்லிட்ட... கரங்கள். அந்தக் கூச்சல்...

இதனிடையே என்னைப் பிடித்துக்கொண்ட முகமறியாத அந்த மனிதனின் மோவாயில் என் தலை மோதியது. இன்னொரு கரத்தால் அவன் முகத்தைப் பற்றி நசுக்கினேன். என் முகம் அவனது சட்டையில் உராய்ந்தது...

'ஐ வில் டீச் யூ... ஹௌடு ரன் பாஸ்டர்ட்' ஏனோ தெரியவில்லை. நான் என் கால்களை அசுரவேகத்துடன் காக்காய் வலிப்புக்காரன்போல் விலுக் விலுக் கென்று உதைத்துக் கொண்டேன். இதனால் ஒன்றும் பயனில்லை என்று தெரியும். அவன் என்னை விடப்போவதில்லை. இனி என்னால் மூச்சே விடமுடியாது போலிருந்தது. ஆனால் ஒவ்வொரு மூச்சும் முந்திய மூச்சின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு வேகமாய்ச் சீறி வந்து என்னுடன் ஒட்டிக்கொண்ட போதெல்லாம் இதுதான் கடைசி மூச்சு... இதுதான் கடைசி என்று என்னுள் தோன்றிக்கொண்டே இருந்தது. ஆனால் மூன்றாவது மூச்சோ திக்கித் திணறிக்கொண்டு, இரண்டாவது மூச்சின் சிறையை உடைத்துக்கொண்டு மேலெழும்பி

வந்து என்னைத் திணறவடிக்கும் பொழுதெல்லாம் எந்த மூச்சும் பின்தங்கி, கடைசி மூச்சாகிவிட விரும்பவில்லை என்பது என்னை வியப்பிலாழ்த்தியது.

பயங்கரமான மகிழ்ச்சி என்னைத் தன்னுள்ளே வாரிச் சுருட்டிக் கொண்டது. எந்தக் கணங்களுக்காக நான் வாழ்ந்து கொண்டிருந்தேனே அது இப்பொழுது வந்து விட்டது. இதுதான் நான் வாழ்ந்து கொண்டிருக்கிற கணங்கள். இனி வரப்போகும் கணங்களில், எந்தப் பொருளுக்கும் முன்பிருந்த அர்த்தமில்லை. மதிப்பில்லை. எந்த விதமான பயமும் அச்சமும் முந்திய பயமா இருக்க இருக்க முடியாது. நான் தன்னந் தனியன் என்பதே எனக்கு மறந்துவிட்டது. அவர்கள் என்னைத் தனியே விடமாட்டார்கள், நான் தப்பித்துக்கொள்ள முடியாது என்பது மட்டும் எனக்குத் தெரியும். தனியாக இருப்பது மட்டும் போதாது என்று இன்றுதான், முதன் முறையாகத் தோன்றியது! ஏன் என்றால் 'அவர்கள்' எங்கும், ஒவ்வொரு இடத்திலும் இருக்கிறார்கள், என்பதை நானறிவேன். ஒருநாள் 'அவர்கள்' என்னைப் பிடித்துக் கொள்வார்கள், நான் அகப்பட்டுக் கொள்வேன் என்பது மட்டும் எனக்குத் தெரியாமலிருந்தது. அந்த பயம், அந்த திகில்··· இப்பொழுது உருவமோ, வடிவமோ அற்றதாய் இருக்கவில்லை. இப்பொழுது அதற்கு வடிவமாயிருந்தது. வலுவாக, வரையறைக் குட்பட்டதாக இருந்தது. கிட்டத் தட்ட என்னைப்போல. நானெவ்வளவு பெரியவனோ அவ்வளவு பெரிதாக, நாங்களிருவருமே இருளினிடையே மிருகங்களைப்போல் சீறிக் கொண்டிருந்தோம். கடைசி மூச்சு வரை நான் கால்களை இப்படி உதைத்துக் கொண்டிருப்பேன் என எனக்குத் தோன்றியது.— 'ஓ! டியர்! ஹௌ ஃபன்னி இட் ஈஸ்! ஹௌ ஃபன்னி!' யாரோ சிரிக்கிறார் உரக்க. (நானு சிரிக்கிறேன்) சிரிப்பு··· அதற்கு குரல ஏது? குத்துக்கள்...வசவுகள்···மீண்டும் அதே சிரிப்பு.

தெரு முனைவரை அவர்கள் என்னை இழுத்துக் கொண்டே போகிறார்கள்...

நான் எழுந்திருக்க முயற்சிக்கிறேன். மீண்டும் உட்காருகிறேன். மீண்டும் படுத்துக் கொள்ளவேண்டும் போலிருக்கிறது. அங்கேயே பாதையில்...... தெருவில். கண்களை மூடிக் கொண்டதுமே என் கால், கண், மார்பு, முட்டுகள், தோள்பட்டையிலிருந்து ஏதோ ஒன்று அலையாய் பொங்கி எழுந்து, வடிந்து, பெருகி ஓடுகிறது. இது தான் வலியா? வேதனையா? வாழ்க்கையில் இத்தனை ஆண்டுகளைக் கழித்த பின்னும் இன்று வரை இதை உணரவில்லையே என்று வியக்கிறேன். என் உணர்வு இந்த வேதனையின் ஒரு நுனியைப்பற்றி இழுத்துக் கொண்டே போகிறது. சில சமயம் வேதனையிலிருந்து கழன்று உணர்வு மட்டும் தனித்து மேலிட்டு நிற்கிறது. அப்பொழுதெல்லாம் நான் எதையோ இழந்துவிட்டேன் என்று தோன்றுகிறது.

மழைகாலத்து மாலை வேளை. நான் மீண்டும் எனது நகரத்தின் தெருவில் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிக்கு ஓடிக் கொண்டிருக்கிறேன். ஒரு சின்னஞ் சிறிய பொந்து என் கண் முன்னே திறந்து கொள்கிறது. அதற்குள் மறைந்து கொள்ளவேண்டு மென்ற அடக்க முடியாத ஆவல் எழுகின்றது. அதில் ஒளிந்துகொள்வதாலேயே எல்லாப் பிரச்சனைகளும் தீர்ந்துவிடும் போல். யாவுமே மிக எளிதாகிவிடும்போல் ஒரு நினைப்பு. ஆனால் இது வளையோ, பொந்தோ அல்ல. வேதனை, தாளமுடியாத வலி. என் தேகத்தின் ஒவ்வொரு அங்கத்திலும், கணுக் கணுவாக சமமாக விரவி நிற்கும் வலி. முற்றிலும் புதிய வகையான வேதனை. தன் நிறைவு பெற்ற முழுமையான வேதனை. இக்கணம் வரை நான் உணர்ந்தே அறிந்திராத வாதனை. (ஹௌ ஃபன்னி இட் ஈஸ், ஹௌ வொண்டர்புல்! ஃபன்னி) இடை இடையே உணர்வு

விழித்துக் கொள்கிறது. திரை விலகுகிறது. இது நானா? என்றதொரு வியப்பு! நான் வெளியே வந்து விட்டேன்... என்பதை என்னால் நம்ப இயலவில்லை. நான் என்னை விட்டே வெளியே, யாரும் காப்பாற்ற முடியாத நிலைக்கு வந்து விட்டேன்.

இருளுக்கு வெளியே—'அவர்கள்' இருக்கும் இடத்திற்கு.

இது ஆகஸ்ட் மாதத்து துவக்க நாட்கள், இரவு வேளை. அவர்கள் என்னை சந்தின் இருண்ட சந்தடியற்ற ஒரு மூலையில் தள்ளிவிட்டுச் சென்றிருந்தனர். எத்தனை நேரம் நான் அங்குக் கிடந்தேனோ எதுவும் எனக்கு நினைவு இல்லை. நடுநடுவே என் கண்கள் திறந்தபோதெல்லாம் மெல்லிய சல்லாத்திரை போன்ற மூட்டத்தின் பின்னே லண்டன் மாநகரத்தின் வானம் நெருங்கி வந்தது. மீண்டும் கண்கள் மூடிக் கொண்டதும் அந்த மூட்டத்திலிருந்து இன்னொரு மூட்டத்திற்குள் நான் ஆழ்ந்து போனேன்.

எத்தனை நேரம் இப்படிக் கிடந்தேனோ! திடீரென எனது உணர்வுகள் விழித்துக்கொண்டன. காலடி ஓசை என்னை நெருங்கி வந்தது. மெதுவாக— மிக— மெதுவாக. நான் உறங்கலானேன். ஒருக்கால் இது கனவோ! யாரோ என் தோள்களைப் பற்றி உலுக்கிக் கொண்டே இருக்கிறார்கள்...

அடி அதிகமாகப் பட்டுவிட்டதா?

'இல்லை... அதிகமில்லை.' என் விழிகள் திறந்து கொண்டன. ஜார்ஜின் முகம் என்னருகே குனிந்திருந்தது. லாகரின் லேசான வாடை என்னைத் தழுவியது. அந்த மணத்துடன் கூடவே... இன்னொரு நினைவும்... கிளர்ந்தெழுந்தது... போத்சார்டேயின் சேரோ நாட்டின் மிக மிகப் பழைய மெட்டு... மெட்டுக் கூட இல்லை...உடைந்த சிறு கிளைபோல்... சில ஸ்வர அலைகள், சில மணி நேரத்

திற்கு முன்னே பப்பில் முழங்கிய இசையினிடையே நான் உணர்ந்தேனே, அந்த ராகத்தின் சாயல்...

'நீ இங்கேயா இருக்கிறுய்?'

'உன்னே அவர்கள் இங்கு இழுத்து வந்திருக்கிருர்கள் என்பது எனக்குத் தெரியும். நான் பார்த்துக் கொண்டு தானிருந்தேன்.'

'விலி எங்கே?'

'லெட் ஹிம் கோடு ஹெல்! அவனில்லாமலிருந்தால் எதுவுமே நடந்திராது.'

'என்ன நடந்திருக்காது?'

பிரதான பாதையிலிருந்து வந்த கார் ஒன்று எங்களேக் கடந்து சென்றது. எங்கள் கண்கள் கூசின. முதன் முறையாக என்னே நான் பார்த்துக் கொண்டேன். ஷர்ட்டின் காலர் மேற்புறம் கிழிந்து கிடந்தது. பாண்ட் முழுவதும் தூசி. அழுக்கு பியரின் கறைகள் வியர்வை யினுல் உடலோடு ஒட்டிக்கிடந்த பனியனிலிருந்து ஈர வாடை வீசியது.

'நீ ஏன் திரும்பிவந்தாய்?'

'நான் உள்ளே வர விரும்பினேன்... உங்களிடம்தான். —ஆனுல் உனக்குத்தான் தெரியுமே...'

'—இட் ஈஸ் ஆல்ரைட். ஜார்ஜ்—' நான் இடைமறித் தேன். நீண்ட நாள் காய்ச்சலிலிருந்து எழுந்தது போல் வாயெல்லாம் கசந்து வழிந்தது. அருகே விளக்குக் கம்பத் தின் மங்கிய ஒளி வட்டம் படர்ந்து கிடந்தது. நான் காரித் துப்பியது அந்த ஒளி வட்டத்தின் நடுவே விழுந் தது சிகப்பாய்... வெற்றிலேச் சாறுபோல். ரத்தம். ரத்தத்தைப் பார்த்ததும் எனக்கு ஏதோ போன்று இருந் தது. மீண்டுமொரு முறை துப்பினேன். ரத்தத்தை மறுபடியும் பார்க்கும் ஆவலே என்னுல் கட்டுப்படுத்திக் கொள்ள இயலவில்லே.

'அதிகமாக அடிபட வில்லேயே?' மீண்டும் வினவினுன்

ஜார்ஜ். அவன் குரலில் அடங்கி ஒலித்த இறுக்கம் எனக்கு விசித்திரமாகப் பட்டது.

நான் ஒன்றும் பேசவில்லை. எழுந்து நின்றேன். ஒரு கணம் என் தலை சுவரில் சாய்ந்திருந்தது.

கட்... கட்... கட்...

இப்பொழுதும் அந்த ஓசை என் நாடி நரம்புகளை அதிரவைத்துக் கொண்டிருந்தது.

மௌனமாக நாங்கள் டியூப் ஸ்டேஷனை நோக்கி நடந்தோம். பையில் இரண்டு ஷில்லுங்கள் கிடந்தன. என்னையும் மறியாமல் எனது விரல்கள் இடையிடையே அதைத் தடவிப் பார்த்துக் கொண்டன.

வெளியே இலையுதிர் காலத்து வரண்ட இலைகள் உதிர்ந்து கிடந்தன.

'நீ என்னை நம்பவில்லை... நீ வந்து...' ஜார்ஜ் என் தோள்களை இறுகப் பற்றினான்.

'இட் எஸ் ஆல் ரைட்.' அவன் கரத்தை என் தோளிலிருந்து அகற்றினேன் நான்.—'...ஹும் அவன் மட்டும் இச்சமயம் என்னுடன் இல்லாமலிருந்தால்....'

நாங்கள் டியூப் ஸ்டேஷனில் படிகளிலிறங்கலானோம். பிளாட்பாரம் வெறிச்சோடி நின்றது. ஓரிருவர் இங்குமங்கும் அமர்ந்து தூங்கி வழிந்து கொண்டிருந்தனர். எங்களுக்கு மிக மிக அண்மையில் கம்பத்தின் மறைவில் ஒரு இளம் ஜோடி சுவரோடு சுவராய் நின்றது. அப் பெண் அடிக்கடி தன் குழல் கற்றைகளை ஒதுக்கி விட்டுக் கொண்டாள். இளைஞன் அவளெதிரே நின்று தணிந்த குரலில் ஏதோ முணு முணுத்துக் கொண்டிருந்தான். அப் பெண் அடிக்கடி சிரித்தாள். சிரித்து முடித்ததும் ஒரு முறை பார்த்துக்கொண்டாள்.

டிக்கட் வாங்கிக் கொண்டு நாங்கள் காலியாக இருந்த பெஞ்சியின் மீது அமர்ந்தோம்.

'நீ லண்டனிலேயே இருப்பாயா?'

அவன் பேசவில்லை. பதில் கூறுது மௌனம் சாதித்தான். அவனது கண்கள் விளக்குகளுக் கப்பால் அண்டர் கிரவுண்டில் இருண்ட ஈரம் மிகுந்த சுரங்கப் பாதையில் திரிந்து கொண்டிருந்தன. சுரங்கத்தில் அப்பிக் கிடந்த இருள், மேலேயிருந்த நகரத்தின் இருளிலிருந்து துண்டிக்கப் பட்டது போல், அழுக்கு நீர் தேங்கிய குட்டையைப் போல் காட்சி யளித்தது.

'வில்லி எங்கே போய் விட்டானே தெரியவில்லை!'

'வில்லி!...நான் அவனைப் பார்க்கவே யில்லை...' என்றான் ஜார்ஜ்.

'நீ வெளியே நின்று கொண்டிருந்ததாக இப்பொழுது தானே கூறினாய்?'

'நான் எதையுமே பார்க்கவில்லை.'

நாங்கள் மீண்டும் மௌனத்திலாழ்ந்தோம். ஆனால் இந்த மௌனத்தில் தாங்க முடியாத ஒரு கனம், ஒரு அழுத்தம். ஏதோ ஒன்று அடிக்கடி எங்களிடையே குறுக்கிடுவது போலவும் நாங்கள் அதை விலக்குவது போலவும் தோன்றியது.

'நான் பொய் சொல்லுவதாக நீ நினைக்கிறாய்?'

நான் பார்வையை வேறுபுறம் திருப்பிக் கொண்டேன்.

'நீ என்ன நினைத்துக் கொண்டாலும் சரி. எனக்குக் கொஞ்சமும் அக்கறையில்லை.'

'டோன்ட் பி சில்லி...' என்றேன் நான்.

'நீ என்னை நம்பவில்லை' — இம்முறை அவன் என் விழிகளை நேருக்கு நேர் சந்தித்தான். 'நான் ஓடி விட்டேன் என நீ நினைக்கிறாய்?' — ஜார்ஜின் உதடுகள் வேகமாகத் துடித்தன.

'டாமிட் ஐ சே டாமிட்!'

'அவர்கள் என்னைப் பிடித்து வைத்துக்கொண்டிருந்தார்கள். நான் உன்னிடம் வந்து...'

'இட் ஈஸ் ஆல் ரைட்... ஜார்ஜ்!'

'ஓ...ஹோ! இட் ஈஸ் நாட் ஆல் ரைட்'... உரக்கக் கூச்சலிடுவதுபோல் கூறினுன் அவன். அருகே பெஞ்சியில் உறங்கிக்கொண்டிருந்தவன் எழுந்து உட்கார்ந்து எங்களைக் கவனிக்கலானுன்.

'ஜார்ஜ்... இதோபார்...' நான் அவனது தோளின் மீது என் கரத்தை வைத்தேன். பெஞ்சியின் கைப்பிடியின் மீது இரு கரங்களிடையே முகத்தைப் பதித்துக் கொண்டிருந்தான் அவன். தேகம் அடிக்கடி குலுங்கியது— 'ஐ வாஸ் அஃப்ரெய்ட்... டெரிபிளி அஃப்ரெய்ட்'

நாங்கள் இருவருமே நடுங்கிக்கொண்டிருந்தோம். இருவரின் உடலும் வெடவெடத்தது.

அஃப்ரெயிட்...

நான் எதிரே... நோக்கினேன். அண்டர்கிரவுண்டின் இருள் மெல்ல மெல்ல உயரவிருக்கும் திரைச் சீலையைப் போல் அசைந்தது. அக்கணம் நான் ஜார்ஜிடம், ஏன் என்னிடமே, அஞ்சினேன். இனி அவனை என்னுல் ஏறிட்டுப் பார்க்கமுடியாது எனத் தோன்றியது அக் கணத்தில் எந்தவொரு பயங்கரமான காரியத்தையும் செய்துவிடக்கூடிய நிலையில் நானிருந்தேன். அவனிடம் நிறையப் பேச விரும்பினேன். எதையெல்லாமோ சொல்லிவிடத் துடித்தேன்... நாங்கள் இருவரும் ஒன்ருய் அமர்ந்திருந்தும் திடீரெனத் தன்னந்தனியர்களாகிவிட்டிருந்தோம். அவன் அழுதுகொண்டிருந்தான். நான் எதுவும் செய்யச் செயலற்றவனுக இருந்தேன்.—இரண்டு பேர் அருகருகே ஒன்ருயிருந்தும் ஒருவன் தன்னுல் இன்னுெருவனைக் காப்பாற்ற இயலாது என்பதை உணரும் உண்மை, கடந்த காலத்தின் நினைவுகளே ஒரு சிறு மின்னற்கீற்று, ஒரு அற்பகணம்கூட இப்பொழுது,

நிகழ்ந்துகொண்டிருக்கும் இக் கணங்களுக்கு ஒளியூட்ட முடியாது. ஒருவனின் தனிமையில் தானும் பங்குகொள்ள இயலாது என்பதை உணருவதுதான் எத்தனை கொடுமையானது, பயங்கரமானது!

நாங்கள் திடுக்கிட்டோம். அடுத்த பிளாட்பாரத்தில் வாரன் தெருவிற்குச் செல்லும் டியூப் வந்துகொண்டிருந்தது. ஜார்ஜ் இதில்தான் செல்லவேண்டும். எங்களுக்கு அக்கம்பக்கமிருந்த பெஞ்சுகளில் உறங்கிக் கொண்டிருந்தவர்கள் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தனர். டியூப்பின் கண்ணைப் பறிக்கும் விளக்கொளியில் நியூ எக்டனின் அடுத்த சுரங்கப்பாதையின் இருள் சற்றே பின்னே நகர்ந்துவிட்டது. படிகளில் சிலர் ஓடோடியும் வந்து பிளாட்பாரத்தில் இறங்கிக்கொண்டிருந்தனர். வாரன் தெருவிற்கு அதுதான் கடைசி டியூப். அதைப் பிடித்துவிடும் ஆவலில் அவர்கள் விரைந்துகொண்டிருந்தனர்.

ஜார்ஜ் எழுந்து நின்றான். அவன் என்னை திரும்பியும் பார்க்கவில்லை. விரைந்து சென்று கும்பலோடு கும்பலாய் வெண்டியை நோக்கி ஓடினான். டியூப்பின் ஆட்டோமேடிக் கதவுகள் ஒரு வினாடிக்குத் திறந்து, கும்பலை விழுங்கியதும் மறுகணம் தாமாக மூடிக்கொண்டன.

சக்கரங்களின் ஓசை மெல்ல மெல்லத் தேய்ந்து கொண்டே வந்து உருவெளியில் கரைந்தது. மீண்டும் முன்போல் எங்கும் பேரமைதி நிலவியது. டியூபின் ஹெட் லைட்டுகள் பின்னே தள்ளிய அந்தகாரம் மீண்டும் சுரங்கத்துள் விரவி நின்றது.

பிளாட்பாரத்தின் திறந்த கூரையின் கீழ் நியூ எக்டனின் விளக்குகள் இருளினிடையே ஒளிர்ந்து கொண்டிருந்தன.

கம்பத்தின் மறைவில் நின்ற இளைஞன் —'அடுத்த

வண்டியில்’ என்றவாறே அவளை முத்தமிட்டான். அப் பெண்ணின் விழிகள் மூடியிருந்தன.

அவள் விழியைப் பார்க்கக்கூட இல்லை......

சிகரெட் குடித்து வெகு நாட்களாகி விட்டதுபோல் எனக்குத் தோன்றியது.

## மணங்கள்

சுமேராவைப் பொறுத்த வரையில் ரிக்ஷா அவனுடைய உடலின் ஒரு உறுப்பாக அவனோடு இணைந்து விட்டது. உறக்கத்திலும் விழிப்பிலும் அதைத் தன்னிலிருந்து வேறு படுத்திப் பார்க்க அவனால் இயலவில்லை. டிரிங்...டிரிங்... என ஒலிக்கும் அதன் மணியோசை, சதங்கையின் இன்னொலி போல் நாடி நரம்புகளைக் கிளுகிளுக்கச் செய்கிறது. பெடலை அழுத்தி வண்டியை நிறுத்தும் போது பின் சக்கரத்தின் அச்சும் செயினும் எழுப்பும் கிர்-கிர் என்ற ஓசை ரம்பம் போல் அவனது நரம்புகளைச் சுண்டி இழுக்கிறது. இருந்தாலும் தனது ஆசனத்தில் ஏறி அமர்ந்து விட்டால் அவனுக்குத் தன் நினைவே இருப்பதில்லை. உண்மையாக சுமேரா தனக்கு வந்திருக்கும் புதிய நோயை பற்றி மிகவும் கவலைப் படுகிறான். இப்பொழுதெல்லாம் திடீர் திடீரென ஒன்றுக்கொன்று சம்பந்தமேயில்லாத பல விஷயங்கள் அவனுக்கு நினைவு வருகின்றன.

அந்த இரண்டு பேரையும் வண்டியில் உட்கார வைத்துக் கொண்டதிலிருந்து நடந்து விட்டதொரு சம்பவம் மீண்டும் நடப்பது போன்ற உணர்வு அவனுக்குள்ளே மேலிட்டு நிற்கிறது. அதிலும் ரிக்ஷாவில் கால் வைக்குமிடத்தில் அந்த வெள்ளைக் கைக்குட்டையைக் கண்டதுமே, அது உயிர் பெற்றுவிட்டதொன்றாகத் தோன்றியது. அந்த வயோதிக ஆங்கிலோ இந்திய மாதின் கைபட்டுக் கசங்கிக் கிடந்த கைகுட்டையைக் கையிலெடுத்ததும் ஓடிப்போய் அதை அவளிடம் கொடுத்து விட்டு வரலாமா என்றுதான் முதலில் நினைத்தான். ஆனால் அவனையுமறியாமலேயே அவனது கரம் மூக்கு வரை உயர்ந்து விட்டது. சட்டென ... இதில்தானே

அந்தக் கிழவி அந்தக் கிழவனின் எச்சிலையும், உமிழ் நீரையும் துடைத்துக் கொண்டிருந்தாள் என்பது நினைவு வரவும் மனம் அருவருப்பால் நிறைந்தது. சீச்சீ...சீ... நெருப்புத் துண்டத்தைக் கையிலெடுத்து விட்டவன் போல் அதை வீசி எறிய இருந்தவன்...சரி...போ...கிடக் கட்டும் ஒரு மூலையில் என நினைத்தான். ஒன்றுமில்லா விட்டாலும், கிரீஸையும் மையையும் துடைக்கவாவது பயன் படுமே! குனிந்து சீட்டிற்குக் கீழே வைக்கும்போது அதனின்று எழுந்த லேசான நறுமணம் அவனைச் சூழ்ந்து கொண்டது.

ஏறுவதற்காக பெடலின்மீது ஒரு காலை வைத்தவன், இரண்டு பக்கமும் ஊதிவிட்டு பிடியைப் பற்றவைத்த வாறே, இதற்குமுன் எப்பொழுது இப்படியொரு சம்பவம் நிகழ்ந்தது. எது அவன் நினைவிலே இப்படி அடிக்கடி புரண்டு வருகிறது என்பதை நினைவுபடுத்திக்கொள்ள முயன்றான். ஏதோ ஒன்று இருக்கிறது. ஆனால் அது என்ன என்பதுதான் சரியாகப் புலப்படவில்லை. வருடக் கணக்காக வண்டி யோடுகிறது. இரவும் பகலும் எத்த னையோ சவாரிகள் ஏறி இறங்குகின்றனர். ஆனால் இந்தத் தடவை மட்டும் அப்படி ஏதோ தோன்றுவானேன்? இன்றுதான் தான் திருடிய அந்த அட்டிகையின் நினைவு வருகிறது. கிட்டத்தட்ட அவன் இதை மறந்தே போயிருந்தான் என்று தான் சொல்லவேண்டும். சும்மா அந்த இருவரையும் மாறி மாறி உற்றுப் பார்த்துக் கொண்டே யிருந்தானே? ஏன்?

கிழவர் முன்னால் போய் நின்றுவிட்டார். கிழவிதான் பின்னால் திரும்பி, கேட்டை மூடித் தாழிடுகிறாள். இரு வருக்கும் அறுபது, எழுபது வயதிருக்கும். கசங்கி, சுருங் கிப் பொலிவிழந்திருந்த இளம் சாம்பல் வர்ணக் கோட்டு, பாண்ட், நனைந்து சுருங்கிக் கிடந்த தொப்பி, கையில் ஒவ்வொரு அடி வைக்கும்போதும் தரையில் கோடு கிழித்

துக்கொண்டே போகும் மெல்லிய பிரம்பு... பின்னு லிருந்து பார்க்கும்போது கிழவன் ஜப்பானியப் பொம்மை மாதிரி இருந்தார். கிழவி, சிவப்பும் வெளுப்புமாய் பெரிய பெரிய பூக்கள் அச்சிட்ட கவுன் அணிந்திருந்தாள். திறந்திருந்த கால்களில் கமான் போன்ற வளைவு. கதவை மூடிவிட்டுக் கிழவி திரும்பி வந்ததும் இருவரும் ஒருவர் கரத்தை மற்றவர் பற்றிக்கொண்டு அந்தச் சிதிலமான பழைய இல்லத்தை நோக்கி நடந்தனர். ஆடி அசைந்து செல்லும் அவ்விருவரின் பிருஷ்ட பாகத்தின் அசைவை, நிழல்களின் சலனத்தை, சுமேரா வேடிக்கை பார்த்தவாறு நின்றான். சிறு குழந்தைகளைப்போல் எப்படி உருண்டு புரண்டு கொண்டு போகிறார்கள் இருவரும்! சுமேராவின் உதட்டில் புன்முறுவல் படர்ந்தது. உள்ளத்திலெழுந்த கிறுகிறுப்பை வெளியிட வேறு வழியொன்றும் தோன்றாது போகவே டிரிங்... டிரிங் என மணியைத் தட்டிய அவன் கரம் சட்டென்று தானாகவே நின்றுவிட்டது. கண் முன்னே அந்த அட்டிகை பளிச் பளிச் சென்று மின்னி யது. கூடவே ரிக்ஷாவில் யாரோ அமர்ந்திருப்பது போலவும் அவருக்கு மணியோசை கஷ்டமாக இருக்கு மென்றும் தோன்றியது.

தெருமுனைவரை அவர்களிருவரும் இன்னும் தன் ரிக்ஷாவில் அமர்ந்திருப்பது போலவே அவனுக்குத் தோன்றிக் கொண்டிருந்தது. இன்று தான் நல்லதொரு காரியம் செய்துவிட்ட திருப்தியும் கூடவே எழுந்தது. இதன் நினைப்பே மனதிற்கு இதமாக, ஆறுதலாக இருந் தது. ஆனால் இதை யாரிடம் சொல்ல முடியும்? கேட் பவர்கள் சிரிப்பார்கள். அப்படி உட்கார்ந்து விவரிக்கக் கூடிய பெரிய விஷயமுமல்ல இது. பாபுவின் காதில் விழுந்தால் இந்தப் பயலுக்குப் பைத்தியம்தான் பிடிக்கப் போகிறது என்று நிச்சயம் சொல்லுவான்.

பாங்கிக்கு எதிரே அவர்கள் இருவரும் நின்றிருந்தனர்.

பெடலில் காலை மிதித்து ரிக்ஷாவை நிறுத்தி··· 'மேம் சாகப்··· ரிக்ஷா' என்றான் அவன்.

' "கேன்ட்" க்கு வருவாயா? என்ன கேட்கிறாய், சொல்?' கிடு கிடுவென ஆடிய கழுத்தை நேராக வைத்துக் கொள்ள முயற்சித்தவாறே அந்தக் கிழவி கேட்டாள்.

ஒரே பார்வையில் அவர்கள் ஆங்கிலோ இந்தியர்கள். வெளிநாட்டினரோ, டூரிஸ்டுகளோ அல்ல என்பது தெரிந்து விட்டது. கீழே இறங்கி, தலையில் கட்டியிருந்த துணியை அவிழ்த்து அவர்களை வரவேற்கும் பாவனையில் சீட்டி லிருந்த தூசியைத் தட்டியவன் 'மேம், சாகப், நீங்க என்ன புச்சா? இஸ்டப் பட்டதைக் கொடுங்க' என்றான்.

கிழவர் ஜடம் போலதான் நிற்கிறோம் என்ற உணர்வே யற்றவர் போல் நின்றார். ஆனால் கிழவியின் முகத் திலிருந்த ஏதோ ஒன்று அவனைத் தன்பால் கவர்ந்து கொண்டிருந்தது.

'இல்லே ··· அப்புறம் சண்டைபோடுவே' ··· என்று கூறினாளே தவிர சுமேராவின் குரலிலிருந்தே அவன் சண்டை போடும் ஆசாமியில்லை என்பதைக் கிழவி புரிந்து கொண்டிருந்தாள். நெடு நேரமாய் நிற்கிறார்கள் போலிருக்கிறது. கிழவரின் கையோடு கை கோத்துக் கொண்டு, அவரை ரிக்ஷாவிற்கு அழைத்து வந்தாள் அவள்.

'இல்லை ... மேம்சாகப் ··· நான் அப்படிப்பட்டவன் இல்லீங்க···அவுங்க எல்லாம் கிராமத்திலேர்ந்து புதுசா தொழிலுக்கு வர்றவங்க. அவுங்கதான் இப்படி சவாரிங்க கிட்ட மோசமா நடந்துக்கிறாங்க.' இப்படி அவன் பேசு வதைக் கேட்டு அகமகிழ்ந்த டூரிஸ்டுகள் ஐந்தைந்து ரூபாய் பக்ஷிஸ் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் அதெல் லாம் இங்கு பெயராது என்று அவனுக்குத் தெரியும். கிழவனுக் கென்ன? கண்ணு கிண்ணு தெரியாதா? அவன் உற்றுப் பார்த்தான். இரண்டு பேருமே நல்ல

நிறம் தான். கிழவியின் முகம் பூராவும் பொடிப் பொடியாய்ச் சுருக்கங்கள். கிழவனின் கன்னத்தில் மூக்கின் இரு புறமும் கண்ணிற்குக் கீழே உதட்டின் கோடிவரை சதை மடிப்பு தொங்கியது. அணிந்திருக்கும் கண்ணாடியைப் பார்த்ததுமே சரி...பொறை விழுந்த கண் என்பது தெரிந்து போயிற்று. காது கேட்பதற்கும் ஒரு மெஷின் வைத்திருந்தார் போலும். அதன் கயிறு அழுக்கடைந்த காலரின் வழியே வந்து சட்டைப் பைக்குள் தொங்கியது. சட்டைக்குள் தான் பாட்டரி இருந்ததோ என்னவோ? கிழவனுக்கு எதையும் புரிந்து கொள்ளும் சக்தி இருந்ததுபோலவே தெரியவில்லை. மலங்க, மலங்க விழித்துக்கொண்டு எந்தப் பக்கம் பார்க்கிருனே அந்தப் பக்கமே விழிகள் நிலைகுத்திப் போக, மெல்ல மெல்ல நடந்தான். பிரம்பைப் பிடித்திருந்த அவன் கரம் நடுங்கிக் கொண்டிருந்தது. அவரைப் பார்த்ததுமே சரி...ஆசாமிக்கு இனிச் சீட்டுக் கிழிக்கவேண்டியதுதான் என்று சுமேராவிற்குத் தோன்றியது. பாவம்—பாங்கியில் பென்சன் வாங்க வந்தார் போலிருக்கிறது.' என நினைத்த சுமேராவின் சிந்தனைத் தொடர் கிழவியின் முகத்தைப் பார்த்ததும் பட்டென அறுந்தது.

வெட வெடவென ஆடிய பிரம்பை ஊன்றிக் கொண்டு கிழவர் இரண்டொரு முறை ரிக்ஷாவில் ஏற முயன்ருர். ஆனல் பாதி உயரத்திற்கு மேல் காலெழும்பவில்லை. உதவி செய்ய சுமேரா அடி எடுத்து வைத்ததும் 'இவரைத் தொடாதே' என்பதுபோல் கிழவி இடையில் வந்தாள்.

பிரம்பைக் கையிலெடுத்துக் கொண்டு, கிழவரின் கரத்தை எடுத்துத் தன் தோள்களைச் சுற்றி அணைத்தாற்போல் இறுக்கி, மறு கரத்தால் இடுப்பைச் சேர்த்தணைத்து உயர்த்தி ஏதோ கண்ணாடி பொம்மை உடைந்துவிடப் போகிறதே என்று அஞ்சுபவள்போல் மெதுவாக அவரை

ரிக்ஷாவில் ஏற்றினுள் கிழவி. கிழவர் ஏதோ இரண்டு மூன்று வயதுக் குழந்தை போல் அவள் முகத்தில் கனிவும், அவரை உட்காரவைத்து விட்டோம் என்ற பெருமிதமும் பொங்கி வழிந்தது. சுமேராவின் பார்வையைச் சந்திக்கையில் மன்னிப்புக் கோருவதுபோல் ஒரு புன்னகை அவள் உதடுகளில் தவழ்ந்தது. என்ன செய்வது? வயதாகிவிட்டது. ஏற முடியவில்லை — என்ற பாவம் அதில் பளிச்சிட்டது. சுமேரா...அப்படியே பரவசமுற்றவனுய் அவள் முகத்தைப் பார்த்துக்கொண்டு நின்ருன். கிழவியின் கழுத்திலிருந்த மெல்லிய சங்கிலியைப் பார்த்ததும் மீண்டும் அட்டிகையின் நினைவு வந்துவிட்டது. விலையுயர்ந்த பொருளைத் திருடுகையில் கையும் களவுமாய் அகப்பட்டுக்கொண்டுவிட்டவன்போல் தூக்கிவாரிப்போட்டது.

'வெயில் ஜாஸ்தி... டாப்பைப் போடு.' இன்னொரு பக்கமாய் வந்த கிழவி காலியாக இருந்த இடத்தில் அமர்ந்துகொண்டாள்.

சுமேராவிற்கு மீண்டும் ஒரு திகைப்பு. எல்லாமே திரும்ப நடப்பதுபோல் ஏன் தோன்றுகிறது? பின்னுலிருந்து டாப்பை மேலே தூக்கியவாறே அவன் யோசித்தான்... 'நடப்பதை யெல்லாம் அவன் முன்பே எங்கோ பார்த்திருக்கிருன், கேட்டிருக்கிருன். எங்கே பார்த்தான்? தசராவில் டேசூப் பூக்களை கூடையில் வைத்து எடுத்துச் செல்லுவார்களே. அப்படிப் பத்திரமாக அல்லவா கிழவி அவரைப் பார்த்துக் கொள்கிருள்? சுமேரா ரிக்ஷாவின் முன்னுல் வந்து நின்றவன், ஒவ்வொரு காலாய்த் தூக்கி மேல்துண்டை உருவி முழங்கால் வரை பட்பட்டென்று தட்டித் துடைத்துவிட்டுக் கொண்டான். இரு முழந்தாள்களுக்கிடையேயுள்ள பிரம்பை இரு கரங்களாலும் பிடித்துக்கொண்டு வாய் திறவாமல் அமர்ந்திருக்கும் அந்தக் கிழவன் 'டேசு' மாதிரிதான் இருக்

கிருன் என நினைத்தான் சுமேரா. மாலையில் இந்த விஷயத்தை பாபுவிடம் மறக்காமல் சொல்லவேண்டும் என்றும் நினைத்துக் கொண்டான்.

'மேம் சாகிபா! புறப்படலாமா?'

'ம். ஆனால் ரேஸ் விடாதே. மெதுவாய்ப் போனால் போதும்.' கிழவி சற்றே தன் உடம்பைத் தூக்கி, கீழே நசுங்கியிருந்த கிழவரின் கோட்டின் நுனியை நகர்த்தி, அதைச் சீராக்கிவிட்டு அமர்ந்தவள் முதுகுப் பக்கம் தன் கரத்தை நீட்டி அணைத்தவாறு உட்கார்ந்தாள்.

மீண்டும்... அதே... ஹூம்... சுமேரா இந்த வார்த்தைகளை எங்கோ கேட்டிருக்கிருன்? எங்கேயோ நிச்சயமாய் இவை யாவும் நிகழ்ந்திருக்கின்றன. அதனால் நான் பார்த்தாற்போல்... கேட்டாற் போலிருக்கிறது இடையிடையே அவனது வேகம் குறைந்தது. சற்றே வேகத்தை மட்டுப்படுத்திக் கொண்டு நிதானித்தான். திரும்பி அவர்கள் முகத்தைப் பார்க்கவேண்டும் போல் தானிருந்தது. அடிக்கடி அவன் கவனத்தைக் கவர அப்படி அங்கே என்ன இருக்கிறது? 'டே... சு... ரா... டே... சு... ரா... வைய்த்தவள் ஏழு பெண்டாட்டியாம். நாலு படி அரிசி அறைப்பார்களாம். அவுங்க ஏழு படி அரிசி தின்பார்களாம். டேசுரா...டேசுரா' என்ற பாட்டைத் தனக்குள் முனுமுனுத்தவாறே பின்னால் திரும்பிப் பார்க்கவேண்டுமென்று எழுந்த ஆசையை மறக்க முயன்றான் அவன். குழந்தையாய் இருக்கும்போது விளக்கு ஏற்றி வைத்துக்கொண்டு, வீடு வீடாய் டேசு பாடிக்கொண்டு திரிந்த பல காட்சிகள் கண் முன்னே வந்ததும் அவன் தனக்குள் சிரித்துக் கொண்டான். எப்பொழுது திரும்பிப் பார்த்தானே அவனுக்கே தெரியாது. 'ரொம்ப வெயில் அடிக்குதா? மேம் சாகிபா' என்று கேட்டு வைத்தான் சுமேரா.

சுருக்கங்கள் கோடிட்ட முகங்களைப் பார்க்கும்

போதெல்லாம் சுமேரா தன்னையே ஒரு கேள்வி கேட்டுக் கொள்வான்: ஒரு சுருக்கத்திற்கு ஒரு வருசமின்னு கணக்கு வெச்சா ஒரு மனுஷன் தன் ஆயுசுலே இத்தனை சுருக்கம் சம்பாதிச்சிருக்கான். அப்படீன்னு... இதுக்குப் பதிலாக அவனுக்கு என்ன கிடைச்சிருக்கும் ஐயா. பணம், காசு, வீடு, வாசல், மனைவி மக்கள், சொத்து, சுகம்?... இல்லேன்னு... சும்மா இப்படியே ஆயுசு பூரா அழுது புலம்பரது, வருத்தப்படரது, இரவெல்லாம் கண் முழிச்சு பீடியாய்க் குடிக்கிறது அல்லது சாராயத்தைக் குடிச்சுவிட்டு சாக்கடையில் புரள்றது, இதுதானு?

இன்னும் இருபது வருடம் கழித்து அவன் முகத்திலே இப்படித்தான் சுருக்கம் விழும். ஆனு அப்பவும் அவன் இப்படித்தான் ரிக்ஷா இழுத்துக் கொண்டு இருப்பானு? அப்பவும் தன் பெண்டாட்டியை அர்த்த ராத்திரியிலே போய் எழுப்பி அடித்துக்கொண்டிருப்பானு? அப்பொழுதும் தனக்கு ஏதோ ஒன்று தேவை, அதைத்தான் கட்டாயம் அடைந்தே தீரவேண்டும் என்று ஏதோ ஒன்று அவனுக்குள்ளே குடைந்து கொண்டே இருக்குமா? இல்லை... இல்லை. அதற்குள்ளே நீரா பெரியவனுகிவிட மாட்டானு? அப்புறம்... ஹும்... நான் என் அப்பனுக்கு அப்படி யென்ன சுகத்தைத் தந்துவிட்டேன்! பாவம் இன்னிக்கும் கிழவன் சோத்துக்கரண்டியைத் தூக்கிக் வீடு வீடாய் அலையருன்!

நாலைந்து நாட்களுக்குமுன் நடந்த சம்பவம். அவன் நகராட்சிக் குழாயடியில் குளித்துக்கொண்டு நின்ருன். போதாவின் பெண்டாட்டி தண்ணீர் எடுக்க வந்தவள் ‘அட, என்னய்யா! உடம்பெல்லாம் எலும்பெடுத்துக் கிடக்குது?’ என்ருள். சோப்புத் தேய்த்துக் கொண்டிருந்த கை அப்படியே நின்றுவிட்டது. நெடுநேரம்வரை தன் விலா எலும்புகளை எண்ணிக்கொண்டேயிருந்தான். இப்பொழுதென்னவோ ரொம்ப பலவீனமாய் இருப்பது

போல் இருக்கு. பழைய தெம்பு இல்லே. முகத்திலே சுருக்கம் விழ ஆரம்பிச்சுடுத்தோ என்னவோ? ஆமா... அவன் முகத்திலே இந்தக் கிழவி மாதிரி சின்னச் சின்னச் சுருக்கமாய் விழுமா? அல்லது இந்தக் கிழவன் மாதிரி மடிப்பு மடிப்பாய் சதை தொங்குமா? இப்படி நினைக்கும் போதே, அக்கணமே சுமேராவிற்குத் தன் முகத்தைக் கண்ணுடியில் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று அடங்கா ஆசை எழுந்தது. ஒரு காலத்திலே அவன் ரிக்ஷாவிலே கூட எதிரே சின்னக் கண்ணுடியிருந்தது. பலூன்கள் பறந்தன. சக்கரத்திலே கலர் கலராய் பூ சுற்றிற்று. இப்ப... வண்டியே கடகடத்துப் போச்சு. ஓடும்போதே... நடுவிலே பால்பின் போயிடறது, பிரீ வீல் மட்டும் சுத்திக்கிட்டே இருக்கு. சில சமயம் செயின் கழண்டு போயிடுது. சவாரிங்க திட்டரதை யெல்லாம் கேட்டுப் பொறுத்துண்டு, ரோடிலே கிடக்கிற கல்லேயோ செங்கலேயோ எடுத்து லொட் லொட்டுன்னு பாப்பின்னைத் தட்டறதும், செயினை எடுத்து, சரியாய் மாட்டி கையெல்லாம் மையாய்ப் போறதும்... சீச்சீ... சுத்த மோசமாய்ப் போச்சு... சில சமயம் ஹோலியிலே இதை வச்சுக் கொளுத்திவிடலாம் போலத் தோணுது. ரிக்ஷா, டாப்புத் துணி தார் தாராய்க் கிழிந்து காற்றிலே ஆலவட்டம் பறக்குது. அன்னிக்கு அந்த தாங்காவோட மோதியதிலிருந்து வலது சக்கரம் ஆடி அசைந்துதான் ஓடறது. இதை யெல்லாம் ரிப்பேர் பார்க்கிறதா? லச்சியின் கடனை அடைக்கிறதா? ஒன்றும் புரியலே. ஆனல் இது என்ன விசித்திரம்? பாருங்கள். தன் உடம்பைப்பற்றி அவன் நினைக்கும்போது தான் ரிக்ஷா மேலே அவன் நினைவு போறது. அதாவது... ரிக்ஷாவும் அவனும் இரண்டறக் கலந்தவர்கள். பிரிக்கமுடியாதவர்கள்.

டிரிங்...டிரிங்...டிரிங்...அன்று நடந்த விபத்து நினைவு வந்ததுமே விரல்கள் தாமாக மணியைத் தட்டி விட்டன.

ஆனால் மறுகணம் திகைப்புண்டவன்போல் ஒரு கணம் நின்று விட்டான் சுமேரா. மணியின் சத்தம் வண்டியில் அமர்ந்திருப்பவர்களுக்கு உபத்திரவமாகி விட்டதோ என்ற ஐயத்துடன் மெல்லத் திரும்பிப் பார்த்தான். இன்றுதான் முதன் முதலாக மணியின் சத்தம் எவ்வளவு கர்ண கடூரமாக இருக்கிறது என்பதை அவனால் உணர முடிந்தது.

கிழவி, மிகுந்த அன்புடன் கிழவனின் கோட்டுக் காலரைச் சரி செய்து கொண்டிருந்தாள். காதிலிருந்து தொங்கும் கயிற்றின் மீது பார்வை விழுந்ததும் கிழவனுக்குக் காது கேட்காது என்பது நினைவு வந்தது. மணியின் சத்தம் அவர் காதில் எங்கே விழுந்திருக்கப் போகிறது? அது சரி, சுமேராவின் சிந்தனை வேறு தடத்தில் ஓடியது. 'ஆமாம், இந்தக் கிழவன் செத்துப் போனால் இந்தக் கிழவி என்ன செய்வாள்? பாவம்! இவளுக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கும். வீட்டிலே குழந்தை குட்டிகள் இருக்கிறார்களோ இல்லையோ! ராம்...ராம்...இந்தக் காலத்தில் எவன் தன்னைப் பெத்தவங்களைப் பற்றிக் கவலைப் படுகிறான்? சுமேராவுக்குச் சட்டெனத் தன் தந்தையின் நினைவு வந்தது. 'நடந்ததை மன்னிச்சுடு. என் கூட வந்து ராமா...ராமா...வென்று சொல்லிக்கிட்டு உட்கார்ந்திரு போதும். நான் சிரவணனைப் போல் உன்னைக் கவனிச்சுக்கிறேன்' என்று சொல்லி காலிலே விழணுமின்னு எத்தனையோ தடவை நினைத்துக் கொள்வான். ஆனால் அப்பன் கொடுத்த அடி, உதை நினைவு வந்ததும் இந்த நினைப்பெல்லாம் காற்றிலே அடிச்சுக்கிட்டு போயிடும். ...அன்று...நள்ளிரவிற்கு மேலேயிருக்கும். உடலை விறைக்க வைக்கும் குளிர். அந்தக் குளிரிலே அடி, உதையோடு கூட என்ன பயங்கரமான வசவுகள். 'அடேய், சோமாறி! பேமானிப் பயலே, அவ, உன்னைப் பெத்தவ இல்லாட்டியும் பெத்தவ மாதிரியடா! நீ புழுத்துச்

சாக! உடம்பெல்லாம் புழு நெளிய! உடம்பிலே திமி ரெடுத்தா, கூத்தியாளைத் தேடிக்கிட்டு போறதுதானே! இனி இந்த வூட்டுலே கால் வெச்செ...உடம்பை நொறுக் கிப் பிடுவேன். ஜாக்கிரதை...எலும்பை முறிச்சு நாய்க் குப் போடுவேன்' ... அன்று, சுமேராவிற்கு சிந்துவாடா செல்லும் வண்டிதான் முதலில் கிடைத்தது. அங்குதான் அந்த அட்டிகை சம்பவம் நிகழ்ந்தது.

ரிக்ஷா ஓடிக்கொண்டேயிருந்தது. செயின் கிர்...கிர்... ரென்று சத்தம் போட்டுக் கொண்டே யிருந்தது.

கிழவியின் கழுத்துச் செயின் நினைவு வந்ததும் மீண்டும் ஒரு முறை திரும்பிப் பார்த்தான். தன் கண்ணெதிரே இல்லாத அப்பாவின் மீது மட்டுமல்ல. வண்டியிலிருந்த இருவர் பாலும் ஏனோ அவனுக்கு மிகுந்த இரக்கமாயிருந் தது. 'இந்த இரண்டு பேர் முகத்திலேயும்தான் என்ன சந்தோஷம்! என்ன திருப்தி! என்ன கனிவு! எங்கோ... தீர்த்த யாத்திரை போய்விட்டு வரவங்களைப் போல என்ன மகிழ்ச்சி! பார்த்தா, ரொம்ப சுகமாய் வாழ்க் கையைக் கழிச்சவங்க போல தோணுது ஹூம்...அப்ப னும் இருக்கானே! இந்த வயசுலேயும் படைபடைக்கிற வெயிலிலே உட்கார்ந்து கொத்துக் கரண்டியிலே காரைச் சாந்தை வழிச்சு வழிச்சு செங்கலிலே போட்டு அடுக் கிட்டு இருப்பான்...அப்பன் அடிச்சான். அவன் அடிச் சாத்தான் என்ன வந்தது? தப்பு அவன் பேரிலேயும் தானே! ஹூம் தப்பு செய்திருக்கலாம். எப்பப் பார்த் தாலும் இதையே திரும்பத் திரும்ப நினைச்சுக்கிட்டு! இதுதான் தன்கிட்ட ஒரு கெட்ட பழக்கம். தப்புத்தான் நடந்து போச்சு. இனியென்ன? ஹூம் அது ஒரு காலம். ஒரு வயசு...நடந்து போச்சு. ஆனால் அந்த அட்டிகை விஷயமிருக்கே, அது மட்டும் நிச்சயமா...ஹூம்...இந்த இரண்டு பாரமும் எப்பத்தான் அவன் நெஞ்சை விட்டு இறங்குமோ!...

சடக்கென்று பிரேக் போட்டாற் போல் அவன் கால்கள் நின்றன. இந்தக் கிழவியும் கிழவனும் அந்த கூட்ஸ் கிளார்க்கு···அவர் பெண்டாட்டியோ! மெல்லத் திரும்பிப் பார்த்தான் சுமேரா. 'சீ ··· அவங்க இந்து ··· இவங்க கிருஸ்துவங்க. குனிந்து பின்னங்காலைச் சொரிந்து கொண்டான் சுமேரா. உண்மையைக் கேட்டால் என்ருவது ஒரு நாள் அந்த கூட்ஸ் கிளார்க்கை எங்கேயாவது சந்தித்து விடுவோமா என அவன் உள்ளூர பயந்து கொண்டுதானிருந்தான். அந்த பயம் நெஞ்சுக்குள்ளே குறுகுறுத்துக் கொண்டு இருக்கிறது. ஹூம்···அப்படிப் பார்த்தால்தான் என்ன? அடையாளமா தெரியப் போகிறது? இதற்குள் அவர் எத்தனை ஸ்டேஷனுக்கு மாறிப் போயிருப்பாரோ! எத்தனை கூலிங்க அவர் கையிலே வேலை செஞ்சிருப்பாங்களோ! வந்து போனுங்களோ!

நெடுஞ்சாலையும் கப்பி ரோடுகளும் சந்திக்கிற அந்த மூலையிலே அரச மரத்தடியிலே வெள்ளை வெளேரென்று சுண்ணும்பு பூசிய பிறைக்குள்ளே, சிவப்பு செந்தூரத்திலே முக்கி எடுத்த மாதிரி நிற்கிருரே அனுமாரு··· அவரைத் தாண்டிப் போகும் போதெல்லாம் அவனுக்கு அட்டிகை நினைப்பு வராம போகாது. வந்து விடும். முகத்திலே துணியைக் கட்டிக்கிட்டு அந்த கூட்ஸ் கிளார்க்கு பெண்டாட்டியை அறையிலே போய் வளைச்சுக்கிட்டது, கழுத்து அட்டிகையை பிடுங்கிக் கொண்டு ஓடி வந்தது, இரண்டு மாசம் நிலத்திலே புதைத்து வைச்சிருந்து அம்மா செத்துப் போன சேதி கிடைச்சதும் அதையே சாக்கா வைச்சுண்டு இங்கே வந்து...மங்கிப் பபலோட சேர்ந்து ராவோடு ராவா அதை உருக்கியது, எல்லாமே அந்த ஒரு கணத்தில் திரைப்படம் மாதிரி அவன் கண் முன்னே வந்து போகும்.

எதை மறந்தாலும் அந்த அட்டிகையை மட்டும் இந்த ரிக்ஷா இருக்கிற வரையில் மறக்க முடியாது. அட்டிகை

இல்லாமலிருந்தால் அவனும் அந்த மங்கிப்பயல் மாதிரி கூலிக்கு ரிக்ஷா ஓட்டனும், அல்லது வாடகைக்கு எடுக்கனும். இல்லாட்டிப் போனு, கொத்தும் கரண்டியுமாய் ரோடு ரோடாய் சுத்திக்கிட்டு வெள்ளையடிக்க இடம் பிடிக்கனும்... ஆனால் என்னவோ! இந்த ரிக்ஷா தன்னுடையது, தனக்கே சொந்தமானது என்ற நினைப்பே அவனுக்கு வரமாட்டேன் என்கிறது. இது இரவல் சொத்து, கடன் வாங்கிச் செய்தது, இப்படி ஒரு நினைப்புதான் வருது.

எப்படியோ நெருக்கிப் பிடிச்சு, நாலு காசு சேர்த்து அதே மாதிரி ஒரு அட்டிகை செய்து அதை எடுத்துக் கொண்டு போய் அந்தக் கூட்ஸ் கிளார்க்கின் காலடியில் வைத்து 'ஐயா...தப்பு செய்து விட்டேன்!' என்று கதற வேண்டும் போல எப்பொழுதாவது தோன்றுவதுண்டு.

'அதோ அந்தக் கேட்டில் நிறுத்து.'

கேட்டில் நிறுத்திவிட்டுத் திரும்பிப் பார்த்தான் சுமேரா. கிழவி கைக்குட்டையால் கிழவரின் வாயின் இரு புறத்தையும் பால் குடித்த குழந்தையின் கடைவாயை மெதுவாகத் துடைப்பது போல், துடைத்து விட்டுக் கொண்டிருந்தாள். இந்தக் கிழவிக்குத்தான் இவர் மீது எத்தனை அக்கறை?

ஸ்டேஷனை நோக்கித் திரும்பிய சுமேராவின் நினைவெல்லாம் நெடு நேரம் வரை அந்த இருவரைச் சுற்றியே படர்ந்து கொண்டிருந்தது. தன்னைப் பெற்றவளைப் பற்றிய நினைவே அவனுக்கில்லை. இளைய தாயாராக வந்திருந்தவள் கொள்ளிக் கட்டையை எடுத்து அடித்ததுதான் அடிக்கடி நினைவு வருகிறது. மூன்றாவதாக ஒருத்தியைப் பணம் கொடுத்து அழைத்து வந்தானே அவன் அப்பா. அவளுடைய குரல் தான் எத்தனை இனிமையாக இருந்தது? அவனைப் பைத்தியமாக கிறங்க அடித்தது அக்குரல் அல்லவா? இதில் தவறு தன்னுடை

யது அல்ல, தன் அப்பாவினுடையது என்பது அவன் எண்ணம். அதனால் தான் பல முறை அவன் அவரை எதிர்த்திருக்கிறான். கட்டையிலே போற வயதாச்சு, இன்னும் ஆசைவிட வில்லை கிழவனுக்கு என்ற ஆத்திரம் அவனுக்கு. சரி, நடந்ததெல்லாம் நடந்தாகி விட்டது. அது சரி, அந்தப் பழைய சம்பவமெல்லாம் நினைவு வரும்படி இன்று என்ன நடந்தது? சவாரி கிடைத்தது. ஏற்றிக் கொண்டான். வாடகை கொடுத்தார்கள். வாங்கிக் கொண்டாயிற்று. ஏதோ பெரிய புண்ணிய காரியம் செய்துவிட்ட மாதிரி என்ன நினைப்பு? தனது வாழ்க்கையில் இல்லாததொன்றை உணர்ந்து கொண்ட மாதிரி ஏன் தோன்றுகிறது?

கண்டிராக்டருடன் தகராறு, அதனால் வண்டியை உள்ளே நிறுத்தாமல் வெளியே நிறுத்தினான் சுமேரா. சக்கரத்தைக் குறுக்கு வாட்டில் திருப்பி நிறுத்திவிட்டு, சீட்டில் மல்லாந்து படுத்தவாறே மரத்தின் இலைகளைப் பார்க்கலானான். சவாரி கிடைப்பதானால் இங்கும் கிடைக்கும். அனாவசியமாக ஒரு அணாவைக் கொடுத்து க்யூ வரிசையில் போய் நிற்பானேன்? பஸ்கள் விடக்கூடாது என்று ஹர்த்தால் செய்கிறார்கள். ஊர்வலம் போகிறார்கள். கோஷம் போடுகிறார்கள். ஆனால் இந்த கண்டிராக்ட்காரர்களும் போலீஸ்காரர்களும் செய்கிற அநியாயத்தைப் பற்றிக் கேள்விகேட்பாரே இல்லை. ஒருவரும் வாயே திறப்பதில்லை. கொள்ளை பகல் கொள்ளைதான். அடிக்கிறாங்க, இப்ப நம்ப மங்கிதொரை கூடத்தான் பெரிய லீடரு, குடுதா, பைஜாமா ஜாகெட் போட்டுக்கிட்டுத் திரியராரு. ஒரு காலத்திலே கிழிசலும் கந்தையும் மாட்டிக் கிட்டு வீடு வீடாய் சுண்ணாம்பு அடிச்சாரு. அப்பா··· சனங்கதான் பார்த்துக்கிட்டு இருக்கும்போதே எப்படி மாறிப் போயிடறாங்க. இந்த மங்கிப் பயலுக்கு··· அந்த சிந்தி சேட்டு நான் ஜாமினா நிக்காட்டி வண்டி

கொடுக்கமாட்டேன்னு சொல்லிட்டாரு. எனக்கு பொண்ணு பேசி கல்யாணம் பண்ணி வைச்சான். அது சரி, அவ அப்பன் கிட்ட பேசி முடிச்சான். அதுக்கு நானும் தங்கம் உருக்கினதிலே பங்கு தந்தேன் இல்லே. சும்மாவா? ஹூம், பாட்டில், சினிமான்னு கரைச்சுட்டா அதுக்கு நானா பொறுப்பு? கஞ்சா, பங்கி அடிப்பவன் கிட்ட சூதாடிகிட்ட நம்பர் கேளு. வாரக்கணக்கா வீட்டுக்கே வராம இரு... ஆனா சுமேரா அப்படிப் பட்டவன் இல்லே. பங்கி, கிங்கி அடிச்சதில்லே. உன் ஒழுக்கம் கெட்ட தனத்தையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா கிடக்க.

சுமேராவிற்கு வாயெல்லாம் கசந்து வழிந்தது. 'அயோக்கியப் பயல். உண்ட வீட்டுக்கே இரண்டகம் நினைக்கிறான்.' மல்லாந்த நிலையிலேயே சுமேரா கை விரல்களை மடித்துக் குவித்து அதன் ஓட்டை வழியாக, தூரதிருஷ்டிக் கண்ணாடியில் வானத்தைப் பார்ப்பது போல், வானத்தையும் இலைகளையும், கிளைகளையும் பார்க்கலானான். குழந்தைப் பருவத்திலிருந்தே இந்த விளையாட்டு அவனுக்கு மிகவும் பிடிக்கும். நாளெல்லாம் சலவைக் கல் பொம்மைகள் செய்யும் தொழிற் சாலையில் வேலை பார்ப்பான். இரவானதும், இதே போல் விரலைக் குவித்துக் கண்ணருகில் வைத்துக்கொண்டு நிலவையும் தாரகைகளையும் பார்த்துக் கொண்டிருப்பான். நிலவில் சிலசமயம் ஒரு கிழவி சர்க்கா நூற்பதுபோலிருக்கும். சில சமயம் மான் குட்டி துள்ளி ஓடும். இப்பொழுதோ, வேப்ப மரத்தின் இலைகள் காற்றில் சலசலக்க, ஆழ்ந்த நீல வண்ண வானத்திடையே வெண்ணிற மேகத்திரள்கள். வெண் கொக்குகளைப் போல் சஞ்சரிப்பதைப் பார்த்துக் கொண்டே யிருக்கிறான்.

ஹூம், மங்கி தொரை...ராம்தேயிக்கு (சுமேராவின் மனைவி) ஜிமிக்கி கொண்டாந்தாராம். எப்படியிருக்கு

கதை? 'ரெயில்வே ஏலம் போட்டாங்க. வசமாய் மாட்டிக்கிட்டேன். இனும் கிடைக்குமென்று ஆசையிலே விலையை ஏத்திக்கிட்டே போனேன். ஒரு விலையிலே, அயோக்கியப்பயல், இதை என் தலையிலே கட்டிவிட்டான். இதை நான் என்ன செய்யறது அண்ணி? உனக்கு எடுத்துவந்தேன்.' காதிலே விழுந்தது இதுதான். எத்தினை நேரமாய் இந்த சரசமும் சல்லாபமும் நடக்குதோ யார் கண்டா? டியூப் மாத்தணுமின்னு அவன் மட்டும் இடையிலே வீட்டுக்கு வந்திருக்காட்டா ஆயுசு மட்டும் இந்த விசயமே அவனுக்குத் தெரிந்திருக்கப் போவதில்லை. கண்ட சிநேகம் வச்சுகிட்டு நாளெல்லாம் சினிமா பாட்டு பாடிக்கிட்டுத் திரிஞ்சா வேறென்ன வரும்?

ரிக்ஷா ஓட்டினு தொரைக்கு சர்க்கஸ் வித்தை காட்டற நினைப்பு. ரிக்ஷா அல்ல, ஏதோ அது விமானமின்னு விர்...ன்று கிளம்பறது. காரை ஓடிச்சுத் திருப்புற மாதிரி முனைக்கிட்ட வந்ததும் வளைக்கிறது. நல்ல வேளை, ஆக்ஸிடெண்டில் மண்டை பிளந்ததோடு போச்சு. இல்லாட்டி நேரா யமலோகத்திற்குத்தான் டிக்கட் வாங்கி இருக்கணும். அப்புறம் 'வீட்டுக்கு வந்த எங்க மச்சா'னை எங்கே பார்க்கிறது? அந்த மானம் கெட்ட கழுதை ராம்தேயி இருக்காளே. முழக் கயித்திலே அல்ல தொங்கணும் அவ. வெட்கம் கெட்டவ, என்ன திமிராப் பேசினு? 'முதல்லே உன்னை ஒழுங்கா வச்சுக்க. நானென்ன இழுத்துக்கிட்டு வந்தவளா? நடுவிலே வந்து சேர்ந்தவளா? உன் தாலி கட்டின பொண்டாட்டி தானே?' செம்மையான உதை விழுந்தது. ஆனு சிறுக்கி வாயை மூடினுளா என்ன? கத்திக்கிட்டெ கிடந்தா. அப்பன் இருக்கிருங்கிற தைரியம் அவளுக்கு. அப்பன் ஊருக்கு நாட்டாண்மைக்காரன் அல்ல. இந்த மாதிரி அப்பனையெல்லாம் கல்லை விட்டு அடிக்கணும். ஆமாம்,

ஊரை ஏமாத்தற பயல்கள். இரண்டு ஆரஞ்சுப் பழத்தை விட்டெறிஞ்சா நினைச்சபடி தீர்ப்பு வரும். இதென்ன பஞ்சாயத்தா? கூட்டுக்கொள்ளையா? என்னை மிரட்டு வாராமில்லே? பய தீரா மேலே ஆசை மட்டும் இல்லேன்னு கிடக்கிரு கழுதை அப்பன் வீட்டிலே...எனக்கென்ன? வேணுமின்னு...இன்னொருத்தனை...

சீச்சீ ... இதென்ன வேண்டாத விஷயங்களையெல்லாம் நினைச்சுக்கிட்டு நல்லாயிருந்த மனசு கெட்டுப்போச்சு. ஐ...கர்...தூ...! படுத்த நிலையிலேயே தொண்டைக் காறித் 'தூ' வென்று கோழையைப் பின்புறமாக உமிழ்ந்தான் அவன். புஜத்தினுல் வாயைத் துடைத்துக் கொண்டு மீண்டும் வானத்தை வெறிக்கலானுன். நீல வண்ணத் தடாகத்தில் வெண்ணிறக் கைக்குட்டைகள் மிதந்து வருவதுபோல... இந்த மேகங்கள்தான் எத்தனை அழகாக வானத்தில் மிதக்கின்றன. ஒன்றன் பின் ஒன்ருய்... ஓ...ஓ...கோ! அவனுக்கு இன்னுமொரு கைக் குட்டை கிடைத்ததல்லவா? ...'ஹை...ஹா...'

இப்பொழுது அவனுக்கு நினைவு வந்துவிட்டது. இதைத் தான் இவ்வளவு நேரமாய் நினைவுபடுத்திக்கொள்ள முயன்றிருக்கிருன். இப்பொழுது நினைவு வந்துவிட்டது எல்லாம். அடி உதைபட்டு ராம்தேயி மூட்டைக் கட்டிக்கிட்டு அப்பன் வீட்டுக்குப் போனுளே...அதற்கு இரண்டு நாள் கழிச்சு நடந்தது அது.

அன்னிக்கு என்னமோ அவனுக்கு மனசே சரியில்லை. படுத்தவாறே 'குட்... கட்' என ஒலி எழுப்பும் அணிற் குட்டியையும் சாம்பல் மேட்டைக் கிளறும் பெட்டைக் கோழி அதன் குஞ்சுகளையும் உற்றுப் பார்த்தவண்ண மிருந்தான். மனதே எப்படியோ இருந்தது. தானிய மணி கிடைத்ததும் 'கொரக்...கொரக்...கென்று அந்த பெட்டைக்கோழி சத்தமிடும். உடனே சின்னஞ்சிறு குஞ்சுகள் அதனருகே வந்து கூடிவிடும். நெடு நேரம் வரை

தரை தொட்டுவிடுவதுபோல் தொய்ந்துபோயிருந்த கட்டிலில், சிக்குப்பிடித்த தலையணையில் தலையை வைத்துக் கொண்டு. 'கிளி மைனு கதை' 'தில்பஹார்' சினிமா பாட்டுப் புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தான். பிறகு நாரைத் திரட்டித் தட்டி ஒரு நல்ல பிரஷ் தயார் செய்து கொண்டான். எங்கும் போவதற்கே மனமில்லை. யாரைப் பார்த்தாலும், 'தப்பு ராமதேயினுடையது அல்ல. உன்னுடையது' என்று சொல்லுவது போலிருந்தது. எல்லாருமே அயோக்கியப்பசங்க, பேமானிங்க, சுயநலம் பிடிச்சவங்க. அந்த ஏழு எட்டு வீட்டிலே சொந்த ரிக்ஷா வைத்திருக்கிறவன் அவன் ஒருத்தன்தானே! அவன் ஏதோ நிறையப் பணத்தைத் தேடிப் புதைத்து வைத்திருக்கிற மாதிரி எல்லோருக்கும் ஒரு நினைப்பு. நினைச்சுக்கிட்டும்.

சுமேரா··· மணிக் கணக்காகத் தன் ரிக்ஷாவைத் தேய்த்துத் தேய்த்து அலம்பினன். இரண்டு வீடு தள்ளி பூராவின் பெண்டாட்டி கையை நீட்டி நீட்டி பிச்சுவின் சித்தியுடன் சண்டை போட்டுக் கொண்டிருந்தாள். அப்பப்பா! என்ன கர்ண கடூரமான குரல்! போய், குரல் வளையைப் பிடித்து நெறித்துவிடலாம் போலிருக்கிறது. ஏதோ காலணு கண்ணுடி, குழந்தைகள் போட்டுக் கொள்ளுவது, உடைந்து போனல்தான் என்ன? காலையிலிருந்தே இதற்காக சத்தம், கூப்பாடு, ரகளை, நாள் முழுவதும் இதற்காக யுத்தம். ஒரு நிமிடம் நிம்மதி கிடையாது. காட்டுமிராண்டி ஜன்மம். முட்டாள்கள்.

சிகந்தராவிற்கு எதிரே அவன் தன் வண்டியைக் கொணர்ந்து நிறுத்தினன். பகல் கழிந்து அந்திவேளை நெருங்கிக்கொண்டிருந்தது. ரிக்ஷாவை விட்டு இறங்கி ஒரு பக்கமாய் நின்று, கடலை உருண்டையைக் கொறித்துக் கொண்டிருந்தான். சர்···ரென··· இரண்டு மூன்று கார்கள் அவனைக் கடந்து உள்ளே சென்றன. சில வெளியே

வந்தன. இந்த வெள்ளைக்காரப் பொம்பளைங்கதான் தலை யிலே கைக்குட்டையைக் கட்டிக்கிட்டு என்ன அநியாச மாய் விர்...ன்று காரை விட்டுக்கிட்டு போறுங்க. அம்மா வவுத்திலே இருக்கும்போதே எல்லாம் கத்துக்கிடுவாங்க போல இருக்கு. அடேயப்பா! அவங்க காரை ஓடிச்சுத் திருப்புவதை, ஸ்டார்ட் பண்ணுவதை, வேகமாய் ஓட்டு வதை அவன் என்றும் வியப்புடன் பார்ப்பதுண்டு. அவன் கூட கார் ஓட்டக் கத்துக் கொண்டிருந் தால் ஜம்முன்னு எடுத்துக்கொண்டு போய்... அப்படியே ர்...ன்று குறுக்கே வெட்டிக்கொண்டு வருவான். அந்த சிறுக்கி ராம்தேயியைப் பக்கத்திலே உட்காரவைச்சு ஒரு சுத்து சுத்தி வந்தால்தான் அவளுக்கு அவன் மதிப்புத் தெரியும். நினைவோட்டத்தின் இடையே சுமேரா தன் னெதிரே திறந்த மார்பும், முழங்காலுக்கு மேலே வேட்டி யும், தலையிலே பெரிய முண்டாசுமாய் ஒரு ஆசாமி வியப் புடன் சிகந்தராவின் மேலேயுள்ள கும்பங்களைப் பார்த்த வாறே தன் பக்கத்தில் இருந்தவனிடம் 'ஹரே... மேஹதாப்... பார்த்தியா? எப்படி வானத்தைத் தொட்டுக் கிட்டு நிற்குது? எனக்கென்னமோ மசூதி மாதிரி தோணுது' என்று கூறிக்கொண்டிருப்பதைக் கண்டான்.

அவன் சுமேராவைப் பார்த்து...'ஏம்பா...அக்பராவின் மக்பரா எங்கேயப்பா இருக்கிறது? எந்த மக்பரா அக்பரா வுடையது?' என வினவினான்.

கடலை மெல்லுவதை மறந்து சிரித்தான் சுமேரா. பிறகு அவனுடைய பாமரத்தனத்தைக் கண்டு...'டாகுர்...இது தானப்பா சிகந்தரா! இதுதான் அக்பர் பாதுஷாவைப் புதைச்ச இடம். ஆமாம் நீ எங்கேயிருந்து வர்றே?' என விசாரித்தான்.

சுமேரா சிரித்ததை டாகுர் கவனிக்கவில்லை. வியப்பி னால் விரிந்த கண்களும், திறந்த வாயுமாய் சிகந்தரா வைப் பார்த்துக் கொண்டே நின்றான். 'அடேயங்கப்பா!

இந்த அக்பர் பாதுஷாதான் என்ன மனிசன்! செத்துப் போறவன் எப்படி இப்படிப்பட்ட இடத்தைப் பார்த்து வைச்சான்?' ன்றவன் சுமேராவின் கேள்விக்குப் பதில் கூறுபவன், அவனது மன்னிப்பை யாசிப்பவன் போல்— 'நாங்க பரத்பூர்! இதையெல்லாம் நாங்க எங்கே பார்த் திருக்கிறோம்? ஏதோ கட்டிடம் மாளிகையைக் கண்டிருக் கிறோம். அவ்வளவுதான். வேலை விஷயமாக வர்றது... போறது. அவ்வளவுதான்' என்றான்.

அந்த டாகுர் சென்றபின், தாங்காக்கார புந்தன் சொன்னான்: 'பாவம் ஏதோ பட்டிக்காட்டான் புதுசா வந்திருக்கிறான். நான் வந்து எத்தனை சாமர்த்தியமாய் பெரிய பெரிய படிப்பு படிச்சவங்களை யெல்லாம் முட்டாள் ஆக்கி இருக்கிறேன் தெரியுமா? பாவம். இன்னைக்கும் அளுதுகிட்டு இருப்பாங்க! யாராவது அமெரிக்கன் ஆங்கி லேயனாக இருந்தா, ஐந்து, பத்து பக்ஷீசாகக் கிடைக் கும். இந்தப் பயலுகள் கிட்ட என்ன இருக்கு கொடுக்க? மணிக் கணக்காக உசிரை வாங்கிவிட்டு கடைசியிலே செல்லாத காசை கொடுத்துவிட்டு நடப்பாங்க...என்ன செய்வேன் தெரியுமா? ஸ்டேஷன்லே இருந்து வர்றது, செயிண்ட் ஜான்ஸ் காலேஜ் பில்டிங் கிட்ட இப்படியும் அப்படியுமா சுத்தி வர்றது. "பார்த்தீங்களா? இது தான் சிகந்தரா. இன்னிக்கு பூட்டி இருக்கு"... அப்படீன்னு சொல்லிவிடுவேன்...அடே போய் வா. இவங்க கொடுக்கிற காசுக்கு யார் இவ்வளவு தூரம் குதிரையை விரட்டிக் கொண்டு வருவது? ஏதாவது ஐந்து, பத்து கிடைத்ததா சரி? அல்லா அல்லா, ஆமாம்... ஊரு உலகத்திலே இருந்து இத்தனைபேர் வந்து பார்க்கிறாங்களே. அப்படி இந்தக் கல்லறையிலே என்ன இருக்கு? நமக்கு ஒன்றும் புரியவில்லையப்பா. ஆமாம், இந்த கைடுகள் அளக்கிற கதையெல்லாம் கேட்டு சந்தோஷப்படறாங்களே? நாமும் தான் கொஞ்சம் கதை அளந்து வைத்தால் போகிறது.'

உண்மையைக் கூறினல் சுமேராவிற்கும் இந்த விஷயம்தான் இது வரையில் புரியவேயில்லை.

'ஏய் ரிக்ஷா!' குரலுடன் கூடவே ரிக்ஷாவின் மணியும் ஒலிக்கிறது. 'டிரிங்...டிரிங்...'

திடுக்கிட்டுத் திரும்பினுன் சுமேரா. சவாரி வந்தாயிற்று. பெருமிதத்துடன் திரும்பி நடந்தான். அவனுடைய ரிக்ஷாதான் புதுசாய்ப் பளபளவென்று ஃபாஷஞ இருக்கு. கிராக்கி அவனை விட்டு வேறெங்கே போகும்?

ஒரு பையன், ஒரு பெண். இளம் சாம்பல் நிறத்தில் பட்டன் போடாத ஓவர் கோட்டு. முன்னுலொன்று, பின்னுலொன்று, இரட்டைப் பின்னல். நல்ல நிறம். சற்றே நீண்ட முகம். கண்ணிலே ஒரு ஒளி. இரண்டு கைகளையும் கோட்டில் இரு பக்கத்துப் பைகளிலும் நுழைத்துக்கொண்டு ரொம்ப உணர்ச்சியோடு அந்தப் பையன் ஏதோ கூறிக்கொண்டிருந்தான்.

பையன் உல்லன் ஜர்கினும் பாண்டுமாய் நின்றுன். நெற்றியில் புரண்ட மயிர்ச்சுருளை ஒதுக்கிவிடுபவன்போல் அடிக்கடி ரொம்ப ஸ்டைலாகக் கலைத்துவைத்துக் கொண்டிருந்தான். சரி...ஏதோ விஷயம்...என ஊகித்துக் கொண்டான் சுமேரா. எப்பொழுதுமே இப்படிப் பட்ட விஷயங்களை மோப்பம் பிடிப்பதில் அலாதியான தொரு திறமை அவனுக்குள்ளே வளர்ந்து விட்டிருந்தது. வெளிக்குக் காட்டிக்கொள்கிற இந்தத் துணிச்சலும் அலட்சியமும் மேலுக்குத்தான் என்பதும் அவனுக்குப் புரிந்துவிட்டது. உள்ளே குறுகுறுக்கும் பயத்தை மறைக்க செயற்கையான ஒரு பூச்சு. அவ்வளவுதான்.

'தாஜ்மகல்...சாகப்' என்று வினவினுன் சுமேரா. தாஜ்மகல் போகும் சவாரியானுல் நல்லதாயிற்று. அந்த சிறுக்கி ராம்தேயி விஷயம் என்னவாயிற்று என்றும் ஒரு கண் பார்த்துவிட்டு வரலாம். அவ போய் ஐந்து நாளா யிற்றே என்று உள்ளூர ஒரு நினைப்பு.

'தயால்பாக்' என்றான் அந்த இளைஞன்.

'சரி வாங்க.' உட்காரும் ஆசனத்தைக் கையால் பட்பட்டென்று தட்டினான் சுமேரா.

'வா...ஏறு.' பெண்ணின் முழங்கையைத் தொட்டுக் கூறிய அந்த இளைஞன் மீண்டுமொரு முறை சுற்றிலும் நின்ற நெடிதுயர்ந்த மரங்களையும் தேநீர்க் கடைக்காரனையும் பார்த்தான்.

'டாப்பைப் போடப்பா' என்றாள் அந்தப் பெண். அந்தப் பெண்ணின் முகம் சுமேராவிற்கு நிரம்பவும் பிடித்திருந்தது. ஆனால் அவள் குரலைக் கேட்டதும் அவன் துணுக்குற்றான். 'முதலில் இவர்களிடம் வாடகையைப் பேசிக்கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் ஒவ்வொருவரையும் டூரிஸ்ட் என்று நினைத்துத் தொந்தரவு செய்ய ஆரம்பித்து விடுவார்கள்' என்று அந்தப் பெண் அந்தப் பையனிடம் கூறிக்கொண்டிருந்தாள்.

ஓவர்கோட்டை ஒதுக்கிக்கொண்டு அமர்ந்தான் அவன். வண்டியிலேறும் போது அவளுடைய பின்னங்காலின் சதைப்பற்று மிகுந்த பகுதி தெரிந்ததும் சுமேராவின் மனம் குறுகுறுத்தது. டாப்பைப் போடும்போதே... 'மேம் சாகிபா, முன்னே இருக்கும் திரையையும் அவிழ்த்து விடட்டுமா?' என்று கேட்கவேண்டும் போலிருந்தது. கூடவே இது கொஞ்சம் அதிகம் என்று படவே, 'காசுக்காகச் சண்டை போடறவன் நானல்ல' என்றான்.

இருவரும் வண்டியில் ஏறி அமர்ந்ததும் தனது பார்வையைத் தவிர்ப்பதற்காக அந்தப் பெண் இன்னொரு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டிருப்பதையும் அவன் கவனித்தான். அவள் சிரித்துக்கொண்டிருப்பது அவளுடைய கன்னத்துப் பகுதியைப் பார்த்தாலே தெரிந்தது. அவளுடைய இந்தத் தோற்றம் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. மெல்ல அப்படியே...என்று தோன்றியது. அவனது விரல்கள் மணியை அழுத்தின...டிரிங்...டிரிங்...

'கொஞ்சம் நகரு. நான் கொஞ்சம் கையைப் பின்னால் வைத்துக் கொள்கிறேன்' என்று அந்தப் பையன் சொல் லிக் கொண்டிருந்தான்.

ரிக்ஷாவைப் பிரதான சாலைவரை நடந்தே இழுத்து வந்த சுமேரா...'கையை மட்டு மென்ன? உடம்பையே அப்படியே சாய்த்துக் கொள்கிறதுதானே' என்று மனதிற்குள் முணுமுணுத்துக் கொண்டான். அவன் கரம் வீணை மணியை டிரிங்...டிரிங்...எனத் தட்டியது.

'கொஞ்சம் சீக்கிரம் விடப்பா' என்றாள் அந்தப் பெண். குரல் இனிமையாக இருந்தது.

'இப்ப வீட்டுக்குப் போகணும், அவசரம்.—அம்மா அடிப்பாள் இல்லையா? அப்போ உள்ளே கொட்டம் அடிச்சுகிட்டு இருந்திருப்பாங்க. நேரம் போனதே தெரி யாமல்'—வெளிப்படையாக சுமேரா கூறியது இதுதான்: 'இதோ பாருங்க, நம்ப வண்டி சும்மா பிளேன் மாதிரி பறக்கும்.' வழவழப்பான தார் ரோட்டில் வண்டி நகர்ந்த தும் அவன் மனம் உற்சாக வெள்ளத்தில் மிதந்தது. பல்லைக் கடித்துக்கொண்டு முழு வேகத்துடன் ரிக்ஷாவை விரட்டிச் செல்ல வேண்டுமென்று உடலும் மனமும் துடித்தது. ஒரு பெண்ணைப் பள்ளிக்கூடம் கொண்டு விடும் சவாரி ஒன்றை அவன் மங்கித்து ஏற்பாடு செய்து கொடுத்திருந்தான். அந்தப் பெண்ணை வண்டி யில் உட்கார வைத்துக்கொண்டு அசுர வேகத்தில் ஓட்டி யிருக்கிறான் பயல். மூன்றாவது நாளே கொஞ்சம் மெது வாகப் போகும்படி சொல்லிவிட்டாள் அந்தப் பெண். அதற்கு மங்கிப் பயல்—கட்டை வண்டியிலே போகணு மின்னு சுமேரா வண்டியிலேயே போங்க. இது துபான் மெயில் வேகத்துக்குக் கம்மியா ஓடாது— அப்படீன்னு பதில் சொல்லி விட்டானாம்.

ஹூம். நம்ப வண்டி மாட்டு வண்டியாம்...ம். ஓரோ ருத்தன் கண் மண் தெரியாமல் ஏண்டா பெடலை மிதிக்

கிறுன்னு இப்பல்ல புரியுது...... சுமேராவின் காதுகள் கூர்மையாயின.

'என்ன சொன்னலும், ரிக்ஷா ரொம்ப நன்னயிருக்கு.' இது பையனின் குரல்.

'க்கும்...... ஏன் நன்னயிருக்காது? இப்படி நெருக்கி அடித்துக்கொண்டு உட்காரலாம் அல்ல?' பெண் சிரித்தாள்.

சிரிக்கும்போது அவள் கன்னம் எப்படி இருக்கிறதோ? தொடர்ந்து கேட்டது.

'க்கும்... என்ன இது. எடுங்க கையை. இது தெருவு, ரிக்ஷாக்காரன் இருக்கிறன், ஞாபகமிருக்கட்டும்...' இதற்கப்புறம் ஆங்கிலத்தில் ஏதோ கசாபுசா.

ஹூம்... ரிக்ஷாக்காரனைப் பத்தி யென்ன? உங்களுக்குத்தான் கண்ணே தெரியலையே. வெட்கம் கெட்டவங்க. ஊம் ஜாலியாய் இருங்க. அம்மா அப்பாவை ஏமாத்திட்டுத் திரியுங்க. யாராரு எதுக்காக வராங்க போராங்க எல்லாம் நமக்குத் தெரியும். உங்க மாதிரி எத்தனையோ இரண்டு, மூணு வந்துகிட்டுத்தான் இருக்கு. நான் சவாரி ஏத்திக்கிட்டுத்தான் போறேன்... சுமேராவிற்கு அந்தப் பெண்ணை எங்கேயோ பார்த்தாற்போல் இருந்தது. ஆனல் பையன் இந்த ஊர்க்காரனுகத் தோன்றவில்லை. ஒருவேளை மெடிகல் காலேஜ் வழியாகப் போகும்போது இவளையும் பார்த்திருக்கலாம்.

'உண்மையாகவே நேரமாகிவிட்டது,' என்றுன் பையன். அங்கே நடைபாதை ஓரமாய்க் கொஞ்சம் வெயில் இருந்தது.

'க்கும்... இப்ப தோன்றுகிறது, நேரமாயிற்று என்று. நான் அப்பொழுதே சொன்னேனே. இல்லையா? அப்பொ... இப்படி என்ன அவசரம் அவசரம் என்றுய்.' பெண் சற்றே எரிச்சலுடன் பேசினுள்.

'டியர், உன்னுடைய அவசரம் உயிரையே வாங்கி விட்டது.'

'சற்று மெள்ளப் பேசு...' பெண் அந்தப் பையனின் புஜத்தில் சுண்டிளுள் போலிருக்கிறது.

க்கும்...... இப்பொ சீக்கிரம் போ. மெள்ளப் பேசு... அப்போ என்ன, லட்டுவா முழுங்கிக் கொண்டிருந்தீர்கள்? அப்போ ரிக்ஷாக்காரனின் நினைவு வரவில்லையாக்கும். இது ரிக்ஷாதானே. கார் இல்லையே பறக்க? கடவுளே சாமி. தில்லி பாசஞ்சர் வண்டிக்காக ரயில் கேட்டு மூடியிருக்கணும். இரண்டு கழுதையும் வீட்டுக்குப் போய் நல்லா அவமானப்படட்டும்.

'இதோ பாரு. எதற்காகச் சிரமப்படுகிருய்? மெதுவாகவே போப்பா, ரொம்ப தூரம் போகணும். களைத்துப் போய்விடுவாய்.' இது பையன்.

ஆமாம்...... உனக்கென்ன அவசரம்? அப்படி தேவலோகத்திலே இல்லே நீ மிதந்துகிட்டு இருக்கே. உனக்கு அவசரமில்லையடா, பின்னே அவசரமில்லை. நடக்கப் போகிறது. வீட்டுக்குப் போனதும் கிடைக்கப்போற தெல்லாம் அவளுக்குத்தான். நீ போயிடுவே... அயோக்கியப் பயல். யார் வீட்டுப் பொண்ணோ, மருமகளோ, ஏமாற்றிக் கூட்டிக்கொண்டு வந்துவிட்டாய்....சுமேராவிற்கு அந்தப் பெண்மீது இரக்கமாய் வந்தது. அவன் தனது வேகத்தை மட்டுப்படுத்திக் கொண்டான்.

பின்புறம் நடந்த இழுபறி அமர்க்களத்தில் சுமேராவிற்கு ஆத்திரமாக வந்தது. ஊடலும் கொஞ்சலும். சீச்சீ... உடனே ரிக்ஷாவை நிறுத்தி அவர்கள் இரண்டு பேரையும் இறக்கிவிட்டு விடவேண்டும் போலிருந்தது. தான் தவறுனதொரு செய்கைக்கு உடந்தையாக இருப்பதுபோல், உடனடியாக அதிலிருந்து விலகிவிடவேண்டும்போல், தோன்றிற்று. இந்தப் பையன், பெரிய அயோக்கியன், ரவுடியாக இருப்பான் போலிருக்கிறது.

பாவம்... பெண் நிஜமாகவே அப்பாவிங்க. ஒன்றும் தெரியவில்லை.

லேசான சரிவில் பெடலை மிதித்துக்கொண்டு பிரேக்கை இழுத்துப் பிடித்த வண்ணம் மாபெரும் தியாக வீரன் போல் அவன் உட்கார்ந்திருந்தது, 'இதோ பாருங்க. உங்க நடவடிக்கையெல்லாம் எனக்குத் தெரியும். எல்லாம் புரியுது. தெரிஞ்சுக்கிட்டுத்தான் சும்மாயிருக்கிறேன்' என்பதை அவர்களுக்கு உணர்த்த விரும்புவது போலிருந்தது. பின்னாலே திரும்பிப் பார்க்க அவனது முதுகின் ஒவ்வொரு நரம்பும் துடித்தது. குறுகுறுத்துத் தவித்தது. சும்மா ஒரு தரம், வெட்கம் கெட்டவங்க. எப்படித்தான் உட்கார்ந்திருக்காங்கன்னு பார்த்தா என்ன? அவன் காதுகளைக் கண்களாக்கிக் கொண்டிருந்தான். அவர்கள் உட்கார்ந்திருப்பது, பேசுவது எல்லாமே படம் படமாய் அவன் கண்ணெதிரே தோன்றியது. இப்பொழுது இருவருமே மௌனமாகத்தான் இருந்தார்கள். பின் சக்கரத்தின் மறை, செயின், இரண்டின் ஓசைதான் கிர்...... கிர்...... ரென்று கேட்டுக் கொண்டிருந்தது. இந்தச் சத்தம் அவனுக்குப் பழகிப் போயிருந்தது. முன்பெல்லாம் பின்னால் இன்னொரு சைக்கிள் வருகிறதோ என்று திடுக்கிட்டுப் பயந்து போவான்.

அட! இவங்க மூச்சு விடுவதையே மறந்துவிட்டாங்களா? சண்டை மனஸ்தாபம் ஏதாவது வந்துவிட்டதோ? தப்பிதமாய் நடந்துகிட்டாளோ என சுமேராவிற்குப் பயமாய்ப் போய்விட்டது. இந்தக் காலத்துப் பையன்களுக்குத்தான் சினிமா பார்த்துப் பார்த்து மூளை எப்படியெல்லாம் வேலை செய்யறது. ஒழுங்கா ஒரு வேலை செய்யத் தெரியலை. தம்பி, பொம்பளைங்க மனசை ஜயிக்கிறது. அப்படி யொன்றும் லேசில்லை, தெரியுமா? ரொம்ப ரொம்ப மெதுவாகத்தான் முன்னேறனும்.

தூரத்திலிருந்தே ரெயில்வே கேட் மூடியிருப்பதை

அவன் பார்த்துவிட்டான். பாவம், அந்தப் பெண்ணுக்குத்தான் இன்னும் நேரமாகிறது. மனசு எப்படியெல்லாம் திக்திக்குன்னு அடிச்சுருதோ, பாவம். வெளியிலே என்ன சிரிச்சுப் பேசினாலும்... உள்ளுக்குள்ளே...

இத்தனை நேர மௌனத்தைக் கலைத்தவன் பையன் தான். 'இதோ... வலது பக்கம் ஒரு கல்லுக்குதிரை நிற்கிறது பார்த்தாயா? அதுதான் ராடௌர் அமர்சிங்கின் குதிரை என்று சொல்லுகிறார்கள். இதே மாதிரி இன்னொன்று அங்கே கோட்டைக்கருகே இருக்கிறது. அங்கு குதித்தவனை இங்குவரை சுமந்து வந்ததாம், இது. இங்கு தான் அவன் இறந்தானும். அவனைத் துரத்திக்கொண்டு பின்னால் படைகள்...'

'தெரியும் எனக்கு. நான் ஹிஸ்டரிதான் எடுத்துக் கொண்டிருந்தேன்.' வரண்ட குரலில் கூறினாள் அப் பெண்.

ஹூம்... பாரு... கேளு. முதலில் கோபித்துக்கொண்டு உர்... ரென்று இருந்தான். இப்பொ இதுதான் ராடௌர் அமர்சிங்கின் குதிரையென்று அளக்கிறான்... அமர்சிங் இவன் அப்பனில்லை.

உண்மையில் அவனுக்கே அந்தக் குதிரை யாருடையது என்று தெரியாது. சிலர் அமர்சிங்குடையது என்கிறார்கள். சிலர் ஹுமாயூனினுடையது என்கிறார்கள்.

ஏற்றத்தில் ரிக்ஷாவைத் தள்ளிக்கொண்டு போகும் போது அந்தப் பெண்ணின் கால் விரல்கள் அடிக்கடி அவன்மீது உராய்ந்தன. அவற்றைத் தொட்டுப் பார்க்கும் ஆசையை அடக்கிக் கொள்ள அவன் எத்தனை சிரமப்பட்டான் என்பது அவனுக்குத்தான் தெரியும். ஹூம்... இந்தக் கன்னங்கரேலென்ற தடியன் சும்மா அப்சரஸ் மாதிரியான பெண்ணைத் தட்டிக்கிட்டு வந்து விட்டான். புடவையின் ஓரம் அந்த மென்விரல்களுடன் எப்படி விளையாடுகிறது?

'ரிக்ஷாவாலா, நாங்கள் இறங்கிக் கொள்ளட்டுமா?' பையன் எழுந்திருக்க முயன்ருன்.

'வேண்டாம் சாகப். சும்மா கொஞ்சம் ஏற்றம், அவ்வளவுதான்.' மெல்ல அவர்களிருவரின் முகத்தையும் ஒரு நோட்டம் விட்டான். பிணக்கின் இறுக்கம் தெளிவாகத் தெரிந்தது. அடேயப்பா, அதற்குள்ளே என்ன நடந்துவிட்டது?

'போச்சு ... இன்னிக்குச் செத்தோம். இந்தக் கதவு எப்பொழுது திறக்குமோ?' பையன் கவலையுடன் பேசினன். 'இன்று எல்லோருமே என்னிடம் கோபித்துக் கொண்டிருப்பதாக எனக்குப் படுகிறது.'

'இப்பத்தான் கதவு தெரிகிறதாக்கும்?'... கோபித்துக் கொண்டிருப்பதென்ன? கோபமாகத்தானிருக்கிறது.'

'இதோ பார், உம்மி. இது ரொம்ப மோசம். நீ இப்படிச் செய்தால்... ஹூம்... விடைபெறுவதற்கு முன்னே இப்படித்தான் சண்டை போட்டுக்கொள்ள வேண்டுமா? உன்னுடைய இந்தப் பழக்கம் எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை.'

'உங்கள் பழக்கம் ரொம்ப நன்ருயிருக்கிறதாக்கும்.'

சுமேரா ரிக்ஷாவை ஒரு கையால் பிடித்துக்கொண்டு பின் சக்கரங்களுக்கு இரண்டு செங்கல்களை வைத்துக் கொண்டிருக்கையில் பெண்ணின் தழுதழுத்த குரல் காதில் வீழ்ந்தது. 'ஏய், ரிக்ஷாவாலா, எத்தனை நேரமாகும் என்று கேளப்பா. ரொம்ப நேரமாகுமென்ருல் அந்தப் பக்கம் போய் வேறு ரிக்ஷா வைத்துக் கொள்கிருேம்.'

பெண்ணின் முகத்தில் நிலவிய கள்ளம் கபடமற்ற பாவம் சமேராவின் இதயத்தில் அவள் பால் இரக்கத்தை உண்டாக்கியது. குற்றம் முழுவதையும் அவன் மனது அந்தப் பையனின் பேரில் சுமத்தியது. ஹாண்டில் கிட்ட நின்று மணியைக் கழற்றிச் சரி செய்யலாமா என முதலில்

நினைத்தான் ஆனல்... 'இதோ வந்துவிடும் சாகப்... வண்டி ... சிக்னல் டௌனுகி இருக்கிறது' என்றவாறே கேட்டுக் காவலாளியை நோக்கி நடந்துவிட்டான். ஒரு டிரக், இரண்டு கார், ஒரு தாங்கா வண்டி, இரண்டொரு ரிக்ஷாக்கள் வரிசையாக நின்றன. நீல நிற யூனிபாரம் போட்டுக்கொண்டு, சிவப்பு, பச்சைக் கொடிகளைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு நின்ற காவல்காரனிடம் 'ஏ வாத்தியாரே. ஒரு பீடி இருந்தா கொடுப்பா.' என்ருன் சமேரா.

இந்த வழியாகத்தான் தினமும் வருகிருன். போகிருன் ... காவல்காரன் அவனுக்கு ரொம்ப சிநேகிதம். 'பீடி உங்க அப்பன் வாங்கிவைத்திருப்பான்' என்பது போன்ற இரண்டொரு கிண்டல்களுக்குப் பிறகு இருவரும் நின்ற நிலையிலேயே பேசவாரம்பித்தனர். பீடிப் புகையை ஒரு மூச்சு உள்ளே இழுத்துக்கொண்ட சுமேரா மனதிற்குள்ளேயே குமைந்து கொண்டிருந்தான். ஏதோ ஒரு சாதாரணமான விஷயம் தனக்குத் தெரியும். தானும் அதில் பங்கு பெற்றவன் என்று எப்படிக் கூறுவது? யாரிடம் கூறுவது? 'எங்கு போற சவாரி அண்ணே. பார்க்க ரொம்ப ஷோக்கா இருக்கு.' காவல்காரன் கேட்டபின் புகையோடு கூடவே சிரிப்பையும் கலந்து வெளியிட்டவாறே, 'அடேயப்பா, வாத்தியாரே. நம்ப தொழிலே இதுதானே? இது என்ன புதுசா? அப்படியே ஒதுங்கி நின்று உலகத்தை வேடிக்கை பார்க்கிறேன் அப்பா' என்ற சுமேரா, சற்றே குரலைத் தணித்து, 'சொல்லு! நேரா, ஸ்டேஷனுக்கு இட்டுக்கிட்டு போகட்டுமா? ஜோடி புருசன் பெண்டாட்டி இல்லே' என்ருன்.

'அடேய் செருப்படி விழும் மேலே. வண்டி கிண்டியெல்லாம் எகிறிப் போயிடும். ஜாக்கிருதை. இந்தக் காலத்து புருசன் பெண்ஜாதி விஷயம் எல்லாம்

தெரியாது உனக்கு. அண்ணன் தங்கச்சி கூட இவங்க முன்னாலே நிக்க முடியாது. தம்பி, பேசாமே ரிக்ஷாவை இழுத்துக்கிட்டுப் போய் எங்கே விடவேண்டுமோ, விடு... உலகம் போகட்டும் அது பாட்டுக்கு... நீ போ சும்மா.'

தடதடவென்ற ரெயிலின் ஓசையால் பேச்சு தடைபட்டது. ஜிக் ஜிக்கென்று ரெயில் கேட்டைக் கடந்து சென்றதும் முகவாட்டத்துடன் சுமேரா திரும்பி நடந்தான்.

இதற்குள் சமரசம் ஏற்பட்டு விட்டாற்போல இருக்கிறது. பெண்ணின் முகம் மீண்டும் பூவாய் மலர்ந்திருந்தது. சுமேராவிற்கு இது சந்தோஷமாயிருந்தது. அந்த முகத்தையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் போலிருந்தது.

'இதற்குள்ளே உன் அப்பா திரும்பி வந்திருந்தால்...?'

ரிக்ஷாவின் ஹேண்டிலைப் பிடித்த சுமேராவின் காதில் பையனின் பரிகாசக் குரல் வீழ்ந்தது. 'மம்மிகிட்டப் போய் கேட்பார். உம்மிக்குட்டி மீனு வீட்டிற்குப் போயிருக்கிருள் என்று தெரியும். அப்புறம்...'

'நேரமாகிவிட்டது. அதனால் மீனுவோட அண்ணு என்னைக்கொண்டு வந்து விட வந்தார் என்று சொல்லுவேன்.'

'அவங்க வீடு சிகந்தரா பக்கம்தான். இல்லே? மீனுவோட அண்ணன் மருந்துக் கம்பெனி ஏஜெண்ட். பம்பாயிலிருக்கிருர். தில்லிக்கு வந்திருந்தார். இதன் நடுவிலே... இதெல்லாம் தெரியுமா அவருக்கு?'

இருவரும் சேர்ந்து சிரித்தார்கள்.

நன்ருய் இருட்டிவிட்டது.

'நாம் ரிக்ஷாவிலே ஏறும்போது...இந்த ரிக்ஷாக்காரன் முறைத்துப் பார்த்தான். எங்கேயாவது அடையாளம் தெரிஞ்சவனோன்னு பயந்தே போயிட்டேன்.'

இம் முறை பெண்ணின் குரல் குழைந்தது.

சுமேராவிற்கு எப்படியோ ஆகிவிட்டது. 'சீ...பெண்

ரொம்ப கெட்டிக்காரிதான். கைதேர்ந்தவள். ஏனோ அவளுக்கு மங்கி, ராம்தேவியின் நினைவு வந்தது. இவங்களும் பார்த்தா ஒன்றுமே தெரியாத அப்பாவிகள் போலத்தான் இருக்காங்க. இந்தப் பையன் பம்பாய்க்காரனும். ஒன்றும் தெரியாத இந்த அப்பாவிப் பெண்ணைக் கடத்திக்கொண்டு வந்து விட்டான் என்று இத்தனை நேரமாய் அந்தப் பெண்ணின் மீது சுமேராவின் உள்ளம் பரிதாபப்பட்டுக் கொண்டிருந்தது. பையனைப் பார்த்தாலும் அப்படித்தான் பம்பாய் குண்டன் மாதிரி இருக்கிறன். பம்பாயைப் பற்றிச் சினிமாவில் பார்த்த காட்சிகள் அவன் கண் முன்னல் நிழல் படமாய் ஓடின. சினிமாவில் போக்கிரிகளின் தலைவனுக வரும் ரார்சிங் ஜாடையாக இந்தப் பையனிருப்பது போலத் தோன்றியது.

இறக்கத்தில் பின் சக்கரத்து செயின் கர்...புர் என்று அலறியது. ஒரு காலைப் பிரேம் மீது வைத்துக் கொண்டு ஆசுவாசப் படுத்திக் கொண்டான் சுமேரா. கொஞ்ச தூரம் வண்டி தன் பாட்டில் ஓடுர்...றூம், தடிச் சிறுக்கி ராம் தேயி. அவள் நினைவுகள் அவனைத் துரத்திக் கொண்டு ஓடின.

இச்!!!

சட்டென்று பிரேக்கைப் பிடித்துவிட்டது அவன் கை. தலைக்கு மேல் போய்விட்டது விஷயம். இதெல்லாம்... இதுவா இடம்! இது ரிக்ஷாவா என்ன? அந்த பொண்ணு அவன் கன்னத்திலே ஓங்கி ஒரு அறை கொடுக்கலே யேன்னு சுமேராவிற்கு உண்மையிலேயே வருத்தமாக இருந்தது.

ஏன்? என்ன நடந்தது?

ரிக்ஷா நின்றதுமே இருவரும் பதைபதைத்துப் போனுர்கள். பெண்ணின் வெளுப்பான முகம் சிவந்து போய் எப்படி இருக்கும் என்று சுமோரா தனக்குள்

கற்பனை செய்யலானான். அவனால் நிமிர்ந்து பார்க்க முடியவில்லை.

'எதிரே போலீஸ் ஸ்டேஷன் இருக்கிறது. சாகப். கொஞ்சம் விளக்கை ஏத்திக்கிறேன்'.. வேறொன்றும் தோன்றாத நிலையில் பெடலை எதிர் மறையாகச் சுழற்றிக் கொண்டே கூறினான் அவன் பின்னால் வந்த ரிக்ஷா வும் காரும் முன்னே சென்றுவிட்டன. விளக்கு ஏற்ற வேண்டும். இது உடனடியான அவசரம். தட் தட் என்று சட்டத்தில் தட்டிக் கொண்டே காலி ரிக்ஷாவை இழுத்துக் கொண்டு போனவனை நிறுத்தி சுமேரா தீப்பெட்டி கேட்டு விளக்கை ஏற்றினான். 'நேராய் இவர் களை இழுத்துக் கொண்டு போய் போலீஸ் ஸ்டேஷனில் நிறுத்த வேண்டும். ரொம்ப மஜாவாய் இருக்கும். கொட்ட மெல்லாம் போன இடம் தெரியாமல் பறந்து விடும்' என மனத்திற்குள் கறுவிக் கொண்டான் அவன்.

'சரி சரி...இனி விளையாட்டெல்லாம் போதும். இனி சீரியசா நாம் எல்லா விஷயத்தையும் பற்றி யோசித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும்.' இந்த முறை ரிக்ஷா புறப்பட்டதும்...முற்றிலும் மாறுபட்ட தொனியில் பேசி னான் பையன். சற்று நேரம் பதிலுக்காக காத்திருந்து விட்டுத் தொடர்ந்தான்.

'பரீட்சை முடிந்ததும் எனக்கு எழுது. எனக்கும் அதற்குள் என்னை எங்கே போடுகிறார்கள், பர்பாயா, தில்லியா, என்று தெரிந்து விடும். இடம் கிடம் எல்லாம் பார்த்து வைத்து விடுகிறேன். உன் அப்பாவிடம் நீதான் சொல்ல வேண்டும்.'

'ஊ ஹூம் முடியாது... எனக்குப் பயமாயிருக்கிறது. நீங்களே கடிதம் எழுதிவிடுங்கள்.'

'முட்டாள் தனமாய் பேசாதே. என் பொறுப்பை நான் நிறைவேற்றுகிறேன். உன் பொறுப்பை நீ கவனி.' இம்முறை உத்தரவிடுபவன் போன்ற குரலில் அந்தப்

பையன் பேசியது சுமேராவிற்குப் பிடித்திருந்தது. இது ஆண் பிள்ளைக்கு லட்சணம்!

பையன் தொடர்ந்து பேசினான். 'விட்டுத் தள்ளு எல்லோரையும். சத்தமில்லாமல் சிவில் மாரேஜ் செய்து கொள்ளலாம். அப்புறம் எல்லாம் சரியாகிவிடும்.'

'ஓகோ! ஐயா பெரிய ஆளுதான். மாதாகோவிலுக்குப் போய் கல்யாணம் கட்டலாமின்னு சொல்லுகிறார்.'

'வேண்டாம்' பெண் உறுதியான குரலில் கூறினாள். சற்று நேரம் இருவரும் பேசவில்லை. அவனுடைய தோளில் கன்னம் உராய, கொஞ்சும் குரலில் 'அதற்கெல்லாம் இன்னும் எத்தனையோ நாட்கள் இருக்கின்றன. அது வரையில் எப்படி இருப்பதாம்! நிஜமாகச் சொல்லுகிறேன். எனக்கு ரொம்ப பயமாக இருக்கிறது. என்ன வாகுமோ தெரியவில்லை... வந்து...' எனச் செல்லமாக முரண்டினாள்.

ஐயோ, ஐயோ! எல்லாம் போச்சு. குட்டையைக் குழப்புகிறாளே. இவள் பெண்ணா? அல்லது மெழுகு பொம்மையா? கணநேரத்திற்கு முன் சீறி விழுந்தாள். இப்போ குழைகிறாளே! கெஞ்சுகிறாளே!

'நிச்சயமாய் இனிமேல் என்னால் முடியவே முடியாது. உங்க கடிதம் வந்ததிலிருந்து என்னால் ஒரு துரும்பை எடுத்துப் போட முடியவில்லை. ஒரு காரியம் செய்ய முடியவில்லை. எப்பொழுது மணி நாலு அடிக்கும்! எப்போ மாலை வேளை வரும் என்று மனசு ஏங்கியது. கடிகாரத்தின் மீது கோபம் கோபமாய் வந்தது. எல்லாப் பெண்களும் என்னைக் கேலி செய்தார்கள். நிஜமாய்ச் சொல்லுகிறேன். அவ்வளவு மோசமாய்ப் போயிட்டேன் நான். இதோ பாருங்க, இனிமேல் நான் பரிட்சைக்கே உட்காரப் போவதில்லை. ஃபெயிலாகிச் சிரிப்பிற்கிடமாகி நிற்க வேண்டாமே!'

சுமேராவின் மனச் சோர்வெல்லாம் பறந்தோடிவிட்டது. அடேயப்பா... பம்பாயி சினிமாவெல்லாம் நடக்குதே! இப்படி ஒரே ஒரு பாட்டு வரணும்...

'அரே அரே, இதென்ன உம்மி நீ இப்படி பைத்தியக் காரத்தனமாய்! இதோ பாரு. அழக்கூடாது. யாராவது பார்க்கப் போறாங்க! கொஞ்சம் புண்ணியார் உண்டு. சும்மாயிரு.'

டிரிங்...டிரிங்...டிரிங்!

மணி அடித்துவிட்டு, பின்னால் ஏதும் சவாரி வருகிறதா என்று பார்ப்பவன்போல் சுமேரா கடைக் கண்ணால் பார்த்தான். பெண்ணின் தலை, உண்மையாகவே அந்தப் பையனின் தோளில் சாய்ந்திருந்தது. அவன் கைக்குட்டையால் அவளுடைய கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தான். இருட்டிலும் அவசரத்திலும் ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. எவ்வளவு பிரமாதமாக எல்லாம் நடந்து கொண்டிருந்தது? இப்ப பயல் மாட்டிக்கிட்டான்! இந்தப் பொண்ணுதான் என்ன சாகசமாடருள். அடேயங்கப்பா! நாளைக்குப் பார்த்துக் கோண்டேயிரு. இன்னொருத்தன் பக்கத்திலே உட்கார்ந்துகொண்டு இப்படித்தான் கண்ணீர் விட்டுக் கரைவா. சட்டென ராம்தேவியின் நினைவு வரவே மனமெல்லாம் கசந்து வழிந்தது. இந்தப் பையன் நூத்துக்கு நூறு வடிகட்டின முட்டாள்தான். சந்தேகமேயில்லை. எல்லாவற்றையுமே உண்மையென்று நினைச்சுக்கிட்டு இருக்கான். அரே! இரண்டு உதை கொடுத்து விட்டு வீட்டுக்கு நடடா, தம்பி. எங்கே வந்து மாட்டிக் கிட்டே இப்படி?

'கொஞ்சம் இந்தப் பக்கத்துத் தெருவிலே...போ...' பையன் ரெயில்வே பாலத்தின் மீது போகும்போது கூறினான்.

'எங்கே வேண்டுமென்றாலும் போ...இன்னிக்கு உங்

கிட்டேயிருந்து முழுசா இரண்டு ரூபாய் வேணும் எனக்கு' சுமேரா மனதிற்குள் கூறிக்கொண்டான்.

'உம்மி... இதோ பார். பயப்படாதே. எல்லாம் சரியாகி விடும். இதோ பாரேன், நான் ஊருக்குப் போய் சேரு வதற்கு முன்னரே உன் கடிதம் அங்கே வந்து சேர்ந்து விடவேண்டும். தெரிந்ததா?' மெல்லமாகக் கன்னத்தில் தட்டும் ஓசை. 'அந்தக் காட்டிலே உன் அன்பான கடிதங் களினுல்தான் உயிரோடு இருக்கிறேன். இல்லாவிட்டால் இந்த மருந்துகளைக் கட்டிக்கொண்டு...'

'நீங்கதான் ரொம்ப தாமதமாய் பதில் போடுகிறீர்கள். நான் பாஸ் செய்யவேண்டுமென்ருல் மறு தபாலிலேயே பதில் போடவேண்டும். இல்லாவிட்டால் அப்புறம் என்னைக் குற்றம் சொல்லக்கூடாது. தினமும் மீராகிட்டப் போய்க் கேட்பேன். பதில் வரவில்லை என்று தெரிந்ததும் என்னமாய்க் கோபம் வரும். இனிமே ஆயுசுக்கும் கடிதம் எழுதவே கூடாது என்று தோன்றும்.'

ஐயோ! தன் கிட்டேயும் யாராவது இப்படியெல்லாம் பேசக் கூடாதா? சுமேராவின் இதயம் அழுதது. தன் வாழ்க்கையில் தனக்கு ஏதோ ஒன்று மிக அருமையான, இன்றியமையாததொன்று தேவை என்று தோன்றியது. ஆனல் அது என்ன என்பதை அவனல் அறிய முடிய வில்லை. அம்மாவின் ஸ்தானத்திலிருந்தவளின் காதல் செய்த பாவம், அட்டிகையைத் திருடியது. இரண்டு மாபெரும் குற்றங்களும் ஒரேயடியாய் அச்சாணிபோல் நெஞ்சைக் கடந்தன.

'அதோ அந்தக் கேட்டுக்கருகே நிறுத்து' என்ற பெண் வண்டி சரியாக நிற்பதற்கு முன்னரே சட்டென்று குதித்துவிட்டாள். செயினின் கிர்... புர் ஓசை நின்று விட்டது.

'நீங்கள் இறங்க வேண்டாம். உள்ளேயிருந்து யாரா வது வந்துவிடப் போகிருர்கள்.'

'சரி சரி.' அந்தப் பெண்ணின் இரு கரங்களையும் தன்னிரு கரத்தால் பற்றிக்கொண்ட அந்தப் பையன் உதட்டருகில் கொண்டு போனுன் போலிருக்கிறது.

'சரி, போகலாம்.'

நடந்துகொண்டே திரும்பித் திரும்பி ரிக்ஷாவை பார்த்த அப்பெண்ணின் விழிகளை ஒரு கணம் சுமேராவின் பார்வை சந்தித்தது. அந்தக் கண்களில் பயம், தயக்கம், சங்கோஜம் எதுவுமே இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால், அதில் மிளிர்ந்த ஏதோ ஒன்று அவன் இதயத்தைக் கனக்கச் செய்தது. நெஞ்சு நிரம்பி வழிந்தது. ஏதாவது மரத்தின் இலையைப் பறித்தால் அதிலிருந்து நார்... உரிந்துகொண்டே போகுமே, அதுபோல மெல்லிய மிக மிக நுட்பமான இழையொன்று சுமேராவை அந்தப் பெண்ணின் பால் இழுத்துக் கொண்டிருந்தது.

தயக்கத்துடன் கேட்டருகில் சென்ருள் அவள். பிறகு மீண்டும் திரும்பிப் பார்த்தாள். பையனும் பின்புறத்துத் திரையைக் கையால் அகற்றிக்கொண்டு பார்த்துக்கொண்டிருந்தான். உற்சாகமிழந்து தளர்ந்த கரங்கள் கேட்டின் தாழ்ப்பாளை நீக்கி மறுபுறம் தள்ளின. ரிக்ஷா திரும்பி விட்டது.

சுமேராவின் மனம் மீண்டும் சோர்வில் மிதந்தது.

வாடகைக்காக அவன் எந்தத் தகருரும் செய்யவில்லை. பீடி வாங்குவதற்காக அவன் ஒரு கடையில் நின்று ஆசனத்தைவிட்டு இறங்கியதும் அவன் பார்வை கால் வைக்குமிடத்தில் வெண்புரு போல் சுருண்டு கிடந்த கைக்குட்டையின் மீது வீழ்ந்தது. ரிக்ஷாவைச் சற்றே இருட்டான இடத்திற்கு இழுத்துச் சென்று அதைக் கையிலெடுத்தான் அவன். பிரித்துப் பார்த்தான். நல்ல பெரிய கைக்குட்டை. கொஞ்சம் அங்குமிங்கும் ஈரமாக இருந்தது. திரும்பிப் போய்க் கொடுத்து விடலமா? என்று தோன்றியது. தன்னையுமறியாமல் கைக்குட்டை மூக்கி

னருகே உயர்ந்ததும் அதனின்று எழுந்த இனிய மென் மணம் அவன் மண்டையெல்லாம் அலை அலையாய் விரவிச் சென்றது. மலர்த்துச் சிரித்த தாமரை தடாகத்துள் ஆழ்ந்து தன்னையே இழந்து விட்டது போலிருந்தது. கண்கள் எப்பொழுது பனித்தன என்பது அவனுக்கே தெரியவில்லை. அப்பெண்ணின் அழகிய முகம் கண் முன்னே நிழலாடியது. நறுமணங்களில் கிறங்கி நின்ற அவன் எதையோ இழந்தவன் போல் மெல்ல மெல்லத் திரும்பி வந்தான். அவ்வளவுதான்.

பின் சக்கரத்தில் கிர்...புர்...ரென்று செயின் உராய்ந்து கொண்டே இருந்தது. செங்கலின் மீது செங்கலை வைத்து மெதுவாகத் தேய்ப்பது போல்...

விரல்களைக் குவித்துக் கண்ணருகில் தூரதிருஷ்டிக் கண்ணாடி போல் வைத்தவண்ணம் மேகமென்னும் கைக் குட்டைகள் நீல வானத்தில் மிதப்பதைப் பார்த்துக் கொண்டே படுத்திருந்த சுமேராவிற்கு இன்று கிழவியின் கைக்குட்டையிலிருந்தும் அதே நறுமணம்தான் வீசியது போல் தோன்றியது. அன்று அவன் அந்தக் கைக்குட்டையைப் பத்திரப் படுத்தி வைத்திருந்தான். ஒரு நாள் அந்தப் பெண்ணே அவன் வண்டியில் வருகிறாள் என்று வைத்துக் கொள்வோம். துணிவுடன் அந்தக் கைக்குட்டையை அவளிடம் திருப்பிக் கொடுத்து விடுவான். ஆனால் கொஞ்ச நாட்களுக்குப் பிறகு அந்தக் கைக்குட்டையைக் காணோம். எங்கே போயிற்றோ! அவனுக்கு நினைவும் இல்லை. இன்று எத்தனை நாட்களுக்குப் பிறகு உண்மையிலேயே அந்த நறுமணம் அவனைத் திணற அடித்துக் கொண்டிருக்கிறது.

பல்வேறு குரல்களைக் கேட்டு அவன் அடித்துப் புரட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். யாரோ ஒருவன் கையிலே செருப்பைத் தூக்கி அதை அவன் மூக்கி னருகே—வலிப்புக்காரனுக்கு மூக்கிலே நெடி காட்டுவது

போல், சுற்றிச் சுழட்டியவாறு 'ஆல் தூ…ஜலால் தூ… ஆயி பலா டால் தூ' என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தவன், அவன் எழுந்து உட்கார்ந்ததைக் கண்டதுமே 'அடே என்னப்பா? பங்கியடிச்சவன் மாதிரி குப்புறப் படுத்துக்கிட்டு, தூங்கிக்கிட்டு கிடக்கிற. போய் நாலு காசு சம்பாதிக்கப் போகிறயா இல்லையா? பஞ்சாப் மெயில் எப்பவோ வந்து நிக்குது' என்றான்.

அவன் சிரித்த சிரிப்பில் அதிர்ந்து போனான் சுமேரா… அவன் வேறு யாருமில்லை. ரிக்ஷாவாலா பாபு, அவனுடைய நண்பன் என்பதை உணர்ந்தான். எழுந்து நின்று சோம்பல் முறித்தவாறே, கரத்தைச் சுற்றி வளைத்து நீட்டியவன். 'அட போப்பா. சும்மா கொஞ்சம் அப்படியே கண்களை மூடினேன். அவ்வளவுதான்' என்றான் நிதானமாக.

சவாரிகளை ஏற்றிக்கொண்டு வரிசை வரிசையாக ரிக்ஷாக்கள் டிரிங்…டிரிங்கென மணியை அடித்தவண்ணம் பொங்கும் வெள்ளம்போல் வந்து கொண்டிருப்பதை அவன் கண்டான்.

இப்பொழுதுதான் வண்டியில் வந்து இறங்கியதைப் போல் முகமறியாத, முன் பின் அறியாத இடத்தில் வந்து நிற்பது போல. சுற்றும் முற்றுமுள்ள ஒவ்வொன்றும் புதுமையாக, நூதனமாக இருப்பது போல, அவனுடைய உடலின் ஒரு அங்கமாகிவிட்டிருந்த அந்த ரிக்ஷாகூட இதுவரை அவன் பார்த்திராத ஒன்றுபோல், ஒரு கணம் அவனுக்குத் தோன்றியது.

# ரொட்டி

பஸ் வர இன்னும் மிகுந்த நேரமாகும் என்பது பாலா விற்குத் தெரிந்ததுதான். இருந்தாலும் முந்தாணியினால் வியர்வையைத் துடைத்துக்கொள்ளும் போதும் போதெல்லாம் அவளது விழிகள் சாலையைப் பரபரப்புடன் நோக்கின. நாகோதர் செல்லூர் பிரதான பாட்டை அது. அப்பகுதியில் சுற்று முற்றும் நிழல் தரும் மரங்களையே காணோம். நிலர் கூட மேடும் பள்ளமுமான வெறும் கட்டாந்தரை. சாலையிலிருந்து 30, 40 கஜ தூரத்தில்தான் வயல் வெளிகளின் ஆரம்பம். இச்சமயம் வயல் வெளிகள் கூட வெறிச்சோடி நின்றன. பயிர் பச்சை எதுவுமில்லை. அறுவடைக்குப்பின் மண்ணைக் கிளறி உழுது விட்டிருந்தனர். எங்கு பார்த்தாலும் வெறும் மண்ணைத்தான் தெரிந்தது. வெயிலில் உருகிய தார் ரோட்டின் இலேசான கருமை நிறம் இக்களர் நிலத்தின் வண்ணத்திலிருந்து சற்றே மாறுபட்டிருந்தது. பாலா நின்றிருந்த இடத்திலிருந்து சற்றுத் தள்ளி மரத்தினாலான சார்பொன்று நின்றது. அதில் வைக்கப்பட்டிருந்த பெரிய பெரிய தண்ணீர்ப் பானைகளினருகே நடுத்தர வயதுள்ள ஒருவன் தூங்கி வழிந்தவாறு அமர்ந்திருந்தான். தூக்கக் கலக்கத்தில் ஆடி முன்னே விழும் பொழுதெல்லாம் சட்டென விழித்துக் கொண்டு, உற்சாகமற்ற விழிகளால் சுற்று முற்றும் பார்த்தவாறே மேல் துண்டினால் கழுத்து வியர்வையைத் துடைத்துக் கொண்டு மீண்டும் தூங்கி வழிய ஆரம்பித்து விடுவான். சார்பின் நிழல் ஒரு பக்கம் மட்டும், இரண்டரை அல்லது மூன்று அடி நீளம் பரவிக் கிடந்தது. சார்பிலே முதுகைச் சாய்த்துக் கொண்டு அமர்ந்திருந்த அந்தத் தாடிக்காரப் பிச்சைக்காரனின் ஆவல் ததும்பும் விழிகள் பாலாவின் கரத்திலிருந்த

பொட்டலத்தை விழுங்கிக் கொண்டிருந்தன. அவன ருகே உடலை ஒடுக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்த நாயின் பார்வைகூட பாலாவின் பொட்டலத்தின் மீதுதானிருந் தது.

பாலா கையிலிருந்த பொட்டலத்தை அழுக்கடைந்த தனது முந்தானையில்தான் சுற்றி வைத்துக் கொண்டிருந் தாள். மற்றவர்கள் பார்வையிலிருந்து அவள் அதை மறைத்து வைக்கத்தான் விரும்பினாள். தன் கணவன் டிரைவர் சுச்சாசிங்கிற்காக அவள் ரொட்டி கொணர்ந் திருந்தாள். ஆனால் தாமதமாகி விட்டதால் சச்சாசிங்கின் பஸ் கிளம்பிப் போய்விட்டது. நகோதரிலிருந்து பஸ் திரும்பி வரும்போது ரொட்டியைக் கொடுத்து விடலாம் என்ற எண்ணத்துடன் அவள் இன்னமும் அங்கே நிற் கிறாள். குறித்த நேரத்தில் தான் வராததைக் கண்டு சுச்சாசிங் கடும் கோபமுற்றிருப்பான் என்பது அவளுக்குத் தெரியும்.

அவனது பஸ் ஜலந்தரிலிருந்து புறப்பட்டு இரண்டு மணிக்கு இங்கு வந்து சேரும். அவன் நகோதர் சென்று சாப்பிடுவதற்குள் மணி மூன்று, மூணரை ஆகிவிடும். இரவு உணவிற்கான ரொட்டியையும் அவள் இப் பொழுதே கொடுத்துவிடுவது வழக்கம். கடைசி முறை யாக நகோதர் செல்லும்பொழுது அங்கே இரவுச் சாப் பாட்டை அவன் முடித்துக்கொள்வான். வாரத்தின் ஏழு நாட்களில் ஆறு நாட்கள் சுச்சாசிங்கிற்கு டியூடி இருக் கும் இந்த ஆறு நாட்களின் நடைமுறையும் இதே போன்றதுதான். பாலா சுமார் ஒன்றேகால் மணிக்கு கிராமத்திலிருந்து கிளம்புவாள். வெயிலில் ஒன்றரை மைல் தூரம் நடந்து வந்தாலும் இரண்டு மணிக்குள் இந்த இடத்திற்கு வந்து சேர்ந்து விடுவாள். எப்பொழு தாவது இரண்டொரு நிமிடம் தாமதமாகி விடும்போது, சச்சாசிங் ஏதாவதொரு சாக்குப்போக்குக் காட்டி பஸ்ஸை

நிறுத்திவைத்துக் கொண்டிருப்பான். ஆனால் அவளைக் கண்டதுமே கோபத்துடன் சீறுவான்—"உன் அப்பன் வீட்டு ஆளா நான்! பஸ்ஸை நிறுத்தி வைத்துக்கொண்டு இருக்க? நான் சர்க்கார் ஊழியனுக்கும்.' அவள் பதிலே பேசாது இந்த அதட்டலை விழுங்கிக்கொண்டு ரொட்டிப் பொட்டலத்தை நீட்டுவாள். ஆனால் இன்று இரண்டு மூன்று நிமிடத் தாமதமா என்ன? இரண்டு இரண்டரை மணி நேரம் கழித்து அவள் வந்திருக்கிறாள். இத்தனை நேரம் கழித்து இங்கு வருவதில் அர்த்தமில்லை எனத் தெரிந்திருந்தும் தனக்கேற்பட்டிருந்த மன உளைச்சலில் அவள் வீட்டை விட்டுக் கிளம்பிவிட்டாள். தான் சாலையோரத்தில் எத்தனை நேரம் அவனுக்காக, அவனை எதிர் பார்த்துக் காத்திருக்கிறாளோ அத்தனைக் கத்தனை அவனது கோபம் குறையும் என்று அவளுக்குத் தோன்றியது. இன்று சுச்சாசிங் தனது பகலுணவை நகோதரில் ஏதோ தந்தூரியில் முடித்துக் கொண்டிருப்பானென்பது நிச்சயம். ஆனால் இரவுக்கான ரொட்டியை அளிப்பதும் அவசியமாக இருந்தது. தவிரவும் தவிர்க்க முடியாத தனது தாமதத்தின் காரணத்தையும் அவனிடம் விளக்கிக் கூற அவள் மனம் தவித்துக் கொண்டிருந்தது. தான் சொல்ல இருந்தவை யாவற்றையுமே மனத்திற்குள் பல முறை சொல்லிச் சொல்லிப் பார்த்துக்கொண்டாகி விட்டது. ஆனால் சுச்சாசிங்கிடம் இந்தப் பேச்சை எப்படித் துவங்குவது என்பதுதான் அவளுக்கு மலைப்பாக இருந்தது. எல்லா விஷயத்தையும் உள்ளது உள்ளபடி அவனிடம் விஸ்தரித்துக் கூறினால், அவன் கோபாவேசம் கொள்ளாமலிருக்க வேண்டுமே! சுச்சாவின் கோபம் தான் எத்தகையது? எத்தனை பயங்கரமானது என்பதும் அவளுக்குத் தெரிந்ததுதான். அதிலும் ஜங்கியைப்பற்றி பொய்யும் மெய்யுமாக ஏதாவது சொல்லி வைத்து

விட்டால் அவ்வளவுதான். வெட்டருவாளைக் கையி லெடுக்காமல் பேச மாட்டானே?

ஜங்கியைப்பற்றி அவள் கேள்விப்படாத விஷயமில்லை. என்னென்னவோ அவள் காதில் வீழ்ந்திருக்கிறது. போன வருடம், பக்கத்து கிராமத்துப் பெண் ஒருத்தியைக் கடத்திக்கொண்டு ஓடிவிட்டான். அவளை எங்கே கொண்டுபோய் விற்றுவிட்டு வந்தானோ தெரியாது.

நகோதரிலுள்ள பண்டிதர் ஜீவராமுவிற்கும் அவனுக் கும் சண்டை சச்சரவு ஏற்பட்டது, அவ்வளவுதான். அவ ரைத் தீர்த்துக் கட்டிவிட்டான். கிராமத்திலுள்ளவர்கள் அவனிடம் அதிகம் நெருங்குவதில்லை. விரோதம், பகைமை என வைத்துக் கொள்ளுவதுமில்லை. இந்த மனிதனைப் பற்றிய ஆயிரமாயிரம் பொல்லாப்புகள் அவ ளது காதில் வீழ்ந்திருக்கின்றன. ஆயினும் இத்தனை தூரத்திற்கு இறங்கிவிடுவான். பதினேழு வயதுப் பெண் ஜிந்தானைத் தனிமையில் கண்டதும் இழிந்த முறையில் சீண்ட முயற்சிப்பான் என்று அவள் நினைத்தே பார்த்த தில்லை. ஜிந்தானைவிட மூன்று மடங்கு வயதில் பெரிய வன். போன வருடம் வரை அவளை 'மகளே' என் றழைத்தவன். ஆனால் இன்று அவனுக்கு என்ன துணிச் சல்? வயற்காட்டிலிருந்து வந்து கொண்டிருக்கும் ஜிந்தா னின் கையைப்பற்றி இழுத்தானாமே?

நந்தியின் வீட்டிற்குச் சென்று வரட்டி வாங்கிக் கொண்டு வரும்படி அவள்தான் ஜிந்தானை அனுப்பி யிருந்தாள். இவர்கள் வீடு வயற்காட்டின் இந்தக் கோடி யிலிருந்தது. கிராமத்தின் மற்ற வீடுகள் எல்லாம் மறு புறம் அந்தக் கோடியில் இருந்தன. மாவைப் பிசைந்து வைத்துக்கொண்டு அவள் காத்திருந்தாள். ஜிந்தான் வரட்டியை வாங்கிக்கொண்டு வந்தால் சீக்கிரமாய் அடுப்பை மூட்டி ரொட்டியை வாட்டிவிட்டால் பஸ் வரும் நேரத்திற்கு சற்று முன்னரே அங்கு போய்விடலாம்

என்ற நினைப்பு அவளுக்கு. ஜிந்தான் வந்தாள். ஆனால் வெறுங்கையுடன் வந்து நின்றாள். முகமெல்லாம் ஒரே அடியாய் வெளுத்துக் கிடந்தது. ஜிந்தான் வராதவரையில் அவள் மீது கோபம் கோபமாய் வந்தது. ஆனால் அவள் எதிரே வந்து நின்ற கோலத்தைக் கண்டதும் இனமறியாத திகிலினால் நெஞ்சு படபடத்தது.

'என்னடி என்ன நடந்தது? ஏன் இப்படி இருக்கிறாய்?' ஜிந்தானை ஏற இறங்கப் பார்த்த வண்ணம் வினவினாள் அவள்.

ஜிந்தான் ஒன்றுமே பேசவில்லை. அவளருகே வந்து உட்கார்ந்தவள் இரு கரங்களாலும் முகத்தை மூடிக் கொண்டு கேவினாள்.

'பாவிப் பெண்ணே, சொல்லடி, என்ன நடந்தது?'

ஜிந்தான் பதில் கூறவில்லை. அழுகைதான் இன்னும் பலத்தது.

'யாராவது உன்னை ஏதாவது சொன்னார்களாடி?' தலையை மெல்ல வருடியவாறே வினவினாள் அவள்.

'நீ இனிமேல் என்னை வரட்டி கிரட்டி வாங்கிக்கொண்டு வா என்று அனுப்பவேண்டாம்.' அழுகையின் இடையே கூறினாள் ஜிந்தான். 'இனிமேல் நான் வீட்டை விட்டு வெளியே போகவேமாட்டேன். 'இன்று ஜிங்கி வந்து என் கிட்ட...' தொண்டை அடைத்துக் கொண்டதால் மேலே அவளால் பேசவே முடியவில்லை.

'ஜிங்கி என்னடி கேட்டான்? என்னடி சொன்னான் உன்னிடம்? சொல்லு சொல்லடி...' சடாலெனத் தன் மீது விழுந்து அழுத்திய சுமையின் பாரத்துடன் அவள் படபடத்தாள்...'என் மீது ஆணை! சொல்லடி, என்ன சொன்னான் அவன்?'

'அவன் சொன்னான்'...ஜிந்தானின் விசும்பல் நிற்கவில்லை. '"வா, ஜிந்தான், உள்ளே வா, சர்பத் குடிக்க

லாம். இன்னிக்கு நீ தங்கக் குட்டி மாதிரி ரொம்ப அழ காய் இருக்கிறாய்'' என்றான்.'

'நாசமாய்ப் போக அவன்' சட்டெனச் சீறி எழுந்தாள் அவள். 'கட்டையிலே போறவனுக்கு, அவனைப் பெத்தவ, தேவடியாளா! இல்லை—தங்கக் கட்டியாகவா! தோணு தா? கண்ணிலே கொள்ளி வைக்க! பெண்டு பிள்ளையில் லாத மலட்டுச் சனியனே! உனக்குப் பெண்ணிருந்தா இவளை விடப் பெரியவளா இருப்பா! உன் கண் அவிஞ் சுபோக...சொல்லடி, நீ என்ன பதில் சொன்னாய்?'

'எனக்குத் தாகமாய் இல்லை, சித்தப்பா என்று சொன் னேன்.'

'ஊம், அப்புறம்?'

'தாகமாய் இல்லாவிட்டால் என்ன? சும்மா ஒரு வாய் குடியேன். சித்தப்பா கொடுக்கும் சர்ப்பத்தைக் குடித் தால் என்றென்றைக்கும் மறக்கமாட்டாய் அப்படீன்னு என் கையைப் பிடிச்சு இழுத்தான்.'

'கேடுகாலம் புடிச்சவனே! நாசகாரா! நீ நாசமாய்ப் போக! உன் வீட்டிலே கொள்ளிவைக்க! சுச்சாசிங் வரட் டும். உன் எலும்பைத் துண்டு துண்டாய் முறித்துப் போடாவிட்டால் பார். கடன்காரா, உன்னை எமன், தூங் கும்போதே வாரிக் கொண்டுபோக... ஊம், சொல்லடி அப்புறம்?'

'நான் திமிறியதும் மிட்டாய் தருவதாக ஆசை காட்டி னான். என் கையிலிருந்த வரட்டியெல்லாம் கீழே விழுந்து விட்டது. நான் அதை எடுக்காமல் அப்படியே போட்டு விட்டு, திமிறிக்கொண்டு ஓடி வந்து விட்டேன்.'

கூர்மை பெற்ற அவளது விழிகள் ஜிந்தானைத் தலை யிலிருந்து கால் வரை உற்றுப் பார்த்தன. பின்னர் ஜிந்தானை வாரி அணைத்துக் கொண்டாள் அவள்.

'வேறு ஒன்றும் சொல்லவில்லையாடி அவன்?'

'நான் கொஞ்ச தூரம் ஓடி வந்ததும் பின்னுல் இடி இடி என்று சிரித்தான். ''ஏய் பெண்ணே, தப்பாய் நினைச்சுக் கிட்டையா? இந்தா, இந்த வரட்டியை யெல்லாம் எடுத் துக்கிட்டுப் போ. நான் சும்மா உன்னேடு விளையாடி னேன். இது கூடவா உனக்குப் புரியவில்லை? இங்கே வா! இப்படி நான் சொல்வதைக் கேள். இல்லாவிட்டால் வீட்டிற்கு வந்து தங்கச்சிகிட்ட ஜிந்தான் ரொம்ப அதிகப் பிரசங்கியாகி விட்டாள். சொன்னபடி கேட்ப தில்லை...ன்னு சொல்லிவிடுவேன், புரிந்ததா?'' என்றுன். ஆனுல் நான் பதிலே சொல்லவில்லை. திரும்பிப் பார்க் கவும் இல்லை. நேராக இங்கு ஓடி வந்து விட்டேன்.'

'நல்ல காரியம் செய்தாய் நீ. இருக்கட்டும், அந்த நாசகாலனின் எலும்பைப் பொடிப் பொடியாக்காமல் விடு கிறேனு பார். சுச்சாசிங் வரட்டும். நான் இப்பொழுதே போய் அவனிடம் எல்லா விஷயத்தையும் சொல்லு கிறேன். ஜிந்தான் ஏதோ தெருவிலே போறவ இல்லை. டிரைவர் சுச்சாசிங்கின் மைத்துனி. நின்று நிதானிச் சுத்தான் கை வைக்கணும்...ன்னு பயலுக்குத் தெரியலை போலிருக்கு...' என்று படபடத்தவள் சில விநாடிகளுக் குப் பின்னர் ஏதோ நினைத்துக் கொண்டவள் போல், 'ஏண்டி, அந்த சமயத்திலே ஒருத்தரும் உன்னை அங்கே பார்க்கவில்லை?' என்றுள்.

'இல்லை, வயற் காட்டிற்கு இந்தப் பக்கம் மாமரத்தின் கீழே ராது சித்தப்பாதான் உட்கார்ந்திருந்தார். என்னைப் பார்த்ததும் இந்தப் படைபடைக்கிற வெயிலில் எங்கே போய் விட்டு வருகிருய்? என்று கேட்டார். ''அக்கா விற்கு வயிற்றுவலி. ஹகீம் கிட்டேயிருந்து சூர்ணம் வாங்கிக்கொண்டு போகிறேன்'' என்று சொன்னேன்.'

'நல்ல காரியம் செய்தாயடி! பாவிப்பய ஜங்கி சோதாப் பயல். அவனேடு உன் பெயரும் சம்பந்தப்பட்டா நம்ப கௌரவமே போச்சு. அந்தப் பழிகாரனுக்கு என்ன?

ஊர் ஜனங்களுக்கு வாயிலே போட்டு மெல்ல விஷயமல்ல கிடைச்சுப் போகும்' என்றாள் அவள்.

இதன் பிறகு மீண்டும் வரட்டி வாங்கிக்கொண்டு வந்து சமைப்பதற்குள் நேரமாகி விட்டது. கிண்ணத்தில் உருளைக்கிழங்கு கறியும், மாங்காய் ஊறுகாயும் வைத்து, ரொட்டிகளைக் கதர்த் துணியில் சுற்றி, சாப்பாட்டு மூட்டை கட்டும் போதே மணி இரண்டு அடித்து எத்தனையோ நேரமாகிவிட்டது என்று அவளுக்குத் தெரியும். இன்று மத்தியானச் சாப்பாடு சுச்சாவிற்குப் போய்ச் சேராது என்ற விஷயம் உறுதியானதும், மூட்டையை ஒருபுறம் வைத்துவிட்டு அவள் வீட்டுவேலை களைக் கவனிக்கலானாள். வேலையெல்லாம் முடிந்ததும் பஸ் வரும் நேரத்தை எதிர்பார்த்துக் காத்திருக்க அவளால் முடியவில்லை. மூணரை நாலரை மணிதானிருக் கும். அவள் வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டாள்.

'அக்கா, நீ எப்பக்கா திரும்பி வருவே?' எனக் கேட் டாள் ஜிந்தான்.

'பொழுது சாய்வதற்குள் வந்து விடுகிறேன்' என்றாள் அவள்.

'சீக்கிரமாய் வந்துவிடு. தனியே இருக்க எனக்குப் பயமாய் இருக்கிறது.'

'என்னடி பயம்?' மேலுக்குத் துணிச்சலாய்க் காட்டிக் கொண்டாள் அவள். 'உன் பக்கம் திரும்பிப் பார்க்க யாருக்கடி அத்தனை தைரியம்? சுச்சாசிங்கிற்கு விஷயம் தெரிந்தா கண்ணைத் தோண்டி விடுவாக, தோண்டி······ அப்படியொன்றும் எனக்கு நேரமாகாது.'

'அந்திவேளைக்கு முன்னரே வந்து விடுவேன். உன் பக்கமாய் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொள். தெரிந் ததா? யாராவது கதவைத் தட்டினா, முதலில் யார் என்று கேள். விவரம் தெரிஞ்சுக்கோ, புரிந்ததா?' குரலைச் சற்று தணித்துக்கொண்டு அவள் தொடர்ந்தாள். 'அப்படி

அந்த ஜங்கி, கிங்கி வந்து அக்கா எங்கேன்னு கேட்டா, சுச்சாசிங்கைக் கூட்டிக்கொண்டு வரப் போயிருக்கான்னு சொல்லு, புரிந்ததா?...... ...வந்து நீ ஒன்றும் சொல்ல வேண்டாம். உள்ளேயிருந்து பதிலே பேசாதே. சும்மா இருந்து விடு. புரிந்ததா?'

அவள் வாசற்படியைத் தாண்டுகையில் பின்னுலிருந்து ஜிந்தானின் குரல் கேட்டது. 'அக்கா, எனக்கு நெஞ்சு படபடவென அடிச்சுக்கிறது.'

'உனக்கென்ன பயித்தியமா?' செல்லமாகக் கடிந்து கொண்டாள் அவள். 'ஊர் இருக்கு. சனங்க இருக்காங்க. என்னடி பயம்? எதற்காக இப்படி பயந்து சாகிருய்?'

ஜிந்தானுக்கு இப்படி தைரியமூட்டினுளே தவிர உள் ளூர அவளுக்கென்னவோ திருப்தி ஏற்படவில்லே. நகோதர் சாலேயை அடைந்த பின்னும்கூட பஸ் சீக்கிரம் வந்து விடாதா, ரொட்டியைக் கொடுத்துவிட்டு சரசர வென்று வீடு திரும்பிவிட மாட்டோமா என்றுதான் மனது அடித்துக்கொண்டது.

தன் கையிலிருக்கும் பொட்டலத்தையே வைத்தகண் வாங்காது பார்த்துக்கொண்டிருக்கும் அந்தப் பிச்சைக் காரனேப் பார்த்து, 'ஏய் வீரா, இரண்டு மணி பஸ் புறப் பட்டுப்போய் எவ்வளவு நேரமிருக்கும்?' என்று கேட்டாள் அவள். வெயிலின் கடுமை இன்னும் குறைந்தபாடில்லே. தண்ணீர் சாவடியின் நிழல் மட்டும் இன்னும் சற்று நீண் டிருந்தது. தண்ணீர் மேடையின் கீழே சிந்தியிருந்த தண்ணீரை நக்கிவிட்டு அந்த நாய் மட்டும் இங்கு மங் கும் சுற்றி அலேந்து கொண்டிருந்தது.

'எவ்வளவு நேரமாச்சோ, தெரியவில்லே, தாயே...' என்ருன் பிச்சைக்காரன். 'பஸ்ஸிற்கென்ன, வருவதும் போவதுமாய் இருக்கின்றன. ஒரு கணக்கா என்ன? மணியா இருக்கிறது, நேரத்தைப் பார்க்க?'

பாலா மௌனமாகிவிட்டாள். இப்பொழுதுதான் சற்று

முன் ஒரு பஸ் நகோதர் சென்றது. பாதையின் இரு புறமும் எழுந்த தூசிப் படலங்கள் இரு தனித்தனியான உலகங்கள்போல் தோன்றின. ஒரு உலகத்திலிருந்து வந்த பஸ்கள் இன்னொரு உலகத்தை நோக்கி விரைந்தன. இந்த இரு உலகங்களும் எப்படி இருக்கும் பார்ப்பதற்கு! என ஓடியது அவள் சிந்தனை. பெரிய பெரிய கடைத்தெருக்கள், வீதிகள், கடைகளைக்கொண்ட அந்த உலகங்கள் டிரைவரின் சம்பளத்தின் முக்கால் பகுதியை விழுங்கிவிடுகின்றனவே! சுச்சாசிங் நகோதரில் ஒரு ஆசை நாயகியை வைத்திருக்கிறனென்று தேவி அடிக்கடி சொல்வதுண்டு. ஒரே ஒரு தரம் அவளைப் பார்க்க வேண்டுமென்று அவளுக்குத்தான் எத்தனை ஆசை! 'என்னை நகோதருக்கு அழைத்துச் சென்று காட்டுங்க' என்று கூட ஒரு தடவை சுச்சாசிங்கிடம் கேட்டு விட்டாள். ஆனல் 'உனக்கென்ன இறக்கை முளைத்து விட்டதா? வீட்டிலே இருக்க முடியவில்லையா?' என்று ஓரே அதட்டலாக அதட்டி விட்டான் அவன். 'பெண்டாட்டியின் கையைப் பிடித்துக்கொண்டு தெருத் தெருவாகச் சுற்றி அலையும் ஆண்பிள்ளையல்ல நான். ஊர் சுற்ற வேண்டுமென்று அப்படி ஆசையிருந்தால் வேறொரு ஆளைப் பார்த்துக்கொள். என்னைப் பொறுத்த வரையில் எனக்கொரு ஆட்சேபனையும் இல்லை.'

இச் சம்பவத்திற்குப் பிறகு அவள் நகோதர் என்ற பேச்சே எடுக்கவில்லை. சுச்சாசிங் எப்படிப்பட்டவனக இருந்தாலென்ன? அவளுக்கு அவன்தான் உலகம். அவன்தான் எல்லாம். அவன் அவளைத் திட்டுவான். அடிப்பான். உதைப்பான். ஆனலும் பிரியமாகவும் இருக்கிறன். மாதம் பிறந்து சம்பளம் கைக்கு வந்ததும் அவளுக்கு இருபது ரூபாய் கொடுத்துவிட்டுப் போகிறன். திட்டினலும் அவளைத்தான் தன் பெண்டாட்டியாக நினைத்துக் கொண்டிருக்கிறன். வாய் சற்றுப் பொல்

லாதது. கடுமையாகத்தான் பேச்சு வரும். ஆனால் இதயம் நல்லது. ஜிந்தாவை அவள் தன்னுடன் வைத்துக் கொண்டிருக்கிறாளென்று முணு முணுத்தவன் போன மாதம் அவளுக்காகத்தானே வளையலும் இரண்டரை கஜம் மல் துணியும் வாங்கிக்கொண்டு வந்தானே!

தூரத்தில் அந்தக் கோடியிலிருந்து ஒரு பஸ் புழுதியைக் கிளப்பிக்கொண்டு அவளிருந்த பக்கம் வந்து கொண்டிருந்தது. அது சுச்சாவின் பஸ் அல்ல என்பதை அவள் தூரத்திலிருந்தே தெரிந்துகொண்டு விட்டாள் எனினும் அது அருகே வரும்வரை ஆவலுடன் அதையே பார்த்துக்கொண்டு நின்றாள். பஸ் தண்ணீர் சாவடியின் எதிரே வந்து நின்றது. வெங்காயம், முள்ளங்கி மூட்டையை எடுத்துக்கொண்டு ஒரு ஆள் இறங்கினான். கண்டெக்டர் கதவை ஓங்கி அறைந்து மூடியதும் பஸ் புறப்பட்டு விட்டது. பஸ்ஸிலிருந்து இறங்கியவன் தண்ணீர் பந்தலுக்குள் வந்து உறங்கிக் கொண்டிருந்த ஆளை எழுப்பினான். இரு கரத்தையும் இணைத்து ஏந்தலாக வைத்துக்கொண்டு, இரண்டு மிடறு தண்ணீரைப் பருகியவன், மீசையைத் துடைத்துக்கொண்டே தன்னுடைய மூட்டையை நெருங்கினான்.

இரண்டடி முன்னே வந்த பாலா அந்த மனிதனை நோக்கி 'நகோதர் பஸ் எத்தனை மணிக்கு வரும்?' என விசாரித்தாள்.

'பஸ்ஸிற்கென்ன? மணிக்கொரு தரம் போகிறது' என்றவன், 'ஆமாம், உனக்கெங்கே போகவேண்டும்?' என வினவினான்.

'எனக்கு எங்கும் போகவேண்டாம். பஸ்ஸிற்காகக் காத்திருக்கிறேன். டிரைவர் சுச்சாசிங் என் வீட்டுக்காரர். அவரிடம் சாப்பாட்டைக் கொடுக்கவேண்டும்.'

'ஓகோ சுச்சாவா?' அம் மனிதனின் இதழ்க்கிடையில் விசித்திரமானதொரு புன்னகை தோன்றியது.

'உனக்குத் தெரியுமா அவரை?'

'நகோதரில் யாருக்கு அவனைத் தெரியாது?'

அவன் இதைச் சொல்லிய விதம் பாலாவிற்குப் பிடிக்க வில்லை. அதனால் மேலே பேச்சைத் தொடராமல் வாயை மூடிக்கொண்டு விட்டாள். சுச்சாவைப் பற்றித் தனக்குத் தெரிந்திருந்த விஷயங்களையெல்லாம் பிறர் வாய் மூல மாகக் கேட்பது அவளுக்குப் பிடிக்காததொன்று. தன் கணவனைப் பற்றி இப்படியெல்லாம் பேசப் பிறருக்கு என்ன உரிமை? என்ன அதிகாரம் என்பதும் அவளுக் குப் புரியவில்லை.

'ஒருக்கால் சுச்சாசிங் அடுத்த பஸ்ஸை எடுத்துக் கொண்டு வருவார்' என்றான் அம் மனிதன்.

'ஆமாம், இதற்குப் பின், அவரது பஸ்தான் வரும்.'

'இரக்கமற்றவன் அவன். உன்னை இப்படிக் காக்க வைக்கிறானே.'

'சரி, சரி, நீ உன் வழியைப் பார்த்துக் கொண்டு போ'... என எரிந்து விழுந்தாள் பாலா— 'அவர் எதற்கு என்னைக் காக்க வைக்கிறார். நான்தான் வருவதற்கு இன்று நேரமாகி விட்டதால் பஸ் கிளம்பிப் போய் விட்டது. பாவம். காலையிலிருந்து பட்டினியாக இருந் திருப்பார்.'

'பட்டினியா? யார்? சுச்சாவா?' அந்த மனிதன் பல்லைக் காட்டிச் சிரித்தான். பாலாவிற்கு சற்றும் பிடிக்கவில்லை. முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள்.

'அடேயப்பா பத்தினியே' என்றவாறே மூட்டையைத் தலை மேல் வைத்துக் கொண்டு வயற்காட்டுப் பாதையில் இறங்கி நடந்தான் அவன். பாலாவின் இடது கால் மரத்து விட்டது. உடம்பின் பாரத்தை இன்னொரு காலுக்கு மாற்றியவளாய் நீண்டதொரு பெருமூச்செறிந்த வண்ணம் வெட்ட வெளியில் பார்வையை அலைய விட்டாள் அவள்.

எத்தனை நேரமாயிற்றோ தெரியாது. பாதையின் மறு கோடியில் ஒரு பஸ் வருவது தெரிந்தது. நின்று நின்று கால் கடுத்தது. கணுக்காலெல்லாம் வலித்தது. பஸ்ஸைக் கண்டதுமே அவள் பொட்டலத்தின் துணியை சரி செய்தாள். இன்னும் சற்று நேரம் கழித்து ரொட்டி தட்டி எடுத்து வந்திருக்காமல் போனோமே என்று அவளுக்கு வருத்தமாக இருந்தது. இரவு வரையில் நன்றாக இருந்திருக்கும். சுச்சாவிற்கு இனிப்புப் பிரசாதம் என்றாள் மிகவும் பிடிக்கும். இன்று அதைக் கொஞ்சம் செய்து கொண்டு வர ஏன் தோன்றாமல் போயிற்று? சரி போகட்டும். நாளைக்குப் பண்டிகை நாள். நாளை கட்டாயம் அதைச் செய்யவேண்டும்.

பின்னால் நீண்ட கோடு போல் புழுதியைக் கிளப்பிய வண்ணம் பஸ் அவளை நோக்கி வந்து கொண்டிருந்தது. இருபது கஜ தூரத்திலேயே சுச்சாவின் முகத் தோற்றத்தைக் கவனித்துவிட்ட பாலா அவன் மிகவும் கோபமுற்றிருப்பதைப் புரிந்து கொண்டு விட்டாள். அவளைக் கண்டதுமே சுச்சாவின் புருவங்கள் நெறிந்தன. கீழுதட்டின் மூலையில் பற்கள் அழுந்தின. நெஞ்சு படபடவென அடித்துக்கொள்ள பாலா பொட்டலமிருந்த கரத்தை உயர்த்தினாள். ஆனால் பஸ் அவளருகே நிற்கவில்லை. தண்ணீர்ப் பந்தலைத் தாண்டி சற்று தூரத்தில் போய் நின்றது. இரண்டொரு பிரயாணிகள் அங்கே இறங்க வேண்டியிருந்தது கண்டெக்டர் மேலே ஏறி பிரயாணி ஒருவனின் சைக்கிளைக் கீழே இறக்குவதில் முனைந்தான். விரைந்து வந்த பாலா டிரைவர் சீட்டை எட்டிவிட்டாள்.

'சுச்சா' அவள் கரம் உயர்ந்தது பொட்டலத்தை உள்ளே தர முயன்றவளாய் 'இந்தா எடுத்துக்கொள்' என்றாள்.

'போ, நகரு.' சுச்சா அவள் கரத்தை வெடுக்கென்று பின்னால் தள்ளினான்.

'சுச்சா. ஒரே ஒரு நிமிடம் கொஞ்சம் இறங்கிவாயேன். நான் சொல்வதைக் கேட்டுவிட்டுப் போயேன். இன்று முக்கியமான ஒரு விஷயம் ஏற்பட்டுவிட்டது. அதனுல் தான்... இல்லாவிட்டால்... நான்...

'உளராதே, போ, இங்கிருந்து. ஊம் தள்ளு' என்று சீறிய சுச்சாசிங் பின்புறம் திரும்பி கண்டெக்டரை விளித்தான். 'சாமானெல்லாம் இறக்கியாகிவிட்டதா, இல்லையா?'

'ஒரே ஒரு பெட்டிதான் பாக்கி. இதோ ஆச்சு' என்ற குரல் மேலேயிருந்து வந்தது.

'சுச்சா...' பாலா கெஞ்சினுள். 'இரண்டு மணி நேரமாய் கால் கடுக்க இங்கு நிற்கிறேன். நீ கொஞ்சம் இறங்கி வந்து நான் சொல்வதைக் கேளேன்.'

'பெட்டியை இறக்கியாச்சா?'

'ஓ. ஆச்சு, சலோ, ரைட்' கண்டெக்டர் குரல் கொடுத்தான்.

'சுச்சா, நீங்கள் என்மீது கோபித்துக்கொண்டாலும் பரவாயில்லை. இந்தச் சாப்பாட்டை மட்டும் வைத்துக் கொள்ளுங்கள். செவ்வாய்க்கிழமை வீட்டிற்கு வரும் பொழுது எல்லாம் விவரமாய்ச் சொல்லுகிறேன்.' பாலா மீண்டும் பொட்டலமிருந்த கரத்தை உயர்த்தினுள்.

'செவ்வாய்க்கிழமை ··· வருவான் ··· உன்னுடைய···' அசிங்கமான ஒரு வசவை உமிழ்ந்துவிட்டு சுச்சா வண்டியை ஸ்டார்ட் செய்துவிட்டான்.

பொழுது சாயச்சாய வானத்தின் வண்ணங்கள் மாறிக் கொண்டேயிருந்தன. இடையிடையே இரண்டொரு பறவைகள் சிறகடித்துப் பறந்து சென்றன. வயல்வெளி களில் இங்குமங்கும் பல நிறத் தலைப்பாகைகள் தெரிந் தன. பாலா தண்ணீர் பந்தலுக்கு வந்து தாக சாந்தி செய்து கொண்டாள். கண்களில் தண்ணீரை வாரி இறைத்துக்கொண்டு புடவைத் தலைப்பால் முகத்தை

அழுந்த துடைத்துவிட்டுக் கொண்டாள். மெல்ல நடந்து சற்று தள்ளிப்போய் நின்றுகொண்டாள். சுச்சாவின் பஸ் ஜலந்தரிலிருந்து ஏழு, எட்டு மணிக்குள் திரும்பும் என்பது அவளுக்குத் தெரியும். அதுவரை அவள் காத்திருக்க வேண்டியதுதானே. சுச்சா இறங்கிவைத்து அவள் சொல்வதைக் கேட்டிருக்கவேண்டும். ஊம்... வீட்டில் அங்கே ஜிந்தான் தனியாக உட்கார்ந்து கொண்டிருப்பாள். பாவம். பயந்துகொண்டிருப்பாள். அந்த கழிசடை ஜங்கி ஏதாவதொரு காரணத்தைக் கூறிக்கொண்டு வீட்டிற்கு வந்திருந்தால்? சுச்சா மட்டும் ரொட்டிப் பொட்டலத்தை வாங்கிக் கொண்டிருந்தால் அவள் இதற்குள் வீடு போய்ச் சேர்ந்திருப்பாள். ரொட்டிக்கென்ன? வெளியே எங்கே யாவது சாப்பிட்டுக்கொள்வான். ஆனால் அவனது கோபம்? இதற்கென்ன வழி? சுச்சாவின் கோபமும் காரணமற்றது அல்லவே. நியாயமான கோபமும்கூட. நல்ல உழைப்பு. அதற்கேற்ப அகோரப் பசியெடுக்கும். அவனை இன்னும் கொஞ்சம் கெஞ்சியிருந்தால் கட்டாயம் தணிந்து போயிருப்பான். ஆனால் இனி என்ன செய்வது?

தண்ணீர் பந்தல்காரன் கதவை மூடிக்கொண்டிருந்தான். அந்தப் பிச்சைக்காரனைக் கூடக் காணோம். எப்பொழுதோ எழுந்து போய்விட்டிருந்தான். அந்த நாய் மட்டும்தான் இன்னும் இங்குமங்கும் சுற்றி அலைந்து கொண்டிருந்தது. வெயில் தாழ்ந்துவிட்டது. பொழுது சாயும் நேரத்தின் பொன் வெயிலில் பட்டு வானத்தில் பறந்த பறவைக் கூட்டங்கள் பொன்னைத் தகதகத்தன. பாதையில் நீண்டு விழுந்திருந்த தனது நிழல் பாலா விற்கு விசித்திரமாகப் பட்டது. அருகிலிருந்த வயலில் யாரோ ஒரு கட்டிளங்காளை உரத்த குரலில் சிருங்கார ரசமிகுந்த பாடலைப் பாடிக் கொண்டிருந்தான். பாடலின் அந்த லயம் பாலாவின் நாடி நரம்புகளிலெல்லாம் இன்பக் கிளர்ச்சியைப் பூட்டியது. சிறுமியாக இருக்கும்போது

கோடை நாட்களில் மற்றச் சிறுமிகளுடன் சேர்ந்து ஏற்றக் கிணற்றில் குளிக்கப் போவாள். ஏற்றச்சாரிலிருந்து குபு குபுவென ஓடிவரும் நீரில் அளைந்தவாறே ஆடிப்பாடிக் களிப்பாள். அப்பொழுதும் அந்தப் பாட்டின் இசை லயம் காற்றுவெளி எங்கும் நிறைந்து நிற்கும். விடி வேளையின் மங்கலான ஒளிக்கும் விரவிநிற்கும் மோனத்திற்கும் இசையின் இந்த லயத்திற்கும்தான் என்ன அற்புதமான பொருத்தம்?

அவள் பெரியவளாக ஆக வயதுடன் கூட, அவளுடைய வாழ்க்கையுடன் இந்த இசையின் லயமும் தொடர்ந்துகொண்டே பின்னும் நெருக்கமடைந்து கொண்டே போயிற்று. இந்த நெருக்கமான உறவிலே, இதன் தொடர்பிலே ஒரு ஆழமிருந்தது. கனமிருந்தது. லாலி அவளது கிராமத்து இளைஞன். அற்புதமான குழைவுடன் மாஹியா கீதம் * பாடுவான். எத்தனையோ முறைகள் அரச மரத்தடியிலே நின்று, காதின் பக்கம் ஒரு கரத்தை வைத்துக்கொண்டு இனிமையாக அவன் பாடுவதை அவள் கேட்டதுண்டு. பாரு, புஷ்பாவுடன்கூட அவளும் பாட்டைக் கேட்க மரத்தடிக்கு வந்துவிடுவாள். நேரம் போவதே தெரியாமல் நிற்பாள். அப்புறம் ஒரு நாள், அவள் அம்மா சொன்னாள். 'நீ பெரியவளாகி விட்டாய். இப்படி மரத்தடியிலெல்லாம் போய் நிற்கக் கூடாது.' வீட்டில் அவளது திருமணத்தைப் பற்றி பேச்சு நடந்துகொண்டிருந்தது.

சுச்சாசிங்கிற்கும் அவளுக்கும் திருமணம் நடந்த அன்று பாரு நள்ளிரவு வரை பாடினாள். டோலக்குடன் பாடிக் கொண்டேயிருந்தாள். பாடிப் பாடி தொண்டை கம்மிவிட்டது அவளுக்கு. டோலக்கைக் கீழே வைத்த பின் கூட அவளைத் தழுவிக்கொண்டு பாடிக்கொண்டே யிருந்தாள்.

---

* (மாஹியா — சிருங்கார ரச மிகுந்த பாடல்)

*பீபி—சந்தன் தே ஓகலே ஓகலே கிலூம் கடீ*
*நீ லாட்லி கிலூம் கடீ?*
*மைம் தா கடீ சாள் பாபல் ஜிதே பார்*
*மைன் கன்னியா க்வார்.*
*பாபல் வர் லோடியே!*
*நீ ஜாயியே, கிஹோ ஜிஹா வர் லோடியே?*
*ஜிலூம் தாரியாம் பிசோ சந்த்,*
*சந்தோ பீசோ நந்த்*
*நந்த் பீசோ கான்ஹ கன்னையா வர் லோடியே*

[*சந்தன மரத்தின் மறைவிலே என் செல்வ மகளே! ஏன் நிற்கிருய்? ஏனடி நிற்கிருய்? செல்லக்கண்ணே!*

*என் தந்தையின் இல்லத்தின் வாசலிலே நிற்கிறேன் நான். கண்ணன் மணிவண்ணன் போன்ற நாயகனை வேண்டி நிற்கிறேன் நான்.*

*என் செல்ல மகளே! எப்படிப்பட்ட நாயகன் வேணுமடி உனக்கு!*

*தாரகைகளிடையே நிலவைப்போல்,*
*நிலவினிடையே நந்தனைப்போல்*
*நந்தர்களிடையே வேணுகோபாலனைப்போல்*
*நாயகனைத்தேடி நான் நிற்கிறேன்*]

தனக்கு வரப்போகும் கணவன் யார்? எப்படிப்பட்டவன் என்றெல்லாம் அவளுக்குத் தெரியாது. ஆனால் ஒன்று. பாடலின் அடி காதில் வீழ்ந்ததுமே மனக்கண் முன் தோன்றுகிறதே ஒரு உருவம். அதைப் போன்ற வடிவமும் தோற்றமும் கொண்ட ஓர் ஆணழகன் தனக்கு வாய்ப்பான் என்றது அவள் மனம். முதலிரவு அன்று சுச்சாசிங் அவளது முகத்திரையை மெல்ல மெல்ல விலக்கியபொழுது நெஞ்சம் பரபரத்தது. கண்ணனைப் போன்றதொரு அழகன் அவளுக்குக் கணவனாக வந்திருக்கிருன்.

சுச்சா அவள் மோவாயைப்பற்றி மெல்ல நிமிர்த்திய பொழுது இன்பக் கிளர்ச்சி அலை அலையாய் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்வரை ஓடியது. அவளது வாழ்க்கை

இப்படி எத்தனை புல்லரிப்புகளை, இன்ப உணர்ச்சிகளைக் கொண்டதோ எனத் தோன்றியது. ஒவ்வொரு நாளும் இதை அனுபவிக்கப் போகிறாள். தனது நினைவுப் பெட்டகத்தில் மணி மணியாய் இவற்றைத் திரட்டி வைத்துக் கொண்டே இருக்கப் போகிறாள்.

'வைரக்கல்லடி, வைரக்கல்.' சுச்சாசிங் இரு கரங்களாலும் அவளை வாரி அணைத்துக் கொண்டான்.

'இந்த வைரக்கல் உன் கால் தூசிக்கும் இணையாகாது' என்று சொல்லவேண்டும் போலிருந்தது அவளுக்கு. ஆனால் வெட்கத்தினால் வாளாவிருந்து விட்டாள்.

'இருட்டிவிட்டது அம்மா. இனி வீட்டிற்குப் போங்கள். இங்கு நின்று என்ன செய்யப் போகிறீர்கள்?' கதவைப் பூட்டிய தண்ணீர் பந்தல்காரன் அவள் எதிரே நின்றான்.

'ஜலந்தரிலிருந்து வரும் கடைசி பஸ் 8, 9 மணிக்குள் வந்துவிடும் இல்லையா' என வினவினாள் பாலா. அவள் குரல் பரிதாபமாக ஒலித்தது.

'எப்பொழுது வருமோ, யார் கண்டது? அது வரை நிற்கப் போகிறீர்களா?'

'அவருக்கு ரொட்டியைத் தரவேண்டுமே.'

'ரொட்டியா? வேண்டுமென்றிருந்தால் டிரைவர் அப்பொழுதே வாங்கிக்கொண்டிருக்க மாட்டாரா? ரொம்ப பிரமாதப் படுத்திக்கொள்கிறாரே.'

'ஆண் பிள்ளை என்றால் கோபம் வராமலிருக்குமா? சகஜந்தானே இது. இதில் என்ன வந்தது?'

'ஓகோ, அப்படியானால் உங்கள் இஷ்டம். நின்று கொண்டிருங்கள். 9 மணிக்கு முன்னால் பஸ் வராது.'

'பஸ் எப்பொழுது வந்தாலும் சரி வரட்டும்.' தண்ணீர் பந்தல்காரன் பேசியதும் இதுவரை வராதிருந்த ஒரு முடிவிற்கு அவள் வந்து விட்டாள். ஜலந்தரிலிருந்து பஸ் எத்தனை மணிக்கு வந்தாலும் சரி, அது

வரை அவள் அங்கேயே காத்துக்கொண்டு நிற்கப் போகி ருள். ஜிந்தான் கொஞ்சம் பயந்து கொண்டிருப்பாள். இருக்கட்டும் பரவாயில்லே. மீண்டும் அவளே வந்து சீண்ட ஜிங்கிக்கு அவ்வளவு துணிச்சல் வருமா என்ன? கிராமம் என்ருல் சும்மாவா? ஊர் பஞ்சாயத்து என்று எல்லாம் இருக்கிறதல்லவா? அயலார் வீட்டுப் பெண் களேக் கெட்ட எண்ணத்துடன் தகாத நோக்கத்துடன் பார்ப்பது சும்மா விளேயாட்டா என்ன? சுச்சாவின் காதிற்கு மட்டும் சேதி எட்டிஞல் சும்மா விடுவாஞ? தலே மயிரைப் பிடித்து அந்த ஜிங்கியைத் தெருவெல்லாம் தர தரவென்று இழுத்துக்கொண்டு போகமாட்டாஞ என்ன?

பாலாவிற்குச் சட்டெனத் தோன்றியது. 'நல்ல வேளே, சுச்சாவிடம் இந்த விஷயத்தைச் சொல்லாமலிருந்ததும் ஒரு விதத்தில் நல்லதுதான். இந்தச் சின்ன விஷயம் பெரியதாகப்போய் இருவரும் மண்டையை உடைத்துக் கொள்வார்கள். யார் கண்டது, என்ன நடக்குமென்று? வீடு, வாசல் குடும்பச் சண்டைகளென்ருலே சுச்சா விற்குப் பிடிக்காது. அவனே இந்தத் தொல்லேகளில் வேறு மாட்டிவைப்பானேன். சுச்சா அவள் பேசப்பேசக் காதில் போட்டுக் கொள்ளாதது நல்லதாய்ப் போயிற்று. முன்பே ஒருதரம் செவ்வாய்க்கிழமை நான் வருவதற்கில்லே என்று கூறியிருந்தது நினேவிற்கு வந்தது. ஒருக்கால் உண்மை யிலேயே வராமலிருந்து விட்டால்? கோபித்துக்கொண்டு வீட்டிற்கு வருவதையே நிறுத்திவிட்டால்? ஊ ஹும்— மாட்டாள். இனி அவனுக்குத் தொல்லே தரும் எந்த விஷயத்தையும் அவள் அவனிடம் கூறப்போவதில்லே. சுச்சா, செளக்கியமாய் சந்தோஷமாய் இருக்கவேண்டும். அதுவே போதும். குடும்பத்தின் கஷ்ட நஷ்டங்களே யெல்லாம் இனி அவளே சமாளித்துக் கொள்வாள்.

மின் வெட்டுப் போல் ஓர் அதிர்ச்சி. உடலெங்கும் நடுக்கம். லட்டு சிங் இப்படித்தான் மனேவியை விட்டுச்

சொல்லாமல் கொள்ளாமல் ஓடி விட்டான். பாவம், அவள் ஒரு கவளம் சோற்றுக்கு நாயாய் அலைந்தாள். கடைசியில் கிணற்றில் குதித்துத் தற்கொலை பண்ணிக்கொண்டாள். அம்மாடி, தண்ணீரில் ஊறிப்போன அந்த உடல்தான் பார்க்க எவ்வளவு பயங்கரமாக இருந்தது!...பாலாவின் ரோமங்கள் குத்திட்டு நின்றன.

களைப்பாக, கண்ணை இருட்டிக்கொண்டு வந்தது. தண்ணீர்ப் பந்தலின் பலகையின் மீது போய் உட்கார்ந்து கொண்டாள். இருள் கனத்துவிட்டது. சுற்றுப்புறமும் வயல் வெளியிலும் சந்தடி அடங்கிவிட்டது. பாடலுக்குப் பதிலாக சுவர் கோழிகளின் சில் வண்டுகளின் ரீங்காரம்தான் கேட்டது. ஜலந்தரை நோக்கி ஒரு பஸ், நகோதருக்கு ஒரு பஸ் போயாகிவிட்டது. ஜலந்தரிலிருந்து வரும் கடைசி பஸ்ஸை சுச்சாதான் ஓட்டிவருவான். சற்றுமுன் போன பஸ்ஸின் டிரைவரிடம், ஜலந்தரிலிருந்து கடைசியாக ஒரே ஒரு பஸ்தான் வர இருக்கிறது என்பதை விசாரித்துத் தெரிந்து கொண்டிருந்தாள். இனிமேல் விளக்கொளி தெரிந்தால் அது சுச்சா ஓட்டி வரும் பஸ்ஸாகத்தானிருக்கும்.

அசதியினால் விழிகள் தாமாக மூடிக்கொண்டன. இடையிடையே மிகுந்த சிரமத்துடன் இமைகளைத் திறந்து தன்னைச் சுற்றிலும், கணத்திற்குக் கணம் கனத்து வரும் காரிருளை, கண்களுக் கெட்டியவரை பரவி நின்ற அந்தகாரத்தை, கரிய நிழல்களை அவள் ஊடுருவிப் பார்க்கத்தான் முயன்றாள். எங்கேயாவது, சிறியதொரு ஓசை கேட்டால் போதும். திடுக்கிட்டுக் கண் விழித்துப் பார்த்தாள். ஆனால், விளக்கோ, வெளிச்சமோ, எதுவுமே தென்படவில்லை. நெடிய பெருமூச்செறிந்த பாலா பலகையில் உடலைக் கிடத்தினாள். மூடியிருந்த இமைகளுக்குள்ளே இதென்ன? பஸ்ஸின் விளக்கு வெளிச்சம் அவளை நோக்கி யல்லவா வருகிறது? திடுக்கிட்டுக் கண் விழித்

தாள் அவள். ஆனால் பஸ்ஸையும் காணோம். ஒளியை யும் காணோம்.

அவள் வீட்டிற்குள் இருக்கிறாள். யாரோ கதவைப் படபடவென்று தட்டுகிறார்கள். உள்ளே ஜிந்தான் நடுங்கிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாள். அவள் முகம் வெளுத்துச் சாம்பிக்கிடக்கிறது… கண் விழித்துப் பார்த் தாள் பாலா. ஒன்றுமில்லை.

ஏற்றச் சாரில் பூட்டிய மாடுகள் சுற்றிச் சுற்றி வரு கின்றன விரைவாக. அவற்றின் கழுத்தில் பூட்டியிருக்கும் மணிகளின் கிண்கிணி நாதத்தின் தாளத்திற்கேற்ப, அரச மரத்தின் நிழலிலே அமர்ந்திருக்கும் அந்த இளைஞன் காதருகே கையை வைத்துக் கொண்டு மாஹியா பாடிக்கொண்டிருக்கிறான்.

ஒரே புழுதிக் காற்று விண்ணிலும், மண்ணிலும் உள்ள யாவற்றையுமே மறைத்து விடுவதுபோல் தூசிப் படலமாய் எழும்புகின்றது. தன் கையிலிருக்கும் ரொட்டிப் பொட்டலத்தை நழுவ விடாமலிருக்க அவள் முயற்சி செய்கிறாள். ஆனால் அது கை நழுவிப் போய்விடும் போலிருக்கிறது… தண்ணீர்ப் பந்தலில் காலிப் பானைகள் இருக்கின்றன. அவற்றிலே ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இல்லை. அவள் டம்பளரைப் பானைக்குள் போட்டுப் பார்க்கிறாள். அது காலியாக இருப்பதைக் கண்டதும் எல்லையற்ற நிராசை… அவள் காலில் ஒரே பித்த வெடிப்புகள். கைவிரலால் அவற்றின்மீது எண்ணெய் தடவத்தடவ அது வரண்டு கொண்டே போகிறதே… ஜிந்தான் தலை மயிரை விரித்துப் போட்டுக்கொண்டு முழந்தாளில் முகம் படியக் கண்ணீர் வடிக்கிறாள். 'நீ ஏன் என்னை விட்டுவிட்டுப் போனாய்? ஏன் போனாய் என்னை விட்டு விட்டு?'

'என்னுடைய குஞ்சலம் எங்கே போயிற்று? என் னுடைய குஞ்சலத்தை யார் எடுத்துக்கொண்டனர்.?'

திடீரென யாரோ தோளைத் தொட்டதும் அவள் திடுக்கிட்டுக் கண்விழித்தாள். சுச்சா!… அவசர அவசரமாய்க் கண்களைத் தேய்த்துவிட்டுக் கொண்டாள்.

'நீ இன்னுமா வீட்டிற்குப் போகவில்லை?' சுச்சா பலகையில் அவளருகில் அமர்ந்து கொண்டான். பஸ் தண்ணீர்ப் பந்தலின் நேரெதிரே நின்றுகொண்டிருந்தது. வண்டியில் ஒரு பிரயாணியைக் கூடக் காணோம். பின் சீட்டில் கண்டெக்டர் உறங்கிக்கொண்டிருந்தான்.

'ரொட்டியைக் கொடுத்துவிட்டுப் போகலாம் என்று நினைத்தேன். உட்கார்ந்திருக்கும் போதே கண்ணயர்ந்து விட்டேன் போலிருக்கிறது. நீங்கள் வந்து ரொம்ப நேரம் ஆகிவிட்டதா?'

'இல்லை, இப்பொழுதுதான் வந்தேன். தூரத்திலேயே உன்னைப் பார்த்துவிட்டேன். நீ என்ன இவ்வளவு பயித்தியக்காரியாக இருக்கிறாய்? ரொட்டியைக் கொடுக்க வேண்டும் என்று யாராவது இப்படி உட்கார்ந்திருப்பார்களா என்ன?'

'வேறென்ன செய்ய, வீட்டிற்கு வரமாட்டேன் என்று வேறே சொல்லிவிட்டுப் போய்விட்டீர்கள்.' பாலா இமைகளைப் படபடவெனக் கொட்டி, பொங்கிவரும் கண்ணீரை அடக்க முயன்றாள்.

'சரி, கொண்டா அந்த ரொட்டியை. நீ புறப்படு வீட்டிற்கு. தனியாக இருக்க ஜிந்தான் பயந்துகொண்டிருப்பாள்.' சுச்சாசிங் அவள் தோளை மெல்ல தட்டிக் கொடுத்துவிட்டு எழுந்து நின்றான்.

ரொட்டிப் பொட்டலத்தை அவள் கையிலிருந்து வாங்கிக் கொண்ட சுச்சா தோளின்மீது கையைப்போட்டு அணைத்தவாறே அவளை பஸ் வரை அழைத்து வந்தான். பின்பு ஒரே தாவலில் தன் சீட்டில் போய் அமர்ந்தவன், பஸ்ஸை ஸ்டார்ட் செய்ததும்… பயந்த குரலில் அவள்

வினவினாள். 'சுச்சாசிங், செவ்வாய்க்கிழமை வீட்டிற்கு வருவாயல்லவா?'

'ஓ, வருவேன். உனக்கு நகரத்திலிருந்து ஏதாவது வேண்டுமா, சொல்லு?'

'வேண்டாம், எனக்குமே எதுவுமே தேவையில்லை. ஒன்றும் வேண்டாம்.'

பஸ் கர் புர்ரென்று ஓசையை எழுப்பியதும் பாலா இரண்டடி பின்னே நகர்ந்து கொண்டாள். சுச்சாசிங் தன் தாடி மீசையைத் தடவிவிட்டுக் கொண்டான். சத்தமாய் ஒரு ஏப்பம் விட்டதும் ஏதோ நினைத்துக்கொண்டவன்போல், 'ஆமாம், அப்பொழுது நீ என்னிடம் என்ன சமாசாரம் சொல்லவேண்டுமென விரும்பினாய்?'

'ஒன்றும் அப்படி முக்கியமான விஷயம் எதுவுமில்லை. செவ்வாய்க்கிழமை வீட்டிற்கு வரும்போது...'

'சரி, சரி. நீ வீட்டிற்குத் திரும்பிப்போ. நேரமாக்காதே, ஒரு மைல் தூரமல்லவா?'

'சுச்சாமியான், நாளைக்கு குரு பண்டிகை. நாளைக்கு நான் உனக்காக வேண்டி இனிப்பு பிரசாதம் செய்து வைப்பேன்.'

'ரொம்ப நல்லது, ரொம்ப நல்லது.'

'சரி, சரி.'

பஸ் புறப்பட்டுவிட்டது. புழுதிப் படலம் பாலாவைச் சூழ்ந்து கொண்டது. தூசி சற்றே அடங்கியதும் தலைப்பை எடுத்துக் கண்களைத் துடைத்துக்கொண்டாள் அவள். பஸ்ஸின் சிவப்பு விளக்கு கண்களுக்கு மறையும் வரையில் அவள் அங்கேயே நின்றாள். நகரவில்லை.

## கோடைகாலம்

நகராட்சி காரியாலயம் மிக அழகாகப் புதுப்பிக்கப் பட்டுள்ளது. அதன் வாயிலில் வானவில் போன்ற அமைப்பில் பெயர் பலகை அமைக்கப் பட்டுள்ளது. பெயிண்டர் சையத் அலியின் தேர்ச்சி பெற்ற கரங்கள் இந்தப் பலகையைத் தயாரித்துள்ளன. இதற்குள் எத்தனை விரைவாக எல்லாம் நடந்து விட்டது. நகரத் தில் பெரும் பாலான கடைகளின் முன்னே விளம்பரப் பலகைகள் தொங்க வாரம்பித்துவிட்டன. கடைக்கு விளம்பரப் பலகையைத் தொங்க விடுவதென்பது கடை யின் மதிப்பை, அதாவது அந்தஸ்தை உயர்த்துவதாகும். நெடு நாட்களுக்கு முன்னரே பட்சணக் கடைக்காரன் தீனநாத் தன் கடையின் முன் விளம்பரப் பலகையைத் தொங்கவிட்டாலும் விட்டான். அவனது கடையில் பால் குடிக்க வருகிறவர்களின் எண்ணிக்கை திடீரென உயர்ந்து விட்டது. அப்புறம் பார்க்கவேண்டுமே, பொங் கிய வெள்ளம் போல் விளம்பரப் பலகைகள் குவிந்தன. அதுவும் புதிய புதிய பாணி, புதிய புதிய டிசைன். "ஓம்" அல்லது "ஜெய் ஹிந்த்" என்று துவங்கி 'ஒரு முறை அவசியம் உபயோகித்துப் பாருங்கள்.' 'கலப்படம் என்று நிரூபிப்பவர்களுக்கு நூறு ரூபாய் ரொக்கப் பரிசு' எனப் பல்வேறு வேண்டுகோள்கள், அறைகூவல்களுடன் முடிந்தன.

காரியாலயத்தின் பெயர் மூன்று மொழிகளில் எழுதப் பட்டுள்ளது. சேர்மன் இருக்கிறாரே, ரொம்ப கெட்டிக் காரர். நல்ல மூளை. அவரது மதி நுட்பமும், சாமர்த்திய மும், பிரமாதமாய்ப் புகழப்படுகிறது அதனால் தான் ஒவ்வொரு விளம்பரப் பலகையிலும், இந்தி, உர்தூ, ஆங் கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் பெயர்கள் தீட்டப்

படுகின்றன. வெகு தூரத்திலிருந்து தலைவர்கள் சொற் பொழிவாற்ற இந்நகருக்கு வருகின்றனர். ஆக்ரா விலுள்ள தாஜ் மகாலைப் பார்த்துவிட்டு வரும் வெளி நாட் டினர் இந்த வழியாகத்தான் திரும்பிச் செல்லுகின்றனர். அவர்களிடையே இந்த மும்மொழிப் பெயர்ப் பலகைகள் எத்தகைய நல்லெண்ணத்தை ஏற்படுத்தும் தெரியுமா? இது மட்டுமா, தேர் திருவிழாக் காலங்களில் ஹோட்டல் மிட்டாய் கடைகளில், ஜூலை ஆகஸ்டு மாதங்களில் புத்தகக் கடைகளில், கல்யாண சீசனில் துணிக் கடை களில், மோசமான பருவ நிலையில் வைத்தியர்கள், ஹகீம் களின் கடைகளின் முன்னே தொங்கும் விளம்பரப் பலகைகள் இவைகளுக்கு அலாதியான சோபையும் கவர்ச்சியும் கூடி விடுகிறதே! சுத்தமான கலப்படம் அந்த நெய் வியாபாரம் செய்பவர்கள்தான் எல்லோரை யும் விடக் கெட்டிக்காரர்கள். சுவரிலே காவிக்கல் அல்லது கரிக்கட்டியினுல் எழுதியே சமாளித்துவிடுகிருர் கள். நெய் அத்தியாவசியமான பண்டமாயிற்றே, இது இல்லாமல் ஒன்றும் நடக்காதே.

வைத்தியர் விளம்பரப் பலகையின் முக்கியத்தை வலி யுறுத்திப் பேசினுர். 'போஸ்டர் இல்லாமல் சினிமாத் தொழில் இயங்க முடியுமா? முடியாதே. பெரிய பெரிய நகரங்களுக்குப் போய்ப் பாருங்கள். மண்ணெண்ணெய் விற்பவனின் கடையின் முன்னே கூட ஒரு பெரிய விளம் பரப் பலகை தொங்கும். இது ரொம்ப முக்கியம் பாருங் கள். குழந்தைகளுக்குப் பெயர் வைக்கிருேமே. அது கூட இப்படித்தான். ஒரு சைன் போர்டு, இல்லையா? இல்லாவிட்டால் பெயர் வைப்பதில் என்ன அர்த்தமிருக் கிறது? அதற்கு அவசியம்தான் என்ன? இந்த விளம்பரப் பலகை ஒன்றை மாட்டிக்கொண்டான் நம்ப கம்பௌண் டர். அவ்வளவுதான். மருந்து கலப்பவன் டாக்டராகி

விட்டான். கைப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு நடை போடுகிறுன்.'

அருகே அமர்ந்திருந்த ராமசரண் இன்னெரு புதிய செய்தியை, வியப்பூட்டும் செய்தியைக் கூறினுர். 'அந்த ஆசாமி நேற்று ஒரு எக்கா வண்டியும் குதிரையும் வாங்கி இருக்கிருராம்.'

'யார் ஓட்டுவார்?' தகர நாற்காலியில் பிரணுயாம முத்திரையில் அமர்ந்திருந்த பண்டிதர் கேட்டார்.

'இதெல்லாம் ஜேப்படி செய்யும் தந்திர வேலை' என்ருர், வைத்தியர். அவர் குறிப்பிட்டது எக்கா வண்டி விஷயம்தான். 'நோயாளியிடமிருந்து வாடகையைக் கறந்துவிடலாம் அல்லவா? பெரிய பெரிய நகரத்திலுள்ள டாக்டர்கள்போல் வண்டிக்காரனுக்கும் பக்ஷீஸ் வாங்கித் தரலாமே! தொழிலுக்கு வருகிற கெட்ட பெயருக்குக் காரணமெல்லாம் இதுதான். நோயாளிக்கு வைத்தியம் செய்வது முக்கியமா? தன் ஆடம்பரத்தையும் பகட்டையும் காட்டுவது முக்கியமா? இங்கிலீஷ் மருந்தைக் கொடுத்தே நோயாளியைக் குற்றுயிராக்கி விடுகிருர்களே ஐயா! ஆயுர்வேத வைத்தியர் நாடிகீடி பிடித்துப் பார்ப்பது இருக்கட்டும், சும்மா முகத்தைப் பார்த்தே வியாதி என்ன என்பதைச் சொல்லிவிடுவானே! வண்டியும் குதிரையும் மட்டும் இருந்தால் போதுமா? அது என்ன செய்துவிடமுடியும்? பார்த்துக்கொண்டே இருங்கள். இன்னும் கொஞ்ச நாட்களில் இவனுடைய குதிரை வண்டிக்காரன் கம்பௌண்டராகி விடுவான்......' என்று கூறியவாறே வைத்தியர் அதே பழங்காலப் பாணியில் சிரிப்பொன்றை உதிர்த்தார். தொடர்ந்து கூறினுர். 'சொல்வதற்கென்ன இருக்கிறது? வைத்தியத் தொழிலே ஒரு வேடிக்கையாகப் போய்விட்டது. வக்கீல், லாயரின் பிள்ளைகளெல்லாம் டாக்டராக ஆரம்பித்துவிட்டனர். ஆனல் இந்த வைத்தியத் தொழில் இருக்கிறதே. இது பரம்பரையானதொரு

சம்ஸ்காரம். ரத்தத்திலேயே ஊறிவருகிறதொரு விஷயம். அதிலேதான் திறமை வருகிறது. வைத்தியரின் பிள்ளை வைத்தியன். அதுதான் சரி. பாதி வித்தை சின்ன வயதிலேயே, மருந்தை அரைப்பதிலும், வேர், மூலிகை களைப் பார்ப்பதிலுமே வந்து விடுகிறது. அரைத் தோலா, கால் தோலா, குந்துமணி எடை எல்லாம் கண்ணால் ஒரு பார்வை பார்த்ததுமே நிதானிக்கத் தெரிந்துவிடும். பின்னர் மருந்து கெட்டுப்போக இடமேது? அதை அரைத்துக் கலப்பதில் தானப்பா எல்லா விஷயமுமே அடங்கியிருக்கிறது. தன்வந்திரி இருக்கிறரே? அவர் வந்து...' வைத்தியர் மேலே பேச ஆரம்பித்தவர் யாரோ ஒருவன் கடையை நோக்கி வருவதைக் கண்டதுமே வாயை மூடிக்கொண்டுவிட்டார். இது மட்டுமா? தன்னைச் சுற்றி அமர்ந்திருப்பவர்கள் சும்மா அரட்டையடிக்க வந்தவர்கள் அல்ல. அவரை நாடி வந்திருக்கும் நோயாளிகள் என்பது போன்றதொரு பாவனையுடன் நடந்து கொண்டார்.

வந்தவன் கடையின் படிகளில் ஏறியதுமே வைத்திய ருக்கு அவன் யாரெனத் தெரிந்து விட்டது போலும். அவரது உற்சாகமெல்லாம் தணிந்து விட்டது. அவனைப் பார்த்ததும் பாராதவர் போல் இருந்தார். ஆனாலும் வெளிக்கு ஒரு மரியாதை, உபசாரம் என்றெல்லாம் இருக்கிறதே. ஒருக்கால் நாளைக்கே இந்த மனிதனுக்கும் நோய் வரலாம். அல்லது இவனது வீட்டில் யாருக் கேனும் வியாதி, பீடை நேரலாம் அல்லவா? தன்னு டைய தொழிலின் கௌரவத்தையும் மேன்மையான தனது நடத்தையையும் காப்பாற்றிக் கொள்வதிலும் தொழிலின் வெற்றி அடங்கி இருக்கிறதே. மெல்லத் தன் னைச் சமாளித்துக் கொண்டவராய் 'என்னப்பா, சௌக் கியமா?' என விசாரித்தார். வந்தவன் ஒரு ஜாடி ஜீராவை எதிரே வைத்துவிட்டு, 'டாகுர் சாகேப் இதை

இங்கே வைக்கச் சொன்னார். மண்டியிலிருந்து திரும்பி வரும்பொழுது எடுத்துக் கொள்கிறாராம். சுமார் ஒரு மணி, ஒன்னரை மணிக்கு வருவராம்'' என்றான்.

'அந்த நேரத்தில் கடை மூடியிருக்குமே.' வைத்தியர் இந்த அனுவசியமான தொந்தரவிற்குச் சலித்துக்கொண்டார். 'வைத்தியர்களும் ஹகீம்களும் வியாபாரிகளா என்ன? எந்நேரமும் கடையைத் திறந்து வைத்திருக்க?' என்றவர் இனி வரப்போகும் சந்தர்ப்பங்களை நினைவு கூர்ந்தவராய், வேறு வழியின்றி 'சரி, இருக்கட்டும். பர வாயில்லை, நானில்லை என்றால், பக்கத்துக் கடையில் வைத்துவிட்டுப் போகிறேன், எடுத்துக்கொள்ளட்டும்' என்றார்.

வந்தவன் சென்றதுமே வைத்தியர் படபடத்தார். 'மது விலக்கு அது இது எல்லாம் என்ன பயன்? என்ன நடக்கிறது? இது வந்ததிலிருந்து வீட்டுக்கு வீடு கள்ளச் சாராயம் காய்ச்சுவது தொழிலாகப் போய்விட்டது. பாகு, நெய் விலை விற்கிறது. இதுவும் இந்த டாக்டர்கள் இருக்கிறார்களே, என்ன செய்வது இவர்களை. இவர்களின் கடைகளெல்லாம் மதுக் கடைகள்தான். மருந்து மாதிரி உபயோகிக்க லைசென்ஸ் தருகிறார்கள். ஆனால் நடப்பது என்ன? வெட்ட வெளிச்சமாய் ஜிஞ்சர் விற்கப்படுகிறது. கேள்வி கேட்பாடு ஏது? அபினி கஞ்சா மருந்துக்காக ஒரு பொட்டலம் நாங்கள் கேட்டால் அதற்கு ஆயிரம் கேள்விக்கு சமாதானம் சொல்லவேண்டும்.'

'பொறுப்பான விஷயம் அல்லவா?' என்றார் பண்டிதர்.

'ஆமாம் பொறுப்பு எங்களுக்கு மட்டும்தான் இல்லையா? நாங்களெல்லாம் ரெஜிஸ்டெர்ட் வைத்தியர்களப்பா, தெரியுமா? அவன், இவன் என்று அநாமதேயப் பஞ்ச கல்யாணியெல்லாம் தொழில்லே வந்து புகுந்தார்களே. அவர்களையெல்லாம் தீர்த்துக் கட்டியாச்சு. இப்பொழுதெல்லாம் யார் யார் ரெஜிஸ்டர்ட் ஆகியிருக்கிறார்களோ

அவர்கள்தான் தொழில் நடத்தலாம். வைத்தியர்னு போர்ட் மாட்டிக்கலாம். சூரணம் பொட்டலம் கொடுப் பவனெல்லாம் கூட வைத்தியனுகி விட்டிருந்தா னல்லவா? அதெல்லாம் ஒரு வழியா முடிஞ்சு போச் சப்பா. லக்னேவில் சர்க்கார் விசாரணைக்குப் பிறகுதான் உத்தரவு கிடைச்சிருக்கு.'

பண்டிதருக்கு வைத்தியரின் பேச்சு ரசிக்கவில்லை என்பது தெரிந்தது. வைத்தியர் உட்புறம் எட்டிப் பார்த் தார். சந்தர் மருந்துக் கடையின் விளம்பரப் பலகையை எழுதிக் கொண்டிருந்தான். 'சந்தர், வெள்ளைப் பெயிண்ட் கொஞ்சம் கெட்டியாக இருப்பது போலிருக் கிறது. கொஞ்சம் டர்பன்டைன் கலந்துகொள்.' என்ற வாறே ஒரு பாட்டிலை எடுத்துக்கொண்டு வந்தார். பாட் டிலின் மீது அசோகாரிஷ்டம் என்ற லேபிள் ஒட்டி யிருந்தது!

இதுபோல இன்னும் என்னென்ன மருந்துகளுடைய உடலென்ற குப்பியில் என்னென்ன பொருள்களின் ஆத்மா அடைபட்டுக் கிடந்ததோ, யார் கண்டது? எதிரே யிருந்த அலமாரியில் வரிசை வரிசையாய் பெரிய பெரிய கண்ணுடிக் குப்பிகள், அவற்றின்மீது விதவித மான அரிஷ்டங்கள் ரசங்களின் லேபிள் ஒட்டியிருந்தது. முதல் வரிசையில்தான் கண்ணுடிக் குப்பிகள்; அவற்றிற் குப் பின் அத்தியாவசியமான வேறு சில பொருள்கள் எதிரே மேஜையின்மீது வெள்ளை நிறப் பாட்டில்களில் வரிசையாகக் காட்சி தந்தன. நாவிற்கு ருசியான சூர ணங்கள், லவணங்கள் இப்படிப் பல பல. எஞ்சியிருக்கும் பாட்டில்களில் என்ன இருக்கிறதென்று வைத்தியருக்குத் தான் தெரியும்.

டர்பன்டைனைக் கலந்துகொண்டு சந்தர் எழுத வாரம்பித்தான். "புரொபசர் கவிராஜ நித்தியானந்த திவாரி." இதற்கு மேலேயுள்ள வரியை "ஸ்ரீ தன்வந்திரி

ஔடதாலயம்'' என்று வைத்தியர் தானே எழுதியிருந்தார். வெள்ளைப் பெயிண்டில் அவர் எழுதியிருந்த இந்த எழுத்துக்கள் யாரோ பஞ்சைப் பிய்த்து ஒட்டவைத்த மாதிரி இருந்தது. மேலே கொஞ்சம் இடம் காலியாக இருப்பதைக் கண்டதும் 'சந்தர், கொஞ்சம் மேலே, ''ஜெய் ஹிந்த்'' என்று எழுதி விடப்பா. இதோ பார்! இங்கு கொஞ்சம் இடம் இருக்கிறதல்லவா? அதில் இங்கே, ஒரு திராக்ஷ ரசப் பாட்டிலின் படம்! அதோ அங்கே, மருந்தரைக்கும் கலுவத்தின் படம் ஒன்றும், போட்டு விடப்பா... போதும்!'

சந்தருக்கு சலிப்புத் தட்ட வாரம்பித்துவிட்டது. நல்ல வசமாய் மாட்டிக்கொண்டு விட்டான். கையெழுத்து அழகாக இருப்பதற்குப் பரிசு இது. நல்ல வசமாய் மாட்டிக் கொண்டாகிவிட்டது. அவனுக்கு இதெல்லாம் ஒன்றும் புரியவில்லை. 'நல்ல பெயிண்டரிடம் கொடுத்து வரையச் சொல்லுவதுதானே. நன்றாய் அழகாய் எழுதி வரைந்து தருவான். எனக்கு அதெல்லாம் வராது.' கையிலிருந்த பிரஷைக் கீழே வைத்துவிட்டு வியர்வையைத் துடைத்துக்கொண்டான் அவன்.

'ஐந்து ரூபாய் கேட்கிறானப்பா. இரண்டே வரிக்கு ஐந்து ரூபாயாம். இப்போ, உன்னுடைய உழைப்பைத் தவிர இந்தப் பலகைக்கு 12 அணு ஆயிற்று. இந்த பெயிண்டெல்லாம் யாரோ ஒரு நோயாளி கொடுத்து விட்டுப்போனான். எலெக்டிரிக் கம்பெனியின் பெயிண்டர் அவன். அஜீர்ணத்தினால் பாவம் அவஸ்த்தைப் பட்டுக் கொண்டிருந்தான். இரண்டொரு மருந்துகள் தயார் பண்ணிக் கொடுத்தேன். காசு வாங்கிக் கொள்ளவில்லை. அவன் ஏதோ இரண்டொரு வர்ணங்கள், கொஞ்சம் வார்னிஷ் எல்லாம் கொடுத்துவிட்டுப் போனான். இரண்டு பெட்டிக்கு வார்னிஷ் போட்டாயிற்று. இதோ, இந்த போர்டும் தயாராகிவிட்டது. இன்

னும் இரண்டொரு நாற்காலிகளுக்கும் இது போதும்... நீ கொஞ்சம் இதை மட்டும் எழுதிவிடு. சிவப்பு வர்ணத்தில் நான் ஷேட் கொடுத்துவிடுகிறேன். ஏம்பா? சுற்றிலும் ஓரம் கட்டுவது மூவர்ணத்தில் போட்டால் நன்ருயிருக்குமல்லவா?' எனக் கேட்ட வைத்தியர் 'இருக்கும்' எனத் தனது இசைவையும் வெளியிட்டுக் கொண்டார்.

சந்தருக்கு உஷ்ணம் தாளவில்லை. நண்பகல் நெருங்க நெருங்க, தெருவில் புழுதியும் அனல் காற்றும் அதிகரித்துக் கொண்டே போயின. வைத்தியரின் நேரடிப் பார்வையிலிருக்கும் பொழுது எதையும் மறுக்கவும் முடியவில்லை. விசிறிக் காம்பினுல் முதுகைச் சொரிந்து கொண்டே வைத்தியர், கூலிக்குக் கணக்கெழுத கிராமக் கணக்குப்பிள்ளைகளின் பெரிய பெரிய ரிஜிஸ்டர்களை எடுத்துத் தன் முன்னே பரப்பிக்கொண்டார்.

கோடையில் தகிக்கும் வெய்யில் உள்ளே வராமலிருக்க வைத்தியர் கடையின் ஒரு கதவைச் சற்றே ஒருக்களித்து வைத்தார். காலியாய் இருந்த கணக்குப் புத்தகத்தின் பேரேட்டில் கர்ணத்தின் நில ஜாப்தா, மற்ற கணக்கு விவரங்களைப் பார்த்துப் பார்த்து ஒழுங்காகப் பிரித்து எழுதவாரம்பித்தார். மெல்ல அங்கிருந்து நழுவ நினைத்த சந்தர் 'இதெல்லாம் என்ன வைத்தியரே?' என வினவினுன்.

வைத்தியரின் முகம் வாடிவிட்டது. 'சும்மா உட்கார்ந்து இருப்பதைவிட ஏதாவது செய்யலாம் அல்லவா? புதிதாய் வரும் கணக் கெழுத்தாளர்களுக்கு, கணக்கு வழக்கு எழுத எங்கே தெரிகிறது? தினம் தினம் நிலவரி அதிகாரி, தாசில்தாரிடமிருந்து வசவும் திட்டும்தான் கிடைக்கின்றன. வேறு வழியின்றி இந்த வேலையை கூலி கொடுத்து எழுதச் சொல்ல வேண்டியிருக்கிறது. இவர்களுக்கு வேறென்ன வழி? அந்தக் காலத்து மணியகாரரும் கர்ணமும் இப்பொழுது ஏது? கிராமத்துக் கணக்கு

வழக்கு, சட்ட திட்டமெல்லாம் அவர்களுக்குத் தலைகீழ் பாடமாயிற்றே. பாவம், அவர்களின் பிழைப்பு போய் விட்டது. ஆனால் உண்மையைக் கேட்டால் விஷயம் இதுதான். இன்னும் வேலையை எல்லாம் செய்வது அந்தப் பழைய கர்ணமும் கணக்குப் பிள்ளைகளும்தான். இந்தப் புதிய எழுத்தர்களின் சம்பளமெல்லாம் இப்படிக் கூலி கொடுத்து எழுதி வாங்குவதற்கே சரியாகப் போய்விடு கிறது. வயிறு என்று அவர்களுக்கும் ஒன்று இருக்கிற தல்லவா? ஐந்து, பத்து என்று குடியானவனை அடித்துப் பிடித்து வாங்கிக்கொள்கிறார்கள். அப்படி வாங்காவிட் டால் வயிறு வளர்ப்பதெப்படி? எனக்குத் தெரிந்தவர்கள் இப்படி இரண்டொருவர்கள் உண்டு. அவர்களிடமிருந்து அவ்வப்போது இப்படி ஏதாவது வேலை கிடைக்கிறது. பார்த்துப் பிரித்து எழுதவேண்டும். அவ்வளவுதான்.'

வெளியே தெருவில் சந்தடி அடங்கிவிட்டது. நட மாட்டத்தையே காணோம். காரியாலயத்திற்குச் செல்லு பவர்களெல்லாம் போயாகிவிட்டது. எதிரே சுங்கவரி காரியாலயத்தில் கசகசா தட்டிகளுக்கு நீர் தெளிக்க வாரம்பித்து விட்டனர். தூரத்தில் அரச மரத்தின் இலை கள் காற்றிலே உராய்த்தெழும் சலசலத்த ஓசை, அனல் காற்றிலே மிதந்து வந்தது. இச்சமயத்தில் யாரோ ஒரு வன் கதவு வழியாய் உள்ளே எட்டிப் பார்த்தான். இரண் டொரு வினாடியில் வேதனையினால் கனத்துவிட இருந்த வைத்தியரின் வார்த்தைகள் அப்படியே தடைபட்டு நின்று விட்டன. அவரது கூரிய பார்வை வந்தவனை அளந்து விட்டதுபோலும். எச்சரிக்கை அடைந்து விட் டார் அவர். சட்டென, குரல், தோரணை இரண்டுமே மாறிவிட்டன. 'ஆக்ராவில் ஒரு போர்டு எழுதச் சொல்லி யிருக்கிறேன். அது வரும் வரையில் இதுவே போதும், இதற்கெல்லாம் மண்டையை உடைத்துக் கொள்ள யாருக்கு அவகாசமிருக்கிறது?' என்றவர் மும்மரமான

வேலையில் ஈடுபட்டிருப்பவர் போன்ற பாவத்துடன் அவனை நோக்கி 'என்னப்பா, என்ன வேண்டும் உனக்கு?' என்றார். 'டாக்டர் சர்டிபிகேட் வேண்டும். கோசமா ஸ்டேஷனில் வேலை பார்க்கிறேன் ஐயா...' ரெயில்வேயின் நீல நிற உடை அணிந்திருந்த அந்த ஆள் கூறினான்.

அவனது தேவை என்னதாக இருக்குமென முழுவதும் அறிந்துகொண்ட வைத்தியர், 'அது சரி, எந்தத் தேதியிலிருந்து எந்தத் தேதி வரை லீவு வேண்டும்?' என்றார்.

'முன்னரே 15 நாட்கள் கிடைத்திருக்கின்றன. இன்னும் ஒரு 7 நாள் வேண்டும்.'

ஏதோ கணக்குப் போட்ட வைத்தியர், 'இதோ பாரப்பா, நல்ல பக்கா சர்டிபிகேட் தருகிறேன். சர்க்காரின் ரெஜிஸ்டர் நம்பரைப் போட்டுத் தருகிறேன். நான்கு ரூபாயாகும்' என்றவர், அவன் நான்கு ரூபாய்க்கு இசைய மாட்டான் என்பதைத் தானே உணர்ந்தவர் போலத் தொடர்ந்தார்: 'முந்திய லீவிற்கும் சேர்த்தி வேண்டாமென்றால் இரண்டு ரூபாய் போதும்.'

வந்திருந்தவனின் முகம் சோபை இழந்தது - ஆனால் அவனது ஏமாற்றத்தைவிட வியர்வையினால் பிசுபிசுத்த வைத்தியரின் முகம்தான் அதிக நிராசையைக் காட்டியது. மிகுந்த அலட்சியத்துடன் அவன் பேசினான். 'சோபரன்சிங்தான் உங்களிடம் அனுப்பிவைத்தார்.' இதை அவன் கூறியவிதம் தனக்காக அல்ல சோபரன் சிங்கிற்காகத்தான் வந்திருப்பதுபோல் தொனித்தது. ஆனால் வைத்தியருக்கு ஒரு பிடி அகப்பட்டுவிட்டது. 'அப்படித்தான் நானும் முதலிலேயே நினைத்தேன். ரொம்ப தெரிந்தவர்கள், பழக்கமானவர்களுக் கல்லாமல் நான் இதெல்லாம் கொடுப்பதில்லை. இது என் கௌரவத்தைப் பாதிக்கும் விஷயமல்லவா? நீ எங்கே யிருக்கிறாய்?

என்ன வேலை செய்கிறாய்? இதெல்லாம் யோசிக்க வேண்டிய விஷயமாயிற்றே. நம்பிக்கையின் பேரில்தான் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்கிறோம். இதோ பாரப்பா. 15 நாட்களுக்கு முன்னலிருக்கும் தேதியிலிருந்து உன் பெயரை ரெஜிஸ்டரில் எழுதவேண்டும். பின்னர் ஒவ்வொரு தேதிக்கும் முன்னால் உன் பெயரை எழுதவேண்டும். இதெல்லாம் இல்லாமல் ஒன்றும் நடக்காது. இது ஒன்றும் கிள்ளுக்கீரை விஷயமல்ல. வைத்தியரின் அர்த்தம் பொதிந்த பார்வை சந்தரின்மீது பதிந்தது. சந்தர் சட்டென கை கொடுத்தான். 'உனக்கு உண்மையிலேயே வியாதிதானு? அல்லது நீ கொள்ளை தான் அடித்தாயா என்று இவருக்கு எப்படியப்பா தெரியும்? இது சர்க்கார் விஷயம் பார்...'

'ஐந்து ரூபாய்க்குக் குறைவாய் உலகத்திலேயே எந்த டாக்டரும் சர்டிபிகேட் தரமாட்டான்' வைத்தியர் தன் முன்னேயிருந்த கணக்குப் பேரேட்டை நகர்த்திவிட்டு ஆவேசத்துடன்... 'அட, இங்கு மூச்சுவிட யாருக்கப்பா நேரம்? இதோ பார். பார்த்தாயா பெயர் பட்டியலை. நோயாளிகளை விட்டு விட்டு இந்த சர்க்காருக்குக் காண்பிக்க வேண்டி, இப்படி ஒழுங்காய், நியமப்படி பேரேட்டில் குறிக்கவேண்டியிருக்கிறது. நோயாளியின் பெயர், அவனுடைய நோய், வருமானம், இப்படிக் குறிக்க வேண்டும். இதில்தான் உன் பெயரையும் பதிக்க வேண்டும். சொல்லப்பா. நோயாளிகளைக் கவனிப்பது முக்கியமா, இப்படி ஆயிரம் விஷயங்களைக் குறித்துக் கொண்டு கால விரயம் பண்ணி நாலு ரூபாய்க்கு சர்டிபிகேட் கொடுத்துவிட்டு சர்க்கார் தொந்தரவிலே மாட்டிக்கிறது முக்கியமா?' என்று பேசியவர் படாரெனக் குறிப்பேட்டு புத்தகத்தை மூடி அப்பால் நகர்த்திவிட்டு, உபகாரம் செய்வதற்கென்றே தான் தயாராக இருப்பது போன்ற பாவத்துடன் பேனுவினல் காதைக் குடைந்துகொண்டார்.

ரெயில்வே ஊழியன் ஒரு நிமிடம் ஏதோ யோசித்த வாறு உட்கார்ந்திருந்தான். வைத்தியர் குனிந்தவாறு தனது வேலையில் மூழ்கியிருப்பதைக் கண்டதும் கடையி லிருந்து இறங்கிவிட்டான்.

தான் செய்தது தவறென்று வைத்தியருக்குத் தோன்றி யது போலும். விஷயத்தை அவர் வளைத்துப் பிடித்த இடம் தவருனது மட்டுமல்ல. படாரென்று முறிந்தும் போய் விட்டதே. சட்டென்று எதுவும் தெளிவாகாமல் போகவே அவனை விளித்து— 'இந்தாப்பா, டாகுர் சோப ரன் சிங்கை நான் மிகவும் விசாரித்ததாகச் சொல்லு. அவர் வீட்டில் குழந்தைகள் சௌக்கியமா?' என்ருர்.

நடந்து கொண்டிருந்தவன் நின்று 'எல்லோரும் சுகம் தான்' என்ருன்.

அவன் காதில் விழும்படியாக வைத்தியர் சந்தரிடம் சற்று உரக்கவே பேசினர். 'எத்தனையோ நகரங்கள், ஊர்களை யெல்லாம் விட்டு விட்டு டாகுர் சாகப் வைத்தி யம் செய்துகொள்ள என்னிடம் தானப்பா வந்தார்! அவருக்காக எதையும் செய்ய நான் எப்பவும் தயார்'—

பலகையில் கடைசி எழுத்தை எழுதிக்கொண்டிருந்த சந்தர் மெல்ல வினவினன். 'ஆள் போயாச்சா?'

'திரும்பி இங்கே வராமலா போகிருன்?' வைத்தியர் தன்னைத் தானே சமாதானப் படுத்திக் கொண்டார். அவன் திரும்பி வர வேண்டியதைத் தவிர வேறு வழி யில்லை என்ற நம்பிக்கையுடன், 'கிராமத்தானும் வக்கீ லும் ஒரே மாதிரிதான். சோபரன்சிங் மட்டும் என் பெயரைக் கூறியிருந்தால் இந்த ஆள் எங்கும் போக மாட்டான். இந்தக் கிராமத்தார்கள் இருக்கிருர்களே, அவர்களே இப்படித்தான். முடிச்சு லேசில் அவிழாது. எங்கேயாவது உட்கார்ந்து யோசித்துப் பார்த்துவிட்டுத் திரும்பி வருவான் பார்' என்ருர்.

'வேறு யாரிடமாவது வாங்கிக்கொண்டு விட்டால்?'

வைத்தியர் இடைமறித்தார். 'ஊஹூம் மாட்டான்' என்றவர் போர்டைப் பார்த்ததும் பாராட்டுவது போல் 'பேஷ் சந்தர், பிரமாதம் போ. விளம்பரப் பலகை பிரமாதமாய் அமைந்துவிட்டது. இது போதும். பெயின்டருக்கு ஐந்து ரூபாய் கொடுத்திருந்தால் நோயாளிகளிடமிருந்தல்லவா அதை வசூல் செய்ய வேண்டியிருக்கும். வண்டி குதிரை, அப்புறம் இந்தச் செலவு வேறே! மூக்கை நேராக பிடித்தாலென்ன? சுற்றி வளைத்துப் பிடித்தாலென்ன? விஷயம் ஒன்று தானே சந்தர். சையத் அலி எழுதிய போர்டை மாட்டினால் நோயாளிகளைத் துணைப் படுத்திவிட முடியுமா என்ன? இதெல்லாம் அவரவர் அறிவையும் புத்திசாலித் தனத்தையும் பொறுத்த விஷயமப்பா...' என்றவாறே மென்னகை புரிந்தார். அவர் தன்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டாரா அல்லது பிறரைப் பார்த்தா என்பது புரியவில்லை.

இதற்குள் இன்னொருவன் உள்ளே வந்தான். அந்த ரயில்வே ஊழியன் தான் வந்து விட்டானோ எனத் தோன்றியது. ஆனால் வந்தவன் ஒரு நோயாளி. சோகை பிடித்தவன். அவனைக் கண்டதுமே வைத்தியரின் முகம் பிரகாசமடைந்தது. உள்ளே போனார். ஒரு தாயத்தை எடுத்து வந்து 'இதன் பலனை சோதித்துப் பார். 20, 25 நாட்களிலேயே பிரமாதமான குணம் தெரியும். ரொம்பவும் மகிமையுள்ளது' என்றார்.

அந்தக் காமாலை நோயாளியின் புஜத்தில் தாயத்தைக் கட்டிவிட்டு அவன் அளித்த சில அணா பைசாக்களை ஜேபில் போட்டுக்கொண்டு தன்னிருப்பிடத்திற்குப் போய் கம்பீரமாய் அமர்ந்துகொண்டார். நோயாளி விடைபெற்றுச் சென்றதும் சுந்தரை நோக்கிக் கூறினார். 'இந்த வித்தைகூட என் அப்பாவிடமிருந்து பெற்றது தான். இதைப்பற்றி அவர் எழுதியுள்ள புத்தகங்கள் எத்தனையோ கிடைக்கின்றன. அவற்றை மீண்டும்

பிரதி எடுக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கி றேன். ரொம்ப அனுபவ பூர்வமான விஷயங்கள். நம் பிக்கை வேண்டும் சந்தர். அதுதான் முக்கியம். அது இருந்தால் ஒரு சிட்டிகை மண்ணுல்கூட நோயாளி குண மடைந்து விடுவான். ஹோமியோபதிக் அது இதுவெல் லாம் வேறென்ன? ஒரு சிட்டிகை சர்க்கரை. நம்பிக்கை எதிலிருக்கிறதோ அதுதான் முக்கியம்.

சந்தர் புறப்படத் தயாராஞன். 'கடையை மூடும் நேர மாகவில்லே? நீங்கள் சாப்பிடப் போகவில்லேயா?'

'நீ போப்பா, நான் இன்னும் 10, 15 நிமிடங்களில் வருகிறேன். வைத்தியர் பேரேட்டுப் புத்தகங்களைத் தன் முன்னே இழுத்து வைத்துக்கொண்டார். கதவு இரண் டையும் நன்ருகத் திறந்து வைத்தார். வெய்யிலேப் பார்த் தால் கண் கூசியது.

பக்கத்துக் கடைக்காரன் பச்சன்லால் தன் கடையைப் பூட்டிவிட்டு வீட்டிற்குப் புறப்பட்டவன் வைத்தியரின் மருந்துக்கடை திறந்திருப்பதைக் கண்டு 'நீங்கள் சாப் பிடப் போகவில்லேயா?' என விசாரித்தான்.

'இல்லே. ஒரு முக்கியமான வேலே. இன்னும் சற்றுக் கழித்துப் போவேன்.'

வைத்தியர் தரையின்மீது பாயை விரித்தார். காகிதம், ரெஜிஸ்டர்கள், யாவற்றையும் மேஜையின் மீதிருந்து எடுத்துக் கீழே பரப்பிஞர். வெய்யில் சுட்டெரித்தது. என்ன வெய்யில், என்ன உஷ்ணம், வியர்வை வெள்ள மாய்ப் பெருகுகிறதே. நடுநடுவே விசிறியால் விசிறிக் கொண்டே அவர் கணக்கைப் பார்த்து எழுதலாஞர். சற்று நேரம் எப்படியோ மூச்சைப் பிடித்துக்கொண்டு வேலே செய்தார். முடியவில்லே. எழுந்து தூசி படிந் திருந்த பழைய குப்பிகளேயெல்லாம் தூசி தட்டி, துடைத் தார். வரிசையாக அடுக்கிஞர். வெய்யில் என்ன வெய் யில், தாங்கவே முடியவில்லேயே. காலமே அசைவற்றுப்

போய்விட்டது போல் தோன்றியது. இடையே ஒரு முறை கதவுகளுக்கிடையே தலையை நீட்டித் தெருவைப் பார்த்தார். இரண்டொருவர் தென்பட்டனர். அவர்களைப் பார்த்ததும் ஏதோ ஒரு ஆறுதல், அவ்வளவுதான். உள்ளே வந்தார். விளம்பரப் பலகையின் கம்பியைச் சரி செய்து கடையின் முகப்பில் கொண்டுபோய் மாட்டினார். "ஸ்ரீ தன்வந்திரி ஔஷதாலயம்" என்ற போர்ட் கடையின் முகப்பில் கழுத்திலே தாயத்துபோல் தொங்கியது.

சற்று நேரம் கழிந்தது. மனத்தை ஒருவாறு திடப் படுத்திக் கொண்டார். ஒரு தம்ளர் தண்ணீரைக் குடித்துவிட்டு, வேட்டியைத் தொடை வரையிலும் நகர்த்திவிட்டுக்கொண்டு மீண்டும் முழு மூச்சுடன் எழுதுவதில் ஈடுபட்டார். வெளியே காலடி ஓசை. கவலையுடன் விழிகளை உயர்த்தினார்.

'இளைப்பாற வீட்டிற்குப் போகவில்லையா வைத்தியரே?' வீடு சென்று கொண்டிருந்த தெரிந்த கடைக்காரன் விசாரித்தான்.

'போகலாம் என்றுதான் பார்க்கிறேன். கொஞ்சம் வேலை நின்றுபோய் விட்டது. அதை முடித்துவிட்டுப் போகலாமா என்ற எண்ணம்.' வைத்தியர் சுவரில் முதுகைச் சாய்த்துக் கொண்டார். சட்டையைக் கழற்றி ஒரு பக்கம் வைத்தாகிவிட்டது. ஒற்றை ஓடு வேய்ந்த கூரையாதலால் கடை அனற் கூடாய்க் காய்ந்தது. வைத்தியரின் விழிகள் கனத்தன. அப்படியே உட்கார்ந்த நிலையில் கண்ணைச் சொருகியது. லேசான தூக்கம். நிச்சயம் கொஞ்ச நேரமாவது ஆகியிருக்கும். சமாளிக்க முடியாமல் போனதும் ரெஜிஸ்டர்களைத் தலையணையாகக் கொண்டு அப்படியே நீட்டி நிமிர்ந்து விட்டார். அரைத் தூக்கமும் விழிப்புமாய் ஒரு போதை.

திடீரெனக் காலடி ஓசை கேட்டதும் அவர் திடுக்கிட்டார். விழிகளை மலர்த்தியவாறே எழுந்து உட்கார்ந்தார்.

பச்சன்லால் பகற்பொழுதைக் கழித்துவிட்டு கடைக்குத் திரும்பி வந்து விட்டான்.

'அட, என்னது? இன்றைக்கு நீங்கள் இன்னமும் வீட்டிற்கே போகவில்லையா?'

வைத்தியர் வேக வேகமாய் விசிறிக் கொண்டார். கடையிலிருந்து இறங்கியவாறே பச்சன்லால் வினவினான்: 'யாரையாவது எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறீர்களா?'

'ஆமாம், ஆமாம். நோயாளி ஒருவன் வருவதாகச் சொல்லியிருந்தான். இன்னும் வரவில்லை வந்து...'

இதற்குள் பச்சன்லால் படியிறங்கி விட்டதைக் கண்ணுற்ற வைத்தியர் பேச்சை அத்துடன் நிறுத்திக் கொண்டு, பொங்கி வந்த வியர்வையைத் துடைத்துக் கொள்ளலானார்.

## சவயாத்திரை

ஒரே ஒரு கட்டிலுக்குத்தான் அந்த அறையில் இட மிருந்தது. அறையிலிருந்து வெளிவந்த போலீஸ்காரன் தெருவிலே கூடி நின்றவர்களிடம் இறந்துபோனவளுக்கு யாராவது வாரிசுகள் உண்டா என விசாரித்தான். பதி லேதும் கிடைக்காமற் போனதும் 'சரி. அந்திமக் கிரியை களுக்கு ஏற்பாடு செய்யவேண்டியதுதான்' — எனத் தனக்குள் கூறிக்கொண்டான்.

'இறந்து போனவள் இந்துவா? முசல்மானா?' சைக்கிள் சீட்டில் முதுகைச் சாய்த்துக்கொண்டு நின்ற இளவட்டம் சொல்லிற்று: 'அவள் ஒரு வேசி.'

'தெரியும்' என அதட்டுவதுபோல் பதிலளித்தான் போலீஸ்காரன்.

'போலீஸ்காரரே, சேவாசமிதிக்காரர்களிடம் சவத்தை ஒப்படைத்து விடுங்கள்,' பீடிக் கட்டை நீட்டியவாறே இன்னொருவன் கூறினான்.

'பிணம் நேற்றிலிருந்து கிடக்கிறது. தெரியுமா உங்க ளுக்கு? இன்னும் தாமதித்தால் அழுகி ஓடிவிடும். சீக்கி ரம் ஏதாவது ஏற்பாடு செய்யுங்கள்.'

பீடிப் புகையை மூக்கினால் வெளியிட்டவாறே நின்ற போலீஸ்காரன் கூறினான். 'முதலில் இவளுக்கு யாராவது உறவினர், தாயாதி, பிள்ளை குட்டிகள், கூடப் பிறந்த வர்கள் உண்டா இல்லையா என்பது தெளிவாகட்டும். முதலில் ரிப்போர்ட் அல்லவா எழுதியாக வேண்டும். இல்லாவிட்டால் ஸ்டேஷனே திமிலோகப் பட்டுவிடாதா? என்னைத்தான் அயோக்கியன் என்பார்கள். முதலில் விவரம் ஏதாவது தெரியட்டும்.' பீடிப் புகையை உள்ளுக் குள் இழுத்தவாறே அவன் ஆழ்ந்த சிந்தனையில் ஒன்றிப் போனான். ஒரு சிலர் அவனருகிலேயே அவனைச் சுற்றி

நின்றனர். சிலர் சற்று எட்ட நின்று பேசிக் கொண்டிருந்தனர்.

சுற்றுப் புறமெங்கும் சிறிய சிறிய வீடுகள், அறைகள், குடிசைகள், பாதை கூட கப்பிச்சாலை அல்ல. மணற்பாங்கானதாக இருந்ததால் பார்ப்பதற்கு நிறமாய்த் தெரிந்தது. பகல் முழுவதும் வீசுகிற காற்றில் இதிலிருந்து கிளம்பும் புழுதிப் படலம் இப்பேட்டையை இன்னும் பாழடைந்ததாகக் காட்டியது.

கடந்த இரண்டு மூன்று வருடங்களாக இப்பேட்டையில் இம்மாதிரிதான். இதுமாதிரியான வாழ்க்கையை நடத்தி வாழ்ந்த கடைசிப் பெண்மணி. அவளை இங்கிருந்து வெளியேற்றப் பல சண்டைகள், சச்சரவுகள் ஏற்பட்ட பின்னும் அவள் அங்கிருந்து நகரவில்லை. இந்தப் பேட்டை வாசிகளும் கடைசியில் ஒருவாறு அவளை ஏற்றுக்கொண்டுவிட்டனர். அவளிடம் சண்டை போட முடியாதென்பது அவர்களுக்குத் தெரியும். அதிகபட்சம் போனால் அவளுடன் பேச்சுவார்த்தை வைத்துக்கொள்ளாமலிருக்கலாம். மேலும், அவளுடன் பேச வேண்டிய சந்தர்ப்பங்களும் இல்லை. வெற்றிலை பாக்குக் கடையில் அவள் தன்னை அலங்கரித்துக்கொண்டு வந்து நிற்கும் சில சந்தர்ப்பங்களைத் தவிர பேசவேண்டிய அவசியமே ஏற்படவில்லை.

காலையில் பொழுது விடிந்ததிலிருந்து நள்ளிரவு வரையில் சினிமா இசைத்தட்டுகளை வைத்து முழங்கிக் கொண்டிருக்கும் சிந்த் இந்து ஹோட்டலிலிருந்து மாலை வேளைகளில் தனக்காக மாமிசக் குழம்பு வாங்கிக்கொண்டு வருவாளே, அப்பொழுதுகூட அவள் தனது நேரத்தை வீணாக்கமாட்டாள். ஒருக்கால் தனது அனுபவத்திலிருந்து இப் பேட்டைவாசிகள் எதையும் இலவசமாக அனுபவிப்பார்கள் என்பதை அறிந்துகொண்டிருந்தாள் போலும். இப்படிப்பட்டவர்களிடமே அவளுக்கு ஒரே

எரிச்சல், அசாத்திய வெறுப்பு. ஒரு பயலைக் கூப்பிட்டு, காசு கொடுத்து, கலர் சாக்கட்டியினுல் பெரிய பெரிய எழுத்தில் தன்னறையின் சுவரில் என்ன எழுதிவைத்தாள் தெரியுமா?

'கடன் என்பது அன்பிற்குக் கத்தரிக்கோல் போன்றது.'

இம்ரதிபாய் வேசைதான். ஆனுல் அலாதியான தொரு வேசை என அவள் சென்றபின் கடைக்காரன் கூறுவதுண்டு.

அவள் அதிகம் பேசுவதில்லை. அவளை நாடிவரும் புள்ளிகளும் குறைவு. அதுவும் கடைசி காலத்தில் எப்பொழுதாவது இரண்டொரு கிராக்கி வரும். ஹூம். அவளிடம் யார் வருவார்கள்? ஆட்டமா, பாட்டமா, ஒய்யாரமா! வெறும் உடலில் மனிதனுக்கு என்ன கவர்ச்சி. அதெல்லாம் ஒவ்வொரு காலம்.

'ஆட்டமும் பாட்டமும் கேட்க ஒருவரும் வரவில்லை. வெறும் உடலுக்காகத்தான் வருகிருர்களா?' என்று கேட்டால் 'உடல் என்ருல் அதிலும் ஒரு குழைவும், மென்மையும் வேண்டாமா? அவளிடம் அந்த ஓயில்கூட இல்லையே' என்பான் அவன். இம்ரதிபாய் வெறும் வேசை. அவ்வளவுதான்.

இப்பொழுது கூட வெற்றிலை மடித்துக்கொண்டே கடைக்காரன் தான் சொன்னவற்றையே திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தான். 'எனக்குத் தெரியும் இந்த நிலைமை வருமென்று. இம்ரதிபாய்...இம்ரதிபாய், வைத்தியம் செய்துகொள் என்று எத்தனையோ முறை சொன்னேன். கேட்டாளா? வைத்தியம் செய்து கொண்டால் பிழைத்துக்கொள்வாய் என்றேன். ஆனுல் பாழாய்ப் போகிறவள் உயிரோடு இருக்கும்வரை உலகத்திற்கெல்லாம் வியாதியை வாரி வழங்கிக் கொண்டிருந்தாளே? இன்று செத்துக் கிடக்கிருள். எடுப்பவர்களைக் கூடக்

காணும். என்ன சொல்லுங்கள், இம்ரதிபாய் வெறும் வேசை, பச்சைத் தேவடியாள். எனக்கு அவளைப் பற்றிய எல்லா விஷயமும் தெரியும்.'

வெற்றிலையில் சுத்தைக் காம்பை வைத்துச் சுருட்டிய வாறே அவன் குரல் கொடுத்தான். 'ஹவல்தார்ஜீ! சீக்கிரம் பிணத்தை எடுங்கள். வியாதி வந்து செத்திருக் கிறாள்.'

அச்சமயம் ஹவல்தார் கண்ணாடி தம்பளரில் நிறைய சூடான தேநீரை ஊதி ஊதிப் பருகிக்கொண்டிருந்தான். கடைக்காரனின் குரல் காதில் விழுந்ததும் அந்தப் பக்கம் திரும்பி ஏதோ கூற விரும்பினான். இதற்குள் நகர சபை யின் குப்பை வண்டி தெருவிற்குள் நுழைவது தென் பட்டது.

தேநீரை வாயில் விட்டுக்கொண்டு, தம்பளரை ஹோட் டல்காரப் பையனின் கரத்திலே திணித்துவிட்டு வண்டி யின் பக்கம் பாய்ந்தான் போலீஸ்காரன். 'ஏய் வண்டிக் காரா, உன் பெயர் என்ன?'

வண்டியிலிருந்து இறங்கியவாறே அவன் பதிலளித் தான்: 'வம்சிலால்.'

'எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?'

'டியூடிக்குப் போகிறேன்.' அலட்சியமாய் பதிலளித் தான் அவன். அவனுக்குப் போலீஸ்காரர்களிடம் பயமே கிடையாது. கூட்டம் மட்டும் அங்கில்லாமலிருந்தால் அவன் வண்டியை நிறுத்தியிருக்கமாட்டான். பாட்டு பாடிக்கொண்டே மாட்டைத் தட்டிவிட்டிருப்பான். இம் ரதிபாய் வெளியே வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி, அந்த வழியேபோகும் போதெல்லாம் ஒரு முறை கட்டா யம் பாடாமலிருக்க மாட்டான்.

'ஏய் வம்சி, டியூடியைக் கான்சல் செய். மயானத்திற் குப் போகவேண்டும்.'

'யார் செத்துவிட்டார்கள்?' சவுக்கு போன்ற தனது தடியை வண்டியில் வைத்தவாறே கேட்டான் வம்சி.

'இம்ரதிபாய்' என்றது கூட்டத்தில் ஒரு குரல்.

'என்னது?' அவனுக்கு நம்பிக்கையே ஏற்படவில்லை. மீண்டும் கேட்டான்: 'என்ன சொன்னீர்கள்?'

'பிணத்தை இங்கிருந்து சீக்கிரம் எடுத்தாகவேண்டும், புரிந்ததா? நான் ஸ்டேஷனுக்குப் போகிறேன். ரிப் போர்ட் கொடுக்கவேண்டும்.' போலீஸ்காரன் அவன் தோளில் தட்டிக் கொடுத்தான். பின்னர் தனது ஜேபி லிருந்து அழுக்கடைந்த குறிப்புப் புத்தக மொன்றை எடுத்து, பென்சிலால் ஏதோ எழுதியவாறே நடந்தான்.

வம்சி வண்டியைப் பாதையின் ஓரமாக நிறுத்தினான். 'பார்த்துவிட்டு வரட்டுமா?' எனக் கூறியவாறே உள்ளே நுழைந்துவிட்டான். கூடி நின்றவர்களில் எவரும் இது வரை உள்ளே போகவில்லை. வம்சி நுழைந்ததும் இன் னும் இரண்டொருவர் அவனைத் தொடர்ந்தனர்.

பிணம் கட்டிலின்மீது கிடத்தப்பட்டிருந்தது. யாரும் அதை ஒரு போர்வையால் கூட மூடவில்லை.

வம்சி இன்றுதான் முதன் முதலாக இந்த அறைக்குள் நுழைகிறன். நுழைந்ததுமே இலேசான வருத்தம் உண் டாயிற்று.

இம்ரதியை அவன் எத்தனையோ முறை பார்த்திருக் கிறன். பார்க்கும்பொழுதெல்லாம் என்றாவது ஒருநாள் இங்கு வரவேண்டும் என்று அவன் மனக்கோட்டை கட்டியதுண்டு. ஹூம், ரோஜா மலர் போன்ற சிவந்த இந்த உடல் இத்தனை சீரழிவுகளுக்குப் பின்னும் எப்படிக் கட்டுத் தளராமலிருக்கிறது?

ஆனால் நடந்தது என்ன? அவனால் இங்கு ஒருநாள் கூட வரமுடியவில்லை. அதற்கு வேண்டிய பணம் சேர வில்லை. இம்ரதிக்கு வாடிக்கைக்காரர்கள் அதிகம் பேர் இல்லாவிட்டாலும் அவளது 'ரேட்' அதிகம். அதிலிருந்து

கீழே இறங்கவேமாட்டாள். அப்படியே இறங்கி வந்தாலும் அவனை எதற்காக விரும்பப் போகிருள்? தனது தோற்றத்தையும் வடிவத்தையும் பற்றி அவனுக்கு நன்ருகத் தெரியும். தான் அழகற்றவன் என்பதும் அறிந்த விஷயம்தான். மேலும், குள்ளமாயிருந்ததால் பிறருடைய இரக்கத்திற்கும் கேலிக்கும் பாத்திரமாக இருக்கிருன். தன்னைப் பிறர் கேலி செய்யும்போதும் பரிதாபப் படும்போதும் கோபத்தை அடக்கிக்கொண்டு மேலே நடந்து விடுவான்.

டியூடி முடிந்தபின் மாலை வேலைகளில் வெள்ளைச் சட்டையும் மல் வேட்டியும் அணிந்து கொண்டு தியேட்டர் வரை உலாவச் செல்வதுண்டு. சினிமா மெட்டுகளைப் புல்லாங்குழலில் வாசித்து இளம் வட்டங்களை ஜமா சேர்த்து விடுவான். குழலின் காரணமாகவே அவனுக்கென்று ஒரு மேடையும், குழாமும் இருந்தன.

இம்ரதியின் முகம் விகாரமடைந்திருந்தது. உதடுகள் லேசாகத் திறந்திருந்தன. மார்புத்துணி விலகியிருந்தது. தொடை வரையில் திறந்து கிடந்தது. இம்ரதியின் இந் நிலையைக் கண்டதும் அவனுக்குக் கொஞ்சம் வருத்தமாகவே இருந்தது. இனியும் தாமதப்பதற்கில்லை என நினைத்தவாறே முன்னே சென்று துணியால் சவத்தின் உடலை மூடினுன்.

'கட்டிலை வெளியே எடுத்து வரவேண்டிய அவசியமில்லை' எனத் தனக்குள் கூறிக் கொண்டான். சவத்தின் கால் பக்கத்தைப் பிடித்துக் கொண்டு 'கொஞ்சம் உதவி செய்கிறீர்களா?' எனக் கேட்டதும் ஒருவன் கழுத்துப் பக்கமும் இன்னெருவன் முதுகின் அடியிலும் கை கொடுத்து உதவினர். சவத்தை வெளியே கொண்டு வந்தாகி விட்டது.

'சற்றுப் பொறுங்கள்' என்ருன் அவன் அவசரமாக. 'கொஞ்சம் வண்டியைக் கழுவி விடுகிறேன்.' பிணத்தைச்

சுமந்து சென்று அவனுக்குப் பழக்கமில்லை. இருந்தாலும் இன்றுதான் முதல் தடவையாக சடலத்தை இப்படிக் குப்பை வண்டியில் போட்டு எடுத்துச் செல்லக் கூடா தென்று அவனுக்குத் தோன்றியது.

எருமைகளின் முதுகில் கம்பை வைத்து விட்டு அவன் வண்டியை அவிழ்த்து குழாயடிக்கு இழுத்துச் சென்றான். குழாயைத் திறந்து விட்டதும் மிகுந்த உற்சாகத்துடன் வண்டியின் அழுக்கைத் தேய்த்துத் தேய்த்துக் கழுவலானான். தண்ணீரை இரு கரங்களிலும் ஏந்தி வண்டியின் உள்ளேயும் வெளியேயும் வீசி வீசி அடித்தான். பிறகு அழுக்குத் துணியொன்றை எடுத்து அழுத்தித் துடைத்தான். பிறகு ஒரே தாவலில் எருமையின் முதுகில் அமர்ந்து கொண்டவன், சுத்தமாகிவிட்ட தனது வண்டியைச் சற்றே மகிழ்ச்சியுடன் நோக்கினான். 'ஹூம். இன்னும் கொஞ்சம் தேய்த்து அலம்பவேண்டும்' என்று தனக்குள் கூறியவாறே இறங்கிவந்து மீண்டும் வண்டியைக் கழுவுவதில் ஈடுபட்டான்.

சவத்தினருகே 10, 15 பேர் நின்றனர்.

கடகடவென வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தான்.

'கொஞ்சம் நகருங்கள். எங்கே, சற்றுத் தள்ளுங்கள் பார்க்கலாம்.' லேசாக மூச்சு வாங்க அவன் வண்டியிலிருந்து இறங்கி வந்தான். மீண்டும் ஒருமுறை தன்னைச் சமாளித்துக்கொண்டு குரல் கொடுத்தான். 'சற்றே உதவி செய்கிறீர்களா? பிணத்தைத் தூக்கலாமா?'

ஒரு சிலர் முன்வந்தனர். முன்னைப் போலவே பிணம் தூக்கப்பட்டது.

'ஜாக்கிரதை, ஜாக்கிரதை.'

அவன் வண்டியில் ஏறிக்கொண்டான். பிணத்தைக் கிடத்த இடம் சரிசெய்ய வேண்டுமே. நீளவாக்கில் படுக்கவைக்க இடம் போதவில்லை. ஒருபுறம் கவலையும் மறுபுறம் நகரசபையின்மீது கோபமுமாய் வந்தது.

இத்தனை சிறிய வண்டி. ஒரு குழந்தையின் சவத்தைக் கூடக் கிடத்த முடியாது.

'இப்படியில்லை... இப்படி... இப்படி.'

இருவர் உதவியுடன் ஒருவாறு சவத்தை வண்டியில் கிடத்தியாயிற்று. தோளிலிருந்த துண்டை எடுத்துச் சுருட்டித் தலைமாட்டுப்பக்கம் வைத்து, தலையைச் சற்று உயர்த்தியபின்தான் சற்று நிம்மதியாக இருந்தது அவனுக்கு.

வண்டியில் ஏறி நின்றான் வம்சி. கூட நின்றவர்களின் மீது பார்வையை ஓடவிட்டான். அக்கணத்தில் அவர்கள் எல்லோரையும்விடத் தான் உயர்ந்தவன் என்று தோன்றியது அவனுக்கு. அங்கிருந்தவர்கள் ஏதும் கூறும் முன்னரே அவன் வண்டியைச் செலுத்த வாரம்பித்து விட்டான்.

சற்று தூரம் சென்றதும் மெல்லத் திரும்பிப்பார்த்தான். கூட்டம் கலைந்து கொண்டிருந்தது. யாரோ ஒருவன் இம்ரதியின் வீட்டுக் கதவைத் தாழிட்டுக் கொண்டிருந்தான். வண்டியை விரைந்து செலுத்தியவன் தெரு முனைக்கு வந்ததும் நிறுத்தினான். வண்டியிலிருந்து இறங்கினான். வந்து பார்த்தான், எல்லாம் சரியாக இருக்கிறதா? சவம் அறை குறையாய்த்தான் கிடத்தப் பட்டிருந்தது. எடுப்பதிலும் வைப்பதிலும் ஏற்பட்ட அமர்க்களத்தில் துணி நிலை குலைந்து நழுவி, உடல் கிட்டத் தட்ட நிர்வாணமாகி விட்டிருந்து. ஒரு முறை அவன் பார்வை அவ்வுடலின் மீது பதிந்தது. மறுகணம் அவனுக்கு வெட்கமாகப் போய்விட்டது. அவசர அவசரமாக அவன் உடலைத் துணியினால் மூடினான். பின்னர் வெற்றிலைபாக்குக் கடையை நோக்கி நடந்தான்.

அவனது ஜேபியில் 7 ரூபாய்கள் இருந்தன. சம்பளத்திலிருந்து மீதப்படுத்திய பணம் அது. இந்தப் பணத்திற்கு என்னவெல்லாம் வாங்கவேண்டுமென்று பட்டியல்

கடந்த சில நாட்களாகவே அவன் உள்ளத்தில் தயாராகியிருந்தது. பணத்தை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டவன், கடைக்காரனிடம் சென்று கேட்டான்... 'இந்த ரூபாய்களுக்குச் சில்லரை கொடு.'

கடைக்காரன் அவனை நோக்கி முறுவலித்தான். 'இத்தனைக்குச் சில்லரை யில்லையே.'

இதைக் கேட்டும் கேளாதவன் போல் வம்சி மீண்டும் கூறினான் 'கொஞ்சம் சீக்கிரம் கொடுங்கள், நேரமாகிறது.'

வெற்றிலை பாக்குக் கடைக்காரன் ஒரு துணிப் பையிலிருந்து குவியலாய் சில்லரையை எடுத்து எண்ணிக் கொண்டிருப்பதை அவன் கவனிக்கத் தவறவில்லை.

சில்லரைகள் நிறைந்த பை கைக்கு வந்ததும் அவனது உற்சாகம் அதிகரித்து விட்டது. ஒரே தாவலில் வண்டியில் ஏறி அமர்ந்தான்.

வண்டியோட்டும் போதே வெற்றிலை பாக்குக் கடைக்காரனும் இன்னும் சிலரும் தன்னைப் பார்த்துச் சிரிப்பதை அவன் கண்டான். வெற்றிலை பாக்குக் கடைக்காரனோ கத்தைக் காம்பை ஆட்டி ஆட்டி ஏதோ அசிங்கமாக ஜாடை காட்டினான்.

வம்சி மனதிற்குள்ளாகவே அவனைத் திட்டி நொறுக்கினான். எருமையின் முதுகில் ஓங்கி ஒரு அடி விழுந்தது.

அப்பேட்டையை விட்டு வெளியே வந்ததும்தான் சற்று நிம்மதியாக இருந்தது. நல்ல வெயில். இத்தனை பாடுபட்டதால் வியர்த்துக் கொட்டியது. நடைபாதையில் மக்கள் வந்துபோய்க் கொண்டிருந்தனர். கடைகளெல்லாம் முக்கால்வாசி திறந்துவிட்டன.

சவம் எந்த நிலையில் இருக்கிறது என அவன் ஒருமுறை திரும்பிப் பார்த்தான். எல்லாம் சரியாகத் தானிருந்தது. தலைப் பக்கம் மட்டும் சற்று சரிந்து வந்திருந்தது. வண்டியை நிறுத்திவிட்டு அவன் கீழே இறங்கி வந்தான். தலையைத் தூக்கிச் சரியாக வைத்தான்.

இப்படியும் அப்படியும் நகர்த்துகையில் சவம் சற்றே அசைந்ததும் அவன் நடுநடுங்கிப் போய்விட்டான். உயிருள்ள உடலைத் தீண்டிவிட்டோம் என்ற நினைப்பில் உடலெங்கும் ஓர் சிலிப்பு. நாடி வேகமாய்த் துடித்ததும், மெல்ல மீண்டும் தன்னிடத்தில் வந்தமர்ந்து கொண்டவன் 'ஒரு நல்ல புடவையை மட்டும் அணிவித்திருந்தால் எவ்வளவு நன்ருய் இருந்திருக்கும்' என நினைத்தான்.

அவள் வண்ண வண்ணமான அழகிய புடவைகளை அணிந்து கதவருகே நிற்பதை அவன் பலமுறை கண்டதுண்டு. அவள் ராணி ரூபமதி. அவளைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவள் யாருக்காகவோ காத்திருப்பதாக அவனுக்குத் தோன்றும். அத்தெருவில் நுழையும்போதே நெஞ்சு படபடக்கும். அவள் வீட்டு வாசலைக் கடந்து செல்லும்போதோ இன்னும் வேகமாய் அடித்துக்கொள்ளும். அவன் எத்தனையோ விரும்பியும் முயன்றும்கூட அவளுடைய விழிகளை அவனால் சந்திக்க முடியவில்லை. வெட்கத்துடன் தலையைக் கவிழ்ந்துகொண்டு மேலே கடந்து சென்றுவிடுவான். வெகு தூரம் வந்தபின் திரும்பிப் பார்ப்பான். அவள் அங்கேயே நின்றுகொண்டிருப்பாள். ராணி ரூபமதி அவள்.

அவன் இப்படி அங்கே நிற்பதற்கும் தான் அவ்வழியே செல்லுவதற்கும் தானாகவே ஓர் உறவைக் கற்பித்துக் கொண்டிருந்தான் அவன். ஒரு நாளில்லாவிட்டால் ஒருநாள் அவன் அவளிடம் போகத்தான் போகிருன். கட்டாயம் போவான்.

மடியில் பை இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டான் வம்சி. அன்புடன் விரல்கள் அதை வருடின. பிறகு ஒரு கை நிறைய சில்லரைக் காசுகளை எடுத்தான் வம்சி. சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு வானத்தை நோக்கி வீசினன். ஓர் கணம் கணகணவென்ற ஓசையுடன் பாதையில் சிதறி ஓடிய காசுகளின் சத்தத்தைக் கேட்டதும்

கடைகளில் அமர்ந்திருந்தவர்கள், நடைபாதையில் சென்றவர்கள், திகைத்தனர். சின்னஞ்சிறு பையன்கள், சிறுவர்கள், பிச்சைக்காரர்களின் கூட்டம் அதன் மீது பாய்ந்தது. வம்சி வண்டியை நிறுத்திவிட்டு காசுகளைப் பொறுக்க வந்த கூட்டத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். பாதையெங்கும் இறைந்து கிடந்த காசுகள் சுத்தமாகப் பொறுக்கப்பட்ட பின் அவன் மீண்டும் பைக்குள் கையைவிட்டு கை நிறைய காசுகளை எடுத்து வானத்தை நோக்கி வீசியவாறே தழு தழுத்த குரலில் கூறினான்... 'ராம் நாம் சத் ஹை... சப் கி ஹி கத் ஹை...' (ராம நாமம் தான் சத்தியம்: யாவரின் முடிவும் இதுதான்.)

காசுகளைப் பாய்ந்து பாய்ந்து பொறுக்கிய கூட்டம் யந்திரம் போல் இதையே மீண்டும் மீண்டும் கூறியது.

அவன் உற்சாகத்துடன் வண்டியை ஓட்டினான். மாடுகளின் முதுகில் படபட வென்று நாலைந்து அடிகள் விழுந்ததும் அவை விரைந்தன, வண்டி ஓடியது. அதன் பின்னால் சில்லரை பொறுக்க ஓடிய கூட்டமும் ஓடியது.

அடுத்த திருப்பத்தில் தெரு முனையில், விரைந்தோடிய வண்டி திடீரென நின்றது.

'ராம் நாம் சத் ஹை' என்ற முழக்கம் பேரொலியாக ஒலித்தது.

இப்பொழுது வண்டிக்கு முன்னேயும் பின்னேயும் நல்ல கூட்டம். சிலர் வண்டியைப் பிடித்துக்கொண்டு நடந்தனர். திடீரென வண்டியே பாடையாக மாறி விட்டிருந்தது.

அவனருகே வண்டியோடு நடந்து கொண்டிருந்த பிச்சைக்காரனொருவன், ராம நாமத்தின் பெரு முழக்கத்தினிடையே முணுமுணுத்தான். 'சேட்ஜி, வாத்தியம் ஏதாவது ஏற்பாடு செய்யட்டுமா?'

உள்ளத்தின் வேதனையில் வம்சியின் விழிகள் லேசாக

மூடியிருந்தன. தனது யோசனையை மீண்டும் கூறினான். 'அழைத்து வரட்டுமா, சேட்ஜி.'

'ஊம் அழைத்து வா.' இம்முறை கை நிறைய காசுகளை எடுத்து வீசினான் அவன். பொங்கி வரும் நீர் பெருக்கம் அடித்துப் பிரட்டிக்கொண்டு ஓடுவது போல் கூட்டம் அந்தப் பக்கம் பாய்ந்தோடியது.

இதற்குள் இன்னொரு பிச்சைக்காரன் எங்கிருந்தோ மலர்களையும் மாலைகளையும் நிறைய எடுத்துக்கொண்டு வந்துவிட்டான். வண்டி நின்றது. வம்சி கீழே இறங்கி வந்தான். மலர்கள், மாலைகள் யாவற்றையும் இம்ரதியின் சடலத்தின் மீது அழகாகத் தூவினான்.

'யார் இது?' நடைபாதையில் நின்றவர்கள் தங்களுக்குள் கேட்டுக் கொண்டது காதில் வீழ்ந்தது.

'இம்ரதிபாய்.' மாலையை அணிவித்த சந்தோஷத்தில் அவன் கரம் நடுங்கியது.

'யாரது இம்ரதிபாய்?'

'அவள் ஒரு வேசி.'

கோபத்துடன் அவன் நிமிர்ந்து பார்த்தான். 'ஆமாம், புகழ்பெற்ற வேசி.' அவன் கர்வத்துடன் அவர்களை நோக்கினான்.

இதற்குள் வாத்தியங்கள் வந்து விட்டன.

'வாசிக்கலாமா சேட்ஜீ.'

'ஊம்! வாசியுங்கள்.'

ஒரு துள்ளலுடன் தாவி வண்டியில் ஏறினான் அவன். வாத்தியங்கள் முழங்கலாயின. வாத்தியங்களின் இசை கேட்டதும் கூட்டம் இன்னும் அதிகம் சேரலாயிற்று. வம்சி காசுகளைக் கையிலெடுத்துத் தெருவிலே இறைத்தான். வீசினான்.

'ராம் நாம் சத் ஹை.'

'சப் கி யஹி கத் ஹை.'

கூட்டம் அதிகமாகிவிட்டதைக் கண்டதும் வம்சி திகைத்தான். இதை எப்படியும் சமாளித்து விடலாம் என்ற நம்பிக்கை என்னவோ அவனுக்கிருந்தது. ஒரு கணம் இந்தச் சவ ஊர்வலத்தை இப்படியே அழைத்துக் கொண்டுபோய் இம்ரதியின் வீட்டு வாசலில் எல்லோரும் காணக் கொண்டுபோய் நிறுத்தினலென்ன? எனத் தொன்றியது. ஆனால் தனது மனவெழுச்சியை அடக்கிக்கொண்டு அவன் வண்டியின் வேகத்தைத் துரிதப் படுத்தினன். வெயில் அதிகரித்துக்கொண்டே போகிறது. காரியத்தைச் சரசர வென்று முடித்துவிட வேண்டும். காரியத்தை மட மட வென்று செய்ய வேண்டும்··· என்ற நினைப்பே அவனுக்குக் கொஞ்சம் வருத்தமாகவும் இருந்தது. 'இப்படியே போய்க்கொண்டிருந்தால் என்ன?'

வம்சி நிமிர்ந்து பார்த்தான். மாடியிலும் வராந்தாவிலும் இளைஞர்கள், கிழவிகள், பெண்கள் என யாவருமே வந்து நின்று பார்த்தனர். கூட்டத்தையும், வாத்தியங்களின் முழக்கத்தையும் விட அவர்களின் கவனத்தை அதிகமாகக் கவர்ந்தவன் அவன் தான். அவனோ சற்றும் கலங்கவில்லை. நிமிர்ந்து. துணிவோடு நின்ருன், பார்த்தான். அவர்கள் பேசுவதைக் கேட்கவும் விரும்பினன்.

வாத்தியங்கள் எழுப்பிய ஓசைகளிடையே இரண்டொரு வார்த்தைகள் அவன் காதில் விழுந்தன.

'அட, இது தோட்டி வம்சிலால் அல்லவா?'

'தோட்டி!'

இந்தச் சொற்களைக் கேட்டதுமே அவனது உற்சாகம், தெம்பு, யாவும் மாயமாய் மறைந்து விட்டது. மாடிகளிலும் வீட்டின் முகப்பிலும், வாயிலிலும் கூடி நின்ற ஆண்களையும், பெண்களையும், குழந்தைகளையும் அவன் கடுங் கோபத்துடன் நோக்கினன்.

தன்னைத் 'தோட்டி' எனக் குறிப்பிடுவது அவனுக்குப் பிடிக்கவே பிடிக்காது. அவனல் அதைச் சகித்துக்

கொள்ளவே முடியாது. அவன், மற்றவர்களிடமும், தன் இனத்து இளம் வாலிபர்களிடமும் 'உங்களை யாரேனும் தோட்டி என்றழைத்தால், அசுத்தத்தை, குப்பை கூளங்களை அகற்றுதீர்கள்' என எச்சரித்து வைத்திருந்தான்.

இப்பொழுதும் தன்னை, 'தோட்டி' எனக் குறிப்பிட்டதும் அவனுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. தன்னருகே நடந்து வந்து கொண்டிருந்த பிச்சைக்காரனிடம் 'இன்னும் கொஞ்சம் உரக்க வாசிக்கச் சொல்லடா' என எரிந்து விழுந்தான்.

தடவிப் பார்த்தான், பையில் இன்னும் கொஞ்சம்தான் சில்லரை இருந்தது. இனி சற்று ஜாக்கிரதையாகச் செலவழிக்கவேண்டும். இம் முறை காசுகளை வீசுவதற்குப் பதிலாக தனது வண்டியின் தகரத்தின் மீதேறி நின்று கொண்டான்.

'ராம் நாம் சத் ஹை'
'சப் கி யஹி கத் ஹை'

ஊருக்கு வெளியே ஆறு. ஆற்றின் மறு கரையில் மயானம். இங்கிருந்தே ஆற்றுப் பாலம் தெரிந்தது.

ஒரு சில காசுகளை எடுத்து, தனது முழு வேகத்தையும் பிரயோகித்து, வெகு தூரம் சென்று விழட்டும் என வீசினான் அவன். திகைப்புற்ற கூட்டம் சின்னபின்னமாகக் கலைந்து ஓடியதைக் கண்டு அவன் மகிழ்ச்சியடைந்தான்.

பாலத்தை அடைந்ததும் அவன் வண்டியை நிறுத்தினான். எஞ்சியிருந்த சில்லரையுடன் அந்தப் பையைப் பிச்சைக்காரனின் கையிலே வைத்து 'இனி திரும்பிப் போ' என்றான் வம்சி.

வாத்தியங்களின் முழக்கம் ஓய்ந்து விட்டது. சிறுவர்கள், பிச்சைக்காரர்களின் கும்பல் திரும்பலாயிற்று. இரண்டொரு வழிப்போக்கர்கள்தான் இப்பொழுது அங்கிருந்தனர்.

அவர்களில் ஒருவன் கூறியது காதில் வீழ்ந்தது. 'நான் சொல்வதைக் கேள்...அது அசைந்தது. நான் பார்த்தேன்.'

'எது? எது அசைந்தது?' அவன் அவர்கள் நின்ற திசையில் பார்த்தான்.

'நீ கொண்டு வந்திருக்கும் பிணம்.'

'உண்மையாகவே அசைந்ததா?' பிணங்கள் உயிர் பெற்றெழுந்தது பற்றிய கதைகளை அவன் கேட்டிருக்கிருன். சில சமயம் சிதையிலிருந்தே பிணங்கள் எழுந்து உட்கார்ந்துவிடும் என்றுகூடக் காதில் விழுந்திருக்கிறது. செத்த பிணங்களுக்கு மீண்டும் உயிர் வந்து விடுகிறதாம். இது எப்படி ஏற்படுகிறதோ தெரியவில்லை. ஆனுல் டாக்டர்கள்கூட, பிணத்தைப் புதைப்பதற்கோ எரிப்பதற்கோ முன்னுல் ஒரு முறை நன்ருகப் பரிட்சை செய்து பார்த்துவிட வேண்டுமென்றுதான் கூறுகிருர்கள்.

ஒரே ஓட்டமாய்ப் போய் குனிந்து பார்த்தான். சடலம் சற்று நழுவி நகர்ந்து விட்டிருந்ததென்னவோ உண்மை. மகிழ்ச்சியிலுைம், அவநம்பிக்கையிலுைம் அவன் கரங்கள் நடுங்கின. போர்வைக்குள்ளிருந்து கையை வெளியே எடுத்து, நாடியின் மீது விரல்களைப் பதித்தான். ஏதோ துடிப்பது போல்தானிருந்தது. ரொம்ப வேகமான துடிப்பு. ஆனுல் உடல் சில்லிட்டுக் கிடந்தது. நாசியருகே கை வைத்துப் பார்த்தான். மூச்சின் அறிகுறியே இல்லை. 'அப்படியென்ருல் இந்தத் துடிப்பு?'

தன் நெஞ்சிலே கையை வைத்துப பார்த்தான். இதய நோய் உள்ள நோயாளிபோல் நெஞ்சு படபடடென்று அடித்துக் கொண்டது. ஆம், பலமாக அடித்துக்கொண்டது. வம்சி மீண்டும் வண்டியில் ஏறிக்கொண்டான். வண்டி பாலத்தின் மீது ஓடியது.

பாலத்தின் இரு மருங்கும் நீர் பரப்பு. கரையோரத்தில் மணல் திட்டுகள். வெயில் அதில் பட்டுப் பளபளத்தது.

இப்பொழுது கூட்டமில்லை. வாத்திய இசை இல்லை. அவன் மட்டும் தானிருக்கிறுன். தன்னந்தனியாக. எங்கும் யாரும் இல்லை. வண்டியின் சக்கரம் கடகடவென உருண்டு வரும் ஓசையைத் தவிர வேறு எந்த அரவமும் இல்லை.

பாலத்தைக் கடந்ததும் அவன் சரிவிலே வண்டியை இறக்கி மயானத்திற்குள் நுழைந்தான். உள்ளே நுழைந்ததுமே திக்கென்றது. ஆள் அரவமேயில்லை.

ஓர் ஓரமாகப் பிணமொன்று எரிந்துகொண்டிருந்தது. அதன் துர்க்கந்தத்தின் வாடை நாசியில் நெடியாக ஏறியது.

வண்டியை நேராக மயானத்துக் காவற்காரனின் வீட்டு முன்னே கொண்டுபோய் நிறுத்தினுன் வம்சி. அதுவும் மெதுவாக, ஜாக்கிரதையாக...

'யாரது?'... காவற்காரன் தன் ரெஜிஸ்டர் புத்தகத்தை எடுத்துப் பிரித்தவாறே கேட்டான்...'எரிக்கவேண்டுமா?'

'இல்லை. புதைக்கவேண்டும்.'

'பெயர்?'

'இம்ரதிபாய்'

'வயது?'

தயங்காமல் பதில் வந்தது... '32.'

'கணவனின் பெயர்?' காவற்காரனின் விழிகள் கேள்வியின் கூடவே உயர்ந்தன.

கண நேரத் தயக்கம். யாரேனும் கேட்டுக்கொண்டிருக்கிறுர்களோ என்று சுற்றும் முற்றும் ஒரு பார்வை.

'வம்சிலால்...' கையை நீட்டிக் கையெப்பமிட்டான்.

வெளியே வந்து மெதுவாகச் சடலத்தை மெல்ல இறக்கி வைத்தான். போர்வையால் நன்ருக மூடினுன். பிறகு மண்வெட்டியை எடுத்துப் பள்ளம் தோண்டவாரம்பித்தான்.

## பகலுணவு

சமையல் முடிந்து விட்டது, சித்தேஸ்வரி அடுப்பை இழுத்து அணைத்தாள். உட்கார்ந்தபடியே இரு முழந் தாள்களுக்கிடையே மோவாயைப் பதித்தவண்ணம், கால் விரல்களை...சாரி சாரியாய்த் தரையில் ஊர்ந்து செல்லும் எறும்புகளைப் பார்க்கலானுள். தனக்குத் தாக மெடுத்து வெகு நேரமாயிற்று என்பது திடீரென நினைவு வரவே ஆவேசம் கொண்டவளைப் போல எழுந்து குடத் திலிருந்த நீரைத் தம்பளரில் சரித்து மடக் மடக் கென்று குடித்தாள். வெறும் தண்ணீர் நெஞ்சிலே இறங்கும் போது, அம்மாடி என்றிருந்தது...ராமா...என்று கூறிக் கொண்டு முந்தானையை விரித்துத் தரையில் அப்படியே படுத்துக் கொண்டாள்.

கிட்டத்தட்ட அரைமணி நேரம் அப்படிப் படுத்துக் கிடந்த பின்தான் அவளுக்குச் சற்றே தெம்பு வந்தால் போலிருந்தது. எழுந்து உட்கார்ந்தாள். கண்களைத் தேய்த்து விட்டுக்கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தாள். பாதிக்கும்மேல் உடைந்து போயிருந்த பழைய சிறிய கட்டிலில் படுத்திருக்கும் தனது ஆறு வயது மகன் பிர மோதின் பால் அவளது பார்வை திரும்பியது. உடலில் ஆடைகளின்றி சிறுவன் அம்மணமாகப் படுத்திருந்தான். துருத்திக் கொண்டுநின்ற அவனது நெஞ்சு, மார்பின் எலும்புகள் தெளிவாகத் தெரிந்தன. அவனது கையும் காலும் வாடிப்போன வெள்ளிரிப் பிஞ்சுபோல், உயி ரற்று, சத்தான பிடிப்பற்று, குச்சி குச்சியாய்க் கிடந்தன. வயிறு மட்டும் பானைபோல் உப்பியிருந்தது. வாய் மூடா மல் திறந்திருந்தது. கணக்கற்ற ஈக்கள் அவனை மொய்த் துக் கொண்டிருந்தன.

அவள் எழுந்தாள், தனது அழுக்கடைந்த பழைய

ரவிக்கையொன்றை எடுத்துக் குழந்தையின் முகத்தை மூடி விட்டு இரண்டொரு நிமிடங்கள் மௌனமாய் நின்றாள். பின்னர் வெளிக் கதவினருகே வந்து கதவின் பின்னால் நின்று தெருவை எட்டிப்பார்த்தாள்.

மணி பன்னிரண்டு அடித்துவிட்டது. வெயில் கடுமையாகக் காய்ந்து கொண்டிருந்தது. இரண்டொருவர் தலையில் துணியோ, துண்டோ, போட்டுக்கொண்டோ, குடையை இறுகப் பிடித்துக்கொண்டோ தெருவில் அவசர அவசரமாக நடந்து சென்றனர்.

பத்துப் பதினைந்து நிமிடம் அவள் அங்கேயே நின்றாள். பின்னர் அவள் முகத்தில் கவலைக்குறி படர்ந்தது. வியாகூலத்துடன் வானத்தையும், கொளுத்தும் வெயிலையும் பார்த்தாள். இரண்டொரு நிமிடங்கள் கழிந்தன. கதவிற்கு வெளியே தலையை நீட்டி, தெருக்கோடி வரை பார்த்தாள். தூரத்தில் பெரிய பிள்ளை ராமச்சந்திரன் மெல்ல மெல்ல நடந்து வந்து கொண்டிருந்தான்.

விரைந்து உள்ளே வந்த அவள் ஒரு டம்பளரில் தண்ணீரை எடுத்து, தாழ்வாரத்துப் பெஞ்சியின் கீழே வைத்தாள். பின்னர் சமையலறைக்கு வந்து சாப்பிடும் இடத்தை நீர் தெளித்துத் துடைத்தாள். பலகையை எடுத்துப் போட்டுவிட்டு நிமிர்ந்து வாயிற்பக்கம் பார்க்கவும் ராமச்சந்திரன் உள்ளே வரவும் சரியாக இருந்தது.

வந்தவன் 'தொப்' பென்று பெஞ்சியின்மீது உட்கார்ந்தான். பின்னர் அப்படியே படுத்துவிட்டான். அவன் முகம் சிவந்து வாடி இருந்தது. உற்சாகமேயில்லை. கேசம் தாறுமாருய்க் கலைந்து கிடந்தது. பழைய அறுந்த செருப்பில் ஒரு வண்டிப் புழுதி மண்டிக் கிடந்தது.

அவனருகே வர முதலில் சித்தேஸ்வரிக்குத் துணிவு ஏற்படவில்லை. தான் நின்றிருந்த இடத்திலிருந்தே மிரண்ட மான்போல் அடிக்கடி தலையைத் தூக்கி, பிள்ளை படும் சிரமத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால்

பத்து நிமிடங்கள் கழிந்த பின்னும் அவன் எழுந்திருக்காததும் அவள் பயந்துவிட்டாள். அருகில் வந்து......
—ஏய்... பட்சூ... பட்சூ... என மெல்ல அழைத்தாள். பதில் வராதது கண்டு இன்னும் பயந்தவளாய் அவனது நாசியினருகே விரலை வைத்துப் பார்த்தாள். மூச்சு சரியாகத்தான் வந்து கொண்டிருந்தது. நெற்றியின் மீது கையை வைத்தாள். காய்ச்சலில்லை. கை பட்டதுமே ராமச்சந்திரனின் விழிகள் மலர்ந்தன. அவனது கண்கள் அருகே நின்ற அம்மாவை உற்சாகமின்றி நோக்கின. பிறகு சட்டென எழுந்து உட்கார்ந்து கொண்டான் அவன். செருப்பைக் கழற்றியது, சொம்பு ஜலத்தை எடுத்துக் கை கால் கழுவிக்கொண்டது, எல்லாமே யந்திர கதியில் நடந்தன. ராமச்சந்திரன் மீண்டும் பெஞ்சியில் வந்தமர்ந்து கொண்டான்.

சித்தேஸ்வரி பயந்து கொண்டே கேட்டாள் — 'சாப்பாடு தயாராக இருக்கிறது. இங்கேயே கொண்டு வரட்டுமா?'

ராமச்சந்திரன் பெஞ்சியிலிருந்து எழுந்தவாறே கேட்டான்—'அப்பா சாப்பிட்டாச்சா?'

சமையற்கட்டை நோக்கி விரைந்த சித்தேஸ்வரி— 'வருகிற நேரம்தான்' என்றாள்.

ராமச்சந்திரன் பலகையின் மீது வந்து உட்கார்ந்தான். சுமார் இருபது, இருபத்தோரு வயதிருக்கும் அவனுக்கு. நல்ல உயரம். மெலிந்த உடல். வெளுப்பான நல்ல நிறமும்கூட அகன்ற பெரிய விழிகள். உதட்டிலே சுருக்கங்கள். உள்ளூர் தினசரிப் பத்திரிகைக் காரியாலயமொன்றில் புரூப் பார்க்கும் வேலை பழகிக் கொண்டிருந்தான். சென்ற வருடம்தான் அவன் இன்டர் பாஸ் செய்திருந்தான்.

சித்தேஸ்வரி பறிமாறிய தட்டைக் கொணர்ந்து எதிரே வைத்துவிட்டு அருகில் அமர்ந்து விசிறலானாள். பறிமாறி

யிருந்த தட்டை ஒரு வேதாந்தியைப் போன்ற பற்றற்ற நோக்குடன் பார்த்தான் அவன். இரண்டே ரொட்டிகள். ஒரு கிண்ணத்தில் கரைந்த பருப்பு, தாளித்த கொண்டைக் கடலைச் சுண்டல்.

ரொட்டியை முறித்து வாயில் போட்டுக் கொண்ட ராமச்சந்திரன் அதை விழுங்கியவாறே — 'மோகன் எங்கே? வெளியே வெயில் ரொம்பக் கொளுத்துகிறது—' என்றான்.

மோகன் சித்தேஸ்வரியின் இரண்டாவது பிள்ளை, பதினெட்டு வயதாகிறது. இந்த வருடம் உயர் நிலைப் பள்ளிப் பரிட்சைக்குத் தனிப்பட்ட முறையில் உட்காரப் படித்துக் கொண்டிருந்தான். அவன் எங்கே போனான். வீட்டைவிட்டு எப்பொழுது போனான் என்றே சித்தேஸ்வரிக்குத் தெரியாது.

ஆனாலும் உண்மையைக் கூற மனமில்லாதவளாய்— 'யாரோ பையனுடைய வீட்டிற்குப் படிக்கப் போயிருக்கிறான். இதோ வந்து விடுவான். அவனுக்கு நல்ல மூளை. புத்திசாலித் தனத்தை என்ன சொல்லுவது? போ! இருபத்தி நாலுமணி நேரமும் படிப்பு, படிப்புதான். எப்போது பார்த்தாலும் படிப்பைப்பற்றிய பேச்சுதான்' என்றாள் சித்தேஸ்வரி.

ராமச்சந்திரன் பதிலேதும் கூறவில்லை. ஒரு துண்டை வாயில் போட்டுக்கொண்டு டம்பளர் தண்ணீரைக் குடித்துத் தீர்த்தான். பிறகு மீண்டும் சாப்பிட வாரம்பித்தான். ரொட்டியை எத்தனை சிறிய சிறிய துண்டுகளாக்க முடியுமோ அத்தனை துண்டுகளாக்கி ஒவ்வொன்றாய் வாயில் போட்டு மெல்லலானான்.

சித்தேஸ்வரி பயமும் திகிலும் கலந்த பார்வையுடன் மகனையே பார்த்தவண்ணம் அமர்ந்திருந்தாள். சில கணங்களுக்குப் பிறகு பயந்த குரலில்— 'அங்கு ஏதாவது நடந்ததா?' என்று வினவினாள்.

ராமச்சந்திரன் எவ்வித பாவமுமற்ற நிச்சலனமான தனது பெரிய விழிகளை உயர்த்தி தாயை ஒருமுறை பார்த்தான். பின்னர் தலையைத் தாழ்த்திக்கொண்டு, வரண்ட குரலில்— 'காலம் வரும்பொழுது எல்லாம் சரியாகிவிடும்' என்றான்.

சித்தேஸ்வரி ஒன்றும் பேசவில்லை. வெயிலின் கடுமை பின்னும் அதிகரித்துக் கொண்டிருந்தது. என்ன உக்கிரமான வெயில்! சின்னஞ்சிறு முற்றத்திற்கு மேலே தெரிந்த வானத்தில் இரண்டொரு மேகத் துண்டுகள், பாய் விரித்துச் செல்லும் படகுகள்போல் மிதந்து கொண்டிருந்தன. தெருவிலே கடகடவென எக்கா வண்டி ஓடும் சத்தம் கேட்டது. கட்டிலில் உறங்கும் சிறுவன் கர், புர்—என்று மூச்சு விடுவது காதில் வீழ்ந்தது.

திடீரென மௌனத்தைக் கலைத்தான் ராமச்சந்திரன்: 'பிரமோத் சாப்பிட்டாயிற்றா?'

சித்தேஸ்வரியின் துயரம் தோய்ந்த பார்வை கட்டிலில் கிடக்கும் சிறுவனின் மீது பரிவுடன் தடவி மீண்டது— 'ஓ! சாப்பிட்டாயிற்று.'

'அழவில்லையே.'

சித்தேஸ்வரி மீண்டும் சொன்னாள்— 'இன்றைக்கு நிஜமாய் அழவேயில்லை. இப்பெல்லாம் எவ்வளவு சமர்த்தாய்ப் போய்விட்டான் தெரியுமா? பட்கா அண்ணாகிட்ட போவேன்...ன்று சொல்லிக்கொண்டேயிருந்தான்.— இத்தனை சமத்துக் குழந்தை...' சித்தேஸ்வரியினால் மேலே பேச முடியவில்லை. தொண்டையை ஏதோ அடைத்தது. உண்மையில் தின்பதற்கு 'ரேவடி' வேண்டுமென்று அடம் பிடித்து, அதற்காக ஒரு மணி நேரம் அழுது விட்டுத் தூங்கியிருந்தான் பிரமோத்.

ராமச்சந்திரன் சற்றே வியப்புடன் அம்மாவைப் பார்த்

தான். பிறகு குனிந்து அவசர அவசரமாகச் சாப்பிட லானான்.

தட்டில் ஒரே ஒரு துண்டுதான் பாக்கி இருந்ததும் சித்தேஸ்வரி எழுந்திருக்க முயன்றவளாய் '...இன்னும் ஒரு ரொட்டி கொண்டு வரட்டுமா?' என்றாள்.

ராமசந்திரன் கரத்தை நீட்டி மறித்தவாறே படபடத் தான். 'வேண்டாம், வேண்டாம், கொஞ்சம்கூட வேண் டாம். என் வயிறு நிரம்பிப் போயாச்சு, இதோ இதைக் கூட மீதம்தான் வைக்கப் போகிறேன்... போதும்.'

சித்தேஸ்வரி விடவில்லை— 'பரவாயில்லை. பாதி கொண்டு வருகிறேன்.'

ராமச்சந்திரன் வெகுண்டான்.— 'அதிகமாய்ப் போட் டுத் திணித்து வியாதியை வரவழைக்க நினைக்கிறாயா? உங்களுக்கெல்லாம் இதைப் பற்றிக் கொஞ்சம்கூட சிந் தனையில்லை. எப்பொழுதும் தன் பிடிவாதம்தான். பசி யிருந்தால் போட்டுக் கொள்ளமாட்டேனா?'

சித்தேஸ்வரி அப்படியே சிலையாய் வீற்றிருந்தாள். ராமச்சந்திரன் தட்டிலிருந்த ரொட்டித் துண்டை அப்ப டியே வைத்துவிட்டு கட்டிலில் படுத்திருந்த சிறுவனைப் பார்த்தவண்ணம்— 'அம்மா! தண்ணீர் வேண்டும்' என்றான்.

சித்தேஸ்வரி டம்பளரை எடுத்துக்கொண்டு போனாள். ராமச்சந்திரன் கிண்ணத்தின் மீது விரல்களால் தாளம் போட்டான். பிறகு மெல்ல, கரத்தைத் தட்டில் வைத் தான். இரண்டொரு கணங்களுக்குப்பின் எஞ்சியிருந்த அந்த ரொட்டித் துண்டை மெதுவாகக் கையிலெடுத்துப் பார்த்தான். கடைசியில் சுற்றும் முற்றும் பார்த்தபின், வெறும் ரொட்டித் துண்டை வெற்றிலை பீடாவைப் போட் டுக் கொள்வதுபோல் ரொம்ப நாசுக்காக வாயில் போட் டுக் கொண்டான்.

இரண்டாவது பிள்ளை மோகன் வந்ததுமே கைகால்

கழுவிக்கொண்டு பலகையில் வந்து உட்கார்ந்து விட்டான். இவன் மாநிறம்தான். கண்கள் கூடச் சிறியவை தான். முகத்தில் அம்மை வடுக்கள். இவனும் தன் அண்ணனைப்போல் ஒல்லியாகத் தானிருந்தான். ஆனால் அத்தனை உயரமில்லை. வயதிற்கு அதிகமானதொரு முதிர்ச்சி முகத்தில். சோகத்தின் சாயல்.

தட்டை அவனுக்கெதிரே வைத்தவாறே சித்தேஸ்வரி கேட்டாள். 'எங்கேயடா போயிருந்தாய்? அண்ணா விசாரித்தான்.'

ரொட்டியைப் பிய்த்து வாய் நிறைய அடைத்துக் கொண்ட அவன் அதை விழுங்கியவாறே இயல்புக்கு மாறான முரட்டுக் குரலில்— 'எங்கேயும் போகவில்லை. இங்கேதானே இருந்தேன்' என்றான்.

அருகே அமர்ந்து விசிறிக்கொண்டிருந்த சித்தேஸ்வரி கனவில் பேசுகிறவள்போல் மடமடவென்று ஒப்புவித்தாள்— 'பட்கா உன்னைத்தான் புகழ்ந்து கொண்டிருந்தான். அம்மா! மோகன் ரொம்ப கெட்டிக்காரன். நல்ல மூளை. இருபத்தி நாலு மணி நேரம் படிப்பைத் தவிர அவனுக்கு வேறு கவனமேயில்லை. அதே எண்ணம் தான். என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தான்—' சித்தேஸ்வரி பேசுவதை நிறுத்திவிட்டு எதையோ திருடிவிட்டவள் போன்ற குற்ற உணர்வுடன் மகனை நோக்கினாள்.

மோகன் அவளைப் பார்த்து வரண்ட புன்னகை புரிந்தவனாய் சாப்பிடுவதில் முனைந்தான். தட்டிலிருந்த ஒரு ரொட்டி, கிண்ணத்திலிருந்த பருப்பில் முக்கால் பகுதி, ஏன், கடலைச் சுண்டலும் கிட்டத்தட்டக் காலியாகி விட்டிருந்தது.

சித்தேஸ்வரி திகைத்தாள். என்ன செய்வதென்றே அவளுக்குப் புரியவில்லை. இந்த இரண்டு பிள்ளைகளிடமும் அவளுக்கு ஒரே பயம். ஏனோ திடீரென அவள்

கண்கள் குளமாகின. முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள் அவள். சற்றைக்கெல்லாம் அவள் திரும்பிப் பார்க்கும் போது மோகன் சாப்பிட்டு முடித்திருந்தான். திடுக்கிட்ட சித்தேஸ்வரி — 'ஏண்டா? இன்னுமொன்று கொண்டு வரட்டுமா? என்ருள்.

ரகசியமாய் அடுப்படியை ஒரு பார்வை பார்த்த மோகன் உற்சாகமற்ற குரலில் 'வேண்டாம்' என்ருன்.

'இல்லையடா! என் மீது ஆணை! நீ இன்னுமொன்று போட்டுக் கொள்ளத்தான் வேண்டும். உன் அண்ணு கூட போட்டுக் கொண்டான்.' சித்தேஸ்வரியின் குரல் இறைஞ்சியது.

மோகனின் விழிகள் தன் தாயின் மீது பதிந்து ஊடுருவின. குரு தனது சீடனுக்கு அறிவுறுத்துவது போன்ற தொனியில்—'அம்மா நான் சொல்வதைக் கேள். முதலாவது எனக்குப் பசியில்லை. இரண்டாவது நீ செய்திருக்கிருயே ரொட்டி! அது சாப்பிடும் படியாகவா இருக்கிறது? வாயில் வைக்கவே முடியவில்லை...ஹும். இவ்வளவு தூரம் சொல்லுகிருய்...சரி...கொஞ்சம் பருப்பு மட்டும் போடு...அது நன்ருய் இருக்கிறது...ருசியாக...' என்றபின் சித்தேஸ்வரியினுல் மேற்கொண்டு எதுவும் பேச முடியவில்லை. கிண்ணத்தில் பருப்பை நிறைத்துத் தந்தாள் அவள்.

மோகன் அதை உறிஞ்சிக் குடித்துக் கொண்டிருக்கும் போதுதான் முன்ஷி சந்திரிகா பிரசாத் செருப்பைத் தேய்த்துக் கொண்டு, சர்புர்...என ஒலி எழுப்பியவண்ணம் உள்ளே வந்தார். வந்தவர்...'ராமா' என்றவண்ணம் பெஞ்சியின் மீது தொப்பென்று உட்கார்ந்தார்.

சித்தேஸ்வரி தலைத்துணியை இன்னும் சற்று முன்னே, நெற்றிவரை இழுத்து விட்டுக் கொண்டாள். மோகன் ஒரே மூச்சில் கிண்ணத்தைக் காலி செய்து விட்டு சரேலென அவ்விடம் விட்டகன்ருன்.

இரண்டு ரொட்டிகள், பருப்புக் கிண்ணத்தில் கடலைச் சுண்டல். முன்ஷி தாலத்தின் முன்னே வந்தமர்ந்தார். பலகையின் மீது சப்பணம் போட்டு உட்கார்ந்து கொண்டார். ரொட்டியை முறித்து அப்படியே வாயில் அடைத்துக்கொண்டு, கிழட்டுப் பசு அசைபோடுமே, அதேபோல் அறைத்து மென்று விழுங்கலானுர். நாற்பது, நாற்பத்தைந்து வயதிருக்கலாம் அவருக்கு, ஆனுல் பார்ப்பதற்கு வயதானவர் போல் ஒரு தோற்றம். ஐம்பது வயதிற்கு மேல் மதிப்பிடலாம். தோலெல்லாம் சுருங்கி, தொள தொளத்து ஆடியது. சொட்டைத் தலையில் கண்ணுடி போல் ஒரு பளபளப்பு, அழுக்கு வேஷ்டி, மேலே அணிந்திருந்த பனியன், கொஞ்சம் அதிகமான வெளுப்பைக் காட்டினுலும் தார்தாராய்க் கிழிந்திருந்தது.

கிண்ணத்தை எடுத்து வாயில் வைத்த முன்ஷி கேட்டார் — 'பட்கா எங்கே! கண்ணிலேயே காணும்.'

தனக்கென்ன நேர்ந்து விட்டதென்று சித்தேஸ்வரிக்குப் புரியவில்லை. நெஞ்சை என்னமோ செய்தது. யாரோ அழுத்திப் பிடிப்பது போல் ஒரு வேதனை. விசிறியைப் பின்னும் சற்று வேகமாய் வீசியவாறே பேசினுள்—'இப்பொழுது தான் சற்றுமுன் வந்து சாப்பிட்டுவிட்டுப் போனுன். இன்னும் கொஞ்ச நாளில் வேலை கிடைத்து விடும்' என்ருள். 'எப்பொழுது பார்த்தாலும் அப்பா... அப்பா! என்று உங்கள் பேச்சுத்தான். அம்மா··· அப்பா தெய்வம் மாதிரியம்மா...' என்ருன்.

முன்ஷியின் முகம் சற்றே பிரகாச மடைந்தது. சற்றே வெட்கியவராய்... 'அப்படியா சொன்னுன்! அப்பா தெய்வம் மாதிரி என்ரு சொன்னுன்? பைத்தியக்காரப் பயல்' ···என்ருர். அவ்வளவுதான். சித்தேஸ்வரிக்குத் தலைகால் புரியவில்லை. உன்மத்தம் கொண்டவள்போல் சரமாரியாக வார்த்தைகளைக் கொட்டினுள்··· 'பைத்தியக்காரன் அல்ல... நம்ப பட்கா··· ரொம்ப கெட்டிக்காரன், அந்தக்

காலத்து ஒரு மகாத்மா... வந்து பிள்ளையாகப் பிறந்திருக்கிருன். மோகனுக்கு அவனிடம் எவ்வளவு மட்டு மரியாதை தெரியுமா? அண்ணுவிடம் அத்தனை பக்தி வைத்திருக்கிருன் அவன். இன்று கூடச் சொல்லிக் கொண்டிருந்தான். அம்மா... ஊரிலே அண்ணுவிற்கு என்ன மதிப்பு தெரியுமா! அதுவும் படித்தவர்களிடையே ரொம்ப மரியாதை அவனுக்கு என்ருன். நம்ப பட்கா மட்டுமென்ன! தம்பிகளிடம் அவனுக்கு அப்படியொரு உயிர், உலகத்தில் எதை வேண்டுமானுலும் சகித்துக் கொள்வான் பாவம். ஆனுல் அவனுடைய பிரமோத்திற்கு ஒன்று நேர்ந்துவிட்டால் அவனுல் தாங்கவே முடியாது...'

முன்ஷி பருப்பு நீரில் தோய்ந்த விரலை எடுத்துச் சப்பிக் கொண்டிருந்தார். எதிரேயிருந்த பிறையின் மீது விழிகளைப் பதித்தவராய் லேசாக ஒரு சிரிப்புச் சிரித்தார்— '.ஆமாம்... பட்கா... விற்கு நல்ல மூளை... சின்ன வயதில் என்ன துஷ்டத்தனம் பண்ணுவான்! மகா போக்கிரி! எப்பொ பார்த்தாலும் விளையாட்டுதான். ஆனுல் ஒன்று! பாடத்தை மனப் பாடம் செய்யக் கொடுத்தால்... அப்படியே எழுத்துப் பிசகாமல் நெட்டுரு பண்ணிவிடுவான். அப்படிப் பார்த்தா நம்ப பசங்க மூன்று பேருமே நல்ல புத்திசாலிகள். பிரமோதை என்ன குறைவாகவா நினைக்கிருய்!...' முன்ஷி திடீரென உரக்கச் சிரித்தார்.

ஒன்றரை ரொட்டியை வயிற்றுக்குள் தள்ளியாகி விட்டது. வாயிலிருந்த ஒரு கவளத்துடன் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. கொஞ்சம் சிரமத்துடன் ஒரு டம்பளர் தண்ணீரை உள்ளே செலுத்திய பின் சற்றே ஆசுவாசம். தொடர்ந்து கர் - புர் - என்று இருமிச் செருமிக் கொண்டே சாப்பிடலானுர் முன்ஷி.

மீண்டும் மௌனம் நிலவியது. இருவரில் ஒருவருமே பேசவில்லை. தூரத்தில் எங்கிருந்தோ, மாவரைக்கும் இயந்திரம் கிர்...... கிர்...... என்று சுற்றும் ஓசை வந்து

கொண்டிருந்தது. அருகே யிருந்த வேப்பமரத்தில் அமர்ந்திருந்த 'பண்டுக்' பட்சி இடைவிடாமல் கத்திக் கொண்டிருந்தது.

என்ன பேசுவது எனத் தெரியாமல் சித்தேஸ்வரிக்கு ஒரு தவிப்பு. எல்லா விஷயங்களையும் பற்றி, என்ன ஏது என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாய்க் கேட்டு விடவேண்டுமென்றுதான் அவள் விரும்பினுள். எதைப் பற்றியும் சரியான, உண்மையான விவரங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். முன்னைப் போலவே, சற்றும் பயமோ, தயக்கமோ இல்லாமல் தடதடவெனப் பேச வேண்டுமென்றெல்லாம் அவள் மனம் ஆசைப்பட்டது. ஆனல் அவளுக்குத் துணிவு வரவில்லை. அவள் மனத்தில், அவளே என்ன வென்று விண்டு கூற முடியாத, இனமறியாததொரு பயம் கப்பிக்கொண்டு கிடந்தது.

கடந்த இரண்டு நாளாய் மௌன விரதம் காத்து, இன்று மாலைதான் அதை முடிக்க இருப்பவர் போன்றதொரு தீவிரத்துடன் வாயை இறுக மூடிக்கொண்டு சாப்பிடுவதில் முனைந்திருந்தார் முன்ஷி.

சித்தேஸ்வரியல் முடியவில்லை. 'இனி மழை வராது போலிருக்கிறது'— என்ருள்

ஒரு கணம் முன்ஷி சுற்றும் முற்றும் பார்வையை ஓட விட்டார். பின்னர் எவ்வித உணர்ச்சியும் அற்ற குரலில் —'ஹும்... ஈக்கள் ரொம்ப அதிகமாகிவிட்டன' என்ருர்.

சித்தேஸ்வரிக்குச் சற்றே தெம்பு வந்தது. 'அத்திம்பேர் படுத்துக்கொண்டிருக்கிருராம். ஒரு சமாசாரத்தையும் காணும்.'

முன்ஷி தட்டிலிருந்த கடலைச் சுண்டலை மிகுந்த அக்கறையுடன் பார்த்த பார்வை— அதனுடன் அவர் பேசுவது போலிருந்தது— 'கங்காசரண் பாபுவின் பெண்ணிற்குத் திருமணம் நிச்சயமாகி இருக்கிறது. பையன் எம். ஏ. வாம்.'

சித்தேஸ்வரி சட்டென மௌனமானாள். முன்ஷியும் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. அவர் சாப்பிட்டு முடித்தாகி விட்டது. குரங்கு மாதிரி தட்டிலிருந்த கடலைகளை ஒவ்வொன்றாய்ப் பொறுக்கிக் கொரித்துக் கொண்டிருந்தார்.

'ஒரே ஒரு ரொட்டி...போடுகிறேன்! இன்னும் நிறைய இருக்கிறது. எழுந்திருக்காதீர்கள்— பிள்ளைகளின் மீது ஆணை.'

ஏதோ தகாத குற்றமிழைத்து விட்டவர் போல் முன்ஷி தன் மனைவியை நோக்கினார். அடுப்படியைக் கடைக் கண்ணால் நோட்டம் பார்த்தார். பிறகு கை தேர்ந்த பேர்வழி போல் தடதடவென்று பொழிந்தார்—'இதோ பார்! வயிறு நிறைஞ்சு போச்சு! இனி ரொட்டி, கிட்டி ஒன்றும் போடாதே! இந்தச் சாதம், ரொட்டியென்று உப்புப் போட்ட பண்டங்களைச் சாப்பிட்டுச் சாப்பிட்டுச் சலித்துப் போச்சு. நீ வேறு சும்மா...ஆணை கீணை என்று சொல்லிவிட்டாய்...சரி! நீ ஆணை என்றதற்காகச் சாப்பிடு கிறேன். வெல்லம் இருக்கா?'

சித்தேஸ்வரி...பானையில் கொஞ்சம் இருக்குமென்றதும் அவர் தொடர்ந்தார்: 'இருந்தால் கொஞ்சம் குளிர்ந்த நீரில் பானகமாய்க் கரைத்துக் கொண்டுவா. உன்னுடைய ஆணையும் நிறைவேறி விடும், என் நாவிற்கும் ருசியாகவும் இருக்கும். கொஞ்சம் ஜீரணத்திற்கும் உதவி செய்யும். இதோ பாரு!...ரொட்டியைத் தின்று தின்று வெறுத்தே போய்விட்டது.'—என்ற முன்ஷி...உரக்க... பலமாகச் சிரித்தார்.

முன்ஷி சாப்பிட்டுவிட்டுச் சென்றபின், அவரது எச்சில் தட்டை எடுத்துக் கொண்டு சமையல் கட்டுக்கு வந்தாள் சித்தேஸ்வரி. பாத்திரத்தில் எஞ்சியிருந்த பருப்பைக் கிண்ணத்தில் கவிழ்த்துக் கொண்டாள். ஆனால் அது நிறையவில்லை. வாணலியில் கொஞ்சம் சுண்டல் மீந்து

கிடந்தது. அதைத் தன்னருகே இழுத்துக் கொண்டாள். ரொட்டிகளிருந்த தட்டையும் ஒரு கையால் பக்கத்தில் நகர்த்திக் கொண்டாகி விட்டது. ஒரே ஒரு ரொட்டிதான் அதிலிருந்தது. ரொம்ப தடிமனாய், தீய்ந்து போய் பார்க்கக் கண்றாவியாயிருந்த அந்த ரொட்டியைத் தன் எச்சில் தட்டில் போடயிருந்தவளின் கவனம் சட்டென்று தாழ்வாரத்துக் கட்டிலில் உறங்கும் தன் சிறிய பிள்ளை யின்பால் சென்றது.

ஒரு கணம் அவளது கண்கள் இமைக்கவும் மறந்து அச்சிறுவனை நோக்கின. கரங்கள் தன் பாட்டில் ரொட்டியை இரு கூறு போட்டுக் கொண்டிருந்தன. சித்தேஸ்வரி ஒரு பாதியை எடுத்துத் தனியே வைத்து விட்டு, இன்னொரு பாதியைத் தன் எச்சில் தட்டில் போட்டுக் கொண்டாள். பின்னர் எழுந்து போய் ஒரு டம்ளர் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்து உட்கார்ந் தாள். ரொட்டியை ஒரு வாய் போட்டுக் கொண்டதுமே ஏனோ அவள் கண்களிலிருந்து குபுகுபுவென நீர் கொட் டியது.

வீடு முழுவதும் ஒரே ஈக்கள் குப்பென்று மொய்த்துக் கொண்டிருந்தன. முற்றத்திலிருந்த கொடியில் அழுக் கடைந்த புடவையொன்று தொங்கிக் கொண்டிருந்தது. அதில் ஒரே ஒட்டுக்கள். இரண்டு பிள்ளைகளையும் காணோம். எங்கே போனார்களோ தெரியாது. வெளி அறையில் குப்புறப் படுத்துக் கொண்டு முன்ஷி கவலை யற்று உறங்கிக் கொண்டிருந்தார். வீட்டு வாடகைக் கட்டுப்பாடு இலாக்காவில் தான் பார்த்த எழுத்தர் பதவி யிலிருந்து, தனது சீட்டு கிழிக்கப்பட்டு ஒன்றரை மாதங்கள் ஆகாதது போல்...இனி மாலைவரை வேலை தேடி இங்குமங்கும் அலைய வேண்டிய அவசியமோ, கவலையோ, இல்லாதது போல் அவ்வளவு நிம்மதியாக, கவலையற்று...உறங்கிக் கொண்டிருந்தார் அவர்.

## வேலிக்கு இருபுறமும்

மிஸ்டர் முகர்ஜி தற்சமயம் எங்கள் பக்கத்து வீட்டில் இல்லே. மாற்றலாகிப் போய் விட்டார். தற்சமயம் புதிதாய் வந்திருப்பவர்கள் எங்களுடன் எந்த உறவும் வைத்துக் கொள்ளவில்லே. பார்த்தால் பஞ்சாபிக்காரர்கள் போலிருக்கிறது. ஒருக்கால் பஞ்சாபிக் காரர்களாக இல்லாமலும் இருக்கலாம், அவர்களேப் பற்றி எதுவுமே புரியவில்லே. அவர்கள் குடித்தனமாக வந்ததிலிருந்து அவர்களேப் பற்றித் தெரிந்துகொள்ளவேண்டும் என்ற விசித்திரமான ஆத்திரம் மூண்டு விட்டது. ஏனே தெரியவில்லே. என்னுல் எதிலும் பற்றே ஈடுபாடோ கொள்ளாமல் இருக்க முடியவில்லே. பிரயாணம் செய்யும்போதும் கூட சக பிரயாணிகளேப் பரிச்சயம் செய்து கொள்ளாமல் இருக்க முடியாது என்னுல். இது என் இயல்பு போலும். ஆனுல், என் வீட்டிலுள்ளவர்களுக்கு அவர்கள் பால் அக்கரை இல்லாமல் போகவில்லே, நாங்கள் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். பிறர் விட்டுப் பெண், மாட்டுப்பெண் விஷயமெல்லாம் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிற விஷயமல்லவா? இதனுல் நாங்கள் எப்பொழுதும் இதைப் பற்றியெல்லாம் தெரிந்து அறிந்து வைத்துக்கொள்வோம். இதை அறியும் ஆவலும் எங்களுக்குண்டு. புதிதாக வந்திருக்கிருர்களே, பக்கத்து வீட்டுக்காரர்கள், அவர்களேப் பற்றியும் அவர்களது நடவடிக்கைகளேக் குறித்தும் அவ்வப்பொழுது 'இம்பெரஷன்' ஏற்படுத்திக் கொண்டு வருகிருேம், அவர்களேச் சக குடும்ப சமேதராக எங்கள் வீட்டிற்கு அழைக்க வேண்டும் என்பது என் ஆசை. அப்படியே அந்த வீட்டிற்கும் போய் வந்து கொண்டிருக்கவும் ஆசையில்லாமலில்லே. ஆனுல்... என்னுடைய இந்த ஆசை

களையும் உணர்ச்சிகளையும் அவர்கள் உணர்ந்ததாகவே தெரியவில்லை. அவர்களது வாழ்க்கை சராசரி மனிதர் களைப் போன்றதாகத் தெரியவில்லை.

வராந்தாவிற்கு வெளியே கட்டாந்தரையில் நாற்காலி களைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கின்றனர். ஒரு நாளின் பெரும் பகுதி இங்கேயே கழிந்து விடுகிறது. எப்பொழுதும் நாற்காலிகள் அங்கேயே கிடக்கின்றன. இரவில் கூட எடுத்து உள்ளே போடுவதில்லை. ஆனால் பாருங்கள், அவை இதுவரை திருட்டுப் போகவில்லை. அவர்களுக்கு இது பற்றி அக்கறையிருப்பதாகவே தெரிய வில்லையே.

எங்கள் வீட்டின் அந்தப் பக்கம் அதாவது ஃபென்ஸ்க்கு மறுபுறம் அரசாங்கக் காரியாலயக் கட்டிடம் இருக்கிறது. உயரமான செங்கல் சுவர் எழுப்பி நிற்கிறது. வீட்டிற்குப் பின்னால் இரண்டு மாடி பிளாக்குகளின் பின் பகுதி, வீட்டிற்கு முன்னால் பிரதான சாலை. இதனால் எங்கள் வீட்டாருக்கு இன்னொரு குடும்பத்தினரின் அண் மையோ, நெருக்கமோ, ஒவ்வொரு நிமிடமும் கிட்டுவ தில்லை. பெரிய பெரிய நகரங்களிலே இப்படித்தான். ஒருவர் மற்றவருடன் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்வதில்லை. தங்களுக்குத் தாங்களே தனித்து வாழும் சிறப்பை இவர்களிடம் காணலாம். எங்கள் பக்கத்து வீட்டார்களும் இத்தகைய அரிய பெரிய சிறப்புக்களை யெல்லாம் ஒருங்கே தன்னிடத்தில் கொண்டவர்களாகத் தோன்றினர். இந்த நகரமும் சரி, இந்த வட்டாரமும் சரி, மிகவும் அமைதியானது. சந்தடியற்றது. மக்கள் ஆமை வேகத்தில் நடப்பார்கள். தேவைக்கு மிஞ்சிய சகஜ பாவத்துடன் சற்றும் சங்கோஜமின்றி நிதானமாக உலாவுவார்கள். ஏனென்றால் வாழ்க்கையில் ஒரு வேகமோ, துடிப்போ இல்லை. இதனால் தானோ என்

னவோ எங்களைப் பொறுத்த வரையில் எங்கள் பக்கத்து வீட்டுக்காரர்கள் விசித்திரமானவர்களாகத் தோன்றினர்.

நான் வெளியே வந்து பார்க்கிறேன். அவர்கள் காலைத் தேநீர் அருந்திக்கொண்டிருக்கின்றனர். மணி ஒன்பது இருக்கும். கணவன் மனைவியைத் தவிர ஒரு பெண்ணுமிருக்கிருள். அப்பெண் அவர்களது மகளாக இருக்கலாம். எப்பொழுதும் இந்த மூன்று பேர், இந்த மூன்றே பேர்தான் காணப்படுகின்றனர். நான்காவது மனிதர் என்று யாரும் கிடையாது. பெண் அப்படி யொன்றும் அழகியில்லை. ஆனல் நாகரீகமும் நாசுக்கும் தெரிந்த பெண். சரியாக மேக்கப் செய்துகொண்டால் இன்னும் அழகாகக் கூடத் தெரியலாம். எப்பொழுது பார்த்தாலும் சிரிக்கிருள். ரொம்பவும் சிரிக்கிருள். அவளுடைய அம்மா, அப்பா கூட சிரிக்கின்றனர். எப்பொழுதும் சந்தோஷமாக, ஆனந்தமாக இருப்பதுபோலத் தெரிகின்றது. அப்படிப் பேசவும் சிரிக்கவும் அவர்களிடம் என்ன விஷயமிருக்கிறது? எதற்காக எப்பொழுது பார்த்தாலும் சிரித்துக் கொண்டிருக்கின்றனர்? எப்பொழுதும் அக மகிழ்ந்து சிரித்துக்கொண்டே யிருக்கும்படியான சுக போக வாழ்க்கையோ? சுமுகமான, சுகமான சூழ்நிலையோ? ஹூம்— வாழ்க்கையின் சிரமங்களைப் பற்றியும் உண்மையான நிலைமையைப் பற்றியும் அறிந்தே இருக்கமாட்டார்களோ? எனக்கு ஒரே வியப்பு, ஆச்சர்யம். எங்கள் வீட்டையும், பக்கத்து வீட்டையும் மனதிற்குள் ஒத்திட்டுப் பார்த்துக் கொள்கிறேன்.

இதோ சற்று முன்தான் அருவியாய்ப் பொங்கிய அவர்களின் சிரிப்பு என்னைத் திடுக்கிட வைத்தது. என் கவனமெல்லாம் ரோஜா பாத்தியிலிருந்தது. என் கையிலிருந்த களைக்கொத்தி அப்படியே அசைவற்று நின்று விட்டது. ஆனல் அவர்களின் சிரிப்பென்னவோ நிற்கவில்லை. அந்தப் பெண் நாற்காலியை விட்டு எழுந்து விட்டாள்.

எங்கே சிந்திவிடுமோ என்ற பயம் போலும், தேநீர்க் கோப்பையைத் தன் அம்மாவின் கையில் கொடுத்து விட்டாள். அவளால் நிற்கக் கூட முடியவில்லை. விழுந்து விழுந்து சிரிக்கிறாள். அவ்வளவு சுவாரஸ்யமான விஷயம் போலும், ஏதாவது ஹாஸ்யமான, கிண்டலோ? இப்படி அதிர்வெடியாய்ச் சிரிப்பு வெடித்துவிட்டது. அந்தப் பெண்ணால் சிரிப்பை அடக்க முடியவில்லை. மேல் தாவணி, தோளில் ஒட்டிக்கொண்டு நிற்கிறது என்ற உணர்வு கூட அவளுக்கு இல்லை. மேலாக்கு நெகிழ்ந்த நிலை அவளது மார்பகங்களின் நளினமான அசைவுகள் கூடத்தெரிகின்றன. சே, அளவிற்கு மீறிவிட்டது. பெண்ணின் கவனக் குறைவை அவள் அம்மா கண்டிக்க வேண்டும். ஏனோ! இது தவறாகவே அவளுக்குப் பட வில்லையே. என்னைத்தவிர வேறு எவரும் இதைக் கவனித் ததாகவே தெரியவில்லை, நல்ல வேளை.

நாளுக்கு நாள் எனது கவனம் அவர்கள் பால் அதிக மாகிக் கொண்டே போகிறது. என்னையு மறியாமல் என் பக்கத்து விட்டாரின் பால் ஒருவிதக் கவர்ச்சி அதிகரிப் பதை நான் உணருவதைத் தவிர வேறு வழியில்லை. நான் மட்டுமென்ன? பப்பிகூட எப்பொழுதும் அந்தப் பெண்ணின் சட்டைத் துணியைப் புகழ்ந்து கொண்டே யிருக்கிறாள். சமயம் கிடைக்கும் பொழுதெல்லாம் மதனி கூட அந்த வீட்டுப்பக்கம் எட்டிப் பார்க்கிறாள். பக்கத்து வீட்டில் எப்பொழுது தாமரைத் தண்டும், சுரைக்காயும் வாங்கினார்கள்? எப்பொழுது அவர்கள் வீட்டில் அடுப்புப் பற்ற வைத்தார்கள் என்பதெல்லாம் பாட்டிக்கு அத்து படியாகி விட்டதே! இத்தனையிருந்தும் அவர்களுக்குக் கடுகளவுகூட எங்கள் பால் அக்கறை யிருந்ததாக தெரிய வில்லை.

அந்தப் பெண் இருக்கிறாளே. அவள் எங்கள் பக்கம் ஏறெடுத்துக் கூடப் பார்ப்பதில்லை அவளுடைய அம்மா

அப்பா கூடப் பார்க்கமாட்டார்கள். வேண்டுமென்றே இப்படி நடந்து கொண்டார்களெனக் கூறமுடியாது. நாங்கள் பரஸ்பரம் பேசிக் கொள்வது என்பது நினைத்துப் பார்க்க முடியாததொன்று. ஒருக்கால் தங்கள் உலகத்தில் நாங்கள் பிரவேசிப்பது அவர்களுக்கு விருப்பமில்லை போலும். எங்களைத் தங்களைவிடத் தாழ்வாக நினைத்துக்கொண்டிருந்தாலும் இருக்கலாம். அல்லது ஒருக்கால் எங்களது உறவினால் தங்களது அமைதி குலைந்துவிடுமோ என்ற அச்சமோ, சந்தேகமோ இருக்கலாம் அல்லவா? இதிலெல்லாம் எவ்வளவு தூரம் உண்மையிருக்கும் என்று தெரியாது. ஆனால் ஒன்று மட்டும் உண்மை. பக்கத்து வீடு மாடியில் கட்டிளங்காளை ஒருவனைக் கண்டதும், என் அப்பாவிற்கு என் நண்பர்களைக் கண்டதும் பப்பியைப் பற்றிய பயம் உண்டாகிறதே—அப்படிப்பட்ட பயத்தின் சாயலை அந்தப் பெண்ணின் அம்மா அப்பாவின் கண்களில் நான் காண முடியவில்லை.

அவர்கள் வீட்டில் ரேடியோ ஒலிப்பதில்லை. எங்கள் வீட்டிலோ பெரும்பாலும் உரக்க ஒலித்துக் கொண்டிருக்கிறது. அவர்கள் வீட்டு முகப்பில் வெறும் கட்டாந்தரைதான். ஒரு புல்பூண்டு கூடக் கிடையாது. எங்கள் வீட்டிற்கு முன்னால் பச்சை பசேலென்ற பசும் புல்வெளி. பக்கவாட்டில் காய்கறித் தோட்டம். நறுமணம் வீசும் மலர் பாத்திகள் கூட உண்டு.

அந்தப் பெண் என் தங்கையுடனோ, மதனியிடமோ ஏன் சிநேகம் செய்துகொள்ளக் கூடாது? அவளுடைய அம்மாவும் அப்பாவும் என் அப்பா அம்மாவுடன் கலந்து பழகக் கூடாதா என்ன? அவர்கள் வீட்டுத் தேநீர்க் கோப்பைகளைவிட உயர்தர, அழகான கோப்பைகளில் நாங்கள் தேநீர் பருகுவதை அவர்கள் ஏன் கவனிக்கவில்லை? தங்களுடைய நெருங்கிய நண்பர்களின்

பட்டியலில் எங்களையும் அவர்கள் சேர்த்துக் கொண் டிருக்கவேண்டும். எங்களுடைய ஒவ்வொரு விஷயத் துடன், பொருள்களுடன் அவர்களுக்குத் தொடர்பு இருந் தாகவேண்டும். ஃபென்ஸ் அருகே எங்கள் பக்கமாக ஒரு புளிய மரம் இருக்கிறது. உயரமும், அடர்த்தியான செறிவும் கொண்ட மரம் அது. புளியம்பழம் ஒவ்வொன் றும் சுமார் ஆறு அங்குலத்திற்குத் தொங்கும். அந்தப் புளியம் பழத்தின் பேரில் பெண்களுக்கெல்லாம் ஒரே பைத்தியம். ஆனால் இந்தப் பக்கத்து விட்டுப் பெண் ணிருக்கிறதே, புளியம் பழங்கள் காற்றில் ஊசலாடு வதைப் பார்த்தபின் கூட அதற்காக ஆசைப்படவில்லை. எங்கள் வீட்டு மரத்திலிருந்து ஒரு புளியம் பழத்தை யாவது பறித்து என்னை மகிழ்விக்கவில்லையே!

நான் எதிர் பார்த்துக் கொண்டே இருக்கிறேன்...

எங்களுடைய உதவியையோ, துணையையோ நாடும் படியாக எங்கள் பக்கத்து வீட்டுக்காரருக்கு எந்த வித மான சிரமங்களோ, இக்கட்டுகளோ இல்லை.

எங்கள் வீட்டில், சாதாரணமாக ஒவ்வொரு வீட்டிலும் உள்ளூர சில கவலைகளும் வேதனைகளும் இருக்குமே, அப்படி ஏதும் கவலைகள் அவர்களை அரித்தெடுப்பது போலவோ, கவலையில் மூழ்கியவர்களாகவோ, அவர்கள் இல்லை. அந்தப் பெண்ணின் அப்பாவின் நெற்றியில் எப்பொழுதாவது கவலைகள் கோடிட்டிருக்கலாம், அல்லது கோபம் வந்திருக்கலாம். அவள் அம்மாவும் எப்பொழுதாவது எரிந்து விழுந்திருக்கலாம். நிச்சயமாக இதைப் பற்றி எனக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. ஏனெனில் இங்கிருந்து அதெல்லாம் ஒன்றும் தெரிவது மில்லை. காதில் விழுவதுமில்லை, அந்தப் பெண்ணிற்கும் அவள் இதயத்தின் ஒரு மூலையில் தனக்கென்று அந்தரங் கமான ஒரு இடம் இருக்கத்தானிருக்கும். ஏதாவதொரு

மன உளைச்சலோ எண்ணங்களோ அதிலிருக்கலாம். நிச்சயமாகச் சொல்லிவிட முடியாது.

இரவு வேளைகளில் அவர்கள் வீட்டில் நடு அறையில் தான் அதிக நேரம் விளக்கு எரிகிறது. அதில்தான் குடும்பமே உறங்குகிறது போலும். வீட்டிற்குள்ளே கூட அவர்கள் ஒன்ருக இருந்து ஒன்ருகப் பேசிக் கொண்டிருப் பார்களென்று நினைக்கிறேன். பேசிப் பேசிச் சலிப்பே தட்டாத அப்படி என்ன விஷயம் இருக்குமோ? அப்படி என்ன முடிவில்லாத கதைகளிருக்குமோ யார் கண்டது? என்னையுமறியாம லொரு நீண்ட பெருமூச்சு என் இதயத் திலிருந்து பீறிட்டெழுகிறது. ஹூம், - எங்கள் வீட் டிலோ, கால நிலை, வெய்யில் மழை, வெப்பம் பற்றிய விமர்சனம், கொசுக்கடி பற்றிய புராணம், யாரார் வீட்டில் குழந்தை பிறந்திருக்கிறது, உறவினர்கள் வீட்டு நாட்டுப் பெண்கள் பற்றிய விவகாரம், சமையல் சாப்பாடு... இந்தக் காலத்தை அப்படியே காலால் மிதித்துத் துவைத்து எடுக்கும் மகத்தான கடந்த காலத்து திவ்விய மகா புருஷர்களின் பேச்சுக்கள்தான். இவைகள் அதிக மாக அடிபடும்.

எங்கள் இருவர் வீட்டிற்குமிடையேயுள்ள இந்த ஃபென்ஸ் சும்மா பெயரளவிற்குத்தான். கீழே ஒரு அடி உயரத்திற்கு மண் சுவர். அதன் மீது நிற்கிறது ஃபென்ஸ், கசப்பு களாக்காய் கொடி கொஞ்சம் தூரம் படர்ந்திருக்கிறது. அதற்கப்பால் நெடுந்தூரம் வரை காய்ந்து வரண்டு கிடக்கும் நாகதாளிப் புதர். பெயர் தெரியாத பல பல செடிகள் புதர்களின் அடியில் எப் பொழுதும் கரையான் புற்று வைத்திருக்கிறது. புதர் களிலே மண்டிக்கிடக்கும் இலைகள் கரும் பச்சை நிற மாகப் பசேலென்றிருக்கும். மண்மேடு கூட சரியாக இல்லை. நடுநடுவே இடிந்து, சரிந்து கிடக்கிறது ஃபென் ஸில் இப்படிப் பல பாதைகள் உள்ளன. அதன் வழி

யாகப் போகலாம், வரலாம். இந்த வழியாகத்தான், தோட்டிச்சி, பழக்காரன், காய்கறிக்காரன், பேப்பர் போடுகிறவன் எல்லோரும் வருகிறார்கள். எத்தனையோ வருஷங்களாக தபால்காரனுக்கும், பால்காரனுக்கும் இது தான் வழி. இந்த வழியைத்தான் உபயோகிக்கிறார்கள். தங்கு தடையின்றி நாய்களும் பூனைகளும் இதன் வழியே வந்து போகும். செடி கொடிகளை புல்லை மேய வரும் ஆடு மாடுகளால் ஏற்படும் தொல்லைகளைச் சகித்துக் கொண்டு, புத்தகங்களை வாங்கிக் கொண்டு போக பாமி இந்த வழியாகத்தான் வருவாள்.

இந்த ஃபென்ஸ் இருக்கிறதே... எத்தனை செளகரிய மானது தெரியுமா? சைக்கிளை விட்டு இறங்காமலேயே அறுந்து தழைந்து கிடக்கும் கம்பிகளுடன் சர்க்கஸ் வேடிக்கைகள் நடத்திய வண்ணம் நாங்கள் இங்கு மங்கும் போவோம் வருவோம். இப்பொழுதெல்லாம் அப்படிப் போவதில்லை, ஏனென்றால் எங்கள் பக்கத்து வீட்டுக்காரர்களின் அகராதியின்படி ஃபென்ஸ் என்பது தாண்டக் கூடாத ஒரு தடுப்பு வேலி.

இவர்கள் வந்து மூன்று மாதங்களாகி விட்டன. படிப் பதற்காக எனது மேஜையை நான் பெரும்பாலும் வெளியே எடுத்துப் போட்டுக் கொள்வது வழக்கம். கோடையில், நாவரண்டு, தொண்டை உலர்ந்து போகும் போது ஐஸ்வாட்டர் எத்தனை இதமாக சுகமாக இருக் குமோ, அப்படித் திறந்த வெளியில் வீசும் காற்று இதமாக இருக்கிறது உடலுக்கு. ஆனால் வெளியே வந்து அமர்ந் தால், இப்பொழுதெல்லாம் படிப்பது கஷ்டமாகிவிடுகிறது. படிக்க முடியவில்லை. பார்வை ஃபென்ஸ்க்கு அப்பால் தான் ஓடுகிறது. மனமெல்லாம் பக்கத்து வீட்டைச் சுற்றிச் சுற்றித்தான் வட்டமிடுகிறது.

பருவப்பெண். தளைகள் எதுவுமற்றவள். இனிமையான சுபாவமும் அனுவசியமான பயங்களுமில்லாத அம்மா,

அப்பா, ஹூம்... நான் மட்டும் அவர்கள் வீட்டில் பிறந் திருந்திருந்தால்? இப்படியெல்லாம் இதயம் பரிதவிக்கும். படிப்பு ஓடுமா? சில சமயம் அந்தப் பக்கத்து வீட்டுப் பெண் மட்டும் தனியாக உட்கார்ந்திருக்கிருள். சில சமயம் ஏதாவது வேலையாக இருக்கிருள். சில சமயம் ஒரு வேலையுமில்லாமல் உட்கார்ந்திருக்கிருள். சுற்று முற்றும் உலாவியவாறே வீட்டின் முன் பக்கத்து மதிற்சுவர் வரை போகிருள். முழங்கைகளைச் சுவரிலே ஊன்றிக் கொண்டு தெருவைப் பார்த்துக்கொண்டு நிற்கிருள். பிறகு திரும்பி வருகிருள். எங்கள் வட்டாரத்திற்கு வெளியே யிருந்தும் சோதாப் பயல்கள் நிறைய வருவார் கள். எங்கள் வட்டாரத்திலும் இதற்கெல்லாம் ஒன்றும் குறைச்சலில்லை. ஆனால், அவள் கொஞ்சமும் கவலை யற்று, கள்ளங் கபடமின்றி, சுதந்திரமாய் உலாவுகிருள். நிற்கிருள். நடக்கிருள். சிரிக்கின்ருள்.

எங்கள் மன்னியும் இருக்கிருளே. பூசைக்குப் பூ பறிக்க வேண்டுமென்ருல் கூட பப்பி கூட வரவேண்டும். அவர் களுக்கு வீட்டிற்குள்ளேயும் பயம், வெளியேயும் பயம். அவர்களை அப்படி பயமுறுத்தி வைத்திருக்கிருர்கள். பப்பியின் மீது கடுமையான கண்காணிப்பு உண்டு. ஒரு முறை இந்தப் பக்கத்து வீட்டுப் பெண்ணின் அப்பா தன் மனைவியின் தோளில் கையை வைத்தவாறு பேசிக் கொண்டிருந்தார். அவ்வளவுதான். ஏதோ ஒரு சாக்குச் சொல்லி பப்பி உள்ளே அனுப்பி வைக்கப்பட்டு விட்டாள். இது மட்டுமா? இந்தக் காட்சி எங்கள் வீட்டில் பெருத்த பரபரப்பையே ஏற்படுத்திவிட்டது... "சீச்சி, என்ன வெட்கம் கெட்ட தனம் இது"... இதன் பின் அண்டை வீட்டார் ரொம்ப பயங்கரமானவர்கள் என்ற கருத்து எங்கள் வீட்டில் மெல்ல மெல்ல உருவாகத் துவங்கியது.

நாட்களென்னமோ கழிந்துகொண்டே போகின்றன. அண்டை வீட்டார் என்று சிலர் இருப்பதும் இல்லாதிருப்

பதும் ஒன்ருகிவிட்ட நிலையில் அண்டை வீட்டாரின் பாலிருந்த ஆர்வம் அருவருப்பாக மாறி, வெறுப்பை உமிழ ஆரம்பித்துவிட்டது.

நாளடைவில் உலகத்திலிருக்கும், கெட்ட தன்மைகள் தீமைகள் யாவற்றிகும் அவர்களே 'ரெபரென்ஸ்சாக' எடுத்துக் கொள்ளப்படுகின்றனர். எங்கள் பாரவை யெல்லாம் அடுத்த வீட்டில்தான். ஆயிரமாயிரம் முறை வேலியைத் தாண்டி எங்கள் பார்வை ஓடுகிறது. அவசியம், அவசியமில்லாதது என தினசரி காரியங்கள் பலவற்றில் இதுவும் ஒரு 'ரொடீனுகி' விட்டது. எத்தனேயோ பல கவலைக்களுக்கிடையே மனத்தில் இந்தப் புதிய சஞ்சலமும் முளைத்துவிட்டது. நான் கூட இப்படித்தான் என் நேரத்தின் பெரும் பகுதியை விரயமாக்கிக் கொண்டிருக்கிறேன். ஆனுல் அந்தப் பக்கமிருந்து யாராவதொருவர் இந்தப் பக்கம் ஏறெடுத்துப் பார்க்கவேண்டுமே? ஊ ஹூம்... கிடையாது.

அருகே எங்கேயோ 'டீசல் என்ஜின்' கூவிக் கொண்டிருக்கிறது. 'அவுட்டர்' கிடைக்கவில்லை போலிருக்கிறது. அந்த ஓசையின் புதுமை திகைப்பிலாழ்த்துவதாய் இருக்கிறது. இனி சற்று நேரம் எங்களுக்குப் பேச விஷயம் கிடைத்துவிட்டது. டீசல் என்ஜினைப்பற்றிப் பேசுவோம்.

இன்று மத்தியானத்திலிருந்து பக்கத்து வீட்டுக்காரர்களை வீட்டிலேயே காணேும். விருந்தாளிகள் போல் தோன்றுகிறது. இரண்டொருவர் அவர்கள் வீட்டிற்கு வந்திருக்கிருர்கள். பேச்சு, சந்தடி எதுவுமில்லை. என்றும் போல் அமைதி. அதே நிச்சலனம். நான் எழுந்து உள்ளே போனேன். மதனி ஈரத் தலையை ஆற்றிக் கொண்டிருந்தாள். என்ன தோன்றியதோ பக்கத்து வீட்டுப் பெண்ணுடன் என்னைச் சம்பந்தப்படுத்திக் கேலி செய்தாள். மனதிற்குள் சிரித்துக்கொண்டே நான் வெளியே வந்துவிட்டேன். அப்பொழுதுதான் அந்தப்

பெண்ணும் அவள் அம்மாவும் வீட்டிற்குள் நுழைந்தார்கள். கையிலே பாக் செய்யப்பட்ட சாமான்கள். கடைத் தெருவிற்குப் போய்விட்டு வருகிறார்கள் போலும். அப்பாவைக் காணோம். பின் தங்கிவிட்டார் போலிருக்கிறது.

மாலையிலும் மறுநாள் காலையிலும் கவனித்தேன். யார் யாரோ அவர்கள் வீட்டிற்கு வந்து போய்க்கொண்டிருக்கிறார்கள். ஆனால் அதிகம் பேர் வந்ததாகச் சொல்ல முடியாது. ஒரு பண்டிகை பருவம் என்று வந்தால் ஏற்படுமே அந்தச் சூழல். ரசமில்லாத வெறுமை கலந்த ஒரு சூழ்நிலை. ஆனால் பால்காரன் வந்து கூறிய செய்தி எங்களையெல்லாம் எல்லையற்ற திகைப்பிலாழ்த்தி விட்டது. கடந்த இரவு அண்டை வீட்டுப் பெண்ணுக்குத் திருமணம் நடந்ததாம். ஆரிய சமாஜத்தில் நடந்திருக்கிறது. வரன்கூட உள்ளூரில்தான் யாரோ ஒருவன். மதனி பரிகாசம் கலந்த அனுதாபத்துடன் என்னை நோக்கினான். எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. நாங்களெல்லோரும் எத்தகைய கற்பனைவாதிகள் என்பதை நினைத்ததும் சிரிப்பு இன்னும் பலத்தது.

அண்டை வீட்டிற்கு இரண்டொருவர் வருகிறார்கள். உள்ளே செல்லுபவர்கள் சற்றைக்கெல்லாம் வெளியே போய்விடுகின்றனர். வருகிறவர்கள் பெரும்பாலும் கட்டுப்பாடுடன் கம்பீரமாக நடந்து கொள்கிறவர்கள் தான். சிலசமயம் எப்பொழுதாவது சில குழந்தைகள் உரக்கச் சிரிக்கும். இங்குமங்கும் ஓடும். இதைத் தவிர வேறு சந்தடியே கிடையாது. எல்லாம் மிக மிக எளிதாக, சௌகர்யமாக நடக்கிறது. எது எப்படி நடக்கிறது என்பதெல்லாம் தெரியவில்லை. காரியம் நடந்த சுவடே இல்லை. இதற்கு மாறாக எங்கள் வீட்டில் ஒரே பரபரப்பு. நீண்ட நேரத்திற்குப் பின் அந்தப்பெண் வெளியே வருகிறாள். முதல் முறையாக புடவை அணிகிறாள் போலிருக்கிறது. புடவையைச் சரி செய்துகொண்டு கையில்

தேங்காயுடன் வராந்தாவிற்குச் செல்லுகிருள். துடிப்பான இளமைதான். ஆனல் உல்லாசமான அந்த நடை புடவைக் கட்டில் ரொம்பவும் நிதானப் பட்டிருந்தது. ஓரடி வைக்கும்போதே அடுத்த அடியைப் பற்றிய நினைவுடன்தான் நடக்கிருள். முகத்திரை, கிரையெல்லாம் ஒன்றுமில்லை. கணவனேடு பின்னிப் பிணைந்து நடக்கும் போதும் பரம்பரை பரம்பரையாகப் புதுமணப் பெண்ணுக்கு ஏற்படும் நாணமோ, தயக்கமோ, மருட்சியோ அவளிடம் காணப்படவில்லை. அவளுடைய கணவனின் முகம்கூட எனக்கு எங்கோ பார்த்தாற்போல், பரிச்சயமான நண்பனின் முகம் போல் தோன்றியது.

பெண்ணை வழியனுப்புகிருர்கள். அழுகை ஆர்ப்பாட்டம் எதுவுமில்லை. பெண்ணின் அம்மா மட்டும் மகளைத் தழுவிக்கொண்டு கன்னங்களில் பலமுறை முத்தமிடுகிருள். அப்பா மெல்ல கேசத்தை வருடுகிருர். அவ்வளவுதான். பெண்ணின் விழிகளில் திரையிட்ட கண்ணீரின் பளபளப்பு. மறைக்க முடியாத உற்சாகம். புதியதொரு வாழ்வை நுகரும் களிப்பு.

ஃபென்ஸின் இக்கோடியிலிருந்து அணில்கள் அந்தக் கோடியை நோக்கி ஓடுகின்றன. அந்தப் பெண் கண்ணீர் விட்டு அழாதது குறித்து அம்மா தன் வியப்பை என்னிடம் தெரிவித்துக் கொண்டிருக்கிருள். படித்ததினுல் அந்தப் பெண்ணின் இதயம் கல்லாகி விட்டதாம். அம்மா, அப்பாவிடம் உண்மையான பற்ரே, பாசமோ இல்லாமல் போய் விட்டதாம். இது அம்மாவின் எண்ணம்.

'இந்தக் காலத்திலே எல்லாமே இப்படித்தான். வயிற்றை வாயைக் கட்டி வளர்த்தி ஆளாக்கிேனும். ஊஹூம், கண்ணில் இரண்டு சொட்டுக் கண்ணீரைக் காணேம்' என்று பிரலாபித்தாள்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க எனக்குப்

பிடிப்பதில்லை. அம்மாவிற்கு வெய்யிலில் காய்வது இதமாக இருக்கிறது என்பதுதான் முக்கியமான விஷயம். வெய்யில் எங்கெல்லாம் நகருகிறதோ அம்மாவும் நகர்ந்தாள். அப்பா இப்பொழுதுதான் பழம் பெருமை ஒன்றை எங்கள் முன்னே வைக்கிறார். அந்தக் காலத்தில் பெண்கள் கிராமத்தின் எல்லையைத் தாண்டும்வரையில் அழுவார்களாம். அழாதவர்களை அடித்துக் கிள்ளி அழ வைப்பார்களாம். அழாவிட்டால் புக்ககத்தில் அவர்களின் வாழ்க்கை இன்பமாக இருக்க முடியாது என்றரொரு நம்பிக்கை...உண்மையில் அப்பாவிற்கு இன்று அப்படிச் செய்யவில்லையே என ரொம்பவும் வருத்தம்தான்.

'அந்தக் காலம் இப்போ எங்கேயிருக்கிறது? மனிதனின் இதயம் யந்திரமாகிவிட்டது. வெறும் யந்திரம்'...... இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் எப்பொழுதுமே அப்பாவின் குரல் உயர்ந்துவிடும். குட்டிச் சுவராய்ப்போன கலிகாலம் கண்ணெதிரே நாட்டியமாடத் துவங்கிவிடும்.

வீட்டிற்கு மேலே வானத்தில் அங்குமிங்கும் தென்பட்ட சிறிய பெரிய மேகத்துண்டுகள் மேலே நகர்ந்து சென்று விட்டன. வானம் வெறிச்சென்றிருக்கிறது.

பெண்ணுக்கு விடை கொடுத்து வழியனுப்ப அம்மா அப்பா உறவினர்கள் யாவரும் வாசலில் வந்து நிற்கின்றனர். பிள்ளை வீட்டிலிருந்து "ஹெரால்ட்" வண்டி வந்திருக்கிறது. அலங்கரிக்கப்பட்ட அழகிய அறை போலக் காட்சி தருகிறது அது. இதோ...அது மெல்ல நகருகிறது...போகிறது...போய்விட்டது.

எல்லோரையும் விட பாட்டிக்குத்தான் அதிக ஆத்திரம். இந்தத் திருமண விஷயத்தை அவளால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. 'பாண்டா. வாத்தியமா? விளக்கா? சந்தடியா? கோலாகலமா? விதவிதமான பட்சணமா?... எதுவுமில்லை. இதென்ன கல்யாணம்? அப்படி என்னப்பா கருமித்தனம்? இந்த சமயத்தில் கூட

அண்டை அயலார்களை மனிதர்களாக மதித்து ஒரு பேச்சு வார்த்தையில்லை. நல்ல மனிதர்கள், ராம... ராம...' என முணு முணுத்துக் கொண்டே யிருந்தாள்.

பெண்ணை அனுப்பிவிட்டு உள்ளே வந்தவர்கள் ஆளுக்கொரு நாற்காலியை எடுத்துப் போட்டுக்கொண்டு வெளியே உட்கார்ந்து விட்டனர். பெண்ணின் அம்மா தான் சற்று வாட்டமாகவும் வருத்தமாகவும் காணப்படுகிறாள். ஒன்றிரண்டு பேர் அவளிடம் பேச்சுக் கொடுத்து அவளை உற்சாகப்படுத்துவதில் முனைந்திருக்கின்றனர்.

என் நண்பன் ராஜு அந்தப் பெண் ஒரு மாதிரியானவள் என்பதை அத்தாட்சியுடன் நிரூபிக்கத் தயாராக இருக்கிறான். மகத்தான இழப்பினால் ஏற்பட்ட ஆழ்ந்த துயரத்தைத் தவிர வேறு எதுவுமே எனக்குத் தோன்றவில்லை. விசித்திரமானதொரு வெறுமையை நான் உணருகிறேன். பின் தங்கிவிட்டோம் என்ற கழிவிரக்கத்தினால் விளைந்த வெறுமையா? அல்லது அந்தப் பெண்ணைப் பற்றி மேம்போக்காக ராஜு வெளியிட்ட அபிப்பிராயத்தினால் ஏற்பட்ட கசப்புணர்வா? எதுவென்றே புரியவில்லை. அந்தப் பெண் நடத்தை கெட்டவள் என்ற விஷயத்தில் இடையிடையே அர்த்தமற்ற ஒரு அசட்டு திருப்தி, சமாதானம்... ஹூம்... ஒருக்கால்... என் இதயத்தின் ஒரு மூலையில் என் வீட்டாரைப் போல அண்டை வீட்டுக்காரர்களைச் சகித்துக்கொள்ள முடியாததொரு தன்மை ஒளிந்து கொண்டிருக்கிறதோ?

இரவு, அந்தி மாலையெனும் போர்வையை மெல்ல மெல்லக் கழற்றிக் கொண்டிருக்கிறது. ஃபென்ஸுக்கு அப்பால் மேஜையைச் சுற்றி அமர்ந்திருந்தவர்கள் ஒவ்வொருவராக எழுந்து சென்று விட்டனர். தினம் போல் நடு அறையில் மின் விளக்கு எரிகின்றது.

கதவுகளில் பெயர்ந்து விட்ட பகுதியின் மீது மங்கலான வெளிச்சம் கறை படிந்தாற்போல் அப்பியிருந்தது.

அண்டை வீட்டில் என்றும் போல் இரவு அமைதியாக, சந்தடியற்றுக் கழிகின்றது. வீட்டில் ஒரு நபர் இல்லாமலிருப்பதில் அவர்களுக்கு எத்தகைய உணர்வு ஏற்பட்டிருக்குமோ தெரியாது! ஆனால் எங்கள் வீட்டில் அண்டை வீட்டாரைப் பற்றிய நிந்தனைப் படலம் ரொம்ப சூடாக இருக்கிறது.

## சுகம்

போலாநாத் பாபு வேலையிலிருந்து ஓய்வு பெற்று இன்னும் ஒரு வாரம் கூட ஆகவில்லை.

தன்னறையிலே படுத்தவாறு பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார். மாலை வேளை சாளரத்தினூடே தவழ்ந்து வந்த ஒளிக் கதிரொன்று அவரது வழுக்கைத் தலையைத் தழுவியது. மெத்தென்று சின்னஞ்சிறு மதலையின் உள்ளங்கையைப் போல் சூடான பட்டுப்போன்ற ஸ்பரிசம். படுத்திருந்த போலாபாபு எழுந்து உட்கார்ந்தார். பார்த்தால் மாலைக் கதிரவன் மலைத் தொடர்களுக்குப் பின்னால் போய்விட்டான். ஆனால் அப்பட்டுக் கதிர் மட்டும் அவர் தலையின் மீது அப்படியே தவழ்ந்து கொண்டிருக்கிறது.

அவர் எழுந்தார், எதிர் சுவரின் மீது தம் கரத்தை வைத்துப் பார்த்தார். சற்று முன் செம்பொற் கிரணங்கள் இங்குதான் படிந்திருந்தன. உள்ளங்கையில் லேசான கதகதப்பு. இளம் சூடு இன்னுமிருந்தது. கையை எடுத்து அப்படியே கன்னத்தில் வைத்துக்கொண்டார். கன்னத்துச் சதைப் பகுதியில் ஓர் அங்குலம் குழி விழுந்திருந்து கிடந்தது. அவருக்கு வருத்தமாகத்தானிருந்தது. உடனே அறையை விட்டு வெளியேறினார்.

வெளியே பச்சைப் புல்வெளியெல்லாம் செவ்வொளி பட்டு தகதகத்தது. மதிற்சுவரில் கூட செவ்வொளியின் செந்நிறம். வேகமாய் அடியெடுத்து வைத்து மதிற் சுவரை நோக்கி விரைந்தார் அவர். அதன் அருகில் சென்றதும் நின்றுவிட்டார். இங்கிருந்து கதிரவனைக் காண முடிந்தது. அங்கேயே நின்றார். மலைகளுக்குச் சற்று மேலே மேகங்களுக்கு அப்பால் முகிற் கூட்டங்களுக்கிடையே உயர்ந்து நின்ற பனை மரங்கள், கருவேல

மரங்களுக்கிடையே... போலாபாபு தன்னைக் குனிந்து பார்த்துக்கொண்டார். முரட்டுத் துணியிலான வெள்ளைச் சட்டை கூட ரோஜா வண்ணமாகி விட்டிருந்தது. போலாபாபுவின் இதழ் கடையில் இளம் முறுவல் தவழ்ந்தது. பிரமாதம், இந்த உலகம்தான் எத்தனை அருமையானது? எத்தனை அருமையான, அற்புதமான பொருள்கள் இதில் இருக்கின்றன? ஆகா!

மதிற்சுவருக்கு அப்பால் தனது பார்வையைச் செலுத்தினார் போலாபாபு. இங்குமங்கும் பார்த்தார். தூரத்தில் ஹரிஜனங்களின் குப்பத்தைப் பார்த்தார். குடிசைகள் நீண்டு தெரிந்தன.

ஆலயத்தருகே பசுமாடு ஒன்று நின்று வாலை ஆட்டிக் கொண்டிருந்தது. பசு வெள்ளையாக இருக்கிறதா அல்லது சிவப்பாகவா என்று உற்றுப் பார்த்தார். ஆனால் அவரால் ஒரு முடிவிற்கு வர இயலவில்லை. 'பேஷ், நல்ல வேடிக்கை இது.' தனக்குள் சிரித்துக் கொண்டார் அவர்.

எதேச்சையாக அவரது கவனம் கதிரவனின் மீது சென்றது. என்ன இது? கதிரவனின் பிம்பம் திடீரென சிறியதாகிறது, பெரியதாகிறது. நடுங்குகின்றதே!

'அடியே...' போலபாபு உரக்கக் கூவினார்.

பதில் வரவில்லை.

'அடியே, உன்னைத்தான்'... அவர் மீண்டும் கத்தினார்.

'என்ன வேண்டும்?' முந்தானையில் கையைத் துடைத்தவாறு அவரது மனைவி வெளியே வந்தாள்.

'கொஞ்சம் இங்கே வாயேன்.'

அவள் ஓடி வந்து அருகே நின்றாள்.

'அதோ பார் எதிரே.'

அவள் தெருவைப் பார்த்தாள்.

'தெருவை அல்ல. அதோ...... அங்கே...... தூரத்தில் பனை மரங்களுக்குப் பின்னால்.'

அவள் எழும்பி, எட்டிப் பார்த்தாள். பிறகு அவர் பக்கம் திரும்பினாள். முகத்தில் ஒரே மலர்ச்சி.

'எவ்வளவு அழகாக இருக்கிறது. பார்த்தாயா?' போலாபாபுவிற்கு ஒரே பரவசம்.

'ஆமாம், ரொம்ப நன்றாயிருக்கிறது.'

'எது நன்றாயிருக்கிறது?' போலாபாபு வலதுபுறம் திரும்பினார்.

'செங்கல் சுமையை ஏற்றிக்கொண்டு வரிசை வரிசையாய் கோவேறு கழுதைகள். அவற்றின் பின்னால் மனிதர்கள். எவ்வளவு அழகான காட்சி!'

போலபாபு உரக்கச் சிரித்தார்.

'பெண்ணினம் அல்லவா? கோவேறு கழுதையையும் கழுதையையும் தவிர வேறு எதைப் பார்க்கத்தெரியும்?'

'பின் எதைப் பார்க்கச் சொல்லுகிறீர்கள்?'

'ஒன்றுமில்லை போ. போய் கூழைக் கிளறு, மாவைப் பிசை, போ, போ.'

'ஊஹூம். எனக்குந்தான் காண்பியுங்களேன், பார்க்கிறேன்.' அவள் பிணங்கி நின்றாள்.

'எதைக் காட்டுவது? மண்ணாங்கட்டியை, கோவேறு கழுதையைக் காட்டுவதற்காகவா இத்தனை பாடு பட்டேன்?'

'பின் என்னவாம்?'

'அதோ பார். பனைமரங்களுக்குப் பின்னால்... மங்கலாக மலைகள், மலைத்தொடர்கள் தெரிகிறதா?'

'ஊம்.'

'செங்கதிரவன்?'

'ஊம்.'

'கதிரவனின் மீது இலேசான இளம் பழுப்பு நிற மேகக் கீற்றுக்கள்.'

'ஓ!'

'பார், நன்ருகப் பார்!'

'இதில் பார்க்க என்ன இருக்கிறது? நீங்கள் இன்று தான் பார்க்கிறீர்கள் போல இருக்கிறது. நான் தினந் தினம் பார்த்துக்கொண்டே இருக்கிறேனே.'

'ஓகோ'... போலாபாபு தலையை ஆட்டினுர். 'ஆயுள் முழுவதும் தினந்தினம் பார்த்துக்கொண்டிருக்கிருய். அப்படித்தானே?'

'ஆமாம்.'

'அப்ப சரி, ரொம்ப சரி, ரொம்ப நல்ல காரியம் செய் கிருய். இப்போ ஒரு காரியம் செய். போ, உள்ள.'

அவள் அங்கேயே நின்ருள். அவரையே கண் கொட் டாமல் பார்த்துக்கொண்டு நின்ருள்.

'நான் சொல்லுகிறேன்...... போ உள்ளே!' போலாபாபு கத்தினுர் உரக்க.

பயந்துபோன அவள் உள்ளே போய்விட்டாள்.

போலாபாபு அவ்விடத்திலேயே நின்ருர். கதிரவன், மேகங்கள், வானத்தில் மாறிமாறி நிழலாடும் வண்ண மேகங்கள். வண்ண முகிலிடையே படரும் ஒளிக் கீற்று கள். மேகங்கள் மூடிய மலைகள், அதன் மங்கலான உரு வெளித் தோற்றங்கள், கவிந்துவரும் மூட்டம். இளம் மூட்டத்திற்கு மேலே தெரியும் சிகரங்களின் மீது தவழ்ந்து வரும் செம்பொன்னிற மஞ்சு...... அது மெல்ல மெல்லக் கரைந்துவரும் அழகு... வாழ்க்கை முழுவதையும் தந்தி குமாஸ்தாவாகவே கழித்துவிட்ட போலாபாபு சிந்தனையி லாழ்ந்தார். பெரும்பாலும் மலைநாட்டு நகரங்களில் தான் அவர் வேலை பார்த்திருக்கிருர். ஒரு கிராமம், ஊர், நகரம், எதையும் விட்டதில்லை. பார்த்துவிட்டார். ஆனுல், இந்தக் கதிரவன்! இதுவரை இக்கதிரவன் எங்கே இருந் தான்? இந்தப் பொன் மாலைப்பொழுது எங்கேயிருந்தது? இன்று... இன்று! அவர் காண்பதுதான் என்ன?'

பின்னுலிருந்து குழந்தை சிரிக்கும் ஒலி கேட்டது.

'யார், நீலுவா?'

நீலு குதித்தோடி வந்தான்.

'எல்லோரும் எங்கே காணும்?'

'விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.'

'எங்கே விளையாடுகிறார்கள்?'

நீலு வீட்டின் பின்னலிருந்த மைதானத்தைச் சுட்டிக் காட்டினன்.

'சரி போ... ஓடிப்போய் எல்லோரையும் அழைத்துக் கொண்டு வா.'

நீலு ஓடிவிட்டான்.

போலாபாபு கதிரவனையே பார்த்துக்கொண்டு நின்றார். இங்கே நின்று பார்த்தார். அங்கே போய் அங்கிருந்து பார்த்தார். இங்குமங்குமாய்ப் பார்த்தார். குனிந்து உயர்ந்து பார்த்துக்கொண்டே நின்றவர், பரவசமுற்றவராய், கைகொண்டினார்.

கரிய மேகத்துணுக்கின் கீற்றுப் படர்ந்த கதிரவனின் மேற்பகுதி மறைந்து கொண்டிருப்பதுபோல் அவருக்குப் பட்டது. செம்பொற்கிரணங்கள் சுற்று முற்றும், மைதானத்திலும், பசும் வயல் வெளிகளிலும், குடிசைகளின் மீதும் எங்குமே தவழ்ந்து விளையாடவில்லை. மேகங்களுக்குப் பின்னலிருந்து, மேல் வானத்தை நோக்கிப் படர்ந்து கொண்டிருக்கின்றன. ஒளிக்கற்றைகள் பல்வேறு வண்ணக் கதிர்கள்.

'நீலு!' பின்னல் திரும்பிக் கூவினார் அவர்.

ஒருவரையும் காணோம்.

முணு முணுத்தார். 'எல்லோரும் ஒரேயடியாய் எங்கே தொலைந்து போனார்கள்? அட, இதென்ன? யார் போகிறது அங்கே? யாரப்பா நீ?'

எதிரே பாதையில் ஒரு ஒட்டகம் சென்று கொண்டிருந்தது. அழுக்குச் சட்டையணிந்த ஒருவன் அதன்

மீது அமர்ந்து நிம்மதியாய் பீடிப் புகையை ஊதித் தள்ளிக் கொண்டிருந்தான்.

'ஏய், உன்னைத்தான்.'

கழுத்தைத் திருப்பி அவரை நோக்கினான் அவன்.

'கொஞ்சம் அதோ, அந்தப் பனை மரங்களுக்குப் பின்னால் பார். என்ன தெரிகிறது உனக்கு?'

ஒட்டகக்காரன் அத்திசையைப் பார்த்தவாறே போய் விட்டான். நிற்கவில்லை.

'அயோக்கியப் பயல்!' போலாபாபு வார்த்தையை உமிழ்ந்தார்.

கதிரவன் அஸ்தமித்து விட்டான், போலாபாபு மெல்ல அவ்விடத்தை விட்டு நகர்ந்தார். சாய்வு நாற்காலியில் வந்து சாய்ந்துகொண்டார். மௌனமாய் அவர் மனம் சோர்விலாழ்ந்தது.

தேநீர் வந்தது. எதிரேயிருந்த மேஜையின் மீது வைக்கப்பட்டது. அவர் கண்களைத் திறந்து பார்த்தார். எதிரே மனைவி நின்றாள்.

'கொஞ்சம் வேட்டியையும் கைத்தடியையும் எடுத்து வா.'

'ஏன், வெளியே போகப் போகிறீர்களா?'

போலாபாபு பதில் கூறவில்லை.

கைத்தடியும் வேட்டியும் வந்துவிட்டன. வேட்டியை உடுத்திக் கொண்டார். கைத்தடியை எடுத்துக்கொண்டார். புறப்பட்டுவிட்டார். 'இது ஒன்றும் அப்படி இலேசாக விட்டுவிடும் விஷயமில்லை.' என்று நினைத்துக் கொண்டார் மனதில்.

இன்று அவர் போய் இதைச் சொல்லப் போகிறார். எல்லோரிடமும் சொல்லப் போகிறார். முதன் முதலில் மாதவனின் வீட்டுக்குத்தான் போகவேண்டும். மாதவன் அதிகாரி அல்லவா? எல்லா விஷயமும் தெரியும். புரிந்து

கொள்வான். பிறகு அவனை அழைத்துக்கொண்டு வேறெங்காவது போகலாம்.

போலாபாபு தெரு முனையில் திரும்பும்போது எதிரே பார்த்தார். தானியக் கிடங்கு மாவட்ட அதிகாரிகூட வந்திருக்கிறார். மற்றவர்களெல்லாம்கூட இருக்கிறார்கள். போலாபாபு உள்ளே நுழைந்தார்.

'வாருங்கள், வாருங்கள், உட்காருங்கள்...' மாவட்ட அதிகாரி வரவேற்றார்.

போலாபாபு ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் அமர்ந்தார். அவரது கிழக்கண்கள் சுற்றியிருந்தவர்களை உற்றுப் பார்த்தன. பலபல புதிய முகங்கள். அவர் வந்ததால் கூடியிருந்தவர்களின் பேச்சு தடைப்பட்டுவிட்டது போலிருந்தது.

'என்ன விஷயம்? ஏதோ போல் இருக்கிறீர்களே?'

'ஒன்றுமில்லை. சும்மாதான்'...போலாபாபு சிரிக்க முயற்சித்தார். மீண்டும் பேச்சுக்கள் தொடர்ந்தன. இம்முறை வாய்க்காலில் மீன்கள் நிறைய வந்திருப்பதாய்க் கூறினார் மாவட்ட அதிகாரி.

'சாகப், உங்களுக்கு மீன் ரொம்பவும் விருப்பமென்றால் ஒரு காரியம் செய்யுங்கள்' என்றான் ஒருவன்.

'என்னது?'

'இராத்திரி வேளையில் வலையைப்போட்டு வையுங்கள்.'

'ஆமாம் சாகப். இரா வேளையில்தான் மீன்கள் மிகுதியாக வரும்' என இன்னொருவன் ஆமோதித்தான்.

போலாபாபுவிற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. சற்று முன்னால் நகர்ந்து வந்தார். 'ஏன்? அந்தி வேளையிலேயே வலையை விரித்து விட்டால் என்ன?'

'ஆமாம், அப்படிக்கூடச் செய்யலாம்'...... என்றார் மாவட்ட அதிகாரி.

'மாலை வேளை என்றால்'... போலாபாபு மேலும் விளக்கம் தந்தார். 'சூரியன் மலைவாயில் விழும் நேரம்.'

'மாலை வேளையாவது ஒன்றுவது… மீன்கள் வருவது ஒன்று நள்ளிரவிற்குமேல், அல்லது விடியற்காலம்.'

'விடியற்காலையில்தான் பின்னும் அதிகம்.'

போலாபாபு ஆயாசத்துடன் நாற்காலியில் சாய்ந்து கொண்டார். சந்தர்ப்பம் கை நழுவிப் போய்விட்டது குறித்து அவருக்கு ஏமாற்றமாக இருந்தது. மௌனமாக வீற்றிருந்தார். இத்தனை பேர்களுக்கு நடுவே அதைப் பற்றிப் பேசுவது சரியாக இருக்காது என்று தோன்றியது. தனியாக இருந்தால் செய்யலாம் என நினைத்தார் அவர். நெடுநேரம் வரை அவர் பொறுமையோடு காத்திருந்தார். ஆனால் யாவரும் அங்கிருந்து அசைவதாகவே காணோம்.

'சாகப்…' என்றார் போலாபாபு எரிச்சலுடன். மாவட்ட அதிகாரி அவரைத் திரும்பிப் பார்த்தார்.

'உங்களுடன் ஒரு முக்கியமான விஷயம் கூற வேண்டும்.'

'என்னிடமா?' மாவட்ட அதிகாரி முனைப்புடன் நிமிர்ந்தார். 'சொல்லுங்கள்.'

போலாபாபு எழுந்தார். அவர் ஜாடை காட்டியதும் மாவட்ட அதிகாரியும் எழுந்தார்.

அவரைத் தானியக்கிடங்கிலிருந்து அப்பால் அழைத்துச் சென்றார் போலாபாபு.

'சாகப்…' என்று துவங்கினார் அவர். 'உங்களிடம் மறைப்பதற்கென்ன இருக்கிறது. நீங்கள் எல்லாம் அறிந்தவர்.'

'போலாபாபு… தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?'

போலா பாபு கணநேரம் தயங்கினார். பின்னர் வினவினார். 'நீங்கள் தினமும் மாலையில் உலாவப் போகிறீர்கள் அல்லவா?'

'ஆமாம்.'

'இரவு தான் திரும்புகிறீர்கள்.'

'ஆமாம்.'

'இன்று நீங்கள் கதிரவனைப் பார்த்திருக்கலாம்.'

'ஆம். பார்த்தேன்.'

போலாபாபு சில நிமிடங்கள் வரை மிளிரும் கண்களால் அதிகாரியின் முகத்தைப் பார்த்துக் கொண்டே நின்றார். அவர் மௌனம் சாதிப்பதைக் கண்டதும், 'இன்று கதிரவன் செம்பொற் பரிதிபோல், எத்தனை அழகாக, அற்புதமாக இருந்தது தெரியுமா? அதன் அழகை என்னவென்று சொல்லுவேன்: வையகமே செவ்வொளியாகி விட்டது···சாகப். நீங்கள் பார்த்தீர்களா?'

'புதிதாக இதில் ஒன்றுமில்லையே. தினம் தினம் இப்படித்தானே காட்சி தருகிறது. இயற்கை யென்பதே இதுதான்.'

'இல்லை, சாகப். தினம் தினம் இப்படி எங்கேயிருக்கிறது?' என்றார் போலாபாபு வியப்புடன்.

'அதிருக்கட்டும்' அதிகாரி அலட்சியமாகத் தொடர்ந்தார். 'சொல்லுங்கள், விஷயம் என்ன?'

'இனி, சொல்வதற்கென்ன இருக்கிறது, சாகப்?' என்றவாறே மேலே நடந்தார் போலாபாபு.

நேராகக் கடைத்தெருவிற்குப் போனார். கடைத்தெருவில் அப்பகுதி இன்னும் மூடப்படவில்லை. திறந்திருந்தது. சாலையில் விளக்குகள் எரிந்தன. தெரிந்த, தெரியாத, அறிமுகமாகாத எத்தனையோ பேர்கள். ஆனால் போலாபாபு யாருடனும் பேசவில்லை. தன் பாட்டில் நடந்து கொண்டிருந்தார். தான் கண்ட காட்சியைப் பற்றி அவர் நிறையப் பேர்களிடம் சொல்லவேண்டி இருந்தது. ஆனால் அவர் இன்னமும் ஒருவரிடமும் சொல்லவில்லை. அவர் வருத்தமாக இருந்தார். தானாகவே மாவட்ட அதிகாரியிடம், வலியச் சென்றது குறித்துத்தான் அதிகம் வருந்தினார். மாவட்ட அதிகாரி மிகவும்

அறிவாளி, திறமைசாலி என எல்லோரும் கூறினர். அவரும் அதை ஏற்றுக் கொண்டிருந்தார். அப்படித்தான் நினைத்தார். ஆனால் இன்று குட்டு வெளியாகி விட்டது. அந்த மனிதர் கதிரவனையே பார்க்கவில்லை என்றால் சரி. அந்த விஷயம் வேறு. ஆனால் இன்று பார்த்திருக்கிறார். அதுவும் நன்றாகப் பார்த்திருக்கிறார்.

போலாபாபு இந்த விஷயத்தைப் பற்றிப் புதிய முறையில் இப்பொழுது சிந்திக்கவேண்டியிருந்தது. இதைப் பற்றி அவர் சிந்திக்கவும் செய்தார். எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளும்படியான சாதாரண விஷயமல்ல இது... என்ற எண்ணமே அவருக்குப் பின்னும் வேதனையளித்தது.

மாவட்ட அதிகாரி அதிகம் படித்தவர்தான். படித்தால் மட்டும் போதுமா? பார்க்கப் போனால் படிப்பு அறிவு, இரண்டும் வெவ்வேறு விஷயங்கள். அதிலும் இதுபோன்ற விஷயங்களுக்கு, வயது, அனுபவம் இரண்டுமே தேவை.

போலாபாபு மாதவனிருந்த தெருவிற்குள் நுழையப் போனவர், மாதவன் கையில் பக்கெட்டுடன் அடுத்த தெருவிலிருந்து வருவதைக் கண்டார். கொஞ்சம் இருட்டாக இருந்தது அங்கே.

'மாதவா' என்றழைத்தார் அவர்.

'பாபு, நான் தான் சோகன்.'

'அட, நீயா? சரி ஒன்றுமில்லை.'

அவன் இரண்டடி நகர்ந்ததும் அவர் மீண்டும் அழைத்தார். மாதவன் மத்தியானமே வெளியே போய்விட்டதாகவும் இன்னும் திரும்பி வரவில்லை என்றும் சோகன் தெரிவித்தான்.

'எங்கே போயிருக்கிறார்?'

'ஏதோ ஒரு கிராமத்திற்கு.'

'ஓகோ, பகல் முழுவதுமே வீட்டில் இல்லையா?'

'ஆமாம்.'

போலாபாபுவின் சிந்தனை ஓடியது. 'அப்படியானால் அவன் அந்திமாலைக் கதிரவனை எங்கே பார்த்திருக்கப் போகிருன்?' தன்னெதிரே நின்ற சோகனின் வயதையும் அனுபவத்தையும் கவனித்துப் பார்த்தார் அவர். பிறகு விசாரித்தார். 'நீ மாலை வேளைகளில் என்னப்பா செய்கிருய்?'

'பிண்ணுக்கு அறைக்கிறேன். தவிட்டைக் கலக்கி வைக்கிறேன். பால் கறக்கிறேன்.'

'சூரியனைப் பார்க்கிருயா, இல்லையா?'

'சூரியனு?' சோகன் வியப்புடன் கேட்டான்.

'இன்று பார்த்தாயா?'

'எந்த சூரியன்? வாணியன் சூரியனு?'

'இல்லை, செக்கு முட்டாள், முட்டாள்.' போலாபாபுவுக்கு ஒரே ஆத்திரம்.

சோகன் சிரிக்கலானுன். 'பாபு, நான் படிக்காதவன். எனக்கென்ன தெரியும், நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்று?'

'நான் வானத்திலிருக்கிறதே, சூரியன்... அதைப் பற்றிக் கேட்கிறேன்.'

'அதுவா? பார்த்தேனே.'

'ஏதாவது விசேஷமாகத் தெரிந்ததா?'

'அப்படியென்ருல்?'

'கொஞ்சம் வட்டமாய், கொஞ்சம் சிவப்பாய்...' போலா பாபு சோகனுக்கு உதவ முன் வந்தார்.

'அப்படியென்ருல்?'

'அப்படியென்ருல் உன் தலை. போ எருமையைக் குளிப்பாட்டு.' கோபத்துடன் சீறிஞர் அவர்.

போலாபாபு திரும்பி விட்டார். அவருக்கிருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் போய் விட்டது. 'சே, இந்த மனிதர்

கள் தான் எப்படிப்பட்ட நிலையை அடைந்து கொண்டிருக்கிறார்கள்?' என அவர் உள்ளம் குமைந்தது.

வீட்டிற்கு வந்து கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனார். கைத்தடியை ஒரு பக்கம் வைத்துவிட்டுப் படுக்கையில் சாய்ந்தார். 'ஹூம், இந்த உலகம்தான் எப்படி மாறிவிட்டது?' என மீண்டும் மீண்டும் நினைத்து வருந்தினார். நாளைக்கும் மாலை நேரம் வரும். அவர் எல்லோரையும் அழைத்து வந்து அத்தமிக்கும் ஆதவனைக் காட்டுவார். இந்த அடுக்களை, அடுப்பு, திட்டம், கோர்ட்டு, ஒட்டகம், எருமை, பால், இது மட்டும் உலகமில்லை. இதுவேதான் உலகம் என்பதில்லை. சூரியனும் இருக்கிறான் மலைத்தொடர்களுக்கப்பால், பனைமரங்களுக்கிடையே அவன் தென்படுகிறான். அவனது பிம்பம் நடுங்குகிறது. மலைகளுக்குப் பின்னே அவன் மறைகின்ற ஒரு கணம் வருகிறது. அத்தமிக்கும் முன் மென்மையான ஒளிக்கதிரை உன் வழுக்கைத் தலையில் விட்டுச் செல்லுகிறான் அக்கதிரவன், என்றெல்லாம் சொல்ல வேண்டும் போலிருந்தது.

திடீரென ஏதோ நினைவு வந்தவர்போல் போலாபாபு தலையைத் தடவிப் பார்த்துக் கொண்டார். குளிர்ச்சியாய், சில்லென்றிருந்தது. 'ஹூம், நாளைக்குக்கூட இதனையெல்லாம் எத்தனை பேர்களால் புரிந்துகொள்ள முடியப் போகிறது' என்ற எண்ணம் பிறந்ததும் அவர் துயரத்தில் மூழ்கினார். அவரது நிம்மதி குலைந்தது.

யாரோ உள்ளே வரும் காலடி ஓசை கேட்டது. பார்த்தால் மேஜையின் மீது சாப்பாடு பறிமாறிய தட்டு. கட்டிலின் ஒரு ஓரத்தில் மனைவி அமர்ந்திருந்தாள்.

'மாலையில் எங்கே போயிருந்தீர்கள்?'

'எங்குமில்லை'... கசப்புடன் பதில் வந்தது.

'உடம்பு சரியாக இல்லையா?'

போலாபாபு பதில் அளிக்கவில்லை.

அவள் போர்வைக்குள்ளே கையை விட்டு, காலைத் தொட்டுப் பார்த்தாள்.

'சரியாகத் தானிருக்கிறேன்.'

இதற்குள் பிட்டி, நீலு மற்ற குழந்தைகள் என யாவரும் வந்து விட்டனர்.

'எழுந்திருங்கள்... சாப்பிடுங்கள் எழுந்திருந்து.'

'இன்று நான் சாப்பிடப் போவதில்லை.'

'ஏனும்?' திடுக்கிட்ட குரலில் கேட்டாள் மனைவி.

நெடுநேரம் மனச் சோர்வுடன் வியாகூல முற்றவராய்ப் படுத்திருந்தார் போலாபாபு. வாய் திறந்து பேசவேயில்லை. பின்னர் அடங்கிய குரலில்... 'இவள் மனைவி, இது மகன், இது மகள், இது வீடு, இது சொத்து, சுதந்திரம், இவர்கள் நண்பர்கள், உறவினர்கள், இவையெல்லாம் மேலுக்குச் சொல்லிக் கொள்வதற்குத்தான். உண்மையில் யாவரும் யாருக்குமில்லை...' என்ருர்.

'ஐயோ, இதென்ன, எப்படியெல்லாமோ பேசுகிறீர்களே.' மனைவியின் கண்களிலிருந்து நீர் பெருகியது.

'எனது துன்பத்தை ஒருவரும் புரிந்து கொள்ள வில்லையென்ருல், மனைவியாவது, மகளாவது.'

மனைவி விசும்பலானுள்.

'எனக்கு ஒருவருமே கிடையாது' போலாபாபுவின் குரல் தழுதழுத்தது.

'இல்லை, இல்லை, அப்படிச் சொல்லாதீர்கள். ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்? உங்களுக்கென்ன வந்து விட்டது?'

மனைவி உரக்க அழலானுள். அதைப் பார்த்த குழந்தைகளும் விம்மத் தொடங்கின.

'இதில் அழுவதற்கென்ன இருக்கிறது? நீங்கள் எல்லோரும் போங்கள். சாப்பிடுங்கள். நான் சாப்பிடப் போவதில்லை' என அழுகை கலந்த குரலில் கூறிய போலாபாபு திரும்பிப் படுத்துக்கொண்டார்.

குழந்தைகளின் முகத்தைப் பார்த்துவிட்டு அவர் மனைவி பின்னும் பலமாக அழவாரம்பித்தாள். குழந்தைகளும் சேர்ந்து கத்தின. தலையணையில் முகத்தைப் பதித்துக்கொண்ட போலாபாபுவும் கேவினார். பின்னர் மெல்ல எழுந்து உட்கார்ந்து. மனைவியின் தோளைப் பிடித்து உலுக்கினார். 'ஏய், ஏன், எதற்காக இப்படியெல்லாம்?'...

அவளது அழுகை பின்னும் பலத்தது. உரக்க அழவாரம்பித்தாள். பார்த்துக் கொண்டேயிருந்த போலாபாபு திடீரெனத் தானும் விம்மி விம்மி அழலானார்.

அழுத குரல்களிலே மிகவும் உரத்து, கருணை நிரம்பிய ஓலமாய் ஒலித்தது போலோபாபுவின் குரல்தான்.

## எழுத்தாளர்களின் விலாசம்

1) ஸ்ரீ சந்திரதர் சர்மா குலேரி— அனுமதிக்கு அவசியமில்லை.

2) ஸ்ரீ பிரேம்சந்த் — ஸ்ரீயத் ராய் - சரஸ்வதி பிரஸ்
5, சர்தார் படேல் மார்க்,
அலகாபாத்.

3) ஸ்ரீ ஜெயசங்கர் பிரசாத் — ஸ்ரீ ரத்னசங்கர் பிரசாத்
கோவர்த்தன் சராய்
வாரணாசி-1.

4) ஸ்ரீ ஜைனேந்திரகுமார் — பூர்வோதயம் பிரகாசன்
கிருதிபவன், தரியாகஞ்ச்
தில்லி-6.

5) ஸ்ரீ யஷ்பால் — மகாநகர் - லக்னோ.

6) ஸ்ரீ ராங்கேயராகவ் — C/o ராஜ்பால் அண்ட் சன்ஸ்
தில்லி-6.

7) ஸ்ரீ பணிஷ்வர்நாத்ரேணு — C/o ராஜ்கமல் பிரகாஷன்
8, பைஜ் பஜார், தில்லி-6.

8) ஸ்ரீ நிர்மல் வர்மா — 14 A/20 வெஸ்டர்ன்
எக்ஸ்டென்ஷன் ஏரியா,
கரோல் பாக், புது தில்லி-5.

9) ஸ்ரீ மோகன் ராகேஷ் — ஆர். 522, நியூ ராஜேந்திர
நகர், புது தில்லி-5.

10) ஸ்ரீ அமர் காந்த் — C/o மாயா காரியாலயம்
அலகாபாத்.

11) ஸ்ரீ ராஜேந்திரயாதவ் — அக்ஷர் பிரகாஷன்
அன்சாரி ரோட், தில்லி-6.

12) ஸ்ரீ கமலேஷ்வர் — ஆசிரியர் – சாரிகா
டைம்ஸ் ஆப் இண்டியா
பில்டிங், பம்பாய்.

13) ஸ்ரீகாந்த வர்மா — 95, நார்த் அவென்யூ
புது தில்லி.

14) ஸ்ரீ ஞானரஞ்சன் — C/o அக்ஷர் பிரகாஷன்
அன்சாரி ரோட், தில்லி-6.

15) ஸ்ரீ காசிநாத் சிங் — பி–2/31 லோலார்க்குண்ட்
மர்தனி, வாரணாசி.

## எழுத்தாளர் அறிமுகம்

### சந்திரதர் சர்மா 'குலேரி'

(1883 — 1920) பிறந்த ஊர் குலேர் (பஞ்சாப்). முதலில் மேயோ காலேஜ், ஆஜ்மீரில் ஆசிரியர்; காசி இந்து சர்வகலா சாலையில் சம்ஸ்கிருத மகாவித்யாலயத்தின் முதல்வர். புதை பொருள் ஆராய்ச்சியாளர், மொழி இயல் வல்லுனர். இந்தியில் 'கசுவாதர்மம்', 'மாரேசி மோஹி குடாவும்', போன்ற லலித கட்டுரைகள், மூன்றே சிறு கதைகள். 'அவள் சொன்னாள்' 1915ல் 'சரஸ்வதி'யில் வெளியாயிற்று.

### பிரேம்சந்த்

(1880 — 1936) பிறந்த ஊர் லம்ஹி—பனாரஸ் (உத்திரப் பிரதேசம்) முதலில் உர்தூவில் எழுதத் துவங்கி, பின்னர் இந்தியில் எழுதலானார். 'ஜாகரண்' என்ற வாரந்தர இதழ், 'ஹம்ஸ்' என்னும் மாத இதழின் ஆசிரியராகப் பணியாற்றினார். கிட்டத் தட்ட 12 நாவல்கள், 250 சிறுகதைகள் இவரது படைப்புக ளாகும். 'சேவாசதனம்', 'பிரேமாசிரமம்', 'ரங்கபூமி', 'கர்ம பூமி', 'கபன்', 'கோதான்' முதலியவை குறிப்பிடத் தக்கவை. 'மானசரோவர்' என்ற தலைப்பில் எட்டுத் தொகுதிகளாக பெரும் பாலான சிறுகதைகள் வெளிவந்துள்ளன. 1936ல் கஃபன் — (சவக்கோடி) வெளியாயிற்று.

### ஜயசங்கர் பிரசாத்

(1889 — 1937) பிறந்த ஊர் பனார்ஸ் (உத்திரப் பிரதேசம்). கவிஞர். நாவலாசிரியர். நாவல்களும் சிறுகதைகளும் எழுதி யுள்ளார். பிரசித்திபெற்ற காவியநூல் 'காமாயனி'. புகழ் பெற்ற நாடகங்கள் — 'ஸ்கந்தகுப்தன்', 'சந்திரகுப்தன்'. புகழ் பெற்ற நாவல்கள் — 'தித்லீ', 'கங்கால்'. கதைத் தொகுதிகள் — 'சாயா', 'பிரதித்வனி', 'இந்திரஜால்', 'ஆந்தி', 'ஆகசதீபம்'.

### ஜைனேந்திர குமார்

பிறப்பு — 1905 — காடியாகஞ்ச் ஜில்லா - அலீகட் (உத்திரப் பிரதேசம்). வாழ்ந்துவரும் இடம் தில்லி. நாவலாசிரியர், சிறு

கதை எழுத்தாளர். சிந்தனையாளர். புகழ்பெற்ற நாவல்கள் — 'பரக்', 'சுநீதா', 'தியாகபத்திரம்', 'ஜெயவர்தன்'. பெரும்பாலான சிறுகதைகள் 'ஜைனேந்திரரின் சிறுகதைகள்' என்ற நூல் வரிசையில் பத்துத் தொகுதிகளாக வெளியாகியுள்ளன.

## யஷ்பால்

பிறப்பு — 1903 — பிரோஸ்பூர் சாவனி (பஞ்சாப்). முன்னோர்கள் காங்கடாவைச் சேர்ந்தவர்கள். வாழ்ந்துவருவது லக்னோ, நெடுநாட்கள்வரை புரட்சி இயக்கத்துடன் தொடர்பு, சிறைவாசம். 1938ல் எழுத்துலகில் பிரவேசம். நாவலாசிரியர், சிறுகதை எழுத்தாளர், கட்டுரையாளர். சிறந்த நாவல்கள் 'தாதா காம்ரேட்', 'பார்ட்டி காம்ரேட்', 'தேசத் துரோகி', 'மனுஷ்ய கேரூப்', 'திவ்யா', 'ஜூடா சச்'. முக்கியமான சிறுகதைத் தொகுதிகள்: 'பிஞ்சரே கே உடான்', 'ஞான தான்', 'வோ துனியா', 'தர்மயுத்த'. கட்டுரைத் தொகுதியின் தலைப்பு — 'துமனே க்யோம் கஹா தா கி மைம் சுந்தர் ஹூம்.'

## ராங்கேய ராகவ்

(1923 — 1963) தென்னாட்டவர். தாய் கன்னடப் பிரிவைச் சேர்ந்தவர், தந்தை தமிழ் நாட்டவர். பெரும்பாலும் ஆக்ரா, பரத்பூரில்தான் வாழ்ந்திருந்தார். குறிப்பாகச் சிறந்த நாவலாசிரியர். சிந்தனைவாதி. கவிதைகளும் எழுதியுள்ளார். சிறந்த நாவல்கள்: 'கரௌந்தே', 'முர்தோம் கா டீலா', 'விஷாதமட்', 'கப் தக் புகாரூம்'. சிறப்பானக் கதைத் தொகுதி: 'மேரி பிரிய கஹானியாம்.'

## பணீஷ்வர்நாத் ரேணு

பிறப்பு — 1921 — பூர்ணியா (பிகார்). நாவலாசிரியர். சிறுகதை ஆசிரியர். சிறப்பான படைப்புகள்: 'மைலா அஞ்சல்', 'பர்தி பரிகதா', 'தீர்க்கதபா'. கதைத் தொகுதிகள்: 'டும்ரி' 'ஆதிம், ராத்திரி கே கந்த்'.

## நிர்மல் வர்மா

பிறப்பு — 1929 — சிம்லா (இமாசலப் பிரதேசம்). வசிப்பது தில்லி. கடந்த பல ஆண்டுகளாக ஐரோப்பாவில் இருந்து வருகிறார். குறிப்பாக, சிறுகதை எழுத்தாளர். 'வே தின்'

என்ற தலைப்பில் ஒரு நாவலும் வெளியாகியுள்ளது. கதைத் தொகுதிகள்: 'பரிந்தே', 'ஜல்தி பாடி', 'பிச்சில கர்மியோம் மேம்'

## ராஜேந்திர யாதவ்

பிறப்பு — 1929 — ஆக்ரா (உத்திரப் பிரதேசம்) தற்சமயம் வாழ்ந்துவருவது தில்லி. நாவலாசிரியர், சிறுகதை எழுத்தாளர். ஒரு கவிதைத் தொகுப்பும் வெளியாகியுள்ளது. நாவல்கள்: 'சாரா ஆகாஷ்', 'உக்டேஹுயே லோக்', 'ஷஹ் ஔர் மாத்', 'குல்டா ஔர் மந்திர வித்த'. சிறுகதைத் தொகுதிகள்: 'கேல் - கிலௌனே'. 'ஜஹாம் லக்ஷ்மி கைத் ஹை', 'சோடே சோடே தாஜ்மகல்', 'கினாரே சே கினாரே தக்', 'பிரதீக்ஷா', 'டூட்டனா.'

## மோகன் ராகேஷ்

பிறப்பு — 1925 — அமிருதசரஸ். (பஞ்சாப்). தற்சமயம் வாழ்வது தில்லி. நாடகாசிரியர். சிறுகதை எழுத்தாளர். நாடகங்கள்: 'ஆஷாட் கா ஏக் தின்', லஹ்ரோங் கா ராஜ ஹம்ஸ்', 'ஆதே அதூரே'. நாவல்கள்: 'அந்தேரே பந்த் கம்ரே'. சிறுகதை தொகுப்புகள்: ஜான்வர் ஔர் ஜான்வர், 'இன்னுமொரு வாழ்க்கை', 'பௌலாத் ஔர் ஆகாச்', 'நயே பாதல்'.

## கமலேஷ்வர்

பிறப்பு — 1932 — மைன்பூர் (உத்திரப் பிரதேசம்). வாழ்ந்த இடம் அலகாபாத், தில்லி. தற்சமயம் பம்பாய். சிறுகதை எழுத்தாளர். நாவலாசிரியர். கதைத் தொகுதிகள் 'ராஜா நிர்பன்சியா', 'கச்பே கா ஆத்மி', 'கோயி தோயி திஷாயேன்' 'மாம்ஸ் கா தரியா'. நாவல்கள்: 'ஏக் சடக் சத்தாவன் கலியான்', 'டாக் பங்களா', 'மூன்றாவது மனிதன்'.

## ஸ்ரீகாந்த் வர்மா

பிறப்பு — 1931 — பிலாஸ்பூர். (மத்தியப் பிரதேசம்). தற்சமயம் வாழ்வது தில்லி. குறிப்பாகக் கவிஞர். நாவல்களும் சிறுகதைகளும் எழுதியுள்ளார். கவிதைத் தொகுப்புகள், 'பட்காமேஹ்', 'மாயா தர்பண்', 'தினாரம்ப்'. நாவல்: 'தூஸ்ரி பார்'. சிறுகதைத் தொகுதி: 'ஜாஷ ஔர் சம்வாத்'.

## அமர் காந்த்

*பிறப்பு — 1924 — பலியா (உத்தரப் பிரதேசம்).* வசிப்பது அலகாபாத், சிறுகதை எழுத்தாளர். நாவல்களும் எழுதி யுள்ளார். 'ஜிந்தகி ஔர் ஜோக்' குறிப்பிடத்தக்க சிறுகதை தொகுதியாகும்.

## ஞானரஞ்சன்

*பிறப்பு — 1936—அலகாபாத் (உத்திரப் பிரதேசம்).* சிறு கதை எழுத்தாளர். வெளியாகியுள்ள சிறு கதைத் தொகுப்பின் தலைப்பு: 'வேலிக்கு இருபுறமும்'

## காசிநாத் சிங்

*பிறப்பு — 1937 — பனாரஸ் (உத்திரப் பிரதேசம்).* சிறு கதை எழுத்தாளர். வெளியாகியுள்ள சிறுகதைத் தொகுதி: 'லோக் பிஸ் தரோம் பர்'.

# வெளியீடுகள்

டிரஸ்ட் இதுவரை பலவேறு இந்திய மொழிகளில் 550க்கும் அதிகமான புத்தகங்களை வெளியிட்டுள்ளது. டிரஸ்ட்டின் தற்போதைய வெளியீட்டுத் திட்டத்தில், கீழ்காணும் நூல் வரிசைகள் பிரதானமாக இடம் பெறுகின்றன.

**1. இந்தியா — நாடும் மக்களும்:** சாதாரணக் கல்வியறிவு பெற்ற, புலமை பெறாத மக்கள், பூகோளம், விவசாயம், மொழிகள், இலக்கியம், கலாசாரம் உட்பட நாட்டின் பலவேறு அம்சங்களையும் அறிந்திட வகை செய்வதே இத்தொடரின் நோக்கம். சுருங்கக் கூறின் இவ்வரிசையில் வெளியாகும் புத்தகங்கள், எளிதில் புரிந்துகொள்ளக் கூடிய எளிய நடையில், இந்தியாவைப் பற்றிய கலைக் களஞ்சியமாக அமையும்.

**2. தேசிய வாழ்க்கை வரலாறு:** மதம் தத்துவம், வரலாறு, இலக்கியம், கலை, இசை, விஞ்ஞானம் ஆகிய பல துறைகளில் இந்தியா கண்ட பெருமக்களின் வாழ்க்கை வரலாறுகளை ஏறத்தாழ நூறு புத்தகங்களில் தருவதே இந்நூல் வரிசையின் நோக்கம்.

**3. எளிய விஞ்ஞானம்:** விஞ்ஞானம் கண்டுள்ள வளர்ச்சி—முன்னேற்றம் பற்றியும், அன்றாட வாழ்க்கையில் விஞ்ஞானத்தின் முக்கிய பங்கு பணி குறித்தும் சாதாரண வாசகருக்குத் தகவலளிப்பதே இவ்வரிசையின் நோக்கம்.

**4. உலகின் சிறந்த நூல்கள்:** பலவேறு துறைகளில், உலகக் கருத்துக்களை உருவாக்கிய புத்தகங்களின் எளிய மொழி பெயர்ப்புக்களை பலவேறு இந்திய மொழிகளில் சாதாரண வாசகர்களுக்குத் தருவதே இத்தொடரின் நோக்கம்.

**5. இன்றைய உலகம்:** உலக நாடுகள் பலவற்றின் வரலாறு, மற்ற முக்கிய உண்மைகள் பற்றி அறிந்திட வகை செய்யும் இத்தொடரிலான புத்தகங்கள், எளிய நடையில் எல்லோரும் புரிந்துகொள்ளக் கூடிய வகையில் எழுதப்பட்டவை.

**6. இந்திய பாரம்பரியம்:** நாட்டின் முக்கிய பிராந்தியங்களின் பாரம்பரியம் பற்றி நூல்களை வெளியிட்டு, நாட்டின் ஆதார ஒருமைப்பாட்டை வலியுறுத்துவதே இந்நூல் வரிசையின் குறிக்கோள்.

**7. இள இந்தியா கோவை:** இந்திய இளைஞர்களின் தேவைகளுக்காகத் திட்டமிடப்பட்டுள்ளது இக் கோவை. தற்கால

ரூ.பை.

**பல்வகை நூல்கள் :**

| | | | |
|---|---|---|---|
| 1. | காந்தியின் இந்தியா—வேற்றுமையுள் ஒற்றுமை | .... | 2 25 |
| 2. | அக்பர்—லாரென்ஸ் பின்யன் | .... | 2 25 |
| 3. | அறிவு வளர்க்கும் அறிவியல்—ரிட்சி கால்டர் | .... | 4 25 |
| 4. | அசோக சாசனங்கள் —என். ஏ. நிகம் ரிச்சர்டு மெக்கியன் | .... | 3 00 |
| 5. | கோதம புத்தர்—ஆனந்த கே. குமாரசுவாமி —ஐ. பி. ஹார்னர் | .... | 6 00 |
| 6. | மார்கோ போலோ—மௌரிஸ் காலிஸ் | .... | 5 75 |
| 7. | குடதிசை-குணதிசை ஞானப் பெண்மணிகள் —ஸ்வாமி கருணாநந்தா | .... | 6 00 |
| 8. | இன்பத்தின் வெற்றி—பெட்ராண்ட் ரஸ்ஸல் | .... | 3 50 |
| 9. | பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள் —அழ. வள்ளியப்பா | .... | 1 25 |
| 10. | விழாவும் பூசையும்—எஸ். ஜி. கணபதி அய்யர் | .... | 1 25 |